


போன் : 0422 – 2572635
செல் : 936 2970121

பொறிஞர் **கு.ம. சுப்பிரமணியன்** பி.இ., எம்.பி.ஏ., எஃப்.அய்.இ.
(மருத நாடன்)
தலைமைப் பொறியாளர் மி.வா. (ஓய்வு)
தலைவர் : சிந்தனையாளர் கழகம்
தமிழ் தமிழர் ஒருங்கிணைப்பாளர்
அமைப்பாளர் : தொழில் நுட்ப வல்லுநர் குழுமம்

18/12ஏ, அண்ணாநகர், ஆறுமுகம் லே–அவுட்,
பூளைமேடு (அஞ்சல்), கோயமுத்தூர் – 641 004.


இன்று கோவையில் பொறிஞர். கு.ம.சுப்பிரமணியம் அவர்களை அவரது இல்லத்தில் சந்தித்தேன். இவர் மின்வாரியத்தில் தலைமைப் பொறியாளராகப் பணியாற்றி பணிநிறைவு பெற்றவர். தந்தை பெரியாரோடு இணைந்து தமிழகம் முழுவதும் பகுத்தறிவுக் கருத்துகளைப் பரப்பியவர்.

திருச்சி சிந்தனையாளர் கழகத்தின் தலைவராக இருந்தவர். இவரது முயற்சியால் திரு.வே. ஆனைமுத்து அவர்கள் தொகுத்த பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் மூன்று தொகுதிகளாக வெளியிடப்பட்டன. 2200 பக்கங்களுக்கு மேற்பட்ட இந்த மூன்று தொகுதிகளும் பெரியாரின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் அடங்கிய தொகுப்பு ஆகும். பெரியாரின் பன்முக ஆற்றலை வெளிப்படுத்துகிற அரிய நூலாக இன்றளவும் இந்த நூல் போற்றப்படுகிறது.

பொறிஞர். கு.ம.சுப்பிரமணியம் எழுதிய கவிதை நூலை இணையத்தில் வலையேற்றுவதற்காக அவரைச் சந்தித்தபோது பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் என்ற நூலைப்பற்றி அவரிடம் பேசினேன். அந்த நூலை வெளியிட்ட நினைவலைகளை அவர் விளக்கினார். நூல் வெளியீட்டிற்காப் பட்டபாடுகள் என் கண்முன் நிழலாடியது. அவர் காட்டிய தந்தை பெரியாரின் உருவம் என் முன் நிழலாடியது. பகுத்தறிவு விதைப்பிற்காகத் தன்வாழ்நாளின் இறுதிவரை பேசியும் எழுதியும் வந்த அவரது உறுதி தெரிந்தது.

பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் தொகுப்பினை இணையத்தில் வலையேற்றினால் உலகமக்கள் வலைஇறக்கிப் படித்து மகிழ்வார்களே என்று சொன்ன பொழுது, நூலை வெளியிட்ட சிந்தனையாளர் கழகத்தின் தலைவர் திரு. கு.ம. சுப்பிரமணியம் அவர்கள் மகிழ்வோடு, தன் கைப்படியாக வைத்திருந்த அந்த முதன்மைப் படியை அன்போடு எடுத்து வந்து கொடுத்தார்.

இணையத்தில் வெளியிடுங்கள், அய்யாவின் கருத்துகள் உலகம் முழுவதும் பரவட்டும் என்று அவர் கொடுத்தபோது நான் பெருமகிழ்வு அடைந்தேன். நான் பத்தாம் வகுப்பு படித்தபோது, தாராபுரம் நூலகத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பக்கமாகப் படித்து நெஞ்சில் பதிந்து என்னை வழிநடத்திய அந்த நூலை நான் படவடிவக் கோப்பாக்கும் வாய்ப்பு கிடைத்தது கண்டு நெஞ்சு நெகிழ்ந்தேன்.

ஆனைமுத்து அய்யா அவர்கள் பெருமுயற்சியில் திரட்டிச் சேகரித்த பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் என்ற இந்த மூன்று தொகுதிகளும் உலகம் முழுவதும் உள்ள நம் தமிழ் மக்களுக்கும் இனிவரும் அடுத்த தலைமுறையினருக்கும் வழிகாட்டியாக நின்று பகுத்தறிவூட்டும் என்று நம்புகிறேன்.

bghs;shrr erd; (09-06-2011)
jkpHk; t i y (www.thamizham.net)

# பெரியார்
# ஈ. வெ. ரா. சிந்தனைகள்

(பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்களின்
சொற்பொழிவுகளும் கட்டுரைகளும்)

## மூன்றாம் தொகுதி

பதிப்பாசிரியர்
வே. ஆனைமுத்து

வெளியீடு :
சிந்தனையாளர் கழகம்
தெப்பக்குளம்
திருச்சிராப்பள்ளி–2

www.thamizham.net - Free E book No 3041

# THOUGHTS OF PERIYAR E. V. R.

(Speeches and Writings of Periyar E. V. Ramasami)

## VOLUME III

*Compiled and Edited by*
V. ANAIMUTHU

*Published by*
THINKERS' FORUM
Teppakulam
Tiruchirappalli-2

www.thamizham.net - Free E book No 3041

# 1. பொருளாதாரம்

## 1. இந்தியப் பொருளாதாரம்

*அக்கிராசனர் அவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!*

பொருளாதாரம் என்கின்ற வார்த்தை நம் நாட்டில் தற்காலம் உள்ளதுபோல் முன் காலத்தில் இருந்ததாகச் சொல்ல முடியாது. முன் காலத்தில் எல்லாம் பொருளை உடைத்தாயிருக்கவும், பணம் காசைக் கையாளவும் சிலருக்கே உரிமை இருந்தது. மற்றவர்களுக்குத் தானியம் தவிர, வேறு ஒன்றும் பெற உரிமை கிடையாது. நாட்டு வழக்கிலும் பணம், காசு கிடையாது. எல்லா வாழ்க்கையும் பண்ட மாற்றை அடிப்படையாகக் கொண்டதாகவே இருந்தது. ஒரு பண்டத்தைக் கொடுத்து, மற்றொரு பண்டத்தை வாங்கிக் கொள்வார்கள். கூலியாட்கள், கைத்தொழில் செய்வோர், ஏவலாள் ஆகியோருக்கும் தானியமே கொடுப்பது வழக்கம். மந்திரிகளுக்கும் அரசன் பூமி மானியம் விடுவதே தவிர, பணமாக ஏதும் கொடுப்பதில்லை.

பெருத்த மிராசுதார்களிடம் பார்த்தாலும்—தானியத்தைத்தான், பூமியில் பெரிய பெரிய குழிகள் ஆழமாக வெட்டிப் போட்டு வைத்திருப்பார்கள். பண்ட மாற்றைத் தவிர, சாதாரண மக்கள் பணத்தைப் பார்ப்பது மிக்க அபூர்வமாகவே இருக்கும்.

ரூபாய், நாணயம் இவை நம் நாட்டு மொழியல்ல, 'சின்னப் பணம்' அதாவது ரூ. 1-க்கு 10 கொண்டதாக இருக்கும். விலை பேசுவதிலும், 'எத்தனை பணம்?' என்று தான் கேட்பார்கள். செல்வமுள்ளவனையும் பணக்காரன் என்றுதான் சொல்லுகின்ற வழக்கம் இன்றும் உண்டு. அரசியல் அபராதம் முதலியவைகளிலும் 100 பணம்–200 பணம் என்று—பணக் கணக்கில்தான் கணக்குச் சொல்லுவார்கள். சமீப காலம் வரைகூட மலையாளத்தில் திருவாங்கூர், கொச்சி இராச்சியத்தில் சிவில் கோர்ட்டில், 'ரூபாய்' என்று 'பிராது' போடுவதில்லை. 10 ஆயிரம் ரூபாய்க்குப் பிராது போடுவதானாலும் அதைப் பணமாகப் பெருக்கி, அந்தப் பண எண்ணிக்கையைக் காட்டித்தான் பிராது போடும் வழக்கம் இருந்து வந்தது.

ஆகவே, 'ரூபாய்' என்பதும், 'பவுன்' என்பதும் வெளிநாட்டு நாணயங்கள். அவை நம் நாட்டிலே புழங்கக்கூடிய நிலை ஏற்பட்டதே, பொருளாதார நிலையில் நம் நாடு முன்னையைவிடச் சற்று உயர்வடைந்தது என்பதைக் காட்ட அறிகுறியாகும். எனவே, பொதுவாகப் பார்த்தால், பொருளாதாரம் நம் நாட்டில் குறைவு என்று நான் சொல்ல மாட்டேன். மற்ற நாட்டைவிட இந்த நாடு பொருளாதாரத்தில் குறைந்ததல்ல. இந்தியாவை நம்பி அனேக நாடுகள் தங்கள் வாழ்வை நிச்சயித்துக்கொண்டிருக்கின்றன.

இந்தியாவின் பொருளாதாரத்தில் நாட்டமில்லையானால் வெள்ளைக்காரனுக்கு இங்கு வேலையில்லை. இதுபோலவே இதற்குமுன் வெளிநாட்டிலிருந்து இந்த நாட்டுக்கு வந்த அரசர்களுக்கும் அவர்களுக்கு முன் வந்த ஆரியர்களுக்கும் இந்த நாட்டில் வேலையில்லை.

சாமி, பூசை, உற்சவம், புண்ணியம், யாத்திரை ஆகியவைகளின் பெயரால் தனித் தனிச் செலவும், அவற்றிற்காக நடைபெறும் பொது ஏற்பாட்டுச் செலவும், கணக்குப் பார்த்தால் மனிதனின் மொத்த வரும்படியில் ஒரு குறிப்பிட்ட பாகம் வீணாவதைக் காணலாம். மற்றும் மனிதன் வாழ்க்கையில் பிரவேசிக்கும்போதே பெரும்பான்மையோர் அவர்களது கல்வி, கலியாணம் முதலியவைகளால் ஏற்பட்ட கடனின் பேரிலேயே வாழ்க்கையைத் தொடங்க வேண்டியிருக்கிறது. இவைகள் எல்லாம் சேர்ந்து அவசியமான



www.thamizham.net - Free E book No 3041

காரியங்களுக்குப் பொருள் இல்லாமல் கஷ்டப்படும்படி செய்து விடுவதுடன், சதா தரித்திரர்களாகவும், கடன்காரர்களாகவும் இருக்கவேண்டியதாய் இருக்கின்றது.

இவை மாத்திரமல்லாமல், நாட்டின் பொருளாதார நிலையை விருத்தி செய்ய அவசியமான பொதுத் தொழிற்சாலைகள், இயந்திர சாலைகள் முதலியவைகள் ஏற்பாடு செய்வதற்கும் மார்க்கமில்லாமல் பொருட்களை எல்லாம் மேற்கண்ட சடங்குகளும், வாழ்க்கை முறைகளும் கவர்ந்து கொள்வதோடு கோவில் கட்டுதல், சாமிக்கு நகை, வாகனம் முதலியவைகள் செய்து வைத்தல், மற்றும் உற்சவம் பூசை ஆகியவைகளுக்குப் 'பண்டு', பூமிகள் முதலிய சொத்துக்கள் ஒதுக்கி வைத்தல் ஆகிய காரியங்கள் பெரும்பெரும் தொகைகளைக் கவர்ந்து கொள்ளுகின்றன.

ஆகவே, இந்த மாதிரியாகவெல்லாம், எல்லாப் பொருள்களும் வீணாகிக் கொண்டிருக்கையில் இந்த நாடு எந்தக் காலத்தில்தான்—எந்த வகையில்தான் பொருளாதாரத்தில் சீர் அடைய முடியும்? நம் நாட்டுப் பொருளாதாரக் கஷ்டத்திற்கு மற்றொரு காரணத்தையும் கவனியுங்கள். நம்முடைய வாழ்க்கைத் தன்மையை, மேல் நாடுகளைப் பார்த்து—நாளுக்கு நாள் செலவை அதிகரித்து வருகின்றோம்; வசதிகளை அதிகப்படுத்திக் கொள்ளுகின்றோம். முன்னைவிட அதிக ஆடம்பரங்களை விரும்புகின்றோம். இவையெல்லாம் நமக்குத் தகாதென்றோ, குற்றமென்றோ சொல்லவில்லை. ஆனால், மேல்நாட்டார் எப்படிப் பொருளாதார நிலையை உயர்த்திக் கொண்டே தமது வாழ்வின் சுக போகத்தையும் உயர்த்திக் கொள்கிறார்களோ, அதுபோலவே நாமும் பொருளாதார நிலையை உயர்த்திக் கொண்டு, வாழ்க்கைத் தன்மையின் அவசியத்திற்கேற்ற வருவாய்க்கு வகை செய்து கொண்டுதானே அதில் பிரவேசிக்க வேண்டும்? அதுவும் இல்லாமல், இதுவும் இல்லாமல் வெறும் மனப்பால் குடிப்பதில் என்ன பயன்? மேல் நாட்டான் குறைந்த நேரத்தில் அதிக வேலை செய்து பன்மடங்கு இலாபம் அடைகிறான். அதனால் அவர்கள் சுகமனுபவிக்க மார்க்கம் ஏற்படுத்திக் கொள்கிறார்கள்.

ஆகவே, இவ்வளவு உயர்ந்த பொருளாதார நிலையுடைய இந்திய நாடு—இந்த நாட்டுப் பெரும்பான்மையான மக்கள் வயிறார உண்ணவும், இடுப்பார உடுக்கவும், மானத்தோடு பிழைக்கவும் முடியாதபடி வேறு பல காரியங்கள் கொடுமைப் படுத்துகின்றன. அவைகளில் முக்கியமானவை மதமும் கடவுளும் அடுத்த ஜென்மமுமேயாகும்.

மனிதன் எவ்வளவு சம்பாதித்தாலும், அனேகமாய் எல்லாவற்றையும் மேற்கண்ட மூன்றுமே அபகரித்துக் கொள்ளுகின்றன. அதிலும் உலகத்தில் வேறு எப் பாகத்திலும் காண முடியாத மாதிரி இந்த நாட்டில் இம் மூன்றினாலும் பிழைப்பதற்கென்றே—'பிறவி'யை ஆதாரமாகக் கொண்டு சில வகுப்புகள் ஏற்பட்டு, அந்த நிலைகளைக் காப்பாற்றிக் கொண்டு பாடுபடாமல் வயிறு வளர்ப்பதோடு சகல போக்கியங்களையும் தங்களுக்கே உரிமையாக்கிக் கொண்டதால், இந்த உலகம் உள்ள வரை இந்தியாவின் பொருளாதாரம் இப்படியே இருக்கும்படியாக ஆகிவிட்டது. அது மாத்திரமல்லாமல், இந்த நாட்டில் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இருக்கும் முறையும், மிராசுதாரனுக்கும் குடியானவனுக்கும் இருக்கும் முறையும், படித்தவனுக்கும் படிக்காதவனுக்கும் இருக்கும் முறையும், மேல்சாதிக்காரனுக்கும் கீழ் சாதிக்காரனுக்கும் இருக்கும் முறையும் பார்த்தால் இந்த நாட்டு மக்களில் 100-க்கு 90 பேர்களுடைய பொருளாதார நிலை இன்றைய நிலையைவிடக் கடுகளவுகூட மாறி முன்னேற்றமடைய முடியவே முடியாது என்பது உறுதி.

நமது பொருளாதாரக் கஷ்டமெல்லாம்—முதலாவது அனாவசியச் செலவுகளுக்கும் அவற்றிற்கும் அதிகச் செலவுகளுமேயாகும். 100-க்கு 90 பேர்களுடைய சம்பாதனைகள் அனாவசியமானவைகளுக்கும், குருட்டுப் பழக்கம், மூடநம்பிக்கையானவைகளுக்கும், சோம்பேறியாய் வாழ்கின்றவர்களின் சுக போகத்திற்கும் செலவு செய்யப்படுவதினாலேயே வீணாகி விடுகின்றன.

www.thamizham.net - Free E book No 3041

இரண்டாவது, சுலபத்தில் ஒரே பக்கத்தில் பொருள்களெல்லாம் போய்ச் சேரும் படியாகவும் விடுகின்றன.

மூன்றாவதாக, மனிதனுக்கு உள்ள நேரமும் சக்தியும் குறைந்த வரும்படிக்கே செலவிடும்படியான முறைகளே இங்கு வெகு காலமாக இருந்து வருகின்றன. அதாவது, புத்தியைச் செலவழித்துக் குறைந்த நேரத்தில் அதிகமான வேலைகள் நடைபெறவும், அதனால் அதிக சம்பாதனை அடையும் மார்க்கம் தேடவுமான துறையானது அடியோடு அடைபட்டுப் போய்விட்டது. இத்தியாதி காரணங்களே இந்தியாவின் பொருளாதாரக் குறைவிற்குக் காரணமாகும்.

[களக்காட்டில், 27-12-1930-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 18-1-1931]

சகோதரிகளே! சகோதரர்களே!

இந்திய நாட்டின் விடுதலைக்கு இன்று இராஜ்யத்துறை அவ்வளவு முக்கியமானதல்ல வென்றும், மற்றவர்களின் வரிசைக் கிரமத்தில் அரசியல் சீர்திருத்தம் என்பது எவ்வளவோ பின்னால் இருக்க வேண்டியது என்றும் கருதுகிறவன் நான். நமக்கு இருக்கும் வேலை எல்லாம்—நாம் செய்யவேண்டிய முதல் வேலை எல்லாம் சமுதாய சம்பந்தமானதே தவிர அரசியல் வேலை அல்ல.

ஏனெனில், சமூகத் துறையில் நமது நிலைமை என்ன? நமது அடிமைத்தனத்தின் கொடுமை எவ்வளவு? இவைகளுக்குக் காரணம் என்ன?—என்பதை நினைத்துப் பார்த்தால் அறிவும் மானமும் உள்ள மனிதன் அரசியல் தன்மையைக் கொஞ்சமும் பெரிதாகக் கருதி இலட்சியம் செய்யமாட்டான் என்றே கருதுகிறேன். உங்களில் யார் எப்படி நினைத்துக் கொண்டாலும் சரி, என்னைப் பொறுத்தவரை நமது நாட்டு மத சம்பந்தமான—சமூக சம்பந்தமான அடிமைத்தனத்தால்தான் நாம் சுதந்திரம் இழந்து, மானமிழந்து, இழி சாதியாய் வாழ்கின்றோமே தவிர அரசியல் அடிமைத்தனத்தினால் அல்ல. நான் இப்போது அரசாங்க ஆட்சியின் சுதந்திரத்தை முதன்மையானதாகக் கருதவில்லை; உத்தியோகத்தை முக்கியமாகக் கருதவில்லை; அதிகாரத்திற்கு ஆசைப்படவில்லை.

என்னுடைய நாட்டு மனிதன் ஒருவன் தன்னை ஒரு மனிதனாய்க் கருதவேண்டும்; அவன் என்னைப் பிறவியில் சமமாய் நினைக்க வேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறேன். இந்த இழிவுத்தன்மையும் அவமானமும்தான் என்னை வருத்துகின்றது; நினைத்தால் வயிறு பற்றி எரிகின்றது; நெஞ்சம் குமுறுகின்றது. இதற்கு ஏதாவது மாறுதல் ஏற்பட இன்றைய அரசியல் ஏதாவது இடையூறாயிருந்தால் சொல்லுங்கள்! அப்பொழுது அந்த அரசியலைப்பற்றிக் கவனிப்போம்; அதை ஒழிப்போம். இல்லாவிட்டால், வேறு எது இடையூறோ, யார் இடையூறாய் இருக்கின்றார்களோ அவற்றையொழிக்க ஒன்று சேரலாம் வாருங்கள்! அதை விட்டுவிட்டு, இவ்வளவு பெரிய அக்கிரமத்தையும் கொடுமையையும் மூடி வைத்துக்கொண்டு, 'அரசியல், அரசியல்' என்றால் என்ன அர்த்தம்? இது யாரை ஏமாற்றுவது? இன்னும் எத்தனை நாளைக்குத்தான் இப்படியே காலத்தைக் கடத்துவது?

அரசியலைப்பற்றிக்கூட நமக்குக் கவலையில்லை. அன்னியனை ஒழிக்க வேண்டாமா என்று சிலர் கேட்கின்றார்கள். இதிலும் உண்மையோ, அறிவுடைமையோ இருப்பதாக நான் கருதவில்லை. ஏனென்றால் யார் அன்னியன் என்பதை முதலில் யோசித்துப் பாருங்கள்!

நமது மக்கள் 100-க்கு 90-பேர்கள் மூடமக்களாக இருந்து வருகின்றார்கள்; கல்வி யறிவு வாசனை இல்லை; இருந்தாலும், அறிவுச் சுதந்திரம் இல்லை. இவர்களைக் கூட்டி வைத்துக்கொண்டு யார் என்ன பேசினாலும் கை தட்டுவார்கள்; கூடவே கோவிந்தா போடுவார்கள். ஆகவே, சரி எது, தப்பு எது என்று தெரிந்து கொள்ளும் அறிவு இல்லாத வர்கள்—இவர்கள் முன் எதைச் சொன்னால்தான் என்ன என்கின்ற முறையில் தேசத்தில் எத்தனையோ புரட்டுகள் நடக்கின்றன. இதைப் பார்த்துக் கொண்டே, இந்த நிலைமையை

www.thamizham.net - Free E book No 3041

மாற்ற வேண்டியதே நமது முதல் வேலையாய் இருக்கவேண்டும் என்பதை, யாருமே கவனிப்பதில்லை; எந்தத் தலைவருமே நினைப்பதில்லை. இப்படியே காலங்கடந்தால் நமக்கு எப்போது விடுதலை கிடைக்கக்கூடும்?

பொருளாதாரத் துறையில் நாம் அடிமைகளாய் இருக்கின்றோம். நமது பொருள் கோடிக்கணக்காக வெளியில் போகின்றது. 'அதை நிறுத்த வேண்டாமா?' என்கின்றார்கள் மற்றொரு அரசியல் கூட்டத்தார். இதையும் என்னால் இலட்சியம் செய்யவோ ஒப்புக் கொள்ளவோ முடியவில்லை. ஏனென்றால், பொருள் நஷ்டம் என்பது இப்போது நமது நாட்டில் யாருக்கிருக்கிறது?

நமது நாட்டில் சமூகத் துறையிலேயே, பிறவியிலேயே பொருளாதார உரிமை அனேக மக்களுக்குத் தடுக்கப்பட்டிருக்கின்றது.

உதாரணமாக, புரோகிதன், உத்தியோகஸ்தன், வக்கீல், வியாபாரி, முதலாளி, ஜமீன் தாரன், மிராசுதாரன் ஆகியவர்களின் கூட்டங்களுக்குத்தான் பொருளாதார உரிமை இருக் கின்றதேயொழிய—மற்ற மக்களுக்கு வயிற்றுக்கு எவ்வளவு வேண்டும் என்கின்ற அளவுக் குட்பட்ட அடிமை உரிமைதானே இருந்து வருகின்றது? முற்கூறிய கூட்டங்களுக்குப் பொருளாதார உரிமை என்பது பிறவியிலேயே கொடுக்கப்பட்டிருக்கின்றது என்பதுடன் மற்றவர்கள் அதற்கு அருகரல்லாமல் இருக்கும்படியான நிர்ப்பந்தங்களும் செய்யப்பட்டிருக் கின்றன.

உதாரணமாக, ஒரு இட்லிக் கடைப் பார்ப்பானுடைய மகன் அய்க்கோர்ட் ஜட்ஜாக வரலாம்; ஒரு பஞ்சாங்கப் பார்ப்பனன் மகன்—மந்திரியாகலாம்; ஆனால், ஒரு தோட்டியி னுடைய மகன் அய்க்கோர்ட் ஜட்ஜாக வரமுடியுமா? யோசித்துப் பாருங்கள்! சாதியின் பேரால் வகுக்கப்பட்டிருக்கும் பிரிவானது இம் மாதிரி சிலருக்கு நன்மையையும், சிலருக்குத் தீமையையும் செய்து வருகின்றது. இனிமேல் இந்தப்படி செய்யாமலிருக்க நமது அரசியல் சுயராஜ்யத்தில் எவ்விதத் திட்டமும் இல்லை என்பதோடு, இந்த முறையைக் காப்பாற்றவும் திட்டம் போடப்பட்டிருக்கிறது என்றால் அறிவுள்ள மனிதன் எப்படி இந்த அரசியலை ஒப்புக்கொள்ள முடியும்?

[திருச்செங்கோட்டில், 1-9-1931-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 6-9-1931]

இந்திய நாடு எவ்விதமான வளத்திலும் குறைந்தது அல்ல. இந்தியாவில் இராஜாக்கள், ஜமீன்தார்கள், மடாதிபதிகள், ஆச்சாரிய பீடங்கள், கோடீஸ்வரர்கள் மற்ற நாட்டிலுள்ளவர்களுக்குக் குறையாமல் உள்ளார்கள். வியாபாரிகளும் வியாபாரப் பொருட் களும் மற்ற நாடுகளைப் போலத்தான் இருந்து வருகின்றன.

விவசாயத் துறையிலும் ஏராளமான பூமிகள் இருப்பதும், அவற்றிற்கு அனுகூலமாக நீர் வசதிகள் இருப்பதும், ஒவ்வொரு மிராசுதார்கள் 1000 ஏக்கர், பதினாயிரம் ஏக்கர், சிலர் இலட்சம் ஏக்கர் நிலங்களை உடையவர்களாக இருப்பதும், விவசாயம் செய்யப்பட வேண்டிய பூமிகள் இன்னும் எவ்வளவோ இருப்பதுமான நாடாக உள்ளது.

இப்படிப்பட்ட பல்வளமும் பொருந்திய இந்திய நாடு ஏன் தரித்திரமான நாடு என்றும், அடிமையான நாடு என்றும், ஏழைகள் பெருத்த நாடு என்றும் சொல்லப்பட்டு வருகின்றது?

முதலாவது, மேற்கண்ட வளமுள்ள செல்வம் எல்லா மக்களும் அடையத்தக்க மாதிரி யான சமூக அமைப்பு இல்லாமல்—செல்வங்கள் சில வகுப்பு மக்களுக்கே உரியவையாகவும் அனுபவிக்கத் தக்கவையாகவுமான சமூக அமைப்பு முக்கிய காரணமாகும்.

அதாவது, வருணாசிரம தருமப்படி—இன்ன இன்ன வகுப்புக்கு இன்ன இன்ன தொழில், இன்ன இன்ன உரிமை என்பதான திட்டமே நாட்டின் செல்வம் எல்லோருக்கும் பரவுவதற்கில்லாமல் தடை படுத்திக் கொண்டிருக்கிறது என்பது முதல் காரணம்.

www.thamizham.net - Free E book No 3041

இரண்டாவது, ஒரு வகுப்பு மக்கள்—அதாவது 100-க்கு 90 பேர்களுக்கு மேலாகக் கொண்ட சமூக மக்கள், அவர்களது வயிற்றுக்குப் போதுமான அளவுக்குமேல் பெற முடியாத நிபந்தனைக்குள்ளாக்கி வைக்கப்பட்டதுடன் அவர்கள் கையில் தங்கள் வயிற்றுக்கு வேண்டிய ஆகாரத்தின் அளவுக்கு மேற்பட்ட எந்தப் பொருளையும் வைத்திருக்க உரிமை இல்லாதவர்களாக்கப் பட்டிருக்கின்றது என்பது இரண்டாவது காரணம். இந்த உண்மைக்கு ஆதாரம் மனுதர்ம சாஸ்திரத்தில் நன்றாய்க் காணலாம்.

அதாவது, 'சூத்திரன் பொருள் சேர்த்து வைத்திருந்தால் பிராமணன் பலாத்கார மாகப் பிடுங்கிக் கொள்ளலாம்', 'சூத்திரன் பொருளைப் பிராமணன் எப்படி வேண்டு மானாலும் கொள்ளை அடிக்கலாம்', 'அடிமையான சூத்திரன், பொருள் வைத்திருக்க உரிமை உடையவனல்லன்' என்கின்ற அனேக ஆதாரங்கள் இந்துமத சாத்திரங்களில் இருக்கின்றன.

இந்த மாதிரியான திட்டங்களை ஏற்படுத்த ஆதாரமாய் இருந்தது வருணாசிரம தர்மமேயாகும்.

வெள்ளைக்கார அரசாங்கத்தின் பயனாய் இந்தத் தர்மங்கள் சிறிது சிறிது மாற்ற மடைந்து ஏதோ நூற்றில் ஒருவர், ஆயிரத்தில் ஒருவர் செல்வவான்கள் ஆகவும், வருண முறை தவறிப் பணம் சம்பாதிக்க உரிமை உடையவர்களாகவும் ஆனாலும்கூட, அந்தப் பணமானது மனுதர்ம சாஸ்திரத்தில் குறிப்பிட்டுள்ளதுபோல்—அதாவது, 'சூத்திரன் செல்வத்தைப் பிராமணன் எந்தவிதத்திலானாலும் கொள்ளை அடிக்கலாம்' என்கின்ற தர்மப்படி, சூத்திரன் செல்வத்தைக் கொள்ளை கொள்ளவே ஸ்தலம், கோவில், குளம், புண்ணியம், பாவம், சடங்கு முதலிய காரியங்களின் மூலம் கொள்ளை அடிக்கப்பட்டு விடுகின்றன.

இந்தக் காரணத்தாலேயே சூத்திரர்களில் 100-க்கு 75 பேர்கள் கடன்காரர்களாகவே இருக்க நேரிட்டு இருக்கின்றது. இவை ஒருபுறமிருந்தாலும், இன்று பொருளாதாரக் கஷ்டத்தையே பெரும்பாலும் எடுத்துச் சொல்லி அதை நிவர்த்திப்பதற்காக இந்தியாவுக்கு சுயராஜ்யம் வாங்கித் தருகின்றதாகச் சொல்லும் அரசியல் தலைவர் திரு. காந்தி அவர்களும், இந்த வருணாசிரம முறையை அடிப்படையாகக் கொண்டு, சுயராஜ்யமே வேண்டு மென்று சொல்லிப் பாடுபட்டு வருகின்றார்.

ஆனால், இந்த இடத்தில் வாசகர்களுக்கு ஒரு மயக்கம் ஏற்படலாம். அதாவது, திரு. காந்தியவர்கள் வருணாசிரம தர்மத்தைப்பற்றிப் பேசும்போது, தனது வருணாசிரம தர்மம் வேறு என்று சொல்லி வருகின்றதால் அது வேறாய் இருக்கலாம் என்று கருதலாம். அது எப்படி இருந்தபோதிலும் அதாவது, சாதி, உயர்வு தாழ்வு சம்பந்தமான காரியம் எப்படி இருந்தாலும், வித்தியாசம் இருக்கவேண்டும் என்பதிலும் அவனவனுடைய பரம்பரைத் தொழிலையே அவனவன் செய்ய வேண்டுமென்பதிலும் அவர் சந்தேகத்திற்கு இடம் இருக்கும்படியாகக்கூடப் பேசாமல்—தெளிவாகவே சாதிப் பாகுபாடுகளும், தர்மமும் (அவனவன் தொழில்) கண்டிப்பாய் அனுஷ்டிக்க வேண்டும் என்றே சொல்லுகின்றார். (அவர் எழுதியுள்ள 'பகவத் கீதை' மொழிபெயர்ப்பு 18-ம் அத்தியாயம், 41 முதல் 48 ஸ்லோகங்கள்)

இவை ஒருபக்கம் இருந்தபோதிலும், சமீபத்தில் பரோடா சமஸ்தானத்தில் அவர் பேசியபோதும் இக் கருத்தையே வலியுறுத்திப்பேசியிருக்கிறார். அதாவது, 'கிராமவாசிகள் செருப்புத் தைத்தல், ஆடுமாடு மேய்த்தல் முதலிய தொழில்களைச் செய்யவேண்டும்; அவர்கள் பெட்டிகளில் அதிகப் பணம் வைத்திருக்கக்கூடாது; அவர்கள் பம்பாய் வியாபாரி களைப்போல் பணக்காரர்களாக இருக்க நினைக்கக்கூடாது' என்று பேசியிருக்கின்றார். ஆகவே, காந்தியவர்களால் கேட்கப்படும் சுயராஜ்யத்தில் இந்திய மக்களின் பொருளாதார நிலை எப்படி முன்னுக்குக் கொண்டுவரக்கூடியதாக இருக்கும்?

www.thamizham.net - Free E book No 3041

மேலும், நமது மக்களின் மதத் தத்துவமே இவ்வுலக வாழ்க்கை 'பொய்' என்பதும் 'மாய்கை' என்பதும்; செல்வத்தை—மோட்சத்தில் இடம்பிடித்து வைக்கவும், அடுத்த ஜன்மத்தில் நல்ல பிறவியாய் பிறக்க ஏற்பாடு செய்துகொள்ளவும் செலவழிக்கவேண்டும் என்கின்றதுமான எண்ணங்கள் செல்வங்களைப் பாழாக்கிவிடுகின்றன. அன்றியும், பாடுபடுகின்ற மக்களுக்குத் தங்கள் மதக் கடமை, சாதிக் கடமை என்பது மாத்திரமல்லாமல் முன் ஜென்மக் கர்மத்தின் பயன் என்றும் எண்ணும் எண்ணங்களையே புகுத்தப்பட்டு, தங்கள் கஷ்டங்களையும் தரித்திர நிலைமையையும் உணராமல் இருந்து வருகின்ற குணமும் தகுந்த பயனை அடையமுடியாமல் செய்துவிடுகின்றன. இவை தவிர, நம் நாட்டு தர்ம ஸ்தாபனங்கள் ஏராளமான செல்வங்களைத் தம்முடையதாக்கிக்கொண்டு அவைகள் மக்களுக்குப் பயன்படாமல் வீணாக்கப்படுகின்றன.

சாதாரணமாக, சென்னை மாகாணத்தின் சர்க்காரார் வரி எவ்வளவு இருக்குமோ, அதில்—4-ல் 1 பங்குக்குக் குறையாமல் இம் மாகாணத்தில் வரும்படி வரத்தக்க சொத்துக்கள் கொண்ட தர்மஸ்தாபனங்கள் இருக்கின்றன. அவற்றின் மற்ற செலவுகளுக்கென்று நமது மக்களால் செய்யப்படும் செலவுகளின் மொத்தம், நாம் செலுத்தும் வரித் தொகைக்குக் குறையாதென்றே சொல்லலாம். இவை இந்த நாட்டு மக்களுக்குப் பயன்படாததோடு வீண் செலவினமாகவே ஏற்பட்டுவிடுகின்றன.

அன்றியும், தர்ம ஸ்தாபனங்களில் வரும்படி இல்லாமல் வெறும் முடக்கமாய் இருக்கும் சொத்துக்கள் தங்கம், வெள்ளி, கல் நகைகள், இடங்கள் முதலியன கோடிக்கணக்கான ரூபாய் வரும்படி வரக்கூடிய அளவு உள்ள சொத்துக்கள்—யாதொரு பிரயோசனமும் இல்லாமல் முடங்கிக் கிடக்கின்றன.

இவை ஒரு புறமிருக்க, 'இராஜாக்கள்' என்றும், 'ஜமீன்தார்கள்' என்றும் ஏற்பட்ட கூட்டங்கள் அனுபவிக்கும் பொருள்கள்—மற்றும் அவர்கள் நகை, பொக்கிஷம், புதைத்து வைத்திருப்பது முதலிய செல்வங்களின் அளவு நூற்றுக்கணக்கான கோடி என்றே சொல்லலாம்.

இவ்வளவும் தவிர, இந்திய மக்களின் வருமானம் என்பதோ அவர்கள் தங்களது தொழில் முறைகளைச் சிறிதும் மாற்றிக் கொள்ளாததால் பிரயாசை அதிகமும், சாமான் யோக்கியதைக் குறைவும், உற்பத்திக் குறைவும் இதனால் வரும்படி குறைந்ததுமாக இருப்பதுடன், மனிதனுடைய தேவைக்கும், போக போக்கியங்களுக்கும் வேண்டியவைகளுக்கெல்லாம் ஏழை முதல் செல்வவான், மகாராஜாக்கள் வரை, வெளிநாட்டுப் பொருள்களையே உபயோகிக்க வேண்டியவர்களாகி—அதன்மூலம் செல்வம் ஏராளமாய் வெளியில் போய் விடுவதால் ஒருவித நஷ்டத்தையும் அடைய வேண்டியதாக ஏற்பட்டு விடுகின்றது.

ஆகவே, இத்தியாதி காரணங்களால் நாட்டில் பெரும்பாகமான மக்கள் ஏழைகளாக—தரித்திரர்களாக இருக்கக் கடமைப் பட்டவர்களாகவே இருக்கின்றார்கள்.

பொருளாதாரத் துறையில் இந்திய நாடு முற்போக்கடைய வேண்டுமானால் அதன் அஸ்திவாரமான காரணங்களையெல்லாம் கவனிக்காமல், மக்களுடைய மதியீனத்தையும் பகுத்தறிவற்ற தன்மையையும் ஆதரவாய் உபயோகித்துக் கொண்டு, வெளிநாட்டுத் துணியை மறியல் செய்வதாலும், கதரை வாங்கிக் கட்டுவதாலும், கள்ளுக் கடைகளை மூடி விடுவதாலும் பொருளாதாரத் துறையை சரிப்படுத்திவிடலாம் என்று சொல்லுவது ஒரு நாளும் நாணயமானதோ, அறிவுடைமையானதோ, காரியத்தில் பயன் கொடுக்கக் கூடியதோ என்பதாகச் சொல்லிவிட முடியாது.

இந்தியாவின் பொருளாதாரத் துறையைச் சீர்படுத்துவதற்கு முதலாவது வருணாசிரம முறை ஒழிய வேண்டும்; இரண்டாவது, மதசம்பந்தமான எண்ணங்கள் அகற்றப்பட வேண்டும்; மூன்றாவது, கோவில், குளம், சடங்கு, சாத்தான்—'சனி விலக்கு' ஆகிய

www.thamizham.net - Free E book No 3041



கோயம்புத்தூர் யுனைடெட் மோட்டார் கட்டடத்தில், 3-10-1965-ல் நடந்த நிகழ்ச்சியில், பெரியார் ஈ. வெ. ரா. அவர்கட்கு, தொழில் மேதை G.D. நாயுடு மாலை அணிவிக்கிறார். பெரியாருக்கு (வலப் பக்கம்) அறிவியல் அறிஞர் சர் சி.வி. இராமன் அமர்ந்துள்ளார்.

www.thamizham.net - Free E book No 3041

எண்ணங்கள் அழிக்கப்பட வேண்டும். பிறகு அரசன், ஜமீன்தாரன் முதலிய தத்துவங்கள் அழிக்கப்பட்டாக வேண்டும்.

['குடி அரசு'–தலையங்கம்—13-9-1931]

## 2. செல்வம் பெருக வழி

தலைவரவர்களே! தோழர்களே!

நம்மிடத்தில் நமக்குப் போதுமான பொருள் இல்லையா? இல்லாதிருக்குமானால் அதற்குக் காரணம் என்ன என்பவைகளை யோசனை செய்து பாருங்கள்!

நாம் பொருள் சம்பாதித்துக் கடவுளைக் கும்பிடுகிறோமே ஒழிய—எந்த விதத்தில் பாடுபடவேண்டும், எதனால் பொருள் கிடைப்பதில்லை–என்று யோசிப்பதில்லை. நாம் கல்விக்கு எப்படி சரஸ்வதி என்ற ஒரு தெய்வத்தை உண்டாக்கி வணங்கி வருகின்றோமோ அதுபோலவே தான், நமது நாட்டுச் செல்வத்துக்கு ஒரு பெண் தெய்வமாகிய இலட்சுமியைத் தெய்வமாக உண்டாக்கி வணங்குகின்றோம். ஆகையால், ஒருவன் தான் ஏழையாக இருந்தால் தனக்கு இலட்சுமி கடாட்சம் இல்லை எனச் சுலபமாக எண்ணிக் கொண்டு, இலட்சுமி கடாட்சத்தையடையக் கையில் உள்ளதையும், கடன் வாங்கியும் செலவு செய்கிறான். பணக்காரனாய் இருப்பவனும் தனக்கு இலட்சுமி கடாட்சம் இருப்பதாக நினைத்துக்கொண்டு அதற்கே தனது சொத்தைச் செலவு செய்து வருகிறான்.

ஓர் ஏழை ஒரு நாள் முழுவதும் கஷ்டப்படுகிறான். அவன் காலை ஆறு மணிக்கு மண்வெட்டியைப் பிடித்தானானால் பகல் ஒரு மணிக்குத்தான் கீழே வைக்கிறான். கொஞ்சம் ஏதாகிலும் ஆகாரம் உட்கொண்டு மீண்டும் ஒன்றரை மணிக்கு மண் வெட்டியைப் பிடித்தானானால் மாலை ஆறரை அல்லது ஏழு மணிக்குத்தான் கீழே வைக்கிறான். இவ்வாறு அவன் ஓய்வு இல்லாமல் கஷ்டப்பட்டும், அவனுடைய வேலைக்குத் தகுந்த கூலி கிடைப்பதில்லை. இதற்குக் காரணம் கடவுளின் 'கிருபை' எனவும், தனக்கு இந்த வேலையையே செய்து பிழைக்கத் தலையிலே பிரமன் எழுதி விட்டான் என்றும் கருதிக் கொண்டு, வாழ்நாள் கழிய மண் வெட்டியை நம்பிக்கொண்டு இருக்கிறான்.

அதுபோலவே, சிறிதும் பாடுபடாமல் ஒருவன் பணக்காரனாய் இருக்கின்றானே எனக் கேட்டால், 'இலட்சுமிதான் போட்டு விட்டாள்' என்பதாகச் சொல்லுகிறான். ஆகவே, இந்த இரண்டுவித நிலைமைகளுக்கும் ஒரே காரணத்தை உரைக்கின்றார்களே யல்லாமல், நாம் உண்மை அறிய ஆராய்வதில்லை.

மேல் நாட்டுக்காரர்கள் தங்களுடைய அறிவைத் தினம் தினம் விருத்தி செய்து கொண்டே வருகின்றார்கள். பல துறைகளையும் ஆராய்ந்து, பலவித தந்திரங்களையும் அத் துறைகளில் ஆராய்ச்சி செய்து மென்மேலும் முன்னேறிக் கொண்டே இருக்கின்றார்கள். தங்கள் தொழில் முறையைத் தாங்களாகவே மாற்றுகிறார்கள். ஒரு தொழிலிலிருந்து மற்ற தொழிலுக்குத் தாராளமாய்ப் பிரவேசிக்கிறார்கள். தங்கள் முன்னேற்றத்திற்கும் தங்களையே பொறுப்பாக்கிக் கொண்டு வாழ்க்கையை நடத்துகிறார்கள். தலைவிதியையும் நல்ல காலத்தையும் எதிர் பார்த்து அவர்கள் சும்மா இருந்து விடுவதில்லை. உதாரணமாக, முதன் முதலாகக் கண்டுபிடிக்கப்பட்ட மோட்டாருக்கும், இப்போது கண்டுபிடிக்கப்பட்ட மோட்டாருக்குமுள்ள வித்தியாசங்களை நாம் கவனித்தோமானால், மேல்நாட்டுக்காரன் தொழில்முறையில் எவ்வளவு தூரம் முன்னேற்றம் அடைந்து இருக்கிறான் என்பது புலப்படாமல் இராது.

ஆனால், நாமோ ஆதிகாலத்தில் உண்டாக்கப்பட்ட கட்டை வண்டிகளினின்றும் இன்னும் சிறிதும் முன்னேற்றம் அடையாமல் இருக்கின்றோம். வேண்டுமானால் இரும்பு ஆணிகளுக்குப் பதிலாக வெள்ளி முலாம் பூசிய ஆணிகளை உபயோகிப்பதில் மட்டும் முன்னேற்றம் அடைந்திருக்கின்றோம்.

www.thamizham.net - Free E book No 3041

தொழிலில் நாம் முன்னேற்றம் அடையாததற்குக் காரணம், அதில் மக்களை நான்கு வருணங்களாகப் பிரித்து அதாவது—பிரம்ம, சத்திரிய, வைசிய, சூத்திரரென நான்கு வருணங்களாகப் பிரித்து—100-க்கு 90 பேர்கள் அடங்கிய ஒரு கூட்டத்தைச் சூத்திரர்கள் எனத் தாழ்த்தி, சூத்திரர்களுக்கு வயிற்றுக்கு மட்டும் உண்ணப் போதுமான உணவிருந்தால் அதுவே அவர்களுக்குப் போதுமெனவும், அவர்கள் மற்ற மூன்று வருணத்தாருக்கும் தங்களுடைய சரீரத்தால் பாடுபட்டு உழைக்க வேண்டும் எனவும் எழுதிவைத்துக்கொண்டு, அதற்கு அத் தருமங்களின்படி நாம் நடந்து கொள்ள வேண்டும் எனவும், அதனின்றும் தவறக்கூடாதெனவும், தவறினால் பாபமெனவும் உரைக்கப்பட்டு வந்ததோடு, அரசர்களும் இந்தச் சட்டத்தைக் காப்பாற்றி வந்ததே நாம் தொழில்விருத்தி இல்லாமற் போனதற்குக் காரணமாகும்.

இவ்வித நிலைமையின் பயனாய்—பணம் சம்பாதிப்பவர்கள், சீர்படுபவர்கள் யார் என்பதை யோசித்துப் பாருங்கள். பிராமணர்களுக்கும், சத்திரியர்களுக்கும், வைசியர்களுக்குமேதான் பணம் மென்மேலும் சேருமேயாதலால் இந் நிலையில் யார் எவ்வளவு பாடுபட்டாலும் தொழிலாளிகளாகிய 'சூத்திரர்'களிடம் ஒரு நாளும் பணம் சேராது என்பதோடு, வயிற்றுக்கு வேண்டிய அளவுகூட உணவு கிடைப்பதும் கஷ்டமாகத்தான் இருக்கும்.

இவ்வித நிலையில்தான் மக்கள் தங்களுடைய முயற்சியில் கவலையற்றவர்களாய் இருந்து, கடவுள்மீது பொறுப்பைப்போட்டு அடுத்த ஜென்மத்தில் பணக்காரர்களாகப் பிறப்பதற்குத் தங்கள் குறைந்த வரும்படியான பணத்தையும், நேரத்தையும் செலவு செய்ய வேண்டியவர்களாய் இருக்கிறார்கள். கடவுள் உணர்ச்சியேதான் அவர்கள் விடுதலை அடைவதைத் தடுத்துக்கொண்டே இருக்கிறது.

ஆகவே, பொருளாதாரத் துறையில் நாம் விடுதலை அடைந்து முன்னேற்றம் அடைய வேண்டுமானால்—நாம் கவலை உள்ளவர்களாகி, நம்மை ஏமாற்றிச் 'சூத்திரர்'களாக்கியவர்களுடன் சண்டை போட்டேதான் தீரவேண்டும். ஆதலால், நாம் அதற்காகக் கவலையில்லாமல் இருந்தாலும், அக் கட்டுப்பாட்டை ஒழிக்காமலிருந்தாலும் ஒருநாளும் முன்னேறவே முடியாது.

'நமது பெரியவர்கள் எப்படி இருந்து வந்தார்களோ அப்படியே இருக்கவேண்டுமே ஒழிய புதிய மாதிரியில் நடக்கலாமா' என்று நாம் கருதிக்கொண்டு இராமல், 'இரண்டு அணாவில் இருந்து இரண்டு ரூபாய் எவ்வாறு சம்பாதிக்க முடியும்? ஏன் சம்பாதிக்க முடியாது? மற்றவர்கள் எப்படிச் சம்பாதிக்கின்றார்கள்? மற்ற நாட்டில் உள்ளவர்கள் என்ன செய்கிறார்கள்? எப்படிச் சம்பாதிக்கிறார்கள்?' என்பவைகளை யோசனை செய்து, முன்னேறும் மார்க்கங்களைக் கண்டு பிடித்து, அவற்றை நடைமுறையிலும் கொண்டு வந்தால்தான் பொருளாதாரத் துறையில் முன்னேற முடியும்.

ஒருவன் இரண்டு மாடுகள், ஒரு வண்டி, ஒரு மனைவி, இரண்டு குழந்தைகளையுடையவனாக இருந்தால் அவன் வண்டி யோட்டிச் சம்பாதிக்கும் பணத்தால் 6 பேர்களைக் காப்பாற்ற வேண்டியவனாக இருக்கிறான். இவ்வாறு கஷ்டப்படுவதினின்றும் விடுதலை அடைய வேண்டுமானால் இயந்திரங்களினால் எவ்வளவுக் கெவ்வளவு நம்முடைய வேலையைச் சுருக்கிக் கொண்டு, குறைந்த நேரத்தில் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக விருத்தி செய்யமுடியுமோ அவ்வாறு செய்தால் மட்டுந்தான் நாம் விருத்தி அடைய முடியும்.

[சித்தையன் கோட்டையில், 22-6-1931-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 28-6-1931;
'விடுதலை' 8-10-1951]

www.thamizham.net - Free E book No 3041

# 3. தரகர்கள்

தரகர்கள் என்பது பெரும்பாலும் வியாபாரிகள் என்பதையே குறிக்கும். வியாபாரிகள் என்பவர்கள் அனேகமாக சரக்குகளை உற்பத்தி செய்யும் விவசாயக்காரர்கள், தொழிலாளர்கள் ஆகியவர்களுக்கும்—அச் சரக்குகளை வாங்கி உபயோகிக்கும் பொது ஜனங்கள் என்பவர்களுக்கும் இடையில் இருந்துகொண்டு குறைந்த விலைக்கு வாங்கி அதிக விலைக்கு விற்று இலாபம் சம்பாதிப்பவர்களேயாவார்கள்.

பணம் சம்பாதித்து முதலாளிகளாக ஆவது என்பதற்கு அல்லாமல் வேறு எந்தக் காரியத்துக்கும் இந்தக் கூட்டத்தார்கள் உலகிற்குத் தேவையில்லை.

இவர்களினாலேயேதான் விவசாயம் செய்யும் விவசாயியும் சாமான்கள் செய்யும் தொழிலாளியும் என்றென்றைக்கும் ஏழைகளாகவும் தரித்திரர்களாகவும் இருக்கவேண்டியிருக்கிறது. ஆனால், இந்த இருதரத்தாருமேதான் உலகம் நடைபெறுவதற்கு ஆதாரமாய் இருந்துவருகிறார்கள். அப்படியிருந்தும், இவர்களது குறைந்த அளவு தேவைகளையோ, நலனையோ கூடக் கவனித்து உலகில் எந்தமதமும் எந்த அரசாங்கமும் நாளதுவரை கவலையெடுத்துக் கொண்டதேயில்லை.

மனிதன் எப்பொழுது இயற்கைக்கு விரோதமாக வாழ்க்கை நடத்த நினைத்தானோ அல்லது இணங்கினானோ அன்றுமுதல் மனிதன் பாடுபட வேண்டியவனானான். ஆதலால், மனிதன் பாடுபடுவதைப் பற்றி நாம் பரிதாபப்படவில்லை. ஆனால், அந்த பாட்டின்—உழைப்பின் பயனை அந்த உழைப்பாளி அடையாமல், சும்மா இருக்கும் (உழைக்காத) சோம்பேறி அடைவதென்றால் இது எந்தமுறையில் நியாயமாகும்?

இங்கு இந்தச் சாக்கில் பொது உடைமையைப் பற்றிப் பேசவோ, சமதர்மத்தைப் பற்றிப் பேசவோ நாம் வரவில்லை. நீதி, நியாயம் என்பது வேண்டாமா என்றுதான் கேட்கின்றேன்.

உழைப்பாளிக்கும், விவசாயிக்கும், பண்டங்களைச் செய்யும் பாட்டாளிக்கும் வீடில்லை; கல்வியில்லை; சரீர சவுக்கியமில்லை; உடலில் வலிவு இல்லை; அறிவும் இல்லை என்றால் அவர்கள் உலகத்தில் ஏன் இருக்கவேண்டும் என்பது நமக்கு விளங்கவில்லை.

விளைபொருள்கள் 100-க்கு 100 விலை அதிகம் விற்று கொள்ளை இலாபம் வந்தாலும் விவசாயக் கூலியானவன் பஞ்சகாலத்தில் வாழ்வதுபோல் வாழவேண்டி யிருக்கின்றதைப் பார்க்கின்றோம். அதுபோலவே, உற்பத்திசெய்த சாமான்கள் 100-க்கு 100 பங்கு இலாபத்துக்கு விற்று இலாபம் பெற்றாலும் தொழிலாளி கைக்கும் வாய்க்கும் கணக்கு சரியாகும்படிதான் வாழ்கின்றான். இவை கவனிக்கப்பட வேண்டியதுதான்—அரசியல்வாதிகள், சமுதாய இயல்வாதிகள் கடமை என்பதோடு, ஒரு நல்ல அரசாங்கத்தினுடையவும், ஒரு உண்மையும் யோக்கியமும் பொருந்திய மதத்தினுடையவும் கடமையாகும் என்பது நமது அபிப்பிராயம்.

அதை விட்டுவிட்டு, இதெல்லாம் கடவுள் செயல் என்று சொல்லி விட்டு, இதற்காக யாதொரு காரியமும் செய்ய வேண்டியதில்லை யென்றும் சொல்லப்படுமானால்—தூக்கு மரங்களையும், சிறைக் கூடங்களையும் பெயர்த்து அழித்து விட்டு, கொலைகளையும், திருட்டுகளையும் பற்றி யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளாமல் அவைகளையும் கடவுள் செயல் என்று ஏன் சொல்லிவிடக் கூடாது என்று கேட்கின்றோம்.

இந்தக் கஷ்டத்தை நிவர்த்திப்பதற்காகப் பிரமாதமான முறை எதையும் சொல்ல வரவில்லை. உண்மையிலேயே விவசாயிகள்—பூமிக்குச் சொந்தக்காரர்களாய் இருக்கின்றவர்கள் முதற்கொண்டு வாரத்துக்கு, குத்தகைக்கு உழுபவர்கள் உட்பட விவசாயக் கூலிகள் வரையில்—கடன்காரர்களாகவே தரகர்களுக்கும் லேவாதேவிக்காரர்களுக்கும் உழைத்து, உழைத்துப் போட்டுவிட்டு பட்டினி கிடப்பவர்களாகவே இருக்கிறார்கள். இவர்கள் ஏன் இப்படி இருக்கவேண்டும், தொழிலாளிகளும் ஏன் இப்படியே இருக்க வேண்டும் என்பதைச் சிறிது கவலையுடன் யோசித்து, தக்கது செய்யுங்கள் என்றுதான் சொல்கிறேன்.



www.thamizham.net - Free E book No 3041

அதற்கு நாம் சொல்லும் மார்க்கம் மிக மிகச் சுருக்கமானதும் சுலபமானதும் ஆகும். இதில் பலாத்காரமோ சமாதான பங்கமோ இருக்கவோ, ஏற்படவோ இடம் இல்லை.

அதாவது, விவசாயக்காரன் சர்க்காரிலேயோ அல்லது கூட்டுறவு ஸ்தாபனங்களிலேயோ தவிர வேறு எங்கும் கடன் வாங்க மார்க்கம் இல்லாமலும், அவனுக்கு வேறு தனிப்பட்ட நபர் யாரும் கடன் கொடுக்காமலும் செய்யவேண்டியது முதன்மையான காரியமாகும். அதோடு, விவசாயத்தில் ஈடுபட்ட கூலியாட்களுக்குக் கூலி தவிர விவசாயத்தில் ஒருபங்கு இருக்கும்படி செய்யவேண்டும்.

பிறகு விளைபொருள்கள், அதாவது ஆகார சாமான்கள், கூட்டுறவு பண்டகசாலைகளே விலைக்கு வாங்கி, அதாவது விவசாயிக்குக் கட்டும்படியான விலைக்கு வாங்கி அக் கூட்டுறவு ஸ்தாபனங்கள் மூலமாகவே வாங்குபவர்களுக்குக் குறைந்த இலாபத்தில் விற்பனை செய்யவேண்டும். இதனால் யாருக்கும் கஷ்டம் ஏற்படாது. அதிக இலாபம் வைத்து விற்பதானாலும் அந்த இலாபம் சாமான்கள் விற்ற விவசாயிகளுக்கு, வாங்குகின்ற மக்களுக்கும் உபயோகப்படும்படியே செய்யவேண்டும்.

இதன்படி செய்வதாயிருந்தால் மிடில்மென் (Middle men) அதாவது தரகர், வியாபாரி என்கின்ற கூட்டங்களுக்கு நாட்டில் தேவையே ஏற்படாமல் போய்விடும். அப்போது அனாவசியமாக ஏராளமான பணக்காரர்கள் உற்பத்தியாக மாட்டார்கள் என்பது மாத்திரமல்லாமல், உண்மையிலேயே விவசாயக்காரர்களுக்கு நஷ்டமும்கஷ்டமும் இல்லாமல் போவதுடன் மனிதத் தன்மைக்கு வேண்டிய சகல காரியங்களும், விகிதாச்சாரப்படி அவனும் அடைய சவுகரியம் ஏற்பட்டுவிடும்.

தொழிலாளர்கள் விஷயத்திலும், மனித சமூகத்திற்கு வேண்டிய அனுபவ சாமான்கள் யாவும் இக் கூட்டுறவு முறையினாலேயே செய்யப்பட்டு இக் கூட்டுறவு முறையினாலேயே வினியோகிக்கப்படுமானால் மில் முதலாளிகள் என்கின்ற கூட்டம் எப்படி உற்பத்தியாகும்? அவர்களுக்கு வேலைதான் ஏது? ஒரு வஸ்துவின் இலாபத்தை அந்த வஸ்துவைப் பாடுபட்டுச் செய்தவனாவது அல்லது பாடுபட்ட பணத்தைக் கொடுத்து வாங்குபவனாவது அனுபவிக்க வேண்டுமே யல்லாமல், சும்மாயிருக்கும் சோம்பேறித் தரகன் ஏன் அனுபவிக்க வேண்டும் என்றுதான் கேட்கிறேனே ஒழிய, யாரையும் நான் தூக்கில் போடும்படியோ சிறையில் வைக்கும்படியோ சொல்லவில்லை. பிறகு தொழிலாளிகள் இருக்கும் இடங்களில் குறைந்தது அய்ந்துமைல் சுற்றளவு தூரத்திற்காவது கள்ளுக் கடைகளோ, மார்வாடிகளோ, நாட்டுக்கோட்டையார்களோ இல்லாமல் இருக்கும்படி செய்துவிட்டு, அவர்களுக்குத் தேவையான பணத்தைத் தொழிற்சாலை நிர்வாகிகளிடமே வாங்கிக் கொள்ளும்படி செய்துவிட்டு, இலாபத்தில் ஒரு பகுதியோ, அல்லது அத் தொழிலாளிக்கும் போதிய அளவு தாராளமான கூலியைக் கொடுத்து, அக் கூலியைச் சாமான்மீது வைத்து விற்கும்படியாகவோ செய்துவிட்டால் தொழிலாளிகளைப் பற்றி யாரும் கவலைப்பட வேண்டிய அவசியமே இருக்காது.

இந்த இரண்டு காரியங்கள், அதாவது விவசாயி விஷயமும், சாமான்கள் உற்பத்தி செய்யும் தொழிலாளி விஷயமும் இந்த முறையில் முடிவு செய்யப்பட்டு விட்டால் உலகில் வேறு எவ்விதமான நெருக்கடிகளும் இருக்காது என்பதோடு, அரசியல் நிர்வாகத்துக்கும் இவ்வளவு கஷ்டமும் பளுவும் இருக்க நியாயம் இல்லாமல் போய்விடும்.

இதற்காக இப்போது நமது அரசாங்கம் செய்யவேண்டிய வேலைகளெல்லாம்– கூட்டுறவு ஸ்தாபனங்களைப் பலப்படுத்தி, அவைகளை இன்னும் சற்று அதிகக் கவனத்துடன் மேற்பார்வை பார்த்து நிர்வகிப்பது என்ற ஒன்றே போதுமானது என்று சொல்லுவோம். இன்று இந்த நாட்டில் S.S.L.C., B.A., M.A. படித்துவிட்டு மக்கள் ஆயிரம், பதினாயிரக்கணக்காய் வேலையில்லாமல் கஷ்டப்படுகின்றதை நேரில் பார்க்கின்றோம்.

www.thamizham.net - Free E book No 3041

இவர்களில் அனேகர் போலீஸ் கான்ஸ்டபிள் வேலைக்குக்கூட வரத் தயாராய் இருக்கிறார்கள். இவர்களுக்கு ஒரு ஏற்பாடு செய்யாமல் எத்தனை நாளைக்கு விட்டு வைத்துக் கொண்டிருக்கிறது என்பது நமக்கு விளங்கவில்லை.

மேலும், இந்த நாட்டில் ஏதாவது அரசியல் கிளர்ச்சி உண்மையில் இருக்கின்றது என்று சொல்லப்படுமானால்—இந்த மாதிரி வேலையில்லாத ஆட்களுடைய கஷ்டமே அப்படிப்பட்ட அரசியல் கிளர்ச்சிக்குக் காரணமாகும். ஆதலால், அப்படிப்பட்ட தொல்லைகளும் ஒருவாறு ஒழிந்து, மக்கள் சமாதானத்தோடு வாழ்வதற்கும் அனுகூலமாயிருக்கும் என்பது எனது அபிப்பிராயம்.

இன்று நடக்கும் கூட்டுறவுச் சாதனங்கள் என்பவை தமிழ்நாட்டைப் பொறுத்தவரை கிரிமினலுக்கு இடமில்லாமல் நடைபெறுகின்றன என்பது ஒரு அளவுக்கு திருப்தியானாலும், ஆந்திர தேசத்தில் பெரும்பாலும் மோசடியாகவே நடைபெற்று அனேக வழக்குகள் கிரிமினலுக்குப் போவதாகக் கேள்விப்பட்டோம்.

ஆதலால், கூட்டுறவு இலாக்கா சற்று விரிவடைந்து இன்னமும் அனேக துறைகளில் பிரவேசித்துத் தக்க மேற்பார்வையுடனும் உண்மையான நல்ல எண்ணத்துடனும் ஏழை மக்களுக்கும் பாடுபடும் உழைப்பாளி மக்களுக்கும் உதவும்படியாகவும் நடைபெறச் செய்ய வேண்டும் என்கின்ற ஆசையினால் இதை எழுதுகின்றோம்.

['பகுத்தறிவு'–கட்டுரை—2-12-1934]

தோழர்களே!

நம் நாட்டிலுள்ள விற்பனை வரியினால் இயற்கையாகவே மனிதனின் ஒழுக்கம் தானாகவே கெட்டுவிடுகிறது. நம் சர்க்கார் ஜனநாயக ஆட்சி நடத்துகிறது. நாம் ஒழுக்கமுடன் நடக்கவேண்டும்; ஒழுக்கத்தை உத்தேசித்து விற்பனை வரியை எப்படியாவது அடியோடு ஒழித்துக்கட்டவேண்டும். உலகில் 100-க்கு 90 நாடுகளில் விற்பனை வரியே கிடையாது. இதற்கு வேண்டிய பரிகாரம் பற்றி நன்றாக யோசித்துச் செயல்முறைக் கமிட்டி (Action Committee) ஒன்றை ஏற்படுத்தவேண்டும். வெற்றிபெற்றவர்கள் எந்தவிதக் கிளர்ச்சிகளைக் கையாண்டனரோ அந்தவிதக் கிளர்ச்சிகளையே நாமும் பின்பற்றவேண்டும். எந்தவிதக் கஷ்ட நஷ்டங்களுக்கும் நாம் தயாராக இருக்கவேண்டும். நம் தீர்மானத்தின் போக்கு, பேச்சாளர்களின் வேகமான பேச்சு, இவைகளைக்கண்டு சர்க்கார் உள்ளபடியே பயப்படவேண்டும். 'விற்பனை வரியை நீக்காவிட்டால் 15 நாட்கள் வரை கடைகளை அடைப்போம்' என்று சர்க்காருக்குத் தெரிவிக்கவேண்டும். அப்படியும் சர்க்கார் பணியவில்லையானால் 16-ம் நாள் மறுபடியும் ஒரு நோட்டீஸ் கொடுக்கவேண்டும். அதாவது, 'விற்பனைவரியை நீக்காவிட்டால் இரயில் தண்டவாளங்களைப் பெயர்ப்போம்' என்று! அவ்வளவு தூரத்துக்கு முடியுமா என்றால், இந்தப்படி சொல்லுவதற்காவது நமக்குத் துணிச்சல் வேண்டும்.

தோழர்களே! விற்பனைவரி ஒழுங்கானதல்ல; யாரையும் விட்டதல்ல; எல்லா மக்களும் இவ்வரியால் பாதிக்கப்படுகின்றனர். உங்களுக்குக் கிளர்ச்சிகளில் உதவிசெய்ய ஏராளமான பொதுமக்கள் உள்ளனர். மற்றும், கட்சிச் சார்பற்று ஒரு பொதுப்பணியை ஏற்கப் பலர் காத்திருக்கின்றனர்.

சும்மா வெறுமனே 'ஒரு முனை விற்பனை வரி போடு' என்று வீதிகளில் அட்டை தாங்கிச் சென்றால் மட்டுமே பிரயோசனம் இல்லை; சர்க்காரும் நம்மை மதிக்காது. நாம் கவலையோடு அனைவரும் ஒன்றாகக் கூடிக் கிளர்ச்சி செய்தால் வெற்றி நிச்சயம் பெறுவோம்.

மேலும், வரிபோடுவது என்றால் ஜனங்கள் வேதனைப்படாமலிருக்கிற மாதிரி வரி போடவேண்டும். Direct and Indirect tax போடவேண்டும். வரிகட்டுபவனுக்கு

www.thamizham.net - Free E book No 3041

வரிகட்டுவது தெரியாத மாதிரி—அதாவது அவன் கட்டுகிற வரி அவனுக்கு ஒரு சுமையாக இல்லாதமாதிரி வரிபோடவேண்டும்.

வருமான நிலையங்களை சர்க்கார் மேற்கொள்ளவேண்டும்.

எல்லா மில்களையும், மற்றும் பெரிய கம்பெனிகளையும், எவை எவை பொது மக்களுக்கான தேவைகளைப் பூர்த்தி செய்கின்றனவோ அவைகளையெல்லாம் சர்க்கார் தைரியமாய் மேற்கொள்ளவேண்டும். அப்படிச் செய்தால், ஒருவன் கொள்ளை இலாபம் அடிப்பதை நிறுத்த முடியும். மற்றும், அப்படிச் செய்வதால் சர்க்கார் வரவு செலவு நிலையை நல்ல தன்மையில் வைத்திருக்கவும், மக்களுக்கும் தொல்லை ஏற்படாமலிருக்கவுமாக இருக்க முடியும். அப்படிச் செய்யாமல், இன்று சர்க்கார் நடப்பில் பெரிய முதலாளிகளுக்குத் தனிச் சலுகைகளையெல்லாம் காட்டி, அவர்களைக் கொள்ளையடிக்க விட்டுவிட்டுப் பொது மக்கள் உயிரை வாங்குகிறது.

[ஈரோட்டில், 27-12-1953-ல் சொற்பொழிவு—'விடுதலை' 30-12-1953]

## 4. கூட்டுறவு

தலைவரவர்களே! தோழர்களே!

நான் (கோவாப்பரேடிவ்) கூட்டுறவு சங்கங்கள் என்ற விஷயத்தில் ஆதியில் கொஞ்சம் அக்கறை கொண்டவனாய் இருந்தவன். முதன்முதலில், நம்முடைய சென்னை ரிஜிஸ்ட்ரார் தோழர் இராமச்சந்திர ராவும், அதுசமயம் டிப்டி கலெக்டராக இருந்த தோழர் நாராயணசாமி அவர்களும் இங்கு கோவாப்பரேடிவ் ஸ்தாபனம் ஏற்படுத்த என்னிடமே வந்தார்கள். எங்கள் வீட்டில்தான் கூட்டம் கூட்டப்பட்டது. பாங்குப் புத்தகத்தைப் பார்த்தாலும் நான்தான் முதல் பங்குக்காரனாக இருப்பது தெரியவரும். அதற்காகப் பெரிதும் நானும் அந்தக் காலங்களில் உழைத்திருக்கிறேன். என்றாலும், இன்றைய நிலைமையானது நான் கோவாப்பரேடிவ் சொசைட்டிகளிலிருந்து சிறிது விலகி அலட்சிய அபிப்பிராயமுடையவனாக இருக்கிறேன். ஏனெனில், எங்கு பார்த்தாலும் கட்சியும், சுயநலத்துக்கு ஸ்தாபனங்களை உபயோகித்துக்கொள்வதும், அதன் உத்தேசங்களுக்கு விரோதமாகப் பணக்காரர்கள் ஆதிக்கம் செலுத்துவதுமாய் இருந்து வருவதுமேயாகும். தோழர் கணபதி அய்யர் அவர்கள் சிறிது நேரத்துக்கு முன்பு என்னிடம் பேசிக்கொண்டிருந்தபொழுது நம்முடைய நிலைமையானது இப்படித்தான் இருக்கமுடியும் என்று குறிப்பிட்டார். அது மிக உண்மையேதான். ஏனெனில், நம்நாட்டில் நிலைபெற்றுள்ள பல்வேறு விஷயங்களையும், முறைகளையும் அடியோடு மாற்றாமல் நம்முடைய ஜன சமூகத்திற்கு நன்மையைக் கொண்டுவந்துவிடுவது என்பது கொஞ்சமும் முடியாத காரியமாகும்.

ரஷ்ய நாட்டின் கூட்டுறவு முறைகளைப்பற்றிப் பேசுவேன் என்று உங்களுக்குத் தலைவர் எடுத்துச் சொன்னார். சர்வ விஷயத்திலும் அய்க்கியபாவமான கூட்டுறவு முறையானது சாத்தியப்படுமா என்று ஒரு காலத்தில் கருதியிருந்தேன். ஆனால், எனது மேல்நாட்டு அனுபவங்களினால்—அதுவும் குறிப்பாக ரஷ்யாவின் கூட்டுறவு முறைகளைக் கவனித்துப் பார்த்ததினால் கூட்டுறவு முறையைப்பற்றிய எனது எண்ணம் சாத்தியமாகக் கூடியதென்று மிக்க பலமாக உறுதிப்பட்டது.

என்னைப் பொறுத்தவரையில் என்னைப்பற்றி யார் என்ன நினைத்துக்கொண்டிருந்தபோதிலும் எனது முடிவான இலட்சியம்—அதாவது, எனது எண்ணம் ஈடேறுமானால், அது உச்ச ஸ்தானம்பெற்ற உயரிய கூட்டுறவு வாழ்க்கை முறையாகத்தானிருக்கும் என்பதுதான் எனது அபிப்பிராயம். கூட்டுறவு என்கிற உயரிய—சரியான நிலையானது நம்முடைய நாட்டில் ஏற்பட்டுப்போனால் ஜனசமூகமானது கவலையற்று, சஞ்சலமற்று

www.thamizham.net - Free E book No 3041

நாளைக்கு என்செய்வோம் என்று ஏங்கித் தத்தளித்துக்கொண்டிருக்கும் நிலைமையற்று நிம்மதியாக–சவுக்கியமாக–குதூகலமாக வாழுவழி ஏற்பட்டுவிடும்.

நம்முடைய நாட்டில் ஏதாவது ஒரு சங்கம் ஏற்பட்டால் அதைப்பற்றி நம்முடைய மக்கள் என்ன கருதுகிறார்களென்றால்–அதில் தங்களுக்கு எவ்வளவு தூரம் இலாபமிருக்கிற தென்றும், அதைத் தங்கள் பெருமைக்கும், வாழ்வுக்கும் எவ்வளவு தூரம் (சுயநலத்திற்கு) பிரயோஜனப் படுத்திக் கொள்ளலாமென்றும்தான் கருதிக்கொண்டு, அதில் சம்பந்தம் வைத்துக்கொள்ளுகிறார்களே ஒழிய, அதனால் உலக நன்மைக்கு–ஜனசமூக மேம்பாட்டிற் குப் பாடுபட வேண்டுமென்பதைப் பற்றிய கவலையை அறவே விட்டு விடுகின்றார்கள்.

அதுபோலவே, நம்முடைய கோவாப்பரேடிவ் ஸ்தாபனங்களிலும் இருந்து வருகிறது. அந்த ஸ்தாபனத்திலுள்ள மக்களுக்குள்ளாகவே கூட்டுறவு உணர்ச்சி கூடக் கிடையா தென்றே உறுதியாகச் சொல்லலாம். ஆனால், ஏதோ சிலர் அவரவர்கள் தங்களுடைய நன்மைக்காகவும், பட்டம் பதவிகளுக்காகவும், கவுரவத்திற்காகவும் ஏதோ சம்பந்தம் வைத்திருப்பதனால் மாத்திரம் என்ன பலன் ஏற்பட்டு விடும்?

சாதாரணமாக, இந்த ஊர்க் கூட்டுறவு ஸ்தாபனத்தை எடுத்துக்கொள்ளுங்கள். அதில் 2000, 3000 பேர்கள் வரை பங்குதார மெம்பர்களாக இருக்கின்றார்கள். ஆனால் ஸ்தாபனத் தினால் உருப்படியாகப் பொதுமக்களுக்கு என்ன நன்மை ஏற்பட்டு விடுகிறது? ஒரு சில— சொற்பப் பேர்கள், ஏதோ எப்படிக் கடன் பெறலாமென்று பெருத்த பிரயாசை எடுத்துக் கொள்பவர்களே சில அனுகூலங்கள் அடைகிறார்கள். இவர்களுக்கு மேற்படி ஸ்தாபனத்தைப் பற்றிய கவலையே இல்லை. இன்றைய உலக எல்லா வாழ்க்கையும் இப்படித்தான் இருக்கிறது; வெறும் குற்றத்தையே பேசுவதால் பயனில்லை. ஆனாலும், இவைகள் தக்க படிப்பினையாக இருக்க உதவ வேண்டும். கூட்டுறவு வாழ்க்கையென்றால் பிறருக்கு நாம் எவ்வாறு சகாயம் செய்வது, எவ்வாறு உதவி செய்வது என்கிற விஷயங்களே நமது வாழ்க்கையின் முக்கிய இலட்சியமாய் இருக்கவேண்டும். இவைகளில் தனித்தனி மனிதனைப் பொறுத்த தத்துவம் என்பதே கூடாது.

சாதாரணமாக, நாம் நம்மிடையே ஒருவரைப் புதிதாகக் கண்டால், அதாவது சந்தித் தால் அவருடைய நிலை என்னவென்றும், உத்தியோகம் என்னவென்றும் வினவ ஆசைப் படுகிறோம். அவர் ஒரு பெரிய உத்தியோகஸ்தராகவோ, பணக்காரராகவோ இருந்தால் ஒரு தனி மதிப்பும்; ஒரு குமாஸ்தாவாக இருந்தால், கூலியாக இருந்தால் ஒரு தனி மதிப்புந்தான் கொடுக்கின்றோம். இதுதான் நம்முடைய நாட்டில் ஒரு மனிதனை மதிப் பதைப்பற்றிய முறையாகும். ஆனால், ரஷ்யாவிலோ இங்குள்ள இதுபோன்ற கேள்விகளை அங்கு யாரும் கேட்பதில்லை. அங்கு ஒருவருடைய உத்தியோகத்தைப் பற்றியோ, செல்வத்தைப் பற்றியோ சிறிதும் யோசிப்பதே இல்லை; விசாரிப்பதுமில்லை. ஒருவனைக் கண்டதும் அவன் (Social service) 'சமுதாய சேவை என்ன செய்திருக்கிறான்?' என்று மட்டுமேதான் பிரதானமாகக் கவனிப்பார்கள்; அதைத்தான் கேட்பார்கள். ஒருவர் பிறருக்கு என்ன நன்மை புரிய ஏற்றுக்கொள்ளுகிறார் என்பதுதான் மனிதனை அறிய முக்கிய தத்துவமாகும்; அதுதான் அங்கு அவருடைய பெருமையைக் காட்டுவதாகும். அங்கு உத்தி யோகத்தைப் பற்றிய பேச்சோ, வருமானமோ, மேல் கீழ் வரும்படி என்பது போன்ற பேச்சோ, எங்கும் எவ்வித ரூபத்திலும் கிடையாது. அங்கு எங்கும் யாவரும் சமுதாயவேலை செய்வோரேயாவர்.

நான் ரஷ்யாவில் இருந்த காலத்தில் ஒரு நியாயஸ்தலத்தைப் பார்வையிட அழைத்துச் செல்லப்பட்டேன். அங்கு ஒரு குற்றவாளியை விசாரிக்கக் கண்டேன். அவன் ஒரு விசேஷ நாளில் குடித்து வெறியனாகிக் கலகம் செய்தான் என்பதான குற்றவாளி. அவனை அந்த விசாரணை ஸ்தலத்தில் என்ன கேள்வி கேட்டார்கள் என்றால் 'உன்னுடைய (Social Service Work) சமுதாய ஊழிய வேலை என்ன?' என்பதேயாகும். அவன் அதற்கு

www.thamizham.net - Free E book No 3041

எனக்கு (Social Service) சமுதாய வேலை இல்லை யென்றான். இதைக் கேட்டதும் நியாயாதிபதியும், ஜூரியான ஒரு பெண்ணும், "உனக்குச் சமுதாய வேலையில்லாமல் போய்விட்டது என்கிறாயே, வெட்கமில்லையா? 'என்னை உலகுக்கு உபயோகப்படுத்திக் கொள்ள வகையற்றவனாக இருக்கிறேன்' என்று சொல்லுவது அவமான கரமானதாகத் தோன்ற வில்லையா?" என்று கடிந்தனர். அதற்கு அவன், 'எல்லா சோஷியல் சர்வீசையும் சிறு பிள்ளைகளாகிய 'கமசமால்' கூட்டத்தார் எடுத்துக்கொள்ளுகிறார்கள், நான் என்ன செய்வது?' என்றான். அந்தம்மாள், 'வெட்கம், வெட்கம்' என்றாள். இவைகளைக் கேட்ட பிறகுதான் சோஷியல் சர்விஸ் (Social Service) என்பவைகளைப் பற்றி அதிகம் அறிய விசாரணை செய்தேன். சமூக ஊழியம் செய்வதுதான் தங்கள் வாழ்க்கையின் கவுரவம் என்பதை முதலாவதாகவும், அடுத்தபடி கூட்டுறவு வாழ்க்கையே மேலானதாகவும் அவர்கள் கருதி நடக்கிறார்கள்.

ரஷ்யர்களுடைய வாழ்க்கையானது உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் இருப்பதற்குக் காரணம் அவர்கள் சோஷியல் சர்விசும், கூட்டுறவு வாழ்க்கையும் நடத்த முனைந்து நிற்பதேயாகும். அவர்கள் வாழ்க்கையில் மேற்போட்டுக்கொள்ளும் இந்த வேலையானது—மனிதனுக்குக் கவலை, துன்பம், மனச் சோர்வு என்பவைகளே இல்லாமல் செய்துவிடுகிறது. அங்குள்ள சர்வ ஜனங்களுடைய எண்ணமெல்லாம், 'பிறருக்கு எவ்வளவு தூரம் நன்மை செய்யவேண்டும்' என்றே குடி கொண்டிருக்கிறது. இந்த நோக்க மில்லாத மனிதனை மனிதனல்லன் என்று வன்மையாக அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள்.

நம்முடைய நாட்டில் உத்தியோகத்தின் பேராலும், மற்ற பதவிகளின் பேராலும் 1000, 2000, 5000, 7000 ரூபாய்களைக் கொள்ளை கொள்வது போன்ற கொடுமைகள் ரஷ்யாவில் கிடையாது. அங்கு உள்ளவர்களுக்குத் தனக்கு வேண்டிய அளவுக்குமேல் வரும்படி—இலஞ்சம்—இலாவண்யம் என்பன போன்றவைகளே அடியோடு கிடையாது. அங்கு ரூபாய் 10, 20 கூட கடன் கொடுக்கும் முறையோ, கடன்படும் முறையோ கிடையாது. அது குற்றமாகும்.

ஆனால், அந்த முறைகள் எல்லாம் நம்முடைய நாட்டின் இன்றைய நிலைமைக்குச் சாத்தியமில்லை என்று சொன்னாலும், நம்நாட்டு நிலைமைகளை எல்லாம் அடியோடு மாற்றி அமைத்துத்தான் ஆகவேண்டும். இக் கருத்தைத்தான் நான் வலியுறுத்திக் கூறுகிறேன். இது, சிறிது சிறிதாய் கோவாப்பரேடிவ் ஸ்தாபனங்களின்மூலம் செய்யலாம். நம்முடைய நாட்டில் அளவுக்குமீறிய செல்வச்செருக்கு கொண்டவர்களையும், கல்நெஞ்சம் படைத்த கனத்த முதலாளிகளையும் ஒரு பக்கத்தில் பந்தோபஸ்தாய் வைத்துக்கொண்டிருக்கின்றோம். மற்றொரு பக்கத்தில் வேலையில்லாத் திண்டாட்டக்காரர்களையும், பிச்சைக் காரர்களையும் வைத்துக் கொண்டிருக்கிறோம். இவைகளெல்லாம் ஏன் இப்படி இருக்கின்றன? இதுபோன்ற நிலைமை ரஷ்யாவில் இல்லையே! ஆதிக்கக்காரனுக்கும்–ஆதிக்கத் திற்கும் கொஞ்சமாவது இடமிருக்கிறவரையிலும் தொல்லைப்படுகிறவர்களும்–தொல்லையும், தரித்திரமும், ஏழ்மையும் இந்த நாட்டில் இருக்கத்தான் செய்யும்.

இன்று காலை முதல் மாலை வரையிலும் என்னிடம் வந்து 5, 6 பேர்கள்வரை வந்து, 'வேலை கொடு, வேலை கொடு' என்று வருந்தினார்கள். ஒருவருக்கு, கலெக்டருக்கு சிபாரிசுக் கடிதம், தாசில்தாருக்கு சிபாரிசுக் கடிதம் எழுதித் தரவேண்டுமாம்; ஒருவர், தனது குழந்தைகளுக்கு அம்மை போட்டிருக்கிறது, சம்சாரத்திற்கு உடல் நோவு; நான் என்ன செய்வேன்? 4 மாதமாக வேலையில்லையே, காப்பாற்றுவாரில்லையே என்று கதறினான். நான் அவருக்கு 2 படி புழுங்கல் அரிசி கொடுக்கும்படி வீட்டிற்குச் சீட்டுக்கொடுத்தேன். இதுபோன்ற கொடுமைகளின் தன்மையை இன்று என்னுடன் தங்கியிருந்த நண்பரும் நன்கறிவார். எங்கும் வேலையில்லை என்ற கூக்குரல் அதிகரித்துவிட்டது. ஏன் வேலையில்லாமல் போய்விட்டது? வேலையில்லாமை எப்படி ஏற்படும் என்று யோசித்துப் பார்த்தீர்களா?

www.thamizham.net - Free E book No 3041

ஒரு வேலைக்காரன் காலை 6 மணிமுதல் இரவு 10 மணிவரை வேலை செய்கின்றான். ஒரு தையல்காரன் 3 மெஷின்களை வைத்துக்கொண்டு ஒரு நாளைக்கு 5 ரூ., 10 ரூ. சம்பாதிக்கிறான் என்பது உங்களுக்குத் தெரியுமா? ஒருவன் அதிகநேரம் வேலை செய்து, அதிகப் பணம் ஒருவனே சம்பாதிப்பது எதற்கு? இவைகளையெல்லாம் கணக்குப்போட்டு, ஒரு ஒழுங்கு முறைப்படுத்தி ஒரு கூட்டுறவு முறையில் அமைத்தால்—அவனவனுக்குத் தேவையான அளவுக்கு ஒவ்வொருவருக்கும் கண்டிப்பாகப் போதிய பலன் கிடைக்கும்.

நம்முடைய நாட்டில் அடிப்படையான மாறுதல் செய்யாவிட்டால் கூடிய சீக்கிரத்தில் நாம் என்ன கதிக்கு ஆளாகவேண்டிவரும் என்பதை யோசித்துப் பாருங்கள்.

நாம் செலவழிப்பதில் வகைதொகையற்ற முறையில் வீண் செலவு செய்து வருகின்றோம். கூட்டுறவு முறையில் நமது வாழ்க்கையை நடத்தினால் இன்றைய நமது செலவில் எட்டில் ஒரு பாகம்தான் செலவு ஏற்படும்; பாக்கி இன்னும் 7 பேருக்கு உதவும். உதாரணமாக, ரஷ்யர்களின் சாப்பாட்டு முறையைக் கவனியுங்கள். அங்கு சாப்பாடும் கூட்டுறவு முறையில்தான். அங்கு ஓர் இடத்தில் நாளொன்றுக்கு ஒரு வேளைக்கு நாற்பதினாயிரம் பேர்கள் சாப்பிடுமிடத்தைக் கண்ணுற்றேன். ஆனால், இங்குள்ள நிலைமை என்ன? ஒரு வீட்டில் சமையல் செய்வதென்றால் தேவைக்குமேல் அதிகமாய்த்தான் போட்டுச் சமைக்கிறார்கள். 4, 5 பேர்களுள்ள ஒரு குடும்பத்திற்கு, ஒரு பெண் கண்டிப்பாகச் சமையலுக்கென்று ஏற்படுத்திக்கொண்டிருக்கிறோம். ஒவ்வொரு குடும்பச் சமையலுக்கு என்றும் ஒரு தனி அறையும், பாக்கி வசதிகளுக்கென்று கொள்ளை கொள்ளையான இடமும் ஒதுக்கிவைத்துக் கொண்டு என்ன அக்கிரமமான தீங்குகளை வசதியற்ற எளியவர்க்கு உண்டாக்கிக் கொண்டிருக்கிறோம்!

ரஷ்யாவிலுள்ள மேற்சொன்ன பொதுச் சமையல் சாலையில் (General kitchen) 970 பேர்தான் வேலையிலீடுபட்டிருக்கிறார்கள் என்று நான் கணக்குக்கேட்டுத் தெரிந்தேன். நம்முடைய நாட்டில் 4 பேர்களுக்கு ஒரு பெண்வீதம் சமையலுக்கு வைத்துக்கொண்டிருக்கிற கணக்குப்படி 40000 பேர்களுக்கும் எத்தனை பெண்களை ஒதுக்கித் தள்ளிக் கொடுமைக்கு ஆளாக்குவது என்றுதான் யோசித்துப் பார்க்கும்படி கோருகிறேன். நம்முடைய சமையலைப்பற்றி ஏதாவது பந்தோபஸ்து உண்டா? அங்கு சமையலறையையும், சாப்பாட்டு சாமான்களையும்—சமைத்த பிறகும், தினம் டாக்டர் சரியான பரிசோதனை செய்கிறார். ஒரு பெரிய எம்.டி., (M.D.) டாக்டர் அதற்கென்றே ஒவ்வொரு கூட்டுறவு சமையலுக்கும் உண்டு. இங்கு நாம் என்ன செய்கிறோம்? சல்லிசான சரக்குகளை வாங்கிப் போட்டு வெந்தும் வேகாமல் அவித்துத்தின்று, சாப்பாட்டின் காரணமாகவே பெரும்பாலும் நோய் அடைகின்றோம். மேல் நாட்டின் வாழ்க்கையில் எவ்வளவு கஷ்டக் குறைவு, அனுகூலம், மிச்சம், சுகாதாரம், சவுக்கியம் ஆகியவைகள் கவனிக்கப்படுகிறதென்பதை யோசியுங்கள். அங்கு ஒரு ரொட்டிக் கிடங்கில் (Bakery) நாள் ஒன்றுக்கு 250 டன் ரொட்டிகள் ஒரே சமயத்தில் செய்யப்படுவதைப் பார்த்தேன். கூட்டுறவு முறையினால் நாள் ஒன்றுக்கு ஒரு இடத்தில் இருபதாயிரம், முப்பதாயிரம் வீதம் 'ஷர்ட்டு'கள், 'டிரவுசர்'கள், 'ஜாக்கட்டு'கள் தயாரிக்கப்படுகின்றன. அங்கு அத்தனை பேரும் வேலையிலேயே ஈடுபட்டிருக்கிறார்கள்; அங்கு மிகக் குறைந்த செலவுதான்.

இங்கு நாம் துணிவாங்கிக் கொடுத்தால் காலே அரைக்கால் பாகம் திருட்டும் சேதமுமாகின்றதென்றும் சொல்லலாம்; அங்கு அப்படியில்லை. துணியை அப்படியே 200, 300 வீதம் மடிப்பு மடித்து முதலிலேயே சின்ன வேலைக்கானவைகளுக்கு அதாவது பாக்கெட், கழுத்துப் பட்டை, கைப் பட்டை முதலியவைகளுக்கு, ரம்பத்தில் அறுப்பதுபோன்ற மிஷினில் அறுத்து எடுத்துக்கொண்டு, பாக்கியை அப்படியே சேதாரம் இல்லாமல் முழுதும் உபயோகப்படுத்திக் கொள்கிறார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

ரஷ்யாவில் 2000—3000 ஜனங்கள் சந்தோஷமாக, சவுக்கியமாக, போதிய சுகாதாரத்தோடு ஒரே கட்டிடத்தில் நிரம்பி வாழ்வதைப் பார்த்தேன். இங்கு நம்முடைய ஒரு வீட்டை என்ன அனாவசியமாக 3, 4 அடுக்கு மெத்தைகளுடன் கட்டுகிறோம்; அதில் பகுதிபாகம் நாம் உபயோகப்படுத்துவதுகூட இல்லை; அப்படி உபயோகப்படுத்தும் பாகத்தில் சுத்தம், சுகாதாரம் இருப்பதில்லை. நம்முடைய வீட்டைநிரப்புவது ஒடிந்து போன மத்து, கெட்டுப்போன நாற்காலி, மரம், கூடை, கிழிந்துபோன பாய், அவிந்துபோன குப்பைகளால்தான். இந்த முட்டாள்தனத்திற்காகவா வீடு வைத்துக்கொண்டு வாழு கிறோம்? யோசித்துப் பாருங்கள். அங்கு எப்படி வீட்டுவசதி முறை இருக்கின்றதெனக் கேட்கலாம். சர்வாதிகாரியான ஸ்டாலினுக்கும் சாதாரணத் தொழிலாளிக்கும் சுமார் 10, 16 அடி அளவுள்ள ஓர் இடந்தான். அங்கு ஒரேமாதிரி சாதிக்காய்க் கட்டிலும், மேசையும் சிறப்பாக இருக்கும். அங்கு ஒரு சிறு 4×4 உள்ள கக்கூசு நூற்றுக்கணக்கானவர்களுக்கு உபயோகப்படுகிறது; தோட்டியே கிடையாது; அது கக்கூசா என்று நாம் சந்தேகப்பட்டே போய்விடுவோம்; அவ்வளவு சுத்தம்! அதில் எவ்வித வாடையும் இருக்காது; அழகு, ஒழுங்கானமுறை எல்லாம் சேர்ந்திருக்கிறது. இங்கு ஒரு வீட்டுக்கு 5 பேருக்கு ஒரு கக்கூசாக இருக்கிறது. அதற்கு எவ்வளவு இடம்? அப்படியிருந்தும் என்ன சகிக்கமுடியாத சுகாதாரக் குறைவு? இங்கு 300 பேர்களுக்கு ஒரு தோட்டி வீதம் இருப்பானென்று நம்பு கிறேன். இந்த 30,000 பேர்களுள்ள ஈரோட்டில் எத்தனை தோட்டிகள்? எத்தனை வீடு, தெருக் கூட்டுகிறவர்கள்? எத்தனை வேலைக்காரர்கள்? இப்படியிருந்தும் இங்கு அசுத்தம்; அசுத்தம்தானே என்றும் அதி அக்கிரமமாக இருக்கிறது! அங்கு கக்கூசுக்குப் பக்கத்திலேயே படுக்கையறை இருக்கும்; அங்குள்ளமுறை கஷ்டத்திற்கே இடமில்லை; வழியுமில்லை.

ஒவ்வொரு கூட்டுப் பண்ணையிருக்கும் இடத்திலும்—ஒவ்வொரு தொழிற்சாலைக்கும் ஒரு நல்ல (Park) பார்க், சினிமா, விளையாட்டு இடம், டிராமா, சுகாதார வசதி சாலை எல்லாம் அமையப்பட்டிருக்கின்றன.

ஒவ்வொரு ஸ்தாபனத்திலுமுள்ள 5000 பேருக்கும், 1000 கூட்டுறவு பேருக்கும் முறைப்படி ஒழுங்குபடுத்தப்பட்டுச் சம்பளம் ஒரே அளவுதான் கொடுக்கப்பட்டு வருகிறது. மேல்கொண்ட மீதியை அக் கூட்டுப் பொதுஜனங்களுடைய நன்மைக்கு உபயோகப்படுத்து கிறார்கள். இங்கு ஒரு மனிதனுக்கு ஒரு வண்டி இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அதில் அவன் எப்பொழுதும் போய்க்கொண்டிருக்கிறானா? 10 மணி நேரத்திற்கும் வீணே தீனிபோட்டு 3 மணி நேரத்திற்கும் குறைவாகவே வேலை வாங்கு கிறான்; 3 மணி நேரத்திற்கு அனுபவிப்பதினால் பாக்கி 7 மணி நேரக் கூலியும், செலவும் வீணாகிறது. இப்படியேதான் தனிப்பட்டவர்கள் தன்மையால் உண்டாகும் நாசங்கள் அனேகம். நம்முடைய நாட்டில் தேசச் செழிப்பும், அனுபவப் பொருள்களுற்பத்தியும் ஒன்றுக்கு எட்டாக விளங்குகிறதா, இல்லையா? ஆனால், மக்களின் கஷ்டத்திற்குக் காரணம் என்ன? தனித்தனி என்னும் உணர்ச்சி ஒழியவேண்டுமா, வேண்டாமா? கவலையற்று வாழ்வதுதான் சிறந்தது; அதற்குக் கூட்டுறவு முறையேதான் பெரிதும் தேவையானது.

இந்த ஈரோடு முனிசிபாலிட்டியை எடுத்துக்கொள்ளுங்கள். அது ஒன்று சேர்க்கப் பட்டுப் பலருக்கும் வாழ்க்கை வசதிகளைப் பூர்த்திசெய்கிறது என்று வைத்துக்கொள் ளுங்கள். அதனால் எவ்வளவு பிரயோசனப்படும்? எவ்வளவு செலவு மிச்சமாகும்? எவ்வளவு அனுகூலம்? எவ்வளவு இலாபம்? எல்லாவற்றிலும் நன்மையேதான் ஏற்படும். அப்படிக் கின்றித் தனிப்பட்டவர்கள் நன்மைக்கு மாத்திரம் ஏன் எதுவும் இருக்கவேண்டும்? ஒரு ஹோட்டலைப் பொதுவாகப் பல குடும்பங்களுக்குச் சேர்த்துவைத்து நடத்தினால், இரண்டணாவுக்கும் கீழாகவே நல்ல சாப்பாடு போடலாம்; அது சத்துள்ளதாகவும், சுகாதார முறைப்படியும் இருக்கும். நம் வீட்டில் சமையல் என்னும் பேரால் சரிபாக சாமான் வீணாய்ப் போகின்றது. நம்முடைய நாட்டில் என்ன பொதுப் பிரியம் இருக்கிறது?

www.thamizham.net - Free E book No 3041

பொது அலுவல்களில் டாக்டர் பரீட்சை செய்து என்ன சவுக்கியமாக எத்தனை காரியங்களைச் செய்யலாம்? இதுபோலவே வியாபாரத்திலும், கடையில் பேரம் செய்யும்போது கிராமக் குடியானவனிடம் 9 சாக்கு போட்டுவிட்டு 10 சாக்கு என்று பித்தலாட்டம் செய்வது தெரியும்; ஒன்றுக்கு ஒன்றரையாய் எடுத்துக்கொள்வது தெரியும்; இது நானும் செய்திருக்கிறேன். நம்மிடம் நிறைந்திருப்பது பொய்; சரக்கோ கலப்படம்; உபயோகிப்பதோ முக்கால் அளவுள்ள படிதான்; இவைகளினாலெல்லாம் எவ்வளவு நஷ்டம்? இவைகளையெல்லாம் கூட்டுறவு முறையில் இலட்சியம்கொண்ட ஜனத் தலைவர்கள் என்பவர்கள் ஏன் கன்ட்ரோல் (Control) செய்து அடக்கித் தடுக்கக்கூடாது? ஒவ்வொரு தனிப்பட்டவனையும் ஒன்றுபடுத்தி, 'நீயும் வா; எல்லோரும் ஒரு காரியத்தைச் செய்வோம்; எல்லோரும் இலாபம் பெறுவோம்; அதிக இலாபமும், 'அதிக ஓய்வும் எடுத்துக்கொள்வோம்' என்று ஏன் கூட்டுறவுத் தன்மையைப் பிரயோகிக்கக்கூடாது.

இம்முறைகள் என்றைக்காவது தலைதூக்கித்தான் ஆகவேண்டும். இதற்காகப் பொது உடைமை வேண்டுமா? பொது உடைமைப் பேச்சே வேண்டியதில்லை. ஆனால், இன்றே கூட்டுறவுத் தன்மையைக் கைப்பற்றுங்கள். வட்டி விஷயத்திலும் பாங்குகளில் ஏராளமான ரூபாய் தூங்குகிறது. இங்கு வட்டி ரூ. 10-க்கு மாதம் கால் ரூபாய் வாங்குகிறானே; என்ன கொடுமை? ரஷ்யாவில் லேவாதேவியும் செய்யக்கூடாது. ஒருவனுக்கு 5 ரூபாய் கடன் கொடுத்தால், அது அங்கு திருட்டு ஆகிவிடுகிறது. ஆபத்தில் உதவுவதென்றால்—கஷ்டத்துக்காக இருக்கும் என்றால்—'ஏன் ஆபத்தும் கஷ்டமுமான நிலைமை ஏற்படும்?' என்பதுதான் அங்குக் கேட்கப்படும் கேள்வியாகும்.

ஜன சமூகம் கவலையற்று வாழ ஒழுங்கான முறை-கூட்டுறவுத் தத்துவ வாழ்க்கை முறையேயாகும். நான் அதிகமாகச் சொல்ல வரவில்லை; இவைகளைத்தான் சொல்ல நினைத்தேன். இதற்கு மக்கள் தயாராகிவிட வேண்டும்; சுயநலத்தை ஒதுக்கி வைத்து விட வேண்டும்; பலருடைய நன்மைக்கும் என்று கருதி இறங்க வேண்டும். 'இவற்றைச் சர்க்கார் செய்ய வேண்டியதா? பொதுஜனங்கள் செய்ய வேண்டியதா?' என்பது— ஆத்திகர்கள், 'விதி பெரிதா? மதி பெரிதா?' என்று தர்க்கிப்பதை ஒத்ததாகும். இவ் விவகாரங்களில் வலுத்தவன், வாய்ப் பேச்சுக்காரன்தான் ஜெயமடைவான்.

சர்க்கார்தான் ஜனங்கள்; ஜனங்கள்தான் சர்க்கார் என்பதை உணருங்கள். நமது சரீரத்தில் கஷ்டமேற்பட்டால் நமக்கென்னவென்று இருப்போமா? அதுபோல், நமது உணர்ச்சிகள் இருக்கவேண்டும். சிப்பியானது திறந்திருக்கும்பொழுது மழைத்துளி விழும் போதுதான் முத்தாகிறது. அதுபோல்தான், நமது உணர்ச்சிகளைப் பக்குவப்படுத்தி, சரிப்படுத்தி வைத்துக்கொண்டு தயாராகவே இருக்கவேண்டும்; அப்பொழுது கண்டிப்பாகப் பலன் ஏற்பட்டுவிடும். நம்முடைய அபிப்பிராயந்தான் ஜனசமூக அபிப்பிராயம் என்று தன்னம்பிக்கையுடன் நாம் வேலை செய்யவேண்டும். நமது உடலிலுள்ள பழைய 'தனித் தனித் தத்துவ' இரத்தத்தை எடுத்துவிட்டுக் கூட்டுறவுத் தன்மை என்ற இரத்தத்தைப் பாய்ச்சச் (Inject) செய்யவேண்டும். இது நம்மால் முடியுமா என்றிருக்கக் கூடாது; கண்டிப்பாய் இது முடியாமல் போய்விடாது.

நம்முடைய மக்கள் மடத்தனத்தில் இருக்கின்றார்கள்—அதனால் முடியாது என்றோ; அறியாமை அந்தகாரம் சூழ்ந்திருக்கிறது—அதனால் முடியாதென்றோ சொல்லிவிட முடியாது. 1914–18-ஆம் வருஷத்தில் நடந்த கொடிய மகா யுத்தத்தைக்கூடக் கேள்விப் படாத ரஷ்யர்களே இருக்கிறார்கள். இப்பொழுதும் (Czar) ஜார் அரசன் இருந்து அரசாளுகிறான் என்றே கருதிக்கொண்டிருக்கும் காட்டுமிராண்டிகளும் அங்கு இருக்கத்தான் செய்கின்றார்கள். இதனால் எல்லாம் அங்கு தகித்துக்கொண்டிருந்த கூட்டுறவுத் தன்மை போய் விட்டதா? எப்படிக் காய்ந்த, தீய்ந்த சருகில் அதிவேகமாய் நெருப்புத் தீப்பற்றிக்கொள்ளுகிறதோ, அப்படியேதான் அங்கு மதம் ஒழிந்து, கடவுள் மாய்ந்து, அரசர்கள் மண்ணாங்



www.thamizham.net - Free E book No 3041

கட்டிகளாகி, செல்வவான்கள் பனிக்கட்டிகளாகி—மழை பெய்தாலும், வெயில் அடித்தாலும் கெடுவதுபோல் கெட்டு, 16 கோடி ஜனங்களும் கூட்டுறவு வாழ்க்கைக்காரராக ஆகிவிட்டனர் என்பதை நீங்கள் ஞாபகத்தில் நன்கு பதிய வைத்துக்கொண்டு, இந்நாட்டுக் கொடுமை ஒழிப்புக்குத் தைரியங்கொண்டு, திடங்கொண்டு போராடி உழையுங்கள்! உங்கள் உணர்ச்சிகள் இவைகளுக்கு எப்பொழுதும் அனுகூலமாகவே இருக்கட்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

[ஈரோட்டில், 4-11-1933-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 12-11-1933]

# 2. தொழில் வளர்ச்சி

## 1. சுதேசி

மக்களுக்கு ஓர் எழுச்சியையோ, உற்சாகத்தையோ, ஆத்திரத்தையோ உண்டாக்கி விட்டுவிட்டு, அவர்களுக்குத் தகுந்த வேலை கொடுத்துக் கொண்டிருக்காவிட்டால் அது தாறுமாறாகக் கண்ட கண்ட பக்கங்களில் எல்லாம் போய் முட்டச்செய்யும் என்பது இயற்கையேயாகும். நம்மைப் பொறுத்தவரை—சுயமரியாதை இயக்கத்திற்கும் அரசியல் சம்பந்தமான கிளர்ச்சிக்கும் மத்தியில் சரியான தடைச் சுவர் இருக்க வேண்டும் என்பது நம் முடிவான அபிப்பிராயமாகும்.

நாம் இப்படிச் சொல்லுவதாலேயே இன்றைய அரசாங்கத்தைக் காப்பாற்றிக் கொண்டு அதனிடம் வாலாட்டிக் கொண்டு அடிமையாய் இருக்க வேண்டுமென்று நாம் சொல்ல வரவில்லை. நம்மைப் பொறுத்தவரை, திரு. எஸ். இராமநாதன் அவர்களை வைத்துக் கொண்டே நாம் திரு. காந்தியவர்களிடம் 1927ஆம் ஆண்டிலேயே—இந்தியா விடுதலை யடைய வேண்டுமானால், சுயமரியாதை அடையவேண்டுமானால்—'இந்து மதமும் காங்கிரசும் ஒழிந்தாகவேண்டும்' என்று சொல்லிவிட்டு வந்தவர்களாவோம். அந்த நிமிடமே 20 அடி தூரத்தில் நின்று கொண்டிருந்த திரு. இராஜகோபாலாச்சாரியாரிடமும் சொல்லிவிட்டே வாசல் கடந்தோம்; அது முதலே அந்தப் பிரச்சாரமும் செய்தோம். இந்த அபிப்பிராயம் 1920-ல் நடந்த கிளர்ச்சி அனுபவத்திலேயே ஏற்பட்டதாகும். இந்து மதம் என்பது அழிய வேண்டும் என்கின்ற அபிப்பிராயமும் நமக்குச் சுமார் 25, 30 வருஷத்திற்கு முன்னாலேயே ஏற்பட்டதாகும். 5, 6 வருஷ காலமாகவே அரசியல் கிளர்ச்சியும், தியாகத்தின் பயனும் பாமர மக்களை—ஏழைகளை—தொழிலாளிகளை—கூலிகளை நசுக்கிப் பிழியவே உபயோகிக்கப்படப் போகின்றன என்பதில் நமக்குச் சிறிதும் சந்தேகம் இருந்ததில்லை.

இது போலவே 'சுதேசிப் பொருள்', 'பரதேசிப் பொருள்' என்பதிலும் உள்ள புரட்டுகளை நாம் அறிவதில்லை. சுதேசிப் பொருளை ஏன் ஆதரிக்கவேண்டும் என்று சொல்லப்படுகின்றது என்று பார்ப்போமானால், 'சுதேசிப் பொருளை ஆதரித்தால் தொழிலாளிக்குத் தொழில் கிடைக்கும்' என்று சொல்லப்படுகின்றது. அந்தப் பேச்சில் சிறிதுகூட நாணயம் இல்லவே இல்லை. ஏனெனில், இந்த நாட்டில் தொழிலாளிக்கு ஒருவிதப் பாதுகாப்பும் கிடையாது. பணக்காரர்கள் அடையும் இலாபத்திற்கோ அளவு கிடையாது. எவ்வளவு இலாப மடைந்தாலும் அது அவனது 'யோகமாய்', 'அதிர்ஷ்டமாய்'ப் போய் விடுகிறது. 'இன்ன இலாபத்திற்கு மேல் முதலாளி இலாபமடையக் கூடாது' என்ற நிபந்தனையே கிடையாது. ஆனால், தொழிலாளி வயிற்றுக்குப் போதவில்லை என்று வேலைநிறுத்தம் செய்தால், கூலி போதாது என்று கேட்டால் அவனை சர்க்காரிடம் சொல்லித் துப்பாக்கியால் சுடச் செய்யவேண்டியது, 10, 10 வருஷம் தண்டிக்கவேண்டியது;

www.thamizham.net - Free E book No 3041

அவர்கள் வீடுகளில் நெருப்புவைத்துக் கொளுத்தவேண்டியது ஆகிய காரியங்களே தொழிலாளிகளின் நிலை. இதற்குச் சமாதானம் அவர்களது 'தலை எழுத்து' என்பதைத் தவிர வேறில்லை.

இந்த நிலையில் எதற்காகச் சுதேசிப் பொருளை ஆதரிப்பது, எதற்காக கள்ளுக் கடைமறியல் செய்வது என்பது நமக்கு விளங்கவில்லை. இந்த நிலையில் ஏழை மக்களுக்கு எது சுலபமோ அதை வாங்கிக் கொள்ள அனுமதி கொடுக்கவேண்டியதுதான் சமதர்மமாகும் என்பது நமது சொந்த அபிப்பிராயம்.

முதலாளி, தொழிலாளி நிலையை வரையறுத்த பிறகுதான், சுதேசிப் பொருள் பேச்சும் பிரச்சாரமும் பயன்படுமே தவிர இந்த நிலையில் ஒன்றும் பயன்படாது. முதலாளிகள் கொள்ளை அடிக்கத்தான் சுதேசிப் பிரச்சாரம் உதவும்.

இன்னும் உதாரணம் வேண்டுமானால் கதரை எடுத்துக்கொள்ளுவோம். கதர்ப் பிரச்சாரம் நாமே செய்தோம். 'கதர் கட்டாதவன்—தேசத் துரோகி; நரகத்துக்குப் போவான்' என்றெல்லாம் சொன்னோம்; கதர்சாலை ஏற்படுத்தினோம்; ஏழைகளையும் பிச்சை எடுத்தாவது வயிற்றை வாயைக் கட்டியாவது கதர்கட்டும்படி பிரச்சாரம் செய்தோம். கதர் சம்பந்தமான அனேக காரியங்களுக்கு நாம் பொறுப்பாளி என்று சொல்லிக்கொள்ள நமக்குப் பல உரிமைகள் உண்டு. கடைசியாக என்ன பலன் ஏற்பட்டது? கோயம்புத்தூர் மால்மில்லின் நாலரை முழம் வேட்டி 4-க்கு ரூ. 1-12-0-க்கு திரு. செங்கோட்டையா விற்கிறார்; ஆனால் நாலரைமுழம் கதர்வேஷ்டி 2-க்கு 1-12-0-க்கு கொடுத்து சுதேசி கைத்தொழிலை ஆதரிக்க வாங்குகிறோம். அதாவது, 7 அணா வேட்டிக்கு, 14 அணா கொடுத்து வாங்குகின்றோம். இப்படிப்பட்ட இந்த நிலையை ஆதரிப்பதுதான் நம் சுதேசி கைத்தொழில் ஆதரிப்பு என்றால், கண்டிப்பாய் இந்த மாதிரி ஆதரிப்பு ஒழிந்துதான் ஆகவேண்டும். 'இந்தப்படிக்கு ஆதரிக்காவிட்டால், ஏழைகளுக்கு ஜீவனத்திற்கு மார்க்கமில்லை' என்று சொல்வார்களேயானால், அப்படி வேலையில்லாமல் இருக்கும் ஆட்கள் பட்டினிகிடந்து, வேதனைப்பட்டு, பணக்காரர்கள் மீது பாய்ந்து—அவர்களது பணத்தை ஏழைகளுக்குப் பங்கிட்டுக்கொடுக்கும் திட்டத்தில் ஈடுபட்டு ஜெயிலுக்கு வேண்டுமானாலும் போய் உட்கார்ந்துகொண்டு, அங்கு ஏதோ தன்னாலான வேலையைச் செய்துவிட்டு ஜெயில் சாப்பாடு சாப்பிட்டுக்கொண்டிருப்பது மெத்த நாணயமும் பொதுநலமுயற்சியும் கொண்ட யோக்கியமான வேலையுமாகும். அந்தப்படிக்கு இல்லாமல் பம்பாய், ஆமதாபாத்தில் சொந்தக்காரர்கள் சுதேசிப் பிரச்சாரமும்; மாதம் 100, 200 வாங்கும் கதர் இலாக்காக் காரர்கள் கதர்ப் பிரச்சாரமும், சட்டசபைக்குப் போய் கள்ளை நிறுத்துகிறவர்கள் கள்ளுப் பிரச்சாரமும் செய்வதென்றால் இதில் என்ன நாணயம் இருக்கிறது? பெரிய பெரிய மிராசுதார்கள் ஆயிரக்கணக்கில் ஏக்ரா பூமியை வைத்துக்கொண்டு, உழுகிறவனுக்கு உணவு கிடைக்காமல்படி நசுக்கிப் பிழிந்து 2-8-0 ரூபாய்க்கு ஒரு ஜதை கதர் வேஷ்டியைக் கட்டிக்கொண்டு, 'கனவான்களே! கதர் கட்டுங்கள், ஏழைகள் பிழைப்பார்கள்' என்றால் அவர் பெரிய தேசாபிமானிகளா, ஏழை பங்காளிகளா என்கிறோம்.

['குடி அரசு'—தலையங்கம்—7-12-1930]

## 2. கதர்

முதலாவதாக, பொருளாதாரத் துறையை எடுத்துக் கொண்டு கதர் எந்த விதத்தில் அதற்குப் பயன் அளிக்கக் கூடியதாக இருக்கின்றது என்பதை யோசித்துப் பார்ப்போம். பஞ்சு விலை எவ்வளவுக்கெவ்வளவு குறைகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு விவசாய மக்களுக்குக் கஷ்டம் இருந்தாலும் பஞ்சு விலையைப் பற்றிய—அதாவது, மூலப் பொருள்களைப் பற்றிய இலட்சியமே இல்லாமல் கதரின் உற்பத்தி, நூற்பு நெசவு ஆகியவற்றின் செலவுகளே, அதாவது அசல் விலையே மிகவும் கூடுதலாகவே அடங்கும்படியாக ஆவதோடு

www.thamizham.net - Free E book No 3041

அதை உற்பத்தி செய்யும் ஒவ்வொரு நிலையும் கஷ்டமானதும் முன்னேற்றத்திற்கு உதவாததுமாகவே இருக்கின்றது.

அதாவது, யார் எவ்வளவு பாடுபட்டாலும் கதர் நூல் விஷயத்திலும், நெசவு விஷயத்திலும், துணி ரகம் விஷயத்திலும் இன்று காணப்படும் தன்மையிலிருந்து இனி சாதாரணத்தில் எவ்வித மாற்றத்தையாவது செய்துவிடக்கூடும் என்று சுலபத்தில் எண்ணுவதற்கில்லை. ஏதாவது ஒரு சிறு மாற்றமாவது-ரகம் முற்போக்குத் தன்மையில் செய்யலாம் என்றாலோ—அதற்கேற்படும் கூலி முற்போக்கின் தகுதிக்கு மேற்பட்டதாகச் செலவழித்தாக வேண்டி வரும். இதைத் தவிர, விலை விஷயத்தில் இனி இதைவிடக் குறைக்கும்படியான நிலைமை சுலபத்தில் ஏற்படப் போவதில்லை.

ஏனெனில், கதர்த் தொழிலோ கதர் வியாபாரமோ மக்களின் சாதாரணப் பழக்கத்தில் உள்ள தொழிலாயும் வியாபாரமாயும் இல்லாமல் வேறு ஏதோ தத்துவத்திற்காக—தியாகம் செய்து தீரவேண்டிய முறையில்—மற்றவர்கள் நிர்ப்பந்தத்தின்மீது நூற்றல், நெய்தல், விற்பனை, வாங்கிக் கட்டுதல் ஆகியவைகள் முழுதும் நடைபெற வேண்டியதாக இருக்கின்றது. இவ்வளவு கஷ்டப்பட்டும் உத்தேசித்த காரியமாகிய பொருளாதாரம் என்பது—வாங்கி விற்கின்ற மத்திய மனிதன் என்கின்ற முதலாளி தவிர மற்ற யாருக்கும் அது சிறிதும் பயன்படாததாயிருப்பதுடன் உண்மையிலேயே, வாங்கிக் கட்டுகிறவன் அதிகப் பொருள் அதாவது, 100-க்கு 250 பங்கு நஷ்டமடைவதற்கும் தயாராக இருக்கவேண்டியவனாகிறான். அப்படிச் செய்தும் தொழிலாளியாகிய நூற்புக்காரன் ஒரு மணிக்கு ஒரு தம்பிடி பெற முடிகின்றது. நெசவுக்காரனும் சாதா மில் நூல் நெசவு நெய்வதை விட இரண்டு பங்கு கஷ்டமும் கவனமும் செலுத்தி வேலை செய்து பழைய கூலியையேதான் பெற வேண்டியதாயிருக்கின்றது.

ஆகவே, பொருளாதாரத் துறையில் கதர் எந்த விதத்தில் பயன் அளிக்கின்றது என்பது இதிலிருந்தே அறியத் தக்கதாகும். இனி, கதர் தத்துவம் கைத்தொழில் துறையில் எப்படிப் பயன்படுகின்றது என்று பார்ப்போம்.

கதர் கைத்தொழில், உலகக் கைத்தொழில் முறைக்கு நேர் விரோதமாக இருக்கின்றது. எப்படியெனில், கைத்தொழில் என்பது வேலை செய்கின்றவன் கொஞ்ச நேரத்தில் அதிக சரக்கு உற்பத்தி பண்ணக் கூடியதாகவும்—அதுவும் சரீரப் பிரயாசை தேவையின் பாகம் நாளுக்கு நாள் குறைந்து கஷ்டமில்லாமல் செய்யக் கூடியதாகவும்—சாமான் மாதிரியும் நாளுக்கு நாள் உயர்ந்த தரமானதாகவும் இருக்க வேண்டியதோடு, அதை வாங்கி உபயோகிக்கும் மக்களுக்கு அந்தச் சாமான்கள் அதிக சரசமாய் இருப்பதாகக் காணக் கூடியதோடு, அச் சாமானின் வேலைப்பாடானது மக்களை வாங்கும்படி தூண்டக்கூடியதாகவும் இருக்கவேண்டியதாகும். இந்த முறையில் பார்த்தாலும் கதர் தத்துவம் முதல் பிரிவுக்குச் சொல்லப்பட்ட காரணங்களால் கைத்தொழில் முன்னேற்றத்திற்கு ஒவ்வொரு நிலையிலும் விபரீதமாகவே இருந்து வருகின்றது.

மூன்றாவதாக, வியாபாரத்துறையில் பார்த்தாலும் மூலப் பொருளை அதிகமாகச் செலவு செய்து—அதாவது ஒரு வேட்டிக்கு எவ்வளவு மூலப்பொருள் (பஞ்சு) வேண்டுமோ, அதற்குமேல் இரண்டு அல்லது மூன்று பங்கு வீதம் பஞ்சைச் செலவு செய்து (முரட்டுத் தனமாக இருப்பதால்) அது சம்பந்தப்பட்ட தொழிலாளிகளையும் கசக்கிப் பிழிந்து, விற்கின்றவனையும், வாங்குகின்றவனையும் வேறு காரணத்திற்காக, அதாவது வியாபாரத்தில் நம்பிக்கையோ, விருப்பமோ இல்லாமல் நிர்ப்பந்தத்தின் பொருட்டு ஜனங்கள் இந்த விற்றல், வாங்கல், வியாபாரம் செய்யும்படியாக இருப்பதால் கதர் தத்துவம் வியாபார முறைக்கும் அதன் முற்போக்குக்கும் நேர்விரோதமாகவே இருக்கின்றது.

தவிர, ஒரு நாட்டின் பொருளாதாரம், கைத்தொழில், வியாபாரம் ஆகியவை மூன்றும் முற்போக்கடைய வேண்டுமானால் இம்மூன்றும் மற்ற நாடுகளில் எப்படி முற்போக்

www.thamizham.net - Free E book No 3041

கடைந்து இருக்கின்றன? நமது நாட்டுக்கும், மற்ற நாட்டுக்கும் உள்ள—வியாபாரம், உற்பத்திச் சவுகரியம் எப்படி இருக்கின்றன? அதன் போட்டியின் தத்துவம் என்ன? உலகப்போக்கு என்ன? என்பவைகளை யோசித்துப் பார்க்கவேண்டும். ஒவ்வொரு நாடும் முற்போக்கடைவது நவீன ஆராய்ச்சி, இயந்திர சவுகரியம், வியாபார தந்திரம் ஆகியவை களைக் கொண்டேயொழிய—பண்டையக் காலத்தின் கைத்தொழில் முறையையே புதுப்பித்த தாலோ, ஆராய்ச்சியை அலட்சியம் செய்து இயந்திரங்களை வெறுத்ததாலோ, அல்லது மறியல் செய்து நிர்ப்பந்தப்படுத்தி வியாபாரம் செய்யச் செய்ததினாலோ அல்லவென்பது விளங்கும்.

இந்தியா தேசத்தின் மக்களைச் சாதிவாரியாகப் பிரித்து, ஒவ்வொரு சாதிக்கு இன்ன, இன்ன தொழில் என்று கற்பித்து, அந்தந்தத் தொழிலை அந்தந்தச் சாதி தலைமுறை தலை முறையாகச் செய்ய வேண்டியதுதான் மனித தர்மம் என்கின்றதான நிர்ப்பந்தம் இங்கு இருந்து வருவதாலும்; இந்தத் 'தொழிலாளி' சாதியல்லாதவர்களே இந்நாட்டின் நலத்தைக் கோருகின்ற தலைவர்கள் என்பதாக ஆகிவிட்டதாலும்—அதுமாத்திரமல்லாமல் இந்த மாதிரியான வருணாசிரம தர்மதி தொழில்முறையில் நம்பிக்கை உள்ளவர்களும் அதை மேலும் நிலைநிறுத்தப் பாடுபடுகின்றவர்களுமே தொழில் முறையைச் சீர்திருத்தம் செய்கின்றவர்களாக இருப்பதினாலும், பண்டையத் தொழில் முறையைப் புதுப்பிக்க வேண்டுமென்றும், புதிய நாகரிக இயந்திரங்கள் கூடாது என்றும், ஒவ்வொருவரும் ஓய்வு நேரத்தில் வேலைசெய்யவேண்டும் என்றும், அவனவனுக்கு வேண்டியதை அவனவனே செய்துகொண்டு தனித்தனித் தொழிலாளியாய் இருக்க வேண்டுமே தவிர, கூட்டுத் தொழிலாளியாய் இருக்கக்கூடாதென்றும் சொல்ல வேண்டியதாயிற்று.

ஏனெனில், இந்தப்படி ஒவ்வொருவனும் தனித்தனித் தொழிலாளியாக இருந்தால் தான், அதோடு அவனவனுக்கு வேண்டியதை அவனவனே செய்து கொள்ள வேண்டும் என்கின்ற வேலையில் அமர்ந்திருந்தால்தான் தொழிலாளிகள் ஒன்று சேரவோ, அவர்கள் நிலையைப் பற்றிக் கலந்து ஆலோசிக்கவோ, அல்லது தங்களது யோக்கியதையைச் சற்று உயர்த்திக்கொண்டு தொழிலாளி தன்மையில் இருந்து நழுவிக் கொள்ளவோ, அவர்களது பரம்பரை தர்மத்தில் இருந்து விலகவோ முடியாததாயிருக்கும் என்று கருதியே இச்சூழ்ச்சி செய்யப்பட்டிருக்கிறது. ஆதலாலேயேதான், புதிய நாகரிகமும், இயந்திர சவுகரியமும், கூட்டு வேலையும், தொழிலாளிகள் முன்னேற்றமும் கதர் தத்துவத்தில் சிறிதும் இல்லாம லிருக்க வேண்டியதாகிவிட்டது.

ஆகவே, வருணாசிரமக் கட்டுப்பாட்டை உடைத்து, மனித வர்க்கத்தின் சரீரப் பிரயாசையைக் குறைத்து, குறைந்த நேரத்தில் அதிகக் கூலி கிடைக்கும்படி செய்து, மூலப் பொருள்களை வீணாக்காமல் விவசாயிகளுக்கும் அதிகப் பணம் வரும்படி செய்து எல்லா மனிதரும் எல்லாவிதத் தொழில்களைச் செய்யவும், எல்லாவிதப் பதவிகளை அடையவும் தகுந்தபடியாக அவர்களை ஆக்கவேண்டும் என்றால், கண்டிப்பாக இத்தகைய கதர்த் திட்டம் ஒழிந்தே ஆக வேண்டும் என்பது நமது அபிப்பிராயமாகும்.

தவிர, இந்தியாவுக்கு எந்தவிதமான ஆட்சி முறையோ அல்லது சுயேச்சையோ, அல்லது 'ராம ராச்சியமோ', 'தர்ம ராச்சியமோ' வருவதானாலும் இந்தியா உலக முற் போக்கில் கலந்து கொள்ளவும் புதிய ஆராய்ச்சியின் பயன்களை அனுபவித்து மனித சமூகம் இன்பமும் திருப்தியும் அடையவும் தகுந்ததாக ஆவதற்குத் தக்கதாய் இருக்க வேண்டுமே யொழிய—மற்றபடி அவனவன் வயிற்றுப்பாட்டிற்கும் அவனவனுக்கு வேண்டிய இன்றி யமையாத அவசியங்களுக்கும் அவனவனே அவனவனது வாழ்நாள் நேரம் முழுவதையும் செலவு செய்து கொண்டிருக்கும்படியான தத்துவங்கள் கொண்டதாக இருக்கக்கூடாது.

இந்தக் காரணங்களாலேயே, திரு. காந்தியவர்களின் தத்துவமானது இந்தியாவை ஒரு நாளும் விடுதலையுள்ள நாடாகவோ மனித சமூகத்தின் முற்போக்கிற்கும் நாகரிக

www.thamizham.net - Free E book No 3041

அபிவிருத்திக்கும் சரீரப் பிரயாசையைக் குறைத்துக்கொண்டு வாழும்படியான நாடாகவோ ஒருநாளும் ஆக்க முடியாதென்றே சொல்லுவோம்.

ஏனெனில், அவரது நோக்கமெல்லாம் பண்டைய நிலைகளையே பெருமையாய்க் கருதுவதிலும் பண்டைய முறைகளைப் புதுப்பிப்பதிலும் இருக்கின்றதே யொழிய, இன்றைய உலகம் என்பது என்ன என்பதில் கவலையோ, கருத்தோ என்பதும் சிறிதும் இல்லை. பண்டைய நிலையைப் பெருமைப்படுத்தி, பண்டைய முறைகளைப் புதுப்பிப்பதில் யாருக்கு அனுகூலம் என்று பார்ப்போமானால்—மக்களை ஏமாற்றிக் கொண்டு சோம்பேறி வாழ்க்கை நடத்தும் பார்ப்பனர்களுக்கும், பாடுபடுவோரின் பலனை அனுபவிக்கும் பிரபுக்களுக்கும், சரீரப் பிரயாசை இல்லாமல் வாழ்வை நடத்த விரும்பும் படித்த கூட்டத்தார் என்பவர்களுக்கும் அனுகூலமாகவும், தங்கள் ஆதிக்கத்திற்கேற்ற அரசியலை ஸ்தாபித்துக் கொண்டு சுகத்திலிருக்கப் பயன்படக்கூடியதாகவும் இருக்கலாம். இந்தக் கூட்டத்தார் முன் திரு. காந்தி அவர்களும் மகாத்மாவாய், அவதார புருஷராய், தெய்வத் தன்மை பொருந்தியவராய், உலகம் போற்றும் உத்தமராய், உலகுக்கே பெரியோராய் விளங்கலாம்.

ஆனால், பாடுபட்டும் கூலி இல்லாமல் பட்டினி கிடப்பவனுக்கும், தலைமுறை தலைமுறையாய் ஏழையாய், கூலிக்காரனாய் இருப்பவனுக்கும், தெருவில் நடக்க—குளத்தில் குடிக்க யோக்கியதை இல்லாமல்—பன்றியிலும் கழுதையிலும் நாயிலும் கேடாய் மதிக்கப்படும் இந் நாட்டுப் பழங்குடி மக்களுக்கும் திரு. காந்தியவர்கள் 'எமனாய்' இல்லாமல் வேறு யாராய் இருக்கமுடியும் என்பதைப் பகுத்தறிவுடன் நடுநிலையிலிருந்து யோசித்துப் பாருங்கள்.

['குடி அரசு'—தலையங்கம்—7-6-1931]

அக்கிராசனர் அவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

முதலாவது, சுதேசக் கைத்தொழில் என்பதையே எடுத்துவிட வேண்டும் என்றும் அந்த உணர்ச்சி கூடாதென்றும் சொல்கின்றேன்.

சுதேசத்தொழில் என்று இருந்தாலும் பாதகமில்லை. ஒவ்வொரு தொழிலும் கையால் செய்ததாகவே இருக்கவேண்டும் என்று நாம் எதிர்பார்க்கக் கூடாது. நமது நாட்டில் பொருளாதாரத்திற்கும் தொழிற் பெருக்கத்திற்கும் என்பதாகக் கைத்தொழிலை விருத்தி செய்வதும், புத்துயிர் அளிப்பதும், ஆதரிப்பதும் என்பதான காரியங்கள் தொழிலுக்கும் பொருளுக்கும் தொழிலாளிக்கும் கேடுசெய்வனவாகும். முக்கியமாக, கதர் என்று சொல்லும் விஷயமும் இன்னமும் மோசமானதாகும். அதனால் தொழில் முறை விருத்திக்கும் பொருளாதார விருத்திக்கும் இடமில்லை; தொழிலாளிக்கும் பயன் இல்லை. அதுபோலவேதான் கைத்தறி, கை நெசவு என்பவைகள் எல்லாம் தொழில் முறைக்குக் கேடு விளைவிப்பதும், தொழிலாளிகளின் முற்போக்குக்கும், விடுதலைக்கும் எதிரியுமானதாகும். அது நாகரிக முற்போக்கடைய வேண்டிய நாட்டிற்குச் சிறிதும் பொருந்தாததுமாகும். அன்றியும், இந்த உணர்ச்சி சமதர்மத்திற்கும் பொது உடைமைத் தத்துவத்திற்கும் மாறானதுமாகும். இவை மாத்திரமல்லாமல், இயற்கைக்கும் அதோடு மனித தத்துவத்திற்கும் முரண்பட்டதும், காரியத்தில் சித்தி பெறாமல் போவதோடு தானாக ஏற்படும் முன்னேற்றத்தையும் தடுப்பதுமாகும்.

கதர் ஏழைகளுக்குச் சோறு போடுகின்றது என்பது பொருளற்ற வார்த்தையேயாகும். அது சில இடங்களில் வேண்டுமென்றே ஏமாற்ற உபயோகப்பட்டு வருகின்றது. பாமர ஜனங்கள் இதை நம்பி ஏமாந்து வருகின்றார்கள். கதரின் தத்துவத்தால் இந்த நாட்டில் யாரும் பலனடைவதில்லை; பயனடையவும் முடியாது. ஆனால், கதரைப்பற்றித் திரித்தும், குழப்பியும் பிரச்சாரம் செய்வதால் சிலர், அதுவும் மற்றவர்களுடைய அளவுக்கு மீறிய நஷ்டத்தால் பயனடைகின்றார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

ஆகவே, இது பார்ப்பனர்கள் பிழைக்க என்று மற்றவர்களுக்குக் கடவுள் பேரால் போடும் ஒரு முட்டாள் வரிபோல், வேறு சிலர் பிழைக்க என்று கதர் வரி என்பதாகக் கதர் கட்டுபவரிடம் வசூலிக்கப்படும் ஒருவித வரித்திட்டமே யொழிய—கதர் ஒரு தொழில் திட்டம் இல்லை; அதனால் யாரும் யோக்கியதையாய்ப் பிழைக்க முடியாது.

கதர் பக்தர்களுக்கு இது புரியாவிட்டாலும், கதர் கர்த்தாக்களுக்கு இந்த அபிப்பிராயம் புரிந்ததுதான். மக்கள் கண்விழித்த பிறகு அவர்களும் தங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டார்கள்.

உயர்திரு. காந்தி அவர்களே இப்போது இன்று நடைபெறும் கதர்த் திட்டம் பயன் படாதென்று கருதி ஒரு இயந்திரம் கண்டுபிடிக்க ஆசைப்பட்டு, குறைந்த நேரத்தில்—கொஞ்ச கஷ்டத்தில் அதிகமான அளவு நூல் நூற்கும்படியாக ஒரு புதிய இயந்திரத்தைக் கண்டுபிடிப்பவர்களுக்கு இலட்ச ரூபாய் பரிசு கொடுப்பதாக விளம்பரம் செய்திருக்கிறார். இதன் கருத்து என்ன? கைத்தொழிலிலிருந்து—கைராட்டினத்திலிருந்து—இயந்திரத் தொழிலுக்கு இயந்திர ராட்டினத்திற்குப் பாய்ந்திருக்கிறார் என்பதல்லவா?

மற்ற தொழில் விஷயங்களிலும் கைத்தொழில் என்கின்ற மனப்பான்மையை விட்டொழிக்கவேண்டும். கைத்தொழில் சாமான்களையே ஆதரிப்பது என்கின்ற மனப் பான்மையையும் விட்டொழிக்கவேண்டும். அது பயன்படாத காரியமாகிவிடும். இன்றைய தினம் நம் நாட்டில் அனேகக் கைத்தொழில் விற்பன்னர்களுக்கு வேலை இல்லாமல் போய் விட்டது. வேலை கொடுக்கவும் நம்மால் முடியாமல் போய்விட்டது.

ஆகவே கைத்தொழில் பைத்தியத்தை விட்டுவிடவேண்டும்; இயந்திரத் தொழில் முறையை ஆதரிக்கவேண்டும்.

அன்றியும், கைத்தொழில், கைத்தொழில் என்பது, பொது உடைமைத் தர்மத்திற்கு விரோதமானது என்பதை ஞாபகத்தில் வையுங்கள். முதலாளி, தொழிலாளி என்கின்ற பாகுபாடு இருக்கவேண்டும் என்கின்ற மனப்பான்மை உடையவர்கள்தான் கைத்தொழில், குடிசைத்தொழில் என்று கட்டியழுவார்களே தவிர, சமதர்மமும் பொது உடைமைத் தத்துவமும் கோருபவர்கள் கைத்தொழிலை—அதாவது இயந்திர உதவி இல்லாமல் செய்யப்படும் தனிப்பட்டவர்கள் தொழிலை விரும்பமாட்டார்கள். கைத்தொழில் என்பதே வருணாசிரம தர்மத்தின் அடிப்படையாகும். திரு. காந்தி அவர்கள் சொல்லுகின்ற வருணாசிரம தத்துவமேதான், கதர் முதலிய கைத்தொழில் முறைகள். எப்படியெனில், அவர், மக்கள் பரம்பரைத் தொழில்களையே செய்யவேண்டும் என்கின்ற கருத்துடையவர். ஆகவே, சமதர்மமும் பொதுவுடைமைத் தத்துவமும் ஏற்படவேண்டுமானால் வருணா சிரமமும், பரம்பரைத் தொழில் முறையும் கைத்தொழில் முறையும் முதலில் ஒழியவேண்டும்.

அன்றியும், கைத்தொழில் செய்வதன் மூலமேதான்—அதாவது, மக்களுக்குச் சரீரத்தில் பாடுபடும்படியான வேலைகொடுத்து அவர்களை வாட்டி வளைவை நிமிர்த்துவதுதான்—மக்களுக்குப் பிழைப்புக்கு வழி ஏற்படுத்தலாம் என்று சொல்லுகின்றவர்கள் கூற்றையும் நான் ஒப்புக்கொள்ளமுடியாது. அந்த முறையையும் நான் ஏற்கமுடியாது.

ஏனெனில், அவர்கள்—மக்கள் பிறந்ததும், வளர்ந்ததும், இருப்பதும் தொழில் செய்து சரீரப் பிரயாசைப்பட்டு உழைத்துச் சாப்பிடத்தான் என்று கருதும் எண்ணத்தினாலேயே மக்களைக் கீழ்மைப்படுத்திவிட்டார்கள். ஆனால், இந்தப்படி சொல்லிக்கொண்டு இருக்கின்ற மக்களில் சிலர் மாத்திரம் உட்கார்ந்துகொண்டு, பாடுபடாமல் ஜீவிக்க என்று பிறந்து, வளர்ந்து, வாழ்பவர்களாகத் தங்களைக் கருதிக்கொண்டிருக்கிறார்கள். இது மோசடியான எண்ணமே.

கஷ்டப்பட்டுச் சாப்பிடுவதற்கென்றே மனிதன் பிறந்தான் என்று சொல்லுவதானால் மனித சமூகம் இல்லாமல்போவதே மேலான காரியமாகும். உலகம் வேண்டுமானால் மனித

www.thamizham.net - Free E book No 3041

சமூகம் பெருகவேண்டும் என்று சொல்லுகிறவர்கள் எல்லாம்—பெரிதும் மற்ற மக்கள் உழைப்பில் சாப்பிடுபவர்களேயாவார்கள். ஆகவே, மக்கள் கஷ்டப்பட்டுத்தான் ஆக வேண்டும் என்று சொல்லி கஷ்டப்பட மார்க்கம் தேடுவதைவிட, மக்கள் இல்லாமலே போவதற்குச் செய்யப்படும் காரியம் மிகவும் நல்லதாகும்.

உதாரணமாக, இரண்டு மாடுகளை—காலையில் 3 மணிக்குச் செக்கில் பூட்டி மாலை 7 மணி வரைக்கும் ஓட்டி, அடித்து அதன் வாலை முறித்து, முதுகுத் தோல் பட்டை வாங்கி, கழுத்து பூசணிக்காய்போல் வீங்க வைப்பதன் மூலம்தான் அந்த மாடுகள் வாழமுடியும் என்றால், அப்படிப்பட்ட மாடுகளை எல்லாம் கசாப்புக் கடைக்காரனிடம் ஒப்புவித்துவிட்டு இனிமேல் மாடுகளை யாரும் உற்பத்தி செய்யக்கூடாது என்று சட்டம் போடுவதே மேலான காரியம் என்றுதான் சொல்லுவேன். இந்த மாதிரி நிலையில் ஒரு மாடுகூடப் பிழைத்திருக்க வேண்டியதில்லை.

தவிர, பொதுவுடைமைத் தத்துவத்திற்கு வெள்ளைக்கார ஆட்சியேதான் விரோதமாய் இருக்கின்றது என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. நமது நாட்டில் உள்ள வருணாசிரம தருமந்தான்—அதுவும் திரு. காந்தி சொல்லும் வருணாசிரம தருமந்தான் பொதுவுடமைக்கு விரோதமானதாகும். இந்த வருணாசிரம தருமந்தான் இந்த நாட்டுக்கு வெள்ளைக்கார ஆட்சி முதலிய வெளிநாட்டு முதலாளிகள் ஆட்சியைக் கொண்டு வந்து விட்டதாகும். இன்னும் அவ் வாட்சியை நடத்திக் கொடுப்பதே—அதைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருப்பதே நமது நாட்டு வருணாசிரம தர்ம முறையேதான் ஆகும்.

முதலாளி, தொழிலாளி என்ற முறையும் வருணாசிரம தரும முறையில் பட்டது என்பதை மறந்து விடாதீர்கள். அந்த முறையில்தான் இப்போது நமது நாட்டில் மஞ்சள் புரோகிதர்களும்; மஞ்சளும் கறுப்பும் கலந்த அரசர்களும், ஜமீன்களும், மிராசுகளும், வியாபாரிகளும் இருக்கின்றார்கள் என்பதோடு—இவர்களுடைய பத்திரத்திற்கென்றே வெள்ளை முதலாளிகள் வருவிக்கப்பட்டுக் காப்பாற்றப்படுகின்றார்கள்.

எதற்காக ஒருவனுக்கு சதா தொழில் இருக்கவேண்டும்? புலி, கரடி, நாய், சிங்கம், பட்சி ஆகியவைகளுக்குச் சதா தொழில் இருந்து கொண்டிருக்கிறதா? அவை தொழில் செய்துதான் ஜீவிக்கின்றனவா? புரோகிதன், அரசன், ஜமீன், மிராசு, வியாபாரி, உத்தியோகஸ்தன் முதலியவர்கள் சதா சரீரத்தால் வேலை செய்துகொண்டுதான் இருக்கின்றார்களா?

மேலும், இவர்கள் வேலை செய்யாததால் உடல் கெட்டுப் போகின்றதே என்று சரீர அப்பியாசம் (Exercise) செய்து கொண்டிருப்பதை நாம் பார்க்கவில்லையா? ஒரு கூட்டம் சரீரத்திற்கு வேலை இல்லையே என்று சரீர அப்பியாசம் செய்யவும், மற்றொரு கூட்டம் ஜீவனத்திற்கு மார்க்கமில்லையே என்று வேலைசெய்து கஷ்டப்படவுமாய் இருப்பதற்குக் காரணம் வருணாசிரம சமூக வாழ்க்கை முறையா? அல்லது இயந்திரத்தினால் ஏற்பட்ட கெடுதியா?

நாட்டில் இருக்கின்ற வேலையையும், மக்கள் எண்ணிக்கையையும், அவர்களுக்கு வேண்டிய ஆகாரம் முதலிய சாமான்களையும் கணக்குப் போட்டு, அந்தச் சாமான்களை இயந்திரங்களால் செய்வதன் மூலம் குறையும் நேரத்தைக் கழித்து, மிகுதியுள்ள நேரத்தை எல்லா மக்களுக்கும் பங்குபோட்டுப் பிரித்துக்கொடுத்து, அவர்கள் வாழ்நாள் ஜீவனத்திற்கு வேண்டிய முழுக் கூலியையும் கொடுக்க ஆரம்பித்து விட்டால், வேலை சரியாய்ப் போய்விடுமா, இல்லையா? அதாவது, ஒரு வாரத்திற்கு ஒரு மனிதனுக்கு இத்தனை மணி நேரம் மாத்திரம் வேலை செய்தால் போதும் என்கின்ற முறையில் பங்கிட்டுக் கொடுத்துவிட வேண்டும். இப்படிச் செய்தால் ஒரு வாரத்தில் ஒரு நாள்கூட ஒரு மனிதனுக்கு வேலை செய்யவேண்டிய அவசியம் ஏற்படாது. மீதி நாட்களில் கஷ்டப்படாமல் சாப்பிடக்கூடும்.

[ஈரோட்டில், 10-6-1931-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 14-6-1931]

www.thamizham.net - Free E book No 3041

கதரைப்பற்றியும், அதை அரசியல் பிழைப்புக்காரர்கள் எப்படி உபயோகித்துக் கொண்டு வருகிறார்கள் என்பதைப் பற்றியும், 'கதர் புரட்டு' என்கின்ற தலைப்பின்கீழ் இதற்குமுன் பல வியாசங்கள் எழுதியும், சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் வந்திருக்கின்றோம். இதன் பயனாய் அரசியல் வாழ்வுக்காரர்களும், அரசியலில் கலந்துகொள்ளுவதன் மூலமாய் மக்களை ஏமாற்றிப் பயனடையக் கருதும் சில சுயநலக்காரர்களும் தவிர, மற்ற மக்கள் யாவரும் கதரை அடியோடு பகிஷ்கரித்து இருப்பதும் யாவரும் அறிந்ததேயாகும். ஆனால், இப்போது அதைப்பற்றி ஏன் எழுதுகிறோம் என்று சிலர் கருதலாம்.

இது எழுத வேண்டியதற்கு முக்கிய காரணம் என்னவென்றால், சுயமரியாதை இயக்கத்தைப் பழிக்கவும், தூற்றவும் அதன்மீது மூடப் பாமர மக்களுக்கு வெறுப்புண்டாக்கவுமான இழிதகைப் பிரச்சாரத்துக்கு அனுகூலமாக—சில, காங்கிரஸ்காரர் என்று சொல்லிக் கொண்டு சோம்பேறியாய் இருந்து வயிறு வளர்க்கும் வீணர்கள், 'சுயமரியாதைக்காரர்கள் கதரை வெறுக்கிறார்கள்' என்றும்; 'ஏழை மக்களைக் காப்பாற்றும் கதருக்கு விரோதமாய் இருந்து ஏழைகளுக்குத் துரோகம் செய்கிறார்கள்' என்றும் பொதுக்கூட்டங்களில் விஷமப் பிரச்சாரமும், திண்ணைப் பிரச்சாரமும் செய்து வருவதால், கதரின் வண்டவாளத்தை ஏழை மக்களே அறியட்டும் என்ற எண்ணத்தின்மீது, கதர் என்ற தலைப்பின்கீழ் மறுபடியும் சில குறிப்புக்கள் எழுத முன்வந்தோம்.

கதர் என்பது எதுவென்றால்—பஞ்சைக் கையினால் அரைத்து, கையினால் கொட்டி, கையினால் நூற்று, கையினால் நெய்த துணிக்குக் கதர் என்று பெயர். இவற்றுள் கையால் பஞ்சை அரைப்பது என்பது இப்போது சாத்தியமற்ற காரியமாகப் போய்விட்டது; இயந்திரத்தினால்தான் (ஜின்னிங் செய்ய) அரைக்க முடிகின்றது.

கதரைப்பற்றி, கதரை ஆரம்பித்த—கண்டுபிடித்த கதர் கர்த்தாக்கள் ஆரம்பத்தில் கதருக்காகச் சொன்ன காரணங்கள் யாவரும் அறிந்ததேயாகும். அதாவது,

1. 'இயந்திரம் என்பது பேயின் பிரதிபிம்பம். ஆதலால் இயந்திரத்தை ஒழித்துக் கையினால் வேலை செய்யும் பழையகால வாழ்க்கையைப் புதுப்பிக்க வேண்டியது அவசியமானதால் எல்லோரும் கைராட்டினத்தில் நூல்நூற்க வேண்டியது' என்பதை முக்கிய காரணமாகவும்;

2. இரண்டாவதாக, அவனவனுக்கு வேண்டிய சாதனங்களை அவனவனே உற்பத்தி செய்துகொள்ளும் தன்னம்பிக்கைத் தன்மையடைய வேண்டும் என்கின்ற தத்துவத்தில் முதலாவதாக அவனவனுக்கு வேண்டிய துணியை அவனவனே நூற்று அவனவனே நெய்து கொள்ள வேண்டும் என்பதாகவும் சொல்லப்பட்டது.

3. அதன் பிறகு மூன்றாவதாக, இந்தியாவுக்கு வேண்டிய துணியை இந்திய மக்களே நூற்று நெய்து கட்டிக்கொள்வார்களேயானால் இங்கிலாந்து தேசம் வரட்சியடைந்து, தரித்திரம் பொங்கி இந்தியர்களிடம் சரணாகதி அடைந்து 'சுயராஜ்யம்' கொடுத்துவிடுவார்கள் என்றும் சொல்லப்பட்டது.

4. நான்காவதாக, கைராட்டினத்தால் நூல் நூற்பதானால் இந்தியாவில் வேலை இல்லாமல் கஷ்டப்படுகிற ஏழை மக்களுக்குக் கதர் ஒரு ஜீவனோபாயமாக இருக்கும் என்றும், அதனால் அனேக ஏழைகளுக்கு வேலை கொடுக்கலாம் என்றும் சொல்லப்பட்டது.

மற்றும், கதர் வேலைத் திட்டமானது இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைக்கும் வரைதான் அமுலில் இருக்குமே தவிர, சுயராஜ்யம் கிடைத்த பிறகு ஏழைகளுக்கு வேறு தொழில்கள் ஏற்பாடு செய்வதன் மூலம் கதர்த் திட்டம் எடுத்து விடப்படும் என்றும் சொல்லப் பட்டது. இவைகள் தவிர, இன்னும் எத்தனையோ காரணங்களைக் கதருக்காகச் சமயோசிதம்போல்—ஆளுக்குத் தகுந்தபடி அவ்வப்போது சமாதானமாகச் சொல்லப்பட்டும் வந்தது. இவ்வளவும் சொன்னவைகள் போதாமல், வீர வைணவர்கள், வீர சைவர்கள்



www.thamizham.net - Free E book No 3041

என்பவர்கள் போல்—'வீர கதர்க்காரர்கள்' தங்களுடைய அதி தீவிர கதர் பக்தியைக் காட்டுவதற்குத் 'தக்ளி'யினால் நூல் நூற்றுக்கொண்டு, அதாவது பக்தர்கள் சிந்து ஒழிந்த நேரம் கிடைத்தாலும் 'சிவ சிவ', 'ராம ராம' என்று உரு ஜபிப்பதுபோல், ஒழிந்த நேரம் எல்லாம் 'தக்ளி'யினால் நூல் நூற்றுக் கொண்டே இருப்பதின் மூலம் செய்கையில் காட்டிவந்தார்கள்; இன்றும் சிலர் அம் மாதிரி செய்தும் வருகிறார்கள். மற்றும், இராட்டினத்தின் மூலமாகவோ, தக்ளியின் மூலமாகவோ நூல் நூற்பதைத் தேசியத்துவ மாகவும், அது ஒரு 'ஆத்மார்த்த' தத்துவமாகவும் சொல்லப்பட்டது.

இவைகள் தவிர, கதர் கட்டாதவர்கள் தேசிய சபையில் அங்கத்தினராயிருக்க அருகதை அற்றவர் என்றும், மற்றும் இராட்டினத்திலோ, தக்ளியிலோ நூல் நூற்றுத் தேசிய சபைக்கு நூலையே சந்தாவாகக் கொடுக்கவேண்டுமென்றும் சொல்லப்பட்டது.

இவ்வளவும் தவிர, ஒரு முக்கிய விசேஷமென்னவென்றால், இந்தப் பத்து வருஷ காலத்தில் இந்தக் கதர்த் திட்டத்திற்காக—கதர் இயக்கத்திற்கும், பிரச்சாரத்துக்கும் ஒரு கோடிக்கு மேற்பட்ட ரூபாய்கள் பொதுஜனங்களிடம் வசூல் செய்து செலவழிக்கப்பட்டு வந்திருப்பதாகும்.

இவ்வளவு சக்திகளையும், இலட்சியங்களையும், தத்துவார்த்தங்களையும், மகிமை களையும், பிரச்சாரச் செலவையும் கொண்ட கதர்—நாளதுவரை பொருளாதாரத்திலோ, அரசியலிலோ, 'ஆத்மார்த்தத்திலோ' தொழில் முறையிலோ ஏழை மக்களுக்கு—இந்தியப் பொருளாதாரத்துக்கு ஒரு அம்மன் காசு அளவு (அம்மன் காசு என்பது காலணாவுக்கு அய்ந்து கொண்ட புதுக்கோட்டை நாணயம்) பலனாவது கொடுத்திருக்கிறதா என்பதை யோசித்துப் பார்க்கவேண்டியது அறிவுடையோருடையவும், நடுநிலைமையோருடையவும் கடமையாகும்.

கதருக்கு முதலில் கூறப்பட்ட காரணங்களாகிய—'இயந்திரம் கூடாது' என்பதானது இனி உச்சரிப்பதற்கே முடியாத காரியமாய்ப் போய்விட்டது. ஏனெனில், இயந்திரம் என்பது அறிவு வளர்ச்சியடையவும், முற்போக்கு முயற்சியினுடையவும் அறிகுறியாகும். அறிவு வளர்ச்சியும் முற்போக்கு முயற்சியின் பயனும் கூடாது என்று சொல்ல, இந்த இருபதாவது நூற்றாண்டில் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலும்கூட மனிதன் இருக்க மாட்டான். அன்றியும், கதர் கர்த்தாவாகிய காந்தியாரே நூல் நூற்பதற்கு—அதாவது குறைந்த நேரத்தில் அதிகமான நூல் உற்பத்தி செய்யத் தகுந்த ஒரு இயந்திரம் (இராட்டினம்) கண்டுபிடித்துக் கொடுப்பவருக்கு ஒரு இலட்சம் ரூபாய் கொடுப்பதாக விளம்பரம் செய்து, இரண்டு வருஷகாலமாய் முயற்சித்து வருகிறார். அந்தப்படி ஒரு இராட்டினம் ஒருவரால் கண்டுபிடிக்கப்பட்டால் அப்போது அதை இயந்திரம் என்று சொல்லாமல் என்ன சொல்ல முடியும்? ஒரு சமயம் 'சக்ராயுதம்' என்று காந்தியார் பெயரிடக்கூடும். (ஆரியம்—கேப்பை அரைக்கும் கல்லுக்கும் இயந்திரம் என்றுதான் பெயர்.) ஆகவே, அந்தப் பருப்பு இனி வேகாது.

அதற்கடுத்த காரணமாகிய, 'கதர்—இங்கிலாந்தைப் பட்டினிபோட்டுவிடும்' என்று சொல்லுவது, ஒரு தடவை 'ராமா' என்றால் சகல பாவமும் போய்விடும் என்பது போன்ற சங்கதிக்குத்தான் சமமாகச்சொல்ல வேண்டுமேயொழிய, மற்றபடி அதில் யாதொரு உண்மையும் இருக்க இடமில்லை. மற்றும், மேலே கூறப்பட்ட மற்ற காரணங்களும் அதுபோலவே பரிகசிக்கத் தக்கதாகத்தான் ஆகிவிடும்.

நிற்க, மற்றபடி அவனவனுக்கு வேண்டியதையெல்லாம் அவனவனே செய்து கொள்ளக்கூடிய சக்தியை ஒவ்வொருவனும் அடையவேண்டுமென்பதானது, ஆதியில் மனித சமூகம் காடுகளிலும் மலைப் பொந்துகளிலும் காட்டுமிராண்டிகளாய், காட்டு மனிதர் களாய்த் திரிந்தவர்களுக்குத்தான் இது சாத்தியப்பட்டிருக்கக்கூடும். எப்படியெனில், ஒரு மனிதனுடைய தேவை காய், கிழங்கு தவிர வேறொன்றும் இல்லாதிருக்கும். ஆனால்

www.thamizham.net - Free E book No 3041

இப்போதைய காட்டுமிராண்டிக்கும், காட்டு மனிதனுக்கும்கூட இது சாத்தியமாகக் கூடியதல்ல என்றே சொல்லுவோம்.

மேற்கண்ட கொள்கை, மூட மக்கள் காதுக்கு இனிமையானதாகவும், நியாயமான தாகவும் காணக்கூடும்; அவர்கள் கருத்துக்கு இதைவிட முட்டாள்தனமான கொள்கை வேறு ஒன்றுமில்லை என்றுதான் சொல்லவேண்டும். ஏனெனில், மனித சமூகம் கூடி வாழ வேண்டுமானால் கூட்டுறவும், ஒருவருக்கொருவர் செய்து கொள்ளவேண்டிய அவசியமும் இல்லாமல் இருக்க முடியவே முடியாது.

எனவே, இப்போது சிறிது செல்வாக்கு இருக்கும் ஒரே ஒரு காரணமாகிய—'கதர் ஏழைகளுக்குக் கஞ்சி வார்க்கக்கூடியது' என்பதில் ஏதாவது உண்மையோ, நாணயமோ இருக்கின்றதா என்று பார்ப்போம்.

கதரைப்பற்றிய நமது ஆராய்ச்சி அனுபவத்தில் நூல் நூற்பது ஒரு வெட்டி வேலை என்பதோடு, அது ஏழைகளை ஏமாற்றி நிரந்தரமாய் ஏழை வகுப்பு என்று ஒன்று இருந்து வருவதற்காகச் செய்யப்படும் சூழ்ச்சி என்றே முடிவேற்பட்டிருக்கிறது.

ஏன் இராட்டினத்தில் நூல் நூற்பதை வெட்டி வேலை என்கிறோம் என்றால், இராட்டினத்தால் ஒரு ஆணோ, ஒரு பெண்ணோ ஒரு நாளைக்கு 10 மணி நேரம் நூல் நூற்பதால் ஒரு அணா அல்லது ஒன்றேகாலணா கூலி கிடைக்கின்றது என்பது கதர் நிபுணர்கள் கணக்கு. இந்தப்படி கதர் நூலில் கூலி கிடைப்பதில்லை என்றும், நூல் நூற்பதின் மூலம் நூல் நூற்கும் கூலியும் போய் கையிலிருந்தும் பணம் கொஞ்சம் நஷ்டமாகின்றதென்றும் நாம் சொல்லுகின்றோம். எப்படியெனில், இதைச் சற்று வாசகர்கள் கவனமாகவும், நுட்ப அறிவு கொண்டும் கவனித்துப் பார்த்தால்தான் விளங்கிக் கொள்ளக்கூடும். இல்லாத பட்சம் 'பார்ப்பான் வயிற்றில் கொட்டும் பண்டம் மேலோகத்தில் ஆவிரூபமாயிருக்கிற பெற்றோர்களுக்குப் போய்ச் சேருகின்றது' என்கிற மாதிரியில்தான், 'கதர் நூற்றால் ஒரு அணா கூலி கிடைக்கின்றது' என்கின்ற பொய் நம்பிக்கை உண்டாகிவிடும்.

54 இஞ்சு அகலமுள்ள கதர்த் துணி 10 கஜம் கொண்டது, $4\frac{1}{2}$ இராத்தல் எடை இருக்கும். இதில் சேதாரம், கஞ்சி, கனம் போனால் மீதி 4 ராத்தல் பஞ்சுக்குத்தான் நூற்கப்பட்ட கூலி கொடுக்கப்பட்டிருக்கும். அதாவது, இராத்தல் ஒன்றுக்கு 5 அணா கூலி வீதம் 4 இராத்தலுக்கு ரூ. 1-4-0 கூலி கொடுக்கப்பட்டிருக்கும். ஆனால், இந்த பத்து கஜம் கதர்த் துணி என்ன விலைக்கு விற்கப்படுகின்றது என்று பார்த்தால், இன்று ரூ. 5-10-0-க்கு விற்கப்படுகின்றது. இந்த 54 இஞ்சு அகலம், 10 கஜம் துணி, இந்திய மில் நூலால் நெய்யப்பட்ட துணி இன்று ஈரோடு பஜாரில் சலவை செய்தது கஜம் ரூ. 0-3-6 வீதம் (10 கஜம்) ரூ. 2-3-0-க்குத் தாராளமாய்க் கிடைக்கின்றது. இது கதரைவிட எவ்வளவோ மடங்கு—துணி மிகவும் நைசாயும், முறுக்காயும், கெட்டியாயும் இருப்பதை யாரும் பார்க்கலாம்.

ஆகவே ரூ. 2-3-0-க்குக் கிடைக்கும்படியான துணியைவிட மட்டமானதும், முறுக்கும், கெட்டியும் இல்லாததுமான முரட்டுத் துணியைக் கதர் என்கின்ற காரணத்தால் ரூ. 5-10-0 விலைபோட்டு வாங்குவதன் மூலம்—4 ராத்தல் துணிக்கு ரூ. 3-7-0 அதிக விலைகொடுத்து வாங்குகிறோம். இந்த ரூ. 3-7-0 அதிகம் கொடுக்கும் பணத்திலிருந்துதான், நூல் நூற்ற வர்களுக்கு ரூ. 1-4-0 கொடுக்கப்படுகின்றதே தவிர, கதரின்—துணியின் பெறுமானத்தில் இருந்து கொடுக்கக்கூடியதல்ல என்பதைப் புத்தியில் பதியவைக்க வேண்டுகிறோம்.

கதர் நூற்பதால் ஜனங்களுக்கு இராத்தல் ஒன்றுக்கு நூற்பவர்களுக்குக் கொடுத்த கூலிபோக, மேற்கொண்டு ரூ. 0-8-9 அணா வீதம் நஷ்டமேற்படுகிறது. இதுதவிர, 2 இராத்தல் பஞ்சில் நூற்கப்படவேண்டிய துணிக்குப் பதிலாக 4 இராத்தல் செலவாகின்றது. இதுவும் தவிர, 6 மாதத்திற்கு வரக்கூடிய துணி 4 மாதத்திலேயே கிழிந்துவிடுகின்றது. மற்றும், துணிமுரடாகவும், உபயோகத்துக்கு அசவுகரியமாகவும் இருந்துவருகின்றது.

www.thamizham.net - Free E book No 3041

இதில்தான் ஏழைக் கூலிகளுக்கு தினம் 10 மணி வேலை செய்தால் 15 பை. அதாவது ரூ. 0-1-3 கூலி கிடைக்கிறது என்று சொல்லி ஏமாற்றுகின்றார்கள். இந்த ஏமாற்றத்தை அறிந்துகொள்ளாத மூடர்கள்தான் கதரால் ஏழைகளுக்கு இலாபம் என்று சொல்லலாமே தவிர, பொருளாதாரக் கணக்கும் புள்ளிவிவரமும் தெரிந்தவன் கதரால் மக்களுக்கு இராத்தல் ஒன்றுக்கு 0-13-9 வீதம் பொதுஜனங்கள் பணம் நாசமாகின்றது என்றும், ஒன்றுக்கு இரண்டாகப் பஞ்சு வீணாகின்றது என்றும்தான் சொல்லித் தீரவேண்டும். இதிலிருந்து நமக்குத் தோன்றுவதென்னவென்றால், 'ஏழை மக்களை' 10 மணி நேரம் உழைக்கச் செய்து, வேலை வாங்கிக்கொண்டு அவர்களுக்கு ரூ. 0-1-3 கூலி கொடுப்பதைவிட—அவர்களைச் சும்மா உட்காரவைத்துச் சாப்பாடு போடுவதானால், மேல்கண்டபடி பொது ஜனங்களை ஏமாற்றி நஷ்டமடையச் செய்யும் பணத்திலிருந்து இன்னும் இரண்டு பங்கு ஜனங்களுக்குச் சாப்பாடுபோடலாம் என்று தைரியமாய்ச் சொல்லலாம் என்பதேயாகும்.

அன்றியும், கதர் இலாக்காவிலோ வியாபாரத்திலோ கலந்திருப்பவர்கள், 'புண்ணிய க்ஷேத்திரங்'களில் நாமம், விபூதி, உருத்திராட்சம், துளசிமணி விற்பதில் தங்கள் பக்தியைக் காட்டுவதுபோல், கதர்த் தொழிலில் ஈடுபட்டு வயிறு வளர்ப்பதன் மூலமும், பணம் சம்பாதிப்பதன் மூலமும் தங்கள் பக்தியைக் காட்டுகிறார்கள். இதைக் கண்டு பாமர மக்கள் ஏமாந்து பின்பற்றி வருகிறார்கள்.

காந்தியாரின் தத்துவார்த்தமும், காங்கிரஸ் தயவும், 10 இலட்சக் கணக்கான ரூபாய் செலவு கொண்ட காங்கிரஸ் தொண்டர்கள் பிரச்சாரமும் இல்லாவிட்டால் கதர் விற்பனையாகி 'ஏழைகளுக்குப் பயன்படுமா' என்பதை யோசித்துப் பாருங்கள்! இந்தப்படி ஒருவர் தயவில் பிழைப்பதுதானா, ஏழைகள் பிழைக்கும் வழி என்றும்—இது எத்தனை நாளைக்கு நடக்கும் என்றும் கேட்கின்றோம்.

ஆகவே, இந்திய மக்களின் பொது அறிவையும், தேசிய ஞானத்தையும் மதிக்க இந்தக் கதர் பக்தி ஒன்றே போதுமானது. இந்தியத் தேசியத் தலைவர் என்பவர்களின் நாணயத்தையும், யோக்கியப் பொறுப்பையும் கவனிக்க இந்தக் கதர்ப் பிரச்சாரம் ஒன்றே போதுமானது.

இந்திய தேச பக்தர்கள், தேசிய வாதிகள், தேசத் தொண்டர்கள் ஆகியவர்களின் பகுத்தறிவுக்கும், விடுதலை ஞானத்திற்கும் இந்தக் கதர்ப் பிரச்சாரமே போதுமானது. இந்தியப் பாமர மக்களின் மதசம்பந்தமான அறிவுக்கு அவர்களது சடங்கு, ஆச்சாரம், இராமாயணம், பாரதம், பெரிய புராணம், திருவிளையாடல் புராணம் ஆகிய விஷயத்தில் உள்ள நம்பிக்கை முதலியவை எப்படி அளவு கருவியாய் இருக்கின்றதோ அதுபோல்தான், இந்திய மக்களது பொருளாதார ஞானத்துக்கும், அரசியல் ஞானத்துக்கும், ஏழைகளின் விடுதலைக்கும் அவர்களது கதர் தத்துவமே அளவு கருவியாய் இருந்துவருகின்றது.

கடைசியாக, ஏழை மக்களைக் காப்பாற்றுவது என்பது, ஒரு மனிதனிடத்தில் இருந்து 3-7-0 வை ஏமாற்றிப் பறித்து, ஒரு மனிதனுக்கு ரூ. 1-4-0 வைக் கொடுப்பது அல்ல என்றும்; ஏழைகள் யார்? அவர்கள் ஏன் ஏழைகளாய் இருக்கிறார்கள்? ஏழைகள் என்கின்ற மக்களே இல்லாமல் இருக்க என்ன செய்யவேண்டும்?–என்பதைக் கவனித்து, அதற்கேற்றபடி நடப்பதுதான் நாணயமான காரியமாகுமேயொழிய, இந்த மாதிரியான பித்தலாட்டங்களால் ஒருநாளும் ஏழைமைத்தன்மை நீங்கிவிடாதென்றும் உறுதியாய்ச் சொல்லுகிறோம். உதாரணமாக, இந்த 10 வருஷ காலமாய்க் கதர்நூல் நூற்றவர்களுக்குக் கொடுத்த கூலியைக் கணக்குப் பார்த்தால், கதர்ப் பிரச்சாரத்துக்குச் செலவழிக்கப்பட்ட பணத்தைவிடக் கொஞ்சமாகத்தான் இருக்கும். ஆனால், அவர்கள் பெயரைச் சொல்லி, பொதுஜனங்களை ஏமாற்றி அடைந்த பணம்–கதர் நூற்ற 'ஏழைகளுக்கு'க் கொடுத்ததைவிட 3 மடங்கு அதிகமாக இருக்கும் என்று தைரியமாகச் சொல்லுவோம்.

www.thamizham.net - Free E book No 3041

ஆகவே, இனிமேலாவது கதர் பக்தர்கள் தங்களுடைய ஆவேசத்தில் சுயமரியாதைக் காரர்களை வையாமலும், பழி சுமத்தாமலும் வேறு வழியில் தங்கள் வயிற்றுப் பிழைப்பைப் பார்த்துக் கொண்டிருப்பார்கள் என்று நம்புகிறோம்.

['குடிஅரசு'–தலையங்கம்—16-7-1933]

தோழர்களே!

'யாவரும் கதர் கட்டவேண்டும்; நூல் நூற்க வேண்டும்' என்றெல்லாம் இராட்டின மும் கதர் மூட்டையும் தூக்கிக்கொண்டு ஊர்ஊராய்ப் பிரச்சாரம் செய்தவன் நான்; அதற் கென்று அங்கங்கே பல இடங்களிலும் ஸ்தாபனங்கள் ஏற்படுத்திக் கதர் கட்டும் திட்டம் வளரப் பாடுபட்டவன் நான்.

அப்படியெல்லாம் இருந்து, இன்றைக்கு அவைகளை அடியுடன் வெறுக்கிறேன். நான் மட்டுமல்ல; யாவரும், சிந்தித்துப் பார்ப்பவர்கள் அத்தனை பேரும் இந்த முடிவுக்குத் தான் வரவேண்டும்.

சாதாரணமாக, நூல் நூற்பதை வெறுக்கிறேன் என்றால், காரணங்கள் பல உண்டு. கையில் நூற்பது வசதியான முறையா? சிக்கனமானதா? அல்லது கெட்டியானதா? அழகாக அமைவதா? விலை நயமாக அடங்குவதா? இவைகளில் ஒன்றாவது உண்டா? எனவேதான் இதற்குச் சமாதானம் காணும் தேச பக்தர்கள் என்ற பார்ப்பனர்களும், வடநாட்டவர்களும் ஒன்றும் கூற முடியாவிட்டாலும், 'காந்தி அடிகள் கூறினார்' என்று கூறி மழுப்பிவிடு கின்றனர். ஏன், வைதீகப் பார்ப்பனர்களுக்குக் கையால் நூற்ற நூல்தான் பூணூலுக்கு ஏற்றதாம்; அதுவும் இப்போதுள்ள பார்ப்பனர் யார் சுறுசுறுப்பானவர்கள்? ஒருவராவது கிடைப்பது அரிதாகையால், யாவரும், கையால் நூற்ற நூல்தான் பூணூலுக்குத் தேவை என்று தேடிச் செல்வதில்லை. கடையில் விற்கும் மில் நூலுக்குத்தான் இப்போது கிராக்கி அதிகம்.

எனவே, காந்தியார் சொன்னார் என்பதற்காகவும், பாரதமாதா மொழி என்பதற் காகவும் இந்தி நம் மீது சுமத்தப்படுகிறது. இதன் உட்கருத்து—வடநாடு, தென்னாடு என்ற பாகுபாடின்றி வடநாட்டினின்றும் தென்னாடு பிரிந்து செல்லாத வழியில் அடிமைப் படுத்தி அடக்கி ஆளவேண்டும் என்பதற்குத்தான். அம்மொழி இங்கு வந்தவுடனே அந் நாட்டுக் கலாசாரமும் நாகரிகமும் இங்கு வளர்ந்துவிடும்.

[காஞ்சிபுரத்தில், 30-7-1955-ல் சொற்பொழிவு—'விடுதலை' 1-8-1955]

## 3. இனி, கைத்தறி ஏன்?

இப்போது நமது நாட்டில் கோடிக்கணக்கான ரூபாய் பெறும்படியான கைத்தறித் துணிகள் விற்பனையாகாமல் தேங்கிக்கிடக்கின்றன.

இவை இவ்வாண்டு மாத்திரமல்லாமல் சென்ற சில ஆண்டுகளாகவே தேங்கிக் கிடக்கின்றன. இதன் காரணம் என்ன என்பதை நெசவாளர்களும், கைத்தறித்துணி வியாபாரிகளும் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

நாட்டில் மக்கள் எண்ணிக்கை நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே போகின்றது. அதுபோலவே நாகரிகமும் வளர்ந்து வருகின்றது. இந்த இரண்டையும்விட மக்களின் பொருளாதார நிலையும் நல்லவண்ணம் வளர்ச்சியடைந்து வருகிறது.

இப்படிப்பட்ட நிலையில் கைத்தறித் துணிகள் ஏன் தேங்கிக்கிடக்கின்றன என்பதை நெசவாளிகள் சிந்தித்துப் பார்க்கவேண்டும் என்று திரும்பவும் வேண்டிக்கொள்கிறேன்.

www.thamizham.net - Free E book No 3041

எனக்குத் தோன்றிய சில காரணங்கள் என்னவென்றால் :

1. ஆண்கள் வேட்டி கட்டிக்கொள்வதில் முன்புபோல் 6 முழம், 8 முழம் வேட்டிகள் வாங்கிப் பஞ்சகச்சம் (கீழ்ப்பாய்ச்சி) போட்டுக் கட்டும் வழக்கம் 3-ல் 2 பாகம் கைவிடப்பட்டு விட்டது. 4, $4\frac{1}{2}$, 5 முழ வேட்டிதான் எல்லாத் தமிழர்களும் கட்டிக் கொள்கிறார்கள்.

2. பெண்கள் 16 முழ சேலை கட்டிவந்தவர்கள்—கிராமம் முதல் இப்போது 10 முழ, 12 முழ சேலைதான் கட்டி வருகிறார்கள்.

ஆணும் பெண்ணும் சட்டை இரவிக்கை போட்டுக்கொள்ளுகிறவர்கள் அதிக மானாலும்—அதற்காக மில் துணியைத்தான் எல்லோரும் பயன்படுத்துகிறார்கள். சேலைகளுக்கும் ஏராளமான பெண்கள் மில் துணிகளையும், மில் துணியில் அச்சிடப்பட்ட துணிகளையுமேதான்—கூலிவேலை செய்யும் பெண்கள் உட்பட—பெரும்பாலோர் விரும்புகிறார்கள். இந்தக் காரணங்களால் எந்தக் காரியத்திற்கும் யாரும் கைத்தறித் துணியை விரும்புவதே இல்லை.

உயர்ரக பட்டு சரிகைத் துணிகள்கூட இன்று மில்லில் தயாரிக்கப்படுகிறபடியால், அந்தத் துறையிலும்கூட கைத்தறிக்கு அதிக வேலையில்லாமல் போய்விட்டது; வேலை இருந்தாலும் அவற்றைப் பயன்படுத்துகிறவர்கள் மிகவும் குறைவாகிவிட்டார்கள்.

சிறு பையன்கள், மாணவர்கள், சிறு பெண்கள் முதலியவர்களும் சின்ன (துண்டு) வேட்டிகள், சிற்றாடை, சேலைகள் முதலியவை அணிவதை விட்டுவிட்டு, மாணவர்கள் உள்பட 'டிராயர்கள்' என்னும் தொடைவரை இருக்கும் கால்சட்டை முதலியவைகளையும், 'கவுன்' என்று சொல்லும்படியான மில்துணியில் செய்யப்பட்ட 'ரெடிமேட்' உடுப்புக்களையும் எல்லாப் பையன்களும், எல்லாப் பெண்பிள்ளைகளும் அணிய ஆரம்பித்து விட்டார்கள்.

பொதுவாக ஆண்களுக்கோ, பெண்களுக்கோ நாகரிக உடுப்பு என்றால் மில் துணிகளைத்தான் பயன்படுத்த முடிகிறதே தவிர, எந்தக் காரியத்திற்கும் எந்த நிலைக்கும் கைத்தறித் துணி தேவையில்லாமலே போய்விட்டது.

இந்த நிலை நமக்கு ஏற்படும் என்று நான் 30 ஆண்டுகளுக்கு முன்பாகவே கைத்தறி நெசவாளர்களுக்கு இதை எச்சரிக்கை செய்திருக்கிறேன். தவிரவும், 'கைத்தறி நெசவு காட்டுமிராண்டிக் காலத்துத் தொழில்' என்றும், 'இதனால் மக்களுக்கு நேரக் கேடு, அதிக உழைப்பு, வரும்படி குறைவு, அநாகரிக வாழ்க்கை' என்றும் கூறி எச்சரிக்கை செய்திருக்கிறேன்.

இரண்டு, மூன்று ஆண்டுகளுக்கு முன்கூட கைத்தறி வாரம் என்ற ஒரு கூட்டத்தில் நான் பேசியபோது, 'கைத்தறி நெசவுத் தொழில் சாகவேண்டிய அல்லது சாகடிக்கப்பட வேண்டிய தொழில்' என்று கூறி இருக்கிறேன்.

கைத்தொழில் என்றால் அதற்கு நேரம், காலம், கால அளவு ஒன்றுமே இல்லை; தொழில் செய்ய வயது அளவே இல்லை. ஆகவே, இது ஒரு அடிமை வாழ்வுத் தொழிலேயாகும். இந்தியா தவிர, வேறு எந்த நாட்டிலும் உடைக்குக் கைத்தறித் தொழில் இல்லவே இல்லை. மில் நெசவுத் தொழில்தான் நீக்ரோ மக்களிடையிலும் இருந்து வருகிறது.

கைத்தறி நெசவாளர்கள் என்றைக்குமே பணக்காரராக முடியாது; நெசவாளியால் பலர் பணக்காரர்களாகலாம்.

இனி, எந்தக் காலத்திற்கும் கைத்தறித் துணியும், நெசவாளியும் முன்னேற்றமடைய முடியவே முடியாது.

கதர் எவ்வளவு முட்டாள்தனமும் காட்டுமிராண்டித் தன்மையும் கொண்ட தொழிலோ, அதில் பாதி அளவு முட்டாள்தனமும் காட்டுமிராண்டித்தன்மையும் கொண்ட தொழிலாகும்

www.thamizham.net - Free E book No 3041

இன்றையக் கைத்தறித் தொழிலும் என்பதே எனது கருத்து. அது மாத்திரமேயல்லாமல், இனி யார் என்ன பாடுபட்டாலும் அதை நல்வாழ்வு வாழச்செய்ய முடியவே முடியாது என்பதும் எனது கருத்து.

['விடுதலை'-தலையங்கம்—1-2-1969]

## 4. குடிசைத் தொழில்கள்

காங்கிரஸ் ஆட்சி என்றால்—காந்தி ஆட்சி என்பது தத்துவம்;

காந்தி ஆட்சி என்றால்—பார்ப்பான் ஆட்சி என்பது தத்துவம்;

பார்ப்பான் ஆட்சி என்றால்—மனுதர்ம ஆட்சி (வருணாசிரம ஆட்சி) என்பது தத்துவம்.

இன்றைய ஆட்சி மனுதர்ம ஆட்சி என்பதுபற்றி எந்த அறிவாளருக்கும் விளங்காமல் இருக்காது. மனு ஆட்சிக்காகத்தான் காந்தி பார்ப்பனக் கூலியாய் இருந்து நமக்கெல்லாம் நிரந்தர சூத்திரத் தன்மையையும், தரித்திரத் தன்மைக்கேற்ற குடிசைத் (கைராட்டினம், பஞ்சு, பட்டை போடல்) தொழிலையும், அதற்கென்று ஒரு இலாக்காவையும், அதன் செலவுக்கென்று மக்கள் வரிப் பணத்தில் பல கோடி ரூபாய்கள் செலவு செய்வதைக் கொள்கையாகவும், திட்டமாகவும் ஏற்படுத்திவிட்டுப் பார்ப்பனர்களாலேயே கொலையுண்டு செத்தார்.

இன்று இந்நாட்டில் 'குடிசைத் தொழில்' ஆகிய கதர், கைராட்டினம் முதலியவைகள் எல்லாம் இந்நாட்டின் மக்கள் தொகையில் 100-க்கு 97 பேராக இருக்கும் சூத்திரர், பஞ்சமர், மிலேச்சர் என்கின்ற பார்ப்பனரல்லாத மக்களுக்காகத்தான் ஏற்படுத்தப்பட்டு—அந்த மக்களிடையில்தான் இருந்தும், நடந்தும் வருகின்றனவேயொழிய, பிராமணர்கள் என்று சொல்லிக்கொள்ளும் பார்ப்பனர்களுக்காக இருந்து வரவில்லை.

குடிசைத் தொழில் என்பது, நமது நாட்டில் உழைப்பு அதிகம்; பலன் குறைவு; அதாவது இந்த உழைப்பாளிகளுக்கு அவரவர்கள் வயிற்றுக்குக்கூட—கஞ்சியாக, தண்ணீரும் பருக்கையுமாகக் குடித்தாலும், வயிற்றுக்குப் போதாமல் தரித்திர வாழ்வுக்கு ஏற்றதாகப் பார்த்துக் கண்டுபிடித்துத் திட்டமிடப்பட்டிருப்பதேயாகும்.

அதற்குக் காரணம், உடலுழைப்புக்கான தொழில்கள் என்பவைகள் எல்லாம் பார்ப்பனரல்லாத, 'சூத்திர' மக்கள் என்பவர்களுக்கே மதப்படி, சாஸ்திரப்படி, 'மனுதர்ம'ப்படி மனித தர்மம் என்று ஒதுக்கி வைத்துவிட்டபடியால்—அப்படிப்பட்ட தொழில்களின் மூலம் கிடைக்கும் வரும்படி சோற்றுக்கு (உணவுக்கு)ப் போதியதாய் இருந்தால் உடலுரம், மனவுரம் பெற்றுவிடுவான் என்றும்; உணவு, தேவைக்கு மேலிருந்தால் சரிவரத் தொழிலுக்கு வரமாட்டான் என்றும் கருதியே, உணவுக்கே போதாமல் இருக்கும்படி பார்த்துக் குடிசைத் தொழில்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

தவிரவும், இந்தக் குடிசைத் தொழில் என்பவைகள் எல்லாமுமே இயந்திரங்களாலும் செய்ய அனுமதிக்கப்பட்டு, அதற்கு அரசாங்க ஆதரவும் பாதுகாப்பும் அளிக்கப்பட்டு நடந்துவரும் இயந்திரத் தொழில்களோடு போட்டிபோட்டுக் குடிசைத் தொழிலாளிகள் சதா அரசாங்கத்தைக் கெஞ்சி—பிச்சைக்காரர்கள் பிச்சை பெறுவது போல், அரசாங்கத்தின் கருணையினாலேயே வாழும்படி செய்யப்பட்டிருக்கிறது.

இங்கு இந்த வியாசத்திற்கு எடுத்துக்காட்டாக அரசாங்கக் கொள்கைக்கும் ஆட்சி முயற்சிக்கும் ஆட்பட்டிருக்கும் மூன்று குடிசைத் தொழில்களை எடுத்துக் கொள்வோம்.

1. இராட்டினத்தில் நூல் நூற்றுக் கதர்த்துணி நெய்தல்;
2. மில்நூல் கொண்டு கைத்தறியில் துணி உற்பத்தி செய்யும் கை நெசவுத் தொழில்;
3. நெருப்புக் குச்சி (தீப்பெட்டி) செய்யும் தொழில்.

www.thamizham.net - Free E book No 3041

முதலாவதான இராட்டினம்–கதர்த் துணி நெய்யும் தொழில், பல தலைவர்களும் பல்லாயிரம் தொண்டர்களும், பல கோடி ரூபாய் செலவிட்டும் பல ஆண்டுகள் (சுமார் 40 ஆண்டுகள்) பல ஸ்தாபனங்கள் வைத்தும், அரசாங்கமே தனி இலாக்காமூலம் நடத்தி வந்தும் கூட இன்றும் 'அரசாங்கச் சலுகைத் தொகையுடன் மக்கள் தியாகமும் சேர்ந்தால்தான்' அது நடக்க முடியும் என்பதோடு, அப்படி நடந்தாலும் அதில் ஈடுபட்டவர்கள் பிச்சை எடுப்பதற்குப் பதிலாக, 'ஏதோ அரை வயிறாவது வளர்க்கலாம்' என்கின்ற தன்மையில் இருந்து வருகிறது.

இதில் குறிப்பிடத் தகுந்த அதிசயம் என்னவென்றால்—இந்த யோக்கியதையில் உள்ள குடிசைத் தொழில் கல்வியில் சேர்க்கப்பட்டுப் பள்ளிகளில் கற்பிக்கப்பட்டு வருகிறது என்பதுடன், இதற்காகவும் கோடிக் கணக்கில் மக்கள் வரிப் பணம் நாசமாக்கப்பட்டு வருவதேயாகும். மற்றும் ஒரு அதிசயம் என்னவென்றால், இத் தொழில் எந்தநாளிலும் அரசாங்க உதவியும் நிர்ப்பந்தமும் மக்கள் தியாகமும் இல்லாமல் வாழ முடியாது. மக்களுக்குச் சிறிதும் பயன் ஏற்படாது என்பது தெரிந்தே இக் காரியம் செய்யப்பட்டு வருகிறது என்பதாகும்.

இரண்டாவது தொழில் கைத்தறித் தொழில்; இதை சர்க்கார் ஆதரித்து அதைச் சாகடிக்காமல் பாதுகாப்பது.

கைத்தறித் தொழில் இன்று அத்தொழிலில் ஈடுபட்டவர்களுக்குப் போதிய உண வளிப்பதில்லை.

இத்தொழிலுக்கு சர்க்கார் பணச் சலுகை தரவேண்டி இருக்கிறது.

இத்தொழிலில் உற்பத்தியாகும் துணிகளுக்கு மக்கள் ஆதரவளிக்க வேண்டி யிருக்கிறது.

நெசவாளி பிழைக்கவேண்டு மென்பதற்காகவே பெருவாரியாக மக்கள் இத் துணியை வாங்கவேண்டியிருக்கிறது.

இத்தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்களுக்கு திடீர் திடீர் என்று துணித் தேக்கம், விலை வீழ்ச்சி, கூலி கட்டிவராமை, பஞ்சம், பரதேசம் சென்று பிச்சை எடுக்கவேண்டிய அவசியம், பிள்ளைகளை விற்றல் முதலாகிய தொல்லையும் இழிநிலையும் ஏற்பட்டுவருகின்றன.

இத்தொழிலில் நேரம், காலம், ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் பிள்ளை, குட்டி, கிழடு, கிண்டு உட்பட—குடும்பமே பாடுபட வேண்டியிருக்கும் தொழிலாகும். இதற்கு அரசாங்க சலுகைத் தொகையும் மக்களது இரக்கமும் அருளும், அதாவது 'அய்யோ, பாவம்!—நெசவாளி பிழைக்க வேண்டாமா!' என்கின்ற கருணையும் தவிர, அரசாங்கப் பாதுகாப்பே இல்லாமலிருப்பதோடு இயந்திரத் தொழிலோடு சதா போட்டிபோடவேண்டியதாக இருந்து வருகிறது. இந்தக் கைத்தறித் தொழிலும், இனி எக்காலத்திலும் தன் காலில் நிற்கும் படியான யோக்கியதைக்கு ஆளாகாமல் சர்க்கார், பொதுமக்கள் ஆகியவர்களின் ஆதரவின் மீதே இருந்து தீர வேண்டியதுமாகும்.

இனி மூன்றாவது தொழிலான (தீப்பெட்டி) தீக் குச்சித் தொழிலாகும். இதைப்பற்றி மக்கள் அருள்கூர்ந்து சற்றுக் கவலையுடன் சிந்திக்க வேண்டும். இந்தத் தீக் குச்சித் தொழிலில் உற்பத்தியாகும் தீக்குச்சிகளுக்கு நமது 'குடிசைத் தொழில் பாதுகாப்பு சர்க்கார்'—100 ரூபாய் பெறுமான சரக்கு உற்பத்தி செய்யப்பட்டால் அதற்கு 300 ரூபாய் சுங்க (எக்சைஸ்) வரி போட்டு உற்பத்தியாளரிடம் தொழிற்சாலையிலேயே வசூல்செய்து விடுகிறார்கள். இதன் காரணமாக, ஒரு நயா பைசா (புதுக் காசு)வைவிடக் குறைவாகச் செய் முதல் அடங்கும் நெருப்புப் பெட்டியை ஆறு நயா பைசா போட்டு மக்கள் வாங்கிப் பயன்படுத்த வேண்டியிருக்கிறது. அதாவது, ஒரு அணாவுக்கு 6 அல்லது 7 பெட்டி வாங்கக்

www.thamizham.net - Free E book No 3041

கூடியதாக இருந்தும், அரசாங்க டியூட்டி (வரி) காரணமாகவே ஒரு பெட்டிக்கு ஒரு அணா விலை கொடுக்க வேண்டியிருக்கிறது.

நமது நாட்டில் இயந்திரங்களுடன் போட்டிபோட்டுக்கொண்டு—கூலித் தொழிலாள மக்களுக்கும் நல்ல கூலி கொடுத்துக்கொண்டு–5, 6 வயதுக் குழந்தைகள் முதல் 85, 90 வயது கிழவி. கிழவர்கள் வரையிலும், பெரும்பாலும் 100-க்கு 90 பேர் அவரவர்கள் வீட்டிலிருந்த வாறே தொழில் செய்துகொண்டு—தினம் 8 அணா முதல் ஒரு ரூபாய் வரை கூலி சம்பாதிக் கும்படியான குடிசைத் தொழில் இந்தத் தீப்பெட்டித் தொழிலேயாகும். இந்தக் கூலி யென்பது—ஒரு ரூபாயில் அடங்கும் ஒரு குரோஸ் (144) நெருப்புப் பெட்டிகளுக்கு 3-4-0 ரூபாய் வீதம் டியூட்டி (வரி) கொடுத்தும் தொழிலாளிகளுக்கு ஒரு நபருக்கு நாள் ஒன்றுக்குக் கொடுத்துவருகிற கூலியாகும்.

இந்தக் குடிசைத் தொழிலில் இருக்கும் பெருமை இது மாத்திரம்தானா என்றால், இன்னும் பல பெருமைகள் உள்ளன. இந்தத் தொழிலால் தென்னிந்தியாவில் மைசூரிலும், தமிழ் நாட்டிலும், கேரளாவிலும் சுமார் 1,00,000 (ஒரு இலட்சம்) பேர்கள் தினமும் இந்தப் படி வேலை செய்து கூலி வாங்கிப் பிழைக்கிறார்கள். அதாவது, கேரளாவில் மரமறுத்துக் குச்சிகள் செய்தல்; சிவகாசியில் பல அச்சாபீஸ் வைத்து லேபிள் செய்தல்; சேலம் மாவட்டத்தில் 20 தீப்பெட்டித் தொழிற்சாலைகள், மைசூர் இராஜ்யத்தில் 20 தீப்பெட்டித் தொழிற்சாலைகள் மற்றும் இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள நூற்றுக்கணக் கான தொழிற்சாலைகள் முதலாகியவற்றில் 1,00,000 தொழிலாளர்கள் மேலேகண்ட விபரப்படி தொழில் செய்து பிழைக்கிறார்கள்.

இத் தொழில் இப்படித் தென்னிந்தியாவில் நடப்பதன் மூலம் உற்பத்தியாகும் நெருப்புப் பெட்டிகள் நாளொன்றுக்கு சற்றேறக்குறைய 50,000 குரோஸ்—அதாவது 72,00,000 (எழுபத்திரண்டு இலட்சம்) நெருப்புப் பெட்டிகள் உற்பத்தி செய்யப்பட்டு இவை களுக்காக டெல்லி சர்க்காருக்கு—144 பெட்டி கொண்ட ஒரு குரோசுக்கு ரூ. 2–8–0 முதல் ரூ. 5 வரை (டியூட்டி) சுங்கவரி போடுவதன் மூலம் நாளொன்றுக்கு ரூ. 1,30,000 (ஒரு இலட்சத்து முப்பதாயிரம் ரூபாய்) வீதம் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 4,50,00,000 (நாலரைக் கோடி ரூபாய்) வருமானம் வருகிறது.

இந்தப்படியான பகல் கொள்ளைக்கு ஒப்பான இந்தச் சுங்கவரி பிரிட்டிஷ் ஆட்சியில் 1934-ல் ஒரு குரோஸ் ஒன்றுக்கு ரூ. 2–4–0 ஆக உயர்த்தப்பட்டது. அதன் பிறகு, ஆட்சி காங்கிரஸ் கைக்கு ஏகபோகமாக வந்த பிறகு 1957-ல் குரோஸ் ஒன்றுக்கு ரூ. 3–4–0 ஆக 'டியூட்டி' உயர்த்தப்பட்டு, 0–0–6-க்கு விற்ற தீப்பெட்டி இப்போது ரூ. 0–0–9 (முக்காலணாவாக) விற்கப்பட்டு வருகிறது.

இப்படியெல்லாம் டெல்லி ஆட்சிக்குப் பலவிதத்திலும் தென்னிந்திய நெருப்புப் பெட்டி உற்பத்தித் தொழிலால் ஆண்டொன்றுக்கு ஆறு கோடி (6,00,00,000) ரூபாய் வரும்படி ஏற்படும் இந்தத் 'தென்னிந்திய நெருப்புப் பெட்டித் தொழில்' சம்பந்தமாக, டெல்லி சர்க்கார் தென்னிந்தியாமீது பொறாமைகொண்டு இதைத் தலையெடுக்கவொட்டாமல் செய்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்து வருகிறது. டெல்லி சர்க்கார் பொறாமை யினாலும், அலட்சியத்தினாலும் வடநாட்டிலுள்ள தீப்பெட்டி செய்யும் அன்னிய நாட்டு மக்களுக்கு இலாபம் கிடைக்கும்படியான 'விம்கோ' கம்பெனியின் இயந்திரத் தொழிலை ஆதரிப்பதனாலும்—இன்று இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களில் உள்ள குடிசைத் தொழில் நெருப்புப் பெட்டித் தொழிற்சாலைகளில் இதுவரை சுமார் 150 தொழிற்சாலைகள் ஆள் குறைக்கப்பட்டும் மூடப்பட்டும் போகும்படியான நிலைமை ஏற்பட்டுவிட்டது.

வடநாட்டில் கல்கத்தா, பம்பாய், டெல்லி போன்ற நகரங்களில் வெளிநாட்டு—அதாவது ஸ்வீடன் நாட்டான் பெருவாரிப் பணத்தாலும் நிர்வாகத்தாலும் நடைபெறும் 3, 4 இயந்திரத் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் நெருப்புப் பெட்டிகள் நாளொன்றுக்கு



www.thamizham.net - Free E book No 3041

70,000 (எழுபதாயிரம்) குரோஸ் பெட்டிகளுக்கு மேல் உற்பத்தி செய்யப்படுவதாகும். இவைகள் நான்கே நான்கு இயந்திரத் தொழிற்சாலைகளில் செய்யப்படுகின்றன.

இந்த நான்கிற்குமாக மொத்தத்தில் 7000 (ஏழாயிர) தொழிலாளர்களே வேலை செய்கிறார்கள்; இவற்றில் உற்பத்தியாகும் சரக்கும் மட்டரகமாகும்.

டெல்லி அரசாங்கத்தார் பொறாமை இல்லாமல் உண்மையில் நல்லெண்ணம் வைத்து குடிசைத் தொழிலை ஆதரிக்க வேண்டும் என்கின்ற நாணயமான கருத்தில் இந்தத் தென்னிந்தியக் குடிசைத் தொழிலை ஆதரிக்க எண்ணி முன்வந்திருப்பார்களானால், தென்னிந்தியாவில் இனியும் ஒரு லட்சம் (1,00,000) தொழிலாளர்கள் குழந்தை குட்டி, கிழடு, கிண்டுகள் உட்பட நல்ல கூலிபெற்று பிழைக்கும்படியாக இருக்கத்தக்க ஒரு ஆயிரம் குடிசைத் தொழிற்சாலைகள் ஏற்பட்டிருக்குமென்று உறுதியாகக் கூறலாம்.

கையினால் பொருளை உற்பத்தி செய்து—உற்பத்தி விலைக்குமேல் இரண்டு மடங்கு, மூன்று மடங்கு அளவு பணம் சுங்கவரி போட்டும், இயந்திரச் சாலையோடு போட்டிபோட்டும் நடைபெறத் தக்கதாக இருக்கிற ஒரு குடிசைத் தொழிலை ஆதரிக்காமல் அதை ஒழிக்கப் பார்க்கிறார்கள்—இந்த டெல்லி அரசங்கத்தார் என்றால், இந்த ஆட்சி மனுதர்ம வருணாசிரம பார்ப்பன ஆதிக்க ஆட்சி என்பதற்கு ஏதாவது சந்தேகம் உண்டா என்று கேட்கிறேன்.

30 குச்சிகள் கொண்ட 144 பெட்டிகள், ஒரு குரோஸ் நெருப்புப் பெட்டிக்குக் கொள் முதல் (அடக்கம்) விலையைப்பற்றி சற்றுக் கவனியுங்கள். 144 நெருப்புப்பெட்டிக்கும் மரக் குச்சிகளுக்கும் விலை 7 அணா; இவைகளுக்குக் காகிதம், கந்தகம், மருந்து சாமான்கள் ஒரு குரோசுக்கு 4 அணா; செய்கூலி, பெட்டி ஒட்டுதல் முதலியவைகளுக்கு ஒரு குரோசுக்கு 6 அணா; ஆக குரோசு (144 பெட்டிகள் கொண்டது) ஒன்றுக்கு அடக்க விலை சுமார் ரூபாய் ஒன்றே ஆகிறது. இதுதான்–'டியூட்டி' வரி காரணமாக–ஒரு பெட்டி 0-0-6 (அரை) அணாவுக்கு மக்களால் வாங்கப்படுகிறது.

மற்றபடி இந்தத் தொழில் விஷயத்தில் டெல்லி சர்க்கார் காட்டும் பொறாமைக் குணங்களுக்கும், அலட்சியங்களுக்கும் ஆதாரம் கோருபவர்கள் இன்று முதலாவது பக்கத்தில் பிரசுரித்து இருக்கும் 'தென்னிந்திய சுதேசி தீப்பெட்டி உற்பத்தியாளர்கள் சங்கம்' தெரிவித்து இருக்கும் விண்ணப்பத்தைப் பார்த்துக்கொள்ள வேண்டுகிறேன்.

இந்தத் தகவல்கள் நான் சென்ற மாதம் செய்த சுற்றுப்பிரயாணத்தில் சாத்தூர் சென்றபோது அங்கு இத் தொழிலாளர், முதலாளிகள் அவர்களிடமிருந்து தெரியப்படுத்திக் கொண்ட செய்திகளேயாகும்.

புள்ளி விவரங்களில் ஏதாவது சிறு தவறு இருந்தாலும் மற்ற அடிப்படைச் செய்திகள் உண்மையானவை என்றே கருதி வெளியிடுகிறேன்.

['விடுதலை'–தலையங்கம்—6-7-1959]

## 5. இயந்திர முறைத் தொழில்

'மனித வர்க்கத்திற்கு இயந்திரங்கள் விரோதி' என்று நாம் கருதி இருந்த காலமும், அந்தப்படியே இயந்திரங்களை எல்லாம் 'பிசாசு' என்று பிரச்சாரம் செய்த காலமும் உண்டு. மனிதனின் இயற்கை முற்போக்கினுடையவும், அறிவு–ஆராய்ச்சி வளர்ச்சியினுடையவும் தத்துவத்தை அறிந்த பிறகும் அவ்வளர்ச்சியை மேலும் மேலும் விரும்புகின்ற நிலையிலும் மக்களின் சரீரக் கஷ்டத்தை உணர்ந்து, அதைக் குறைக்கவேண்டும் என்ற ஆசையில் முயற்சி கொண்டபோதும் எந்த மனிதனும் இயந்திரத்தை வெறுக்கவே முடியாது; அன்றியும் வரவேற்றே ஆகவேண்டும்.

www.thamizham.net - Free E book No 3041

ஏன் என்றால், மனித அறிவின் சுபாவ அனுபவத்தைக் கொண்டும், ஆராய்ச்சியைக் கொண்டும் நாளுக்குநாள் சுருக்கவழியைக் கண்டுபிடிப்பதே இயற்கையாகும். அது மாத்திரமல்லாமல், சரீரப் பிரயாசையைக் குறைத்துக்கொள்ள ஆசைப்படுவதும் இயற்கையாகும். இந்த இரண்டு சுபாவ குணங்களும், இயந்திரங்களைக் கண்டுபிடித்துக் கையாடித் தான் தீரும். ஆகவே, அறிவும் ஆராய்ச்சியும் இல்லாத இடங்களின்தான் இயந்திரங்கள் அருமையாய் இருப்பதும், அலட்சியமாய்க் கருதுவதுமாய் இருக்குமே தவிர—மற்ற இடங்களில், அதாவது, அறிவு, ஆராய்ச்சி, முன்னேற்றமுள்ள இடங்களில் இயந்திரங்கள் அதிகமாயிருக்கும்.

இயந்திரங்கள் 'பிசாசு' எனக் கருதப்படக் காரணம், 'இயந்திரங்கள் பலபேர் பல நாட்கள் செய்யும் வேலையை, வெகு சில பேர் சில நாட்களில் செய்துவிட்டால், மற்ற ஆட்களுக்கும் மற்ற நாட்களுக்கும் ஜீவனத்திற்கு—கூலிக்கு மார்க்கம் எங்கே? அதன் மூலமாய் ஏற்படும் வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு என்ன சமாதானம்?' என்று சொன்னவர்களின் வார்த்தையினாலேயேதான்.

இந்தப்படியே இன்றும் அனேகர் நினைத்துக்கொண்டும், நம்பிக்கொண்டும் இயந்திரங்களை ஆட்சேபித்தும், வெறுத்தும் பேசிக்கொண்டிருக்கின்றார்கள். ஆனால், இப்படி எண்ணிக்கொண்டிருக்கும் நாம் இந்தக் காலத்திலும், இந்தப்படி இப்போது எண்ணிக்கொண்டிருக்கின்ற அனேகர் இப்போதும் தங்கள் தங்களைப் பொறுத்தவரை தங்கள் தங்கள் காரியத்திற்கு மனித சரீர வேலையைவிட இயந்திர வேலையையே விரும்பி அதை உபயோகித்துத்தான் வந்தார்கள், வருகிறார்கள்.

உதாரணமாக, கால்கள் இருக்க, கட்டை வண்டிகள் இருக்க, இயந்திரத்தின் மூலமாய்த்தான்—அதாவது இரயில் மூலம் பிரயாணம் செய்தோம்; மோட்டாரில் பிரயாணம் செய்தோம்; ஆகாயக் கப்பலிலும் பிரயாணம் செய்தோம்; அவைகளையே எல்லா மக்களும் போக வரப் போக்குவரத்துச் சாதனமாக்கவும் ஆசைப்படுகிறோம்; மற்றவர்களும் ஆசைப் படுகிறார்கள். ஆகவே, இதை மனிதத் தன்மையுடன் கூடிய குற்றமற்ற இயற்கை உணர்ச்சி என்றுதான் சொல்ல வேண்டுமே தவிர, இது எவ்விதக் குற்றமுள்ளதும் அநியாய மானதும் என்று சொல்லி, இதற்காக யாரையும் கண்டிக்கவும் முடியாது. ஜீவ சுபாவமே ஆசையின் உருவமாகும்.

ஆகவே, இயந்திரம் வேண்டாம் என்பது இயற்கையோடும் முற்போக்கோடும் போராடும் ஒரு அறிவீனமான பிற்போக்கான வேலையாகுமே தவிர, மற்றபடி பயனுள்ள வேலையாகாது.

உதாரணமாக, 10 மூட்டை நெல்லை ஒரு வண்டியில் ஏற்றி, முன்னே 4 பேர் இழுத்துக்கொண்டும் பின்னே 4 பேர் தள்ளவும் உடல் வேர்க்க, நெஞ்சொடிய மணிக்கு 3 மைல் தள்ளாடித் தள்ளாடியபடி இழுத்துக்கொண்டு போவதும், அதே மாதிரியான 25 மூட்டைகளை ஒரு மோட்டார் லாரியில் ஏற்றி ஒரு மனிதன் நோகாமல் நாற்காலியில் உட்கார்ந்து சுக்கானை மாத்திரம் பிடித்துத் திருப்பிக்கொண்டு மணிக்கு 25 மைல் போவது மான—இரண்டு வேலைகளையும் எடுத்துக்கொண்டால் அவற்றுள் சுயமரியாதைக்கு, ஜீவகாருண்யத்திற்கு, மனித சமூகத்திற்கு, முற்போக்கிற்கு, மற்ற உயிர்களைவிட மனிதனுக்குப் பகுத்தறிவு என்பதாக ஒரு குணம் அதிகமாக உண்டு என்கின்ற உயர் குணத்திற்கு எது ஏற்றது என்று கேட்கின்றோம்.

மற்றும், மொழிகள் ஆதியில் எழுத்துக்கள்கூட இல்லாமல் சப்த ரூபமாய் இருந்ததும், பிறகு எழுத்துக்கள் ஏற்படுத்தப்பட்டதும், அவை கூரிய ஆணிகளால் ஓலைகளில் எழுதப் பட்டதும், பிறகு காகிதம் ஏற்பட்டதும், அதில் நாணலில் எழுதியதும், உருக்குத் தகடுகளில் எழுதினதும், பிறகு பவுண்டன் பேனாவில் எழுதினதும், 'டைப்'பில் அடிப்பதும், அச்சடிப்பதும்—அந்த அச்சும் மணிக்கு 100 பிரதிகளாக இருந்தது, இப்போது 10000

www.thamizham.net - Free E book No 3041

பிரதிகளாக ஆக்கக் கூடியதுமான காரியங்கள் படிப்படியாய் விருத்தி ஆவதைப் பார்த்துக் கொண்டும் அதன் பலனை அனுபவித்துக்கொண்டும், ஏதாவது ஒரு வகையில் ஒவ்வொரு வரும் அதைச் செய்துகொண்டும் இருக்கிறோம். இவையெல்லாம் இயந்திரத்தின் பலன்கள் அல்லவா? இவற்றுள் எது தள்ளுவதற்குரியது?

சங்கராச்சாரி, மடாதிபதி என்று சொல்லப்படும் ஆட்கள் இரயில் ஏறுவது நீச்சத்தன மென்றும் மாட்டுவண்டி, குதிரைவண்டி ஆகியவைகளில் ஏறுவது ஜீவஹிம்சை என்றும் கருதிக்கொண்டு, மரக் கட்டையில் பல்லக்கு செய்து அதற்குத் தந்தம், வெள்ளி, தங்கம் முதலிய தகடுகள் போட்டு, அதன்மீது தான் ஏறி உட்கார்ந்துகொண்டு, தண்டு 1க்கு 4 பேர் வீதம் 4 தண்டுக்கு 16 பேர் 'ம்கு' 'ம்கு' என்று முக்கிக்கொண்டு மணிக்கு 4 மைல் வீதம் தூக்கி ஓடுவதைப் பார்க்கிறோம். இது இயந்திர சம்பந்தமில்லாதது என்று வைத்துக் கொண்டாலும், இந்த வாழ்வு காட்டுமிராண்டி உலக வாழ்வா? அல்லது நாகரிக உலக வாழ்வா? மனிதன் தூக்குவதைவிட்டு மாடோ, குதிரையோ, யானையோ சுமப்பதாக வைத்துக்கொண்டாலும் அதுவும் அதற்குச் சற்று அடுத்த காட்டுமிராண்டி வாழ்வா? அல்லது நாகரிக ஜீவகாருண்ய வாழ்வா? என்றும் கேட்கின்றோம்.

ஆகவே, இவைகளிலிருந்து இயந்திரம் மனிதனுக்கு அவசியம் என்றும், சவுகரிய மானதென்றும், ஜீவகாருண்யமுடையதென்றும், முற்போக்குக்கும் நாகரிகத்திற்கும் ஏற்ற தென்றும், இயற்கையுணர்ச்சியில் பட்டதென்றும், அறிவு ஆராய்ச்சியின் பயனென்றும் ஒப்புக்கொண்டுதானாக வேண்டும்.

ஆனால், முன்சொல்லப்பட்ட—அதாவது, 'இயந்திரம் பெருகுவதால் தொழிலாளிக்கு வேலை இல்லாமல போய்க் கஷ்டம் வரும், என்பதற்குச் சமாதானம் சொல்லியாக வேண்டும். தொழிலாளி என்று ஏன் ஒருகூட்டம் இருக்கவேண்டும்? முதலாளி என்று ஏன் ஒரு கூட்டம் இருக்க வேண்டும்? இது யார் கட்டளை? என்ன அவசியத்தைப் பொறுத்தது?

மற்றும் பாடுபடுபவன் – சோம்பேறி, கஷ்டப்படுபவன் – சுகம் அனுபவிப்பவன், ஏமாற்றுபவன்–ஏமாறுபவன் என்பன போன்ற பிரிவுகள் மனித வாழ்க்கையில் இருக்கும்படி யாகவே வாழ்க்கைத் திட்டத்தை வகுக்கவேண்டும் என்பதற்கு ஏதாவது அவசியமும், ஆதாரமும் உண்டா?

மனிதன் தொழில் செய்வது என்பது மனித வாழ்க்கையின் நலம் அல்லது தேவையின் அவசியம் என்பதற்காகவா? அல்லது முதலாளி, மிராசுதாரன் ஆகியவர்கள் வேலை செய்யாமல் சம்பாதிக்கவோ, பணம் சேர்க்கவோ வேண்டிய அவசியத்திற்காகவா?

இம் மூன்று கேள்விகளுக்கும் பதில் அறிந்தோமானால் வேலை என்பதும், வேலை யில்லாத் திண்டாட்டம் என்பதும்—ஒருவனை ஒருவன் கொடுமைப் படுத்துவதுதான் இந்த முறைகள் என்பதும் விளங்கிவிடும்.

இவை ஒருபுறமிருக்க, வேலைகளின் கூலிகளை உயர்த்தி, வேலை நேரத்தைக் குறைத்து, முதலாளிகளின் இலாபத்தையும் குறைத்து, ஒரு வரையறை ஏற்படுத்தி—உள்ள நேரத்தையும் கூலியையும் எல்லா வேலைக்காரர்களுக்கும் பங்கு வரும்படியான ஒரு திட்டம் போடுவோமேயானால்—அதாவது, மோட்டார் பஸ்காரர்கள் யூனியன் வைத்து, வருகின்ற பிரயாணிகள் சத்தத்தை உயர்த்திக் கிடைத்த வாடகையை எல்லோரும் பங்கிட்டுக் கொள்வதுபோல் செய்தால், வேலையில்லாத் திண்டாட்டம் தானாகவே ஒருவாறு ஒழிக்கப் பட்டு விடுமா, இல்லையா?

நிற்க, இன்றைய வாழ்க்கை நிலைமையைப் பார்த்தால் மனிதன் வேலை செய்வதற் காகவே–பிறருக்கு அடிமையாய் உழைப்பதற்காகவே பிறந்திருக்கிறானேயொழிய சுகப் படுவதில்லை என்றும்; ஆதலால் அவன் வேலை செய்வதற்காக ஒரு தொழில் கண்டு பிடித்துக் கொடுக்கவேண்டும் என்றும்தான் ஏற்படுகிறது. இதுவும் தன் வயிற்றுக்கு

www.thamizham.net - Free E book No 3041

வேண்டிய அளவுகூடக் கிடைக்க முடியாத கூலிக்கு முழு நேரத்தையும் செலவு செய்து பாடுபட வேண்டும் என்பதாகக் காணப்படுகிறது. இது பகுத்தறிவில்லாத மிருக வாழ்க்கையைவிட மிக மோசமான வாழ்வேயாகும். எப்படியெனில், அவற்றிற்காவது உத்தரவாதம் இருக்கின்றது. அதாவது, அதன் எஜமான் அதற்கு வயிறு நிறைய ஆகாரம் போடக் கட்டுப்பட்டிருக்கிறான். மனித வேலைக்காரனுக்கோ உத்தரவாதமே கிடையாது. இன்னும் பட்சிகள், காட்டு மிருகங்கள் ஆகியவைகளில் எதற்கும் எவ்வித வேலையும் செய்யாமல் வாழும் சவுகரியமிருக்கிறது.

இப்படி இருக்க, பகுத்தறிவு இருக்கும் காரணத்திற்காக மனிதன் 100-க்கு 90 பேர் ஆகாரத்திற்கே வேலை செய்ய வேண்டியது என்பதும்—அதுவும் உத்தரவாதம் இல்லாத அடிமையாய் இருந்து வேலை செய்வது என்பதும்—அதுவும் சரியாய்க் கிடைக்காமல் பட்டினியாய்க் கஷ்டப்படுவது என்பதும் இயற்கைக்கு மாறுபட்ட ஒரு பெரிய அக்கிரமமாகும். ஆகவே, வேலையில்லாக் கஷ்டம் ஏற்பட்டு மக்கள் பட்டினி கிடந்து பரிதவிக்க ஆரம்பித்தால்தான், ‘தங்களுக்குப் பகுத்தறிவும் வன்மையும் இருந்தும் தாங்கள் முட்டாள் தனமாய்ப் பாடுபடுவதும்—தங்களைப் போன்ற பிறரால் ஏய்க்கப்படுவதும் ஏன்?’ என்கின்ற காரணத்தை உணரமுடியும். உணர்ந்து சமநிலை அடைய முயற்சிக்கவும்முடியும்.

அதை விட்டுவிட்டு, முதலாளி–தொழிலாளி நிலைமையும், மிராசுதாரர்–உழவன் நிலைமையும் உலக வாழ்க்கையின் சவுகரியத்திற்கு அவசியம் என்பதாகச் சொல்லி, அதுவும் கடவுள் செயலால்–முன் ஜென்மத்தின் கர்மபயனால்–தலைவிதியால் ஏற்பட்டது என்று சொல்லிக்கொண்டு அவற்றை நிலைநிறுத்திக் கொண்டே, எவ்வளவு கூலி வாங்கிக் கொடுத்தாலும் மனித வர்க்கத்தினரில் பெரும்பான்மையானவர்களின் கவலையும் தொல்லையும் கொடுமையும் ஒழியவே ஒழியாது. எப்படியெனில், சாதி வித்தியாசத்தை வைத்துக் கொண்டு எவ்வளவு சமத்துவம் கொடுத்தாலும் அது எப்படிப் பயன்படாதோ அதுபோலவே, முதலாளி–தொழிலாளி முதலிய பாகுபாடுகளை வைத்துக்கொண்டு அவர்களுக்குக் கொடுக்கும் எவ்வித சுதந்திரமும் பயன்படாமலே போய்விடுவதோடு, கீழ்நிலை மேல்நிலை என்பதும் மாற்றவே முடியாததாகிவிடும். ஏனெனில் தொழிலாளி, முதலாளி, உழவன், ஜமீன், மிராசுதாரன் என்பவைகளும் ஒருவித வருணாசிரம தர்மமேதவிர வேறல்ல. ஆச்சிரமங்கள் என்றாலே படிகள், நிலைகள் என்றுதான் கருத்தாகும்.

நமது நாட்டில் பிறவியிலேயே பல படிகள் இருப்பதாலும் அதனாலேயே நாம் சதா கஷ்டப்படுவதாலும் தொழில் வாழ்க்கையில் உள்ள படிகளை நாம் கவனிக்கவே நேரமும், ஞாபகமும் இல்லாதவர்களாய் இருக்கின்றோம். மனிதன் உண்மையான சமத்துவமடைய வேண்டுமானால் பிறவிப் படிகளையும் தொழில் படிகளையும் கடந்தவனாகத்தான் இருக்க வேண்டும். அவ் விரண்டு படிகளையும் ஒழித்த—அவ் விரண்டு படிகளும் ஒழிந்த நிலை தான் சமதர்மநிலை என்று சொல்லப்படுவதாகும்.

நிற்க, இவற்றிற்கெல்லாம் முக்கியமாக இன்னொரு விஷயம் உண்டு. அதைச் சரியாக உணர்ந்து கவனித்தோமானால், மேற்கண்ட கஷ்டங்களைப்பற்றிய கவலைகள்கூட அதிகப்படவேண்டிய அவசியமிராது. அதென்னவெனில், யோசனையில்லாமல் கண்ட கண்டபடி ஜனத்தொகையை விருத்தி செய்வதாகும்; பிள்ளைகளைப் பெறுவதாகும். 2 ஏக்கரா பூமி உள்ளவன் 100 மாடுகளை வாங்கி வளர்ப்பானேயானால் எப்படி அவனால் அந்த மாடுகள் போதிய தீனி கிடைத்து இரட்சிக்கப்படமுடியாதோ, அதுபோலவே மனித சமூகமும், தேவைக்கும் தன்னால் தாங்குவதற்கும் அதாவது, காப்பாற்றக் கூடியதற்கு அதிகமாகவும் தேசத்தின் கால நிலைமைக்கு மேலாகவும் பிள்ளைகளைப் பெற்றுக் கஷ்டப் பட்டு, தனது ஆகாரத்தில் பங்கு கொடுத்து கடைசியில் இருவருக்கும் போதுமான ஆகாரம் இல்லாமலும், போதுமான ஆதரிப்பு இல்லாமலும் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதை ஒழிக்காமல் வீணாய் எண்ணிக்கையை அதிகப்படுத்துவதில் என்னபயன்?

www.thamizham.net - Free E book No 3041

இந்திய நாட்டு நிலைமை நமக்குத் தெரிய 40, 50 வருஷ காலமாகவே மக்களுக்கு வேலையில்லாமல் வெளிநாடுகளுக்குக் கூலியாகச் செல்வதே வழக்கமாக இருந்துவந்திருக்கின்றது. இது மாத்திரமல்லாமல், அடிக்கடி பஞ்சமும் கொள்ளை நோயும் வந்திருக்கின்றன. இது இந் நாட்டுச் சுயமரியாதைக்கே மிகவும் கேடானதாகும். சம்போக விஷயங்களில் கவலையற்றும் முரட்டுத்தனமாயும் அளவுக்கு மீறியும் நடந்துகொள்வதால் மனிதர்களுக்கு ஏற்படும் வியாதிகளைப் போலவேதான் குழந்தைகள் ஏற்படுவதும் என்பதே தவிர, அதற்கும் இதற்கும் சிறிதும் வித்தியாசமேயில்லை. சம்போக உணர்ச்சி இந்த உலகத்திலுள்ள ஜீவஜந்துக்களில் மனிதனைத்தவிர எந்த ஜீவனுக்கும் குழந்தை பெறுவதற்காக என்ற எண்ணத்தின் மீதே தோன்றுவது கிடையாது. மனிதன் பகுத்தறிவுக்காரன் என்கின்ற ஆணவத்தால் அவனுக்கு ஏற்படும் அனேக முட்டாள்தனமான செய்கைகளைப் போல், குழந்தை பெறவேண்டும் என்கின்ற முட்டாள்தனமும் ஏற்பட்டு, அது ஒரு ஆசையாகி, பிறகு அது ஒரு சொத்தாகி, பிறகு 'மோட்சத்திற்கு' உதவும் காரியமாகவும் ஆகிக் கடைசியில் வீண்கஷ்டமும், தொந்தரவும்பட்டு மற்றவர்களுக்கும் தொந்தரவு கொடுத்ததை, கொடுப்பதைத்தவிர வேறு ஒரு பயனும் இல்லாததாய் முடிந்துவிடுகிறது.

மேலும், பிள்ளை பெறுவதினாலேயே மொத்த ஜனத்தொகையில் பகுதியான பெண்கள் சமூகம் அடிமையாகி, அனேக ஆபத்துக்களுக்கும் வியாதிகளுக்கும் உள்ளாகி, அற்ப ஆயுளுடன் கஷ்டமும்பட வேண்டியதாகி, அவர்களது வாழ்வே மிக்க பரிதவிக்கத்தக்க வாழ்வாக முடிகின்றது.

எவனொருவன் தன் தேவைக்குமேல் சொத்தும் ஸ்திதியும் வைத்திருக்கிறானோ அவனைக் குற்றவாளியாக்கித் திருடனுக்குண்டான தண்டனையைக் கொடுப்பது என்கின்ற ஆட்சியை ஏற்படுத்துவதுதான் நல்லது.

இந்த ஆட்சி ஏற்பட்டுவிட்டால் பிறகு யாருக்கு வேலை இருந்தாலும், யாருக்கு வேலையில்லாவிட்டாலும் ஜீவனம் சரியாகும். இதற்காக அதிகக் கவலையும் படவேண்டியதில்லை. இந்தப்படிக் கவலைக்கெல்லாம் இல்லாமல் நாட்டுச் செல்வத்தை எல்லாம் ஒருவன் தன்னிடமே வந்து சேரும்படியான முறையை மனித வாழ்க்கைக் கொள்கைகளாக வைத்துக் கொண்டு பலபேர்கள் பட்டினி இருந்துகொண்டு இருப்பதும், ஏன் பட்டினியாய் இருக்கிறார்கள் என்று கேட்டால் வேலைகள் கிடைக்காததால் பட்டினியாய் இருக்கின்றார்கள்; ஆதலால் இயந்திரங்களையெல்லாம் ஒழித்துவிட்டுக் கடப்பாரையும், சம்மட்டியும் வாங்கிக்கொடுத்து வேலை வாங்க வேண்டுமென்றும் சொல்வதானால், இது எவ்வளவு அக்கிரமமானதும் அயோக்கியத்தனமானதும், திருட்டுத்தனமானதுமான காரியம் என்பது யோசித்தால் விளங்காமல் போகாது. ஆகையால் நாட்டுக்கும் முற்போக்குக்கும் மனித சமூக நாகரிக வளர்ச்சிக்கும் இயந்திரங்கள் மிகவும் முக்கியமானவையாகும்.

['குடி அரசு'-தலையங்கம்—14-12-1930]

நமது பள்ளிக்கூடங்களில் படிக்கும் பிள்ளைகள் பூராவுக்கும் பள்ளிக்கூடத்தில் படிக்கும் கைத்தொழில் அவர்களது வாழ்க்கைக்குப் பயன்படுமா? இந்தியாவில் இம்மாதிரி கைத்தொழிலுக்கு இனியும் எத்தனை காலத்துக்கு அவசியம் இருந்து வரமுடியும், இருந்து வர இடம் கொடுப்பது? உலகத்தில் கை நெசவு என்பதுகூட இந்தியாவில்தான் இருக்கிறது. மற்ற நாடுகள் எல்லாம் இயந்திரத்தில்தான் துணிகளை நெய்கின்றன.

விவசாயமும் இயந்திரத்தால் உழுது, விதைத்து, நீர் பாய்ச்சி, அறுப்பு அறுத்து, பண்டமாக்கி, எடையாக்கிப் பணம் வருகிறது. விவசாயமும் நெசவும் இயந்திரத்தின் மூலம் என்றாகிவிட்டால் மற்றபடி கையினால் செய்யும் கைத்தொழில் என்ன இருக்கிறது? நெல் குத்துவதா? கருப்பட்டி காய்ச்சுவதா? பால் கறந்து வெண்ணெய் எடுப்பதா? சோப்பு, சீப்பு, கண்ணாடி, வாசனை எண்ணெய் செய்வதா? அல்லது மேசை, நாற்காலி, தட்டுமுட்டு

www.thamizham.net - Free E book No 3041

சாமான், பாத்திரம் பண்டம் செய்வதா? கட்டை வண்டி, மோட்டார், சைக்கிள், இரயில், ஆகாய விமானம் செய்வதா? கல் உடைத்து ரோடு போடுவதா? பாலம் கட்டுவதா? ரோடு திருத்துவதா? காடு வெட்டித் திருத்துவதா? வாய்க்கால் வெட்டித் தண்ணீர் விடுவதா? இவை எல்லாமே இயந்திரங்களினால் செய்யப்படுகின்றன. கக்கூசு எடுக்கும் வேலையும் தானாகக் கழுவிக் கொண்டு போகும்முறை வரப்போவதால் ஆளுக்கு வேலை இல்லாமல் போகப் போகிறது! தச்சு, கொல்லு, கொல்லத்து வேலைகளையும் பெரிதும் மனிதன் இனித் தன் கைப்படச் செய்யவேண்டிய அவசியமில்லாத முறையில் நடைபெறப் போகின்றன. கொல்லத்துக்காரனுக்கு வேலையில்லாத மாதிரி கற்கள், பலகைகள், சிமெண்டு அட்டைகள் இயந்திரங்களில் செய்யப்பட்டு ஒரு நாளில் 5, 10 வீடுகள் கட்டும்படியான வேலைத் திறன்கள் இயந்திரங்களில் செய்யப்படுகின்றன.

இந்த நிலையில் இருக்கின்ற உலகத்தில் இன்று காந்தியாரின் கல்வித்திட்டம் என்று சொல்லப்படும்—காங்கிரஸ் கல்வித் திட்டம் இந்தியாவில் ஏற்படுத்தப்படுமானால் மேலே கூறப்பட்ட இயந்திர சம்பந்தமான காரியங்கள் எதுவும் இந்தியாவுக்குள் நடைபெறக் கூடாதென்றும் மீறி நடத்தப்பட்டால் அதை இராஜ துவேஷமாகக் கொள்ளப்படும் என்றும் சட்டம் போட்டு, அக் காரியங்கள் தடுக்கப்பட்டுவிட்டால் மாத்திரமேதான் இது பயனுள்ள தாக ஆகலாம். அல்லாதவரை பார்ப்பனர்களே உயர்ந்த சாதியினராகவும், அரசியல், சமூக இயல், பொருளியல் ஆகியவைகளில் ஆதிக்கம் செலுத்திப் பாடுபடாமல் வயிறு வளர்க்கவும், மற்ற சமூகம் அவர்களது வைப்பாட்டிப் பிள்ளைகளாய், அடிமைகளாய் வாழவுந்தான் இக் கல்வித்திட்டம் பயன்படும் என்று கண்டிப்பாகக் கூறவேண்டியிருக்கிறது.

['குடி அரசு'—தலையங்கம்—21-11-1937

# 3. சமதர்மம்

## 1. செல்வர்–வறியர்

தோழர்களே!

இந்தியநாட்டிலே ஏன் செல்வர் – வறியர் இருக்கிறார்கள்? சர்க்காரின் சட்டத்தின்படி சர்க்கார் பாதுகாப்புப்படி சில பணக்காரர்களும் ஏழைகளும் இருக்கிறார்களே தவிர, மேல்–கீழ் சாதியைப் போல, பணக்காரன் அவன் தாய் வயிற்றில் இருந்து வரும்போதே கொண்டுவந்ததல்ல; அதாவது அந்தமாதிரியான அமைப்பு ஏற்பட்டு இருக்கிறது என்பதுதான். ஒருவனுக்கு நிறையப் பணமும், வீடுவாசலும், வியாபாரமும் இருக்கின்றன. இவற்றினுடைய பலனை இல்லாதவர்கள்—ஏழைகள் அனுபவிக்கமுடியாதபடி சட்டம் இருக்கிறது. ஒரு மனிதன் ஏழ்மையினால் கஷ்டப்படுகிறான்; இன்னொருவன் செல்வத்தில் புரளுகிறான். இந்தத் தன்மை மாறவேண்டாமா?

சாதாரணமாக நம்முடைய ஏழ்மை நிலையை எடுத்துக்கொண்டால் கடந்த யுத்தத் திற்கு (1936—39) முன் எவ்வளவு ஏழ்மைநிலை இருந்ததோ அதைவிட அதிகமான ஏழ்மை நிலையும்–சோற்றுக்கும் துணிக்கும், வீட்டிற்கும், பண்டங்களுக்கும் கஷ்டமும் தரித்திரமும் இருப்பதோடு; பணக்காரர்களின் நிலையைப் பார்த்தால் முன்புள்ள பணக்காரர் நிலையும், இப்போதுள்ள பணக்காரர் நிலையும்,—முன்பு பத்தாயிரக் கணக்கில் வைத்திருந்த பணக் காரனை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இப்போது அவர்கள் இலட்சக் கணக்கிலும்; இலட்சக் கணக்கில் வைத்திருந்தவர்கள் பல இலட்சக் கணக்கிலும்; பல இலட்சக்கணக்கில் வைத் திருந்தவர்கள் கோடிக் கணக்கிலும் பணக்காரராய் இருக்கிறார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

அப்போதெல்லாம், ஒரு கோடிரூபாய் சொத்துள்ளவர்கள் நம்முடைய நாட்டில் ஒருவர் இருவர் இருப்பார்கள். அதுவும் என்னவென்று கணக்குப் பார்த்தால் தகராறில்தான் இருக்கும்—அவ்வளவு ரூபாய் சொத்துக் கணக்கு வருவதற்கு! அதேபோல் இலட்சரூபாய் சொத்தும் ஊருக்கு இரண்டு மூன்றுக்குமேல் காணமுடியாது. இப்போது நிலைமை என்னவென்று பார்க்கும்போது, நமக்குத் தெரியாத 'கோடீஸ்வரர்கள்' எத்தனையோ பேர் வந்துவிட்டார்கள்; இலட்சாதிபதிகள் ஏராளமாக ஆகிவிட்டார்கள்.

[சென்னை ஆயிரம் விளக்கில், 29-2-1952-ல் சொற்பொழிவு—'விடுதலை' 4-3-1952]

## 2. சமதர்மம்

ரொக்க சொத்துக்களும் பூமி சொத்துக்களும் அனேகமாய் பார்ப்பனர் முதலாகிய உயர்ந்த சாதிக்காரர்களிடமும் லேவாதேவிக்காரர்களிடமுமே போய்ச் சேரக்கூடியதாய் இருப்பதால், உயர்ந்த சாதிக்காரர்கள் என்பவர்களையும் கண்வைத்துக் கொள்ளை அடிக்கப் பட்டிருப்பதாகத் தென்படுகிறது.

ஆகவே, இவற்றிலிருந்து இந்த முறையை உயர்ந்த சாதித் தத்துவத்தையும், பணக்காரத் தத்துவத்தையும் அழிப்பதற்கே கையாளப்பட்டதாக நன்றாய்த் தெரியவருகின்றது. உலகத்தில் பொதுவாக யாவருக்கும் ஒரு சமாதானமும் சாந்தி நிலையும் ஏற்பட வேண்டுமானால், இந்த முறையைத்தான் கடைசி முயற்சியாக ஏதாவதொரு காலத்தில் கையாளப்பட்டே தீரும் என்பதில் நமக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை.

அன்றியும், இன்று இந்தியாவிற்கு வெளியில் உள்ள வேறு பல தேசங்களில் இம்முறைகள் தாராளமாகக் கையாளப்பட்டும் வருகின்ற விஷயமும் யாவரும் அறிந்ததேயாகும். மற்றும் பல நாடுகளில் விடுதலைக்கு இம்முறைகளையே கையாள முயற்சிகள் செய்யப்பட்டும் வருகின்றன.

இங்கிலாந்து முதலிய நமக்கு முக்கியமான நாடுகளில்கூட இம்முறைகளைப் புகுத்த ஒரு பக்கம் பிரச்சாரமும், மற்றொரு பக்கம் அதைத் தடுக்க முயற்சிகளும் நடந்துவருகின்றன. இவற்றின் உண்மைகள் எப்படி இருந்தாலும் கொஞ்ச காலத்திற்குமுன் இம்முறைகளைப் பாவம் என்றும், நரகம் கிடைக்கும் என்றும் மிரட்டி ஏய்த்துக்கொண்டிருந்ததெல்லாம் போய், இப்போது இது நாட்டுக்கு நல்லதா? தீமை விளைவிக்காதா? என்கின்றவை போன்ற தர்மஞானம் பேசுவதன் மூலம்தான் இம்முயற்சிகளை அடக்கப் பார்க்கிறார்களே ஒழிய, இது சட்டவிரோதம், பாவம், கடவுள் செயலுக்கு மாறுபட்டது என்கின்ற புரட்டுக்கள் எல்லாம் ஒருபக்கம் அடங்கிவிட்டன.

ஆனாலும், இந்தத் தர்ம சாஸ்திர ஞானமும் யாரால் பேசப்படுகின்றது என்று பார்ப்போமானால் பார்ப்பனராலும், பணக்காரராலும், அதிக நிலம் வைத்துக் கொண்டிருக்கும் பெரிய நிலச்சுவான்தாரர்களாலும் இவர்கள் தயவால் அரசாட்சி நடத்தும் அரசாங்கத்தாலுந்தானே தவிர, உண்மையில் சாதி ஆணவக் கொடுமையால் தாழ்த்தப் பட்டும், முதலாளிகள், லேவாதேவிக்காரர்கள் கொள்ளையால் கஷ்டப்படுத்தப்பட்டும், நிலச் சுவான்தாரர்கள் கொடுமையால் துன்பப்படுத்தப்பட்டும் பட்டினி கிடக்கும் ஏழை மக்களுக்கு இம்முறையைத் தவிர வேறு முறையில் தங்களுக்கு விடுதலை இல்லை என்கின்ற உணர்ச்சி பெருகிக்கொண்டேதான் இருக்கின்றதே தவிர சிறிதும் குறைந்ததாக இல்லை.

அன்றியும், இம்முறையை நாமும்—அதாவது நம் நாட்டு மக்களும், அனேகமாய் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் இன்னும் கையாடிக்கொண்டுதான் வருகின்றோம். உதாரணமாக, இன்றையச் சமுதாயச் சீர்திருத்தக் கொள்கையோ, சாதி ஒழிப்புக் கொள்கையோ, சுயமரியாதைக் கொள்கையோ, சுயராஜ்யம் கேட்கும் கொள்கையோ,

www.thamizham.net - Free E book No 3041

பூர்ண சுயேச்சைக் கொள்கையோ ஆகியவைகள் எல்லாம் இந்தச் சமதர்ம பொதுவுடைமைக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டதேயாகும். அதாவது, இவையெல்லாம் பலத்தையும் கிளர்ச்சியையும் சண்டித்தனத்தையும் அடிப்படையாகக்கொண்டு கொடுக்க இஷ்டமில்லாதவனிடத்தில், இணங்க இஷ்டமில்லாதவனிடத்தில் தட்டிப்பிடுங்குவதோ, வலுக்கட்டாயமாகப் பறிப்பதோ ஆகிய குறியைக் கொண்டதேயாகும். அதிலும் சுயராஜ்யமோ, பூரண விடுதலையோ கேட்பதைவிட—அடையக் கைக்கொண்டிருக்கும் இன்றைய முயற்சியைவிட, சாதியை ஒழிப்பதென்பது மிகுதியும் சமதர்மமும் பொது வுடைமைத் தன்மையும் கொண்டதாகும்.

['குடி அரசு'-தலையங்கம்—4-1-1931]

## 3. சமதர்ம அறிக்கை

தற்காலம் உலகில் ரஷியாவிலும், ஸ்பெயினிலும் மற்றும் சில இடங்களிலும் சமதர்மம், பொதுவுடைமை தர்மம் ஆகியவைகளின் பேரால் அரசாட்சிகளும் கிளர்ச்சிகளும் நடைபெற்று வருவது யாவரும் அறிந்த ஓர் உண்மையாகும்.

இவ்வுணர்ச்சியானது ரஷியாவில்தான் முதன்முதலில் தோன்றியதாக நமது மக்களில் அனேகர் கருதிக்கொண்டிருக்கின்றார்கள். சமதர்ம உணர்ச்சி சம்பந்தமான சரித்திரத்தைக் கவனித்து ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு இக் கருத்து சரியானதல்ல என்பதாகத் தோன்றும். ஏனெனில், உலகில் சமதர்ம உணர்ச்சி என்பதானது பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தோன்றி இருப்பதற்கு அத்தாட்சிகளிருக்கின்றன.

சமதர்ம உணர்ச்சி ஒரு எண்ணமாய் ஏற்பட்டு அதன் தத்துவங்களைப் பற்றியும், கொள்கைகளைப்பற்றியும் வெளியில் எடுத்து மக்களுக்குத் தெரியும்படியாக மாநாடுகள் மூலமும் அறிக்கை மூலமும் வெளிப்பட்டிருப்பதாக நமக்கு விளங்கும்படியாய்க் காணப்படும் காலமே இன்றைக்கு சுமார் 80, 90 வருஷங்களுக்கு முன்பு என்று தெரிகின்றது. அதாவது 1847ஆம் வருஷத்திலேயே இலண்டன் மாநகரத்தில் உலகத்திலுள்ள சமதர்மவாதிகளுடைய மாநாடு (காங்கிரஸ்) ஒன்று நடந்திருப்பதாகவும் அதன் பலனாய் அறிக்கை வெளியிடப்பட்டிருப்பதாகவும் தெரியவருகின்றது. ஆனால், அதைச் சீக்கிரத்தில் கையாளப் படவும் அனுபவத்தில் கொண்டு வரவும் முயற்சித்த நாடு ரஷியாவாக ஏற்பட்டுவிட்டது.

இது சம்பந்தமாக நமக்குக் கிடைத்த ஓர் அறிக்கை–சரித்திரத்தில் சமதர்ம உணர்ச்சி பெற்றவர்களில் முதன்மையான முக்கியஸ்தர்கள் ஜெர்மானியர்களாயிருந்தாலும், அதற்காக மாநாடு கூடினது இலண்டன் பட்டணமாய் இருந்தாலும், அதற்கு அப்பொழுதே கிளர்ச்சி நடந்தது பிரான்சு தேசமாயிருந்தாலும், அது முதன்முதல் அனுபவத்தில் கொண்டுவர முயற்சிக்க வேண்டிய இடம் ரஷியாவாகவே ஏற்பட்டுவிட்டது சிலருக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கக்கூடியதாயிருந்தாலும் அந்தப்படி ஏற்படுவதற்கு நியாயம் இல்லாமலில்லை.

என்ன நியாயமென்று வாசகர்கள் கேட்பார்களேயானால், அதற்கு நமது சமாதானமானது, எங்கு அளவுக்கு மீறிய–தாங்க முடியாத கொடுமை நடைபெறுகின்றதோ அங்கு தான் சீக்கிரத்தில் பரிகார முயற்சி வீறுகொண்டெழவும், சீக்கிரத்தில் இரண்டிலொன்று காணவுமான காரியங்கள் நடைபெறும்.

எனவே, இந்த நியாயப்படி பார்ப்போமேயானால் உலக அரசாங்கங்களிலெல்லாம் ரஷிய ஜார் அரசாங்கமே மிக்கக் கொடுங்கோன்மையாக நடைபெற்று வந்திருக்கின்றது. அதனாலேயே அங்கு சமதர்ம முறை அனுபவத்திற்குக் கொண்டுவர வேண்டியதாயிற்று.

இந்த நியாயப்படி பார்த்தால், அவ்வித சமதர்ம உணர்ச்சி உலகில் ரஷியா தேசத்தைவிட இந்தியாவுக்கே முதன்முதலாக ஏற்பட்டு இருக்க வேண்டியதாகும். ஆனால், அந்தப்படி ஏற்படாமல் இருப்பதற்கு இங்கு அனேகவித சூழ்ச்சிகள் நடைபெற்று வந்திருப்



www.thamizham.net - Free E book No 3041

பதாலும் சூழ்ச்சிக்காரர்கள் இந்திய மக்களை வெகு ஜாக்கிரதையாகவே கல்வி, அறிவு, உலக ஞானம், சுயமரியாதை உணர்ச்சி முதலியவைகள் பெறுவதற்கு மார்க்கம் இல்லாமல் காட்டுமிராண்டித் தன்மையில் வைத்து வந்ததோடு, கடவுள்பேராலும், மதத்தின்பேராலும் ஏற்படுத்தப்பட்ட உணர்ச்சியானது அடிமையாக இருப்பதே கடவுள் சித்தமென்றும், மோட்ச சாதனமென்றும் புகட்டி வந்ததாலும் அதே சூழ்ச்சிக்காரர்கள் அடிக்கடி வேற்றரசர்களை அழைத்துவந்து மக்களை மிருகத்தனமான ஆதிக்கத்தால் அடக்கி ஆளச்செய்து வந்ததாலும், உலகில் சமதர்ம உணர்ச்சி முதன்முதல் இந்தியாவிலேயே ஏற்பட்டிருக்க வேண்டியது மாறி, ரஷியாவுக்கு முதல் ஸ்தானம் ஏற்படவேண்டியதாயிற்று.

ஆனபோதிலும்கூட, இப்போது உலகில் மற்றும் எல்லாப் பாகங்களிலும் ஏற்பட்டு விட்டதின் காரணமாய் இந்தியாவிலும் ஏற்படவேண்டியது தவிர்க்கமுடியாத அவசியமாய்ப் போய்விட்டதால் இங்கும் தலைகாட்ட ஆரம்பித்துவிட்டது. ஆனால், உலகில் சமதர்ம உணர்ச்சிக்கு விரோதமான தன்மைகளில் மற்ற தேசத்திற்கும் இந்தியாவுக்கும் ஒரு முக்கிய வித்தியாசம் இருந்துவருகின்றது. அதென்னவென்றால், மற்ற நாடுகளில் ஒரு விஷயந்தான் முக்கியமாய்க் கருதப்படுகின்றது. அதாவது, முதலாளி (பணக்காரன்)–வேலையாள் (ஏழை) என்பதுவேயாகும். ஆனால், இந்தியாவிலோ மேல்சாதியார், கீழ்சாதியார் என்பது ஒன்று அதிகமாகவும் முதன்மையானதாகவும் இருப்பதால் அது பணக்காரன்–ஏழை தத்துவத்திற்கு ஒரு கோட்டையாக இருந்து காப்பாற்றிக்கொண்டு வருகின்றது.

ஆதலால், இங்கு சமதர்மத்திற்கு இரட்டிப்பு அதிகமான எதிர்ப்பு இருந்துவருவது கொண்டு சமதர்ம உணர்ச்சி தலைதூக்க முடியவில்லை.

இவ்விவரங்கள் இந்த அளவில் நிற்க, முன் குறிப்பிட்டதான அதாவது, சமதர்மக் கொள்கை சம்பந்தமாக அந்தக் காலத்தில் வெளியான ஓர் அறிக்கையை மக்கள் உணரும் படியாக வெளிப்படுத்தலாம் என்று நாம் கருதுவதால் அதை மொழிபெயர்த்து வெளியிடலாம் என்கின்ற கருத்துக்கு மேற்கண்ட வாக்கியங்களை முகவுரையாக எழுதினோம். இனிமேல் வருபவைகள் முழுவதும் அவ்வறிக்கையின் மொழிபெயர்ப்பேயாகும். அதில் நமது அபிப்பிராயம் என்பது சிறிதும் இல்லை. ஆகையால், வாசகர்கள் அதை 1847ஆம் வருஷத்தில் இரண்டு ஜெர்மானியர்களுக்கு ஏற்பட்ட அபிப்பிராயம் என்பதாகவே கருதி வாசிக்க வேண்டுமென்று விரும்புகின்றோம்.

சமதர்ம அறிக்கையின் சரித்திரமும் பீடிகையும் :

1847ஆம் வருஷத்தில் இலண்டனில் ஒரு சமதர்ம காங்கிரஸ் நடந்தது. அதற்கு உலகின் பல பாகங்களில் இருந்தும், சமதர்ம உணர்ச்சியுடைய பிரதிநிதிகள் பலர் வந்தார்கள். அக் காங்கிரசில் சமதர்ம இயக்கத்தின் சார்பாக அதன் கொள்கைகளை வெளியிட காரல் மார்க்ஸ், பிரட்ரிக் எஞ்சல்ஸ் ஆகிய இரண்டு ஜெர்மானியப் பிரதிநிதிகளைக் கேட்டுக்கொள்வதாக ஒரு தீர்மானம் செய்து, அத் தீர்மானப்படி அவ்விருவரும் ஜெர்மனி பாஷையில் ஓர் அறிக்கை தயாரித்து 1848ஆம் வருஷம் ஜனவரி மாதத்தில் அச்சுக்குக் கொடுத்தார்கள். ஆனால் அது அச்சிடப்பட்டு வெளியாவதற்கு முன்பே அடுத்த பிப்ரவரி மாதத்தில் பிரான்சு தேசத்தில் ஒரு சமதர்மப் புரட்சி ஏற்பட்டுவிட்டது. அப் புரட்சியின் மத்திய காலமாகிய ஜூன் மாதத்தில் அவ் வறிக்கையை பிரெஞ்சு பாஷையில் மொழி பெயர்த்துப் பரப்பப்பட்டது. அது சமயம் வேலை செய்து ஜீவனம் செய்யும் ஏழை மக்கள் ஏராளமாய் அப் புரட்சியில் கலந்து இருந்தார்கள் என்றாலும் புரட்சியின் பயனாய் ஏற்பட்ட மாறுதல்களால் அவ்வேழை மக்களுக்கு யாதொரு பயனும் ஏற்படவில்லை. ஏழை மக்கள் சுதந்திரமாய், க்ஷேமமாய் வாழ ஆசைப்பட்டு அதற்காகவென்று என்னென்ன முயற்சிகள் செய்யப்பட்டனவோ அவைகளையெல்லாம் அங்குள்ள பணக்காரர்கள் எதிர்த்து நின்று தோற்கடித்துத் தலையெடுக்கவொட்டாமல் செய்துவிட்டார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

அதோடு கூடவே அப்போதைய ஜெர்மன் அரசாங்கத்தாரும் அம் முயற்சிகளை யெல்லாம் அடக்கப் புறப்பட்டு கலோன் பட்டணத்தில் இருந்த சமதர்ம சங்கத்தின் மத்திய நிர்வாக சபை அங்கத்தினர்களைக் கைது செய்து, 18 மாதங்கள் விசாரணை செய்யாமலே ரிமாண்டு கைதிகளாகச் சிறையில் வைத்திருந்தார்கள். கடைசியாக 1852ஆம் வருஷத்தில் அவர்கள் விசாரிக்கப்பட்டு ஏழு பெயர்கள் மூன்று முதல் ஆறு வருஷம் வரை தண்டிக்கப் பட்டார்கள். அதன் பயனாய் சமதர்ம சங்கமே கலைக்கப்பட்டுவிட்டது. சமதர்ம அறிக்கை வினியோகமும் நிறுத்தப்பட்டுவிட்டது.

மறுபடியும் கொஞ்சகாலம் பொறுத்து, வேலை செய்து ஜீவனம் செய்யும் பாமர ஜனங் களுக்குச் சிறிது சிறிதாகத் தைரியம் ஏற்பட்டு 'சர்வதேச வேலையாளர்கள் சங்கம்' என்பதாக ஒன்றை ஸ்தாபித்தார்கள். அதன் மூலமாக மற்றும் பல தேசங்களில் இருந்து வந்ததான சமதர்ம அபிப்பிராயம் கொண்டவர்கள் ஒருவரையொருவர் சந்திக்கவும் தங்கள் அபிப்பிராயங்களைக் கலந்து கொள்ளவும் சந்தர்ப்பம் ஏற்படலாயிற்று. சமதர்மக் கொள்கை முழுவதையும் ஏற்றுக் கொள்வதில் ஆரம்பத்தில் சற்றுத் தயங்கினார்கள். ஆனாலும் நாளடைவில் தைரியம் ஏற்பட்டு அறிக்கையில் கண்ட முழுக் கொள்கைகளையும் ஒப்புக்கொண்டுவிட்டார்கள். அதன் பிறகே இந்த அறிக்கை பல தடவை மீண்டும் மீண்டும் ஜெர்மன் பாஷையிலேயே பிரசுரித்து அய்ரோப்பா, அமெரிக்கா தேசங்களிலெல்லாம் தாராளமாய் வினியோகிக்கப்பட்டது. 1872ஆம் வருஷத்தில்தான் இவ் வறிக்கை முதன் முதலாக ஆங்கில பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டு அமெரிக்காவில் உள்ள ஒரு வாரப் பத்திரிகையின் மூலம் வெளியிடப்பட்டது.

மற்றும் இவ் வறிக்கையை 1863-லும் 1882-லும் ரஷ்யன் பாஷையிலும் மொழி பெயர்த்து ஜினிவாவிலிருந்து அனேக இடங்களுக்கு அனுப்பி வினியோகித்துப் பரப்பப் பட்டது. மேலும், இவ் வறிக்கை 1885ஆம் வருஷத்தில் டேனிஷ் பாஷையிலும் 1886-ல் பிரெஞ்சு பாஷையிலும் புதிய மாதிரியில் 1886ஆம் வருஷத்தில் ஸ்பானிஷ் பாஷையிலும் மொழி பெயர்த்து ஆங்காங்கு பரப்பப்பட்டது. ஜெர்மனி பாஷையில் மாத்திரம் இவ் வறிக்கை 12 பதிப்பும், இங்கிலிஷ் பாஷையில் 3 மாதிரியான மொழி பெயர்ப்பும் செய்யப் பட்டது. ஆர்மீனியன் பாஷையில் ஏற்பட்ட ஒரு மொழி பெயர்ப்பானது, அதன் மொழி பெயர்ப்பாளர் தனது பெயரை வெளியிடப் பயந்ததாலும் பிரசுரித்தவர் அவ் வறிக்கையின் கர்த்தாவான மார்க்ஸ் என்பவருடைய பெயரால் வெளியிடப் பயப்பட்டதாலும் அவ் வறிக்கை வெளிவர முடியாமல் போய்விட்டது. இந்த மேற்கண்ட சரித்திரமே அவ் வறிக்கையின் சரித்திரமாகும்.

உலகில் உள்ள எல்லா தேசத்து வேலையாளர்களுடைய மனோபாவத்தையும் ஒன்று படுத்தி அவர்கள் யாவரையும் ஒரே பொதுக்கூட்டத்தில் சேர்ந்து கலந்து உழைக்கத் தக்க மனோதைரியத்தையும் கொடுத்தது இந்த அறிக்கையேயாகும்.

இவ்வறிக்கை எழுத ஆரம்பித்த காலத்தில் இருந்து இதுவரை உலக நிலைமையில் அதிசயிக்கத் தக்க பல மாறுதல்கள் எவ்வளவுதான் ஏற்பட்டு இருந்தாலும் அவ்வறிக்கையின் தத்துவமானது இன்றைய நிலைமைக்கு மிக்கப் பொருத்தமானதாகவே இருந்து வருவது அவ்வறிக்கையின் விசேஷத்திற்கு ஒரு காரணமாகும்.

சமதர்மவாதிகள் தங்களுடைய வேலைத்திட்டங்களை காலதேச வர்த்தமானத்திற்குத் தகுந்தபடி மாற்றிக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படும் என்பது சரியானாலும் சமதர்மக் கொள்கை என்பதில் எந்தக் காலத்திற்கும் எந்தத் தேசத்திற்கும் இந்த அறிக்கையில் இருந்து சிறிதுகூட மாறுபடவேண்டிய அவசியம் ஏற்படாதபடி இது அமைந்திருக்கின்றது.

அறிக்கை :

உலகத்தில் தோன்றியிருக்கும் ஒரு பூதத்தைக்கண்டு எல்லோருமே பயப்படு கிறார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

அது எப்படிப்பட்ட பூதம் என்றால் அதுதான் 'சமதர்மம்' என்னும் பூதமாகும்.

ஐரோப்பாவிலுள்ள சகல சக்திகளுமே அதாவது, அரசாங்கச் சக்திகள், மதங்களின் சக்திகள் முதலியவைகள் எல்லாமும் ஒன்று சேர்ந்து அந்தப் பூதத்தை விரட்டி ஓட்டப் பார்க்கின்றன.

போப்பைப் போன்ற மத அதிகாரிகளும், ஜாரைப்போன்ற அரசர்களும், பிரபல இராஜதந்திரிகளும், அரசியல் கட்சித் தலைவர்களும், இரகசிய வேவுகாரர்களும் ஆகிய எல்லோருமே ஒன்றுசேர்ந்து இந்தப் பூதத்தை ஒழிக்கப் பகீரதப்பாடு படுகின்றார்கள். எந்த அரசியல் சபையிலும், கவர்ன்மெண்டார் தங்கள் எதிரிகளைச் சமதர்மவாதிகள் என்று வைவதும், எதிர்க் கட்சியார்கள் தங்கள் கட்சியிலிருக்கும் தீவிரவாதிகளையும், பிற்போக்காளர்களையும் சமதர்மவாதிகள் என்று வைவதும், அந்தப் பேச்சையே சொல்லி எந்த எதிரியையும் வைது வாயடக்கப் பார்ப்பதும் சாதாரண வாடிக்கையாகிவிட்டது.

இவைகளில் இருந்து இரண்டு விஷயங்கள் வெளியாகின்றன. அதென்னவென்றால்,

ஒன்று: சமதர்மம் என்பதானது ஒரு பெரிய வலிமையும் ஆதிக்கமும் கொண்டதான ஒரு பெரிய சக்தி என்பதாகச் சகலரும் ஒப்புக்கொண்டு வெளிப்படையாகவே பயப்படுகின்றார்கள் என்பது.

இரண்டு: உலகத்தில் உள்ள எல்லா சமதர்மவாதிகளும் ஒன்றாகச் சேர்ந்து தங்களுடைய உண்மை எண்ணங்களையும் பொதுவான இலட்சியங்களையும் வேலைத் திட்டங்களையும் உலகத்தாருக்கு முன்னால் நன்றாய் விளங்கும்படி வெளிப்படையாய் ஓர் அறிக்கை மூலம் வெளியிட்டு, அதில் உள்ள பயத்தையும் தப்பபிப்பிராயத்தையும் ஒழிக்க வேண்டியது அவசியம் என்பதாகும்.

['குடிஅரசு'-தலையங்கம்—4-10-1931]

## 4. போலி உரிமைகள்

ஈரோட்டில் நிறைவேற்றப்பட்ட நமது இயக்கத்தின் புதிய சமதர்மத் திட்டமானது— மக்களை ஏமாற்றிச் சோம்பேறி வாழ்க்கை நடத்தும் உயர்ந்த சாதிக்காரர்கள் என்போர்களையும், பாடுபடுவோரின் பலனை நோகாமல் அனுபவிக்கும் மிராசுதாரர்கள்–பணக்காரர்கள்–ஜமீன்தாரர்கள்–முதலாளிக் கூட்டத்தார்களையும், சரீரப் பிரயாசை இல்லாமலேயே சூழ்ச்சியாகவே வாழ்க்கையை நடத்தும் படித்த கூட்டத்தாரர்கள் என்பவர்களையும்— இவர்கள் எல்லோருடைய ஆதிக்கத்தையும் நடத்த இடங் கொடுத்திருக்கும் காங்கிரஸ் ஸ்தாபனத்தையும், மற்ற அரசியல் கட்சிகளையும் வேரோடு ஆட்டி அசைத்து—உயிரற்றவைகளாக்க முனைந்து நிற்கும் புரட்சிச் செய்தியை நம் வாசகர்கள் நன்கு அறிவார்கள்.

இதைக் கண்டு பயந்து ஓடினவர்கள் பலர்; குற்றம் சொன்னவர்கள் பலர். என்றாலும், இப்போது அதே கொள்கைகள் இந்தியாவெங்கும் முழங்குவதைக் காண்கிறோம்.

பம்பாயில் 1932-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 23-ந் தேதி ஆரம்பிக்கப்பட்ட 'அகில இந்திய சமதர்மக் கட்சி'யாரின் வேலைத் திட்டம்—'People' என்கிற வாரப் பத்திரிகையில் காணக்கிடக்கிறது. அதோடு, தோழர்கள் ஜீவன்லால் காபூர், பெரோஸ் சண்ட் ஆகியவர்களைத் தலைவராகவும், காரியதரிசியாகவும் கொண்ட காரிய நிர்வாகக் கமிட்டியார் ஆரம்பித்த பஞ்சாப் சமதர்ம (சோஷியலிஸ்டு)க் கட்சியாரின் கொள்கைகளும், வேலைத் திட்ட முறைகளும் நமது பார்வைக்குக் கிடைத்திருக்கின்றன. இச் சங்கத்தின் தலைமை ஸ்தாபனம் லாகூர் லஜபதிராய் ஹாலில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தாபனங்களைத் தவிர, கான்பூர் முதலிய இடங்களிலும் சமதர்ம இலட்சியங்களைப் புகுத்த நல்ல இயக்கங்கள் ஆரம்பிக்கப்பட்டுவிட்டனவென்றும் நமக்குத் தெரியவருகிறது. இவைகள் மிகத் தைரியமாக சமதர்ம இலட்சியத்தை நமது நாட்டில் புகுத்த முயன்றபோதிலுங்கூட,

www.thamizham.net - Free E book No 3041

மிக்க போற்றத் தகுந்த முறையில் அதனுடைய வேலைத் திட்டத்தை இன்னும் அமைத்துக் கொள்ளவில்லை என்றே காணும்பொழுது சிறிது வருத்தப்படாமலிருக்க முடியவில்லை.

ஏனெனில், காங்கிரஸ் ஸ்தாபனத்தை மிக்க பகிரங்கமான முறையில் தாக்க அஞ்சுவதாலும்—அதோடு, மதத்தை மிக உத்வேகத்தோடு கண்டிக்காமல் மறைமுகமாக பூச்சுப் பூசுவதாலும்தான் நமக்கு அதன்மீது சிறிது அதிருப்தி ஏற்படுகிறது. என்றாலும், நம் உலக முற்போக்கில் கலந்துகொள்வதற்கும் புதிய ஆராய்ச்சியின் முறைகளை அனுபவித்து ஜனசமூகம் சந்தோஷமும், சவுகரியமுமடைவதற்கும் தகுந்த முறையில் எல்லாப் பொதுத் தொழிற்சாலைகளையும், உற்பத்தி ஸ்தாபனங்களையும், பாங்கிகளையும் பொதுமக்களின் உரிமைக்காகச் சமதர்மப் படுத்துவதென்பதும்; பிறவி என்பதன் காரணமாகவோ, அல்லது நிறம், வகுப்பு, தேசம் போன்ற போலி உரிமைகளின் காரணங்களினாலோ அனுபவிக்கும் சலுகைகளைத் தகர்த்தெறிவதாலும்—இன்னும் இதுபோன்ற கொள்கைகளாலும் சட்ட பூர்வமான முறையில் அமுல் ஏற்படுத்தி சமதர்ம இலட்சியத்தை நிறுவுவது என்கிற ஆரம்ப வேலையில் முனைந்திருப்பதானது, ஓர் மகிழ்ச்சிக்குரிய விஷயமேயாகும்.

பாடுபட்டும் கூலிக்கு வகையின்றித் தத்தளிக்கும் தொழிலாளர்களுக்கும், தலைமுறை தலைமுறையாய் ஏழையாய் – கூலிக்காரராய் – கஷ்டப்படுவோராய் – துக்கப்படுவோராய் இருக்கும் நம் நாட்டின் பெரும்பகுதியான ஜனசமூக மக்களுக்கு இனி நல்ல சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டதென்றே அவர்களுக்கு அடிக்கடி ஞாபகமூட்டுவதே போன்று, இனியும் நம் நாட்டில் அக்கிரமமான வருணாசிரம தர்மத்தையொத்த-முதலாளி தொழிலாளி என்ற முறையும்; புரோகிதர் ஆட்சியும்; வியாபாரிகள் கொள்ளையும்; ஜமீன்தார்கள், சமஸ்தானாதிபதிகள், அரசர்கள் ஆகியவர்கள் ஆதிக்கமும் அடியோடு—மிக்க சமீப காலத்திலேயே அறவே ஒழிந்துவிடும் என்ற தைரியமும் ஏற்படுகிறது என்று தெரிவித்துக் கொள்கிறோம்.

['குடி அரசு'–கட்டுரை—1[illegible]-7-1933]

## 5. சமதர்ம இயக்கம்

இந்திய தேசிய காங்கிரசும், காந்தீயமும் அழிந்தொழிந்துபோவது என்பது இந்திய ஏழை மக்களுக்கு மாத்திரமல்லாமல், உலக ஏழை மக்கள் இயக்கத்திற்கே, அதாவது சமதர்ம உலகத்திற்கே பெரிய இலாபகரமான காரியமாகும்.

இந்தியாவில் சமதர்மக் கொள்கை என்றைக்காவது ஒரு நாள் ஏற்படும் என்று நினைப்போமேயானால்—அது தேசிய காங்கிரசும் காந்தீயமும் ஒழிந்த நாளாகத்தான் இருக்குமேதவிர அவை ஒழியாமல் ஏற்படாது என்பது உறுதி.

இந்தியாவைவிடப் பலமடங்கு அரசியல் கொடுமையும், பணக்காரக் கொடுமையும், பார்ப்பனீயப் (பாதிரித் தன்மை) கொடுமையும், அநாகரிகக் கொடுமையும் அடிமைத் தன்மைக் கொடுமையும் இருந்துவந்த ரஷியா தேசத்துக்கு சமதர்ம உணர்ச்சி எப்பொழுது ஏற்பட்டது என்று பார்ப்போமேயானால்—அங்கும் டால்ஸ்டாயிசம் என்னும் வைதீகப் பிடுங்கலீசம் (காந்தீயம், ஒழிந்தபிறகுதான் ஏற்பட்டதே ஒழிய வேறில்லை. ரஷிய மகாத்மாவான டால்ஸ்டாய் என்பவரும், தோழர் காந்தியாரைப் போலவே ஏழ்மை வேஷமும், கடவுளைத் தேடும் தொழிலும், கடவுள் அருளுடன் கலந்திருக்கும் தன்மையும் கொண்டவராக இருந்துவந்தார். அவருக்குச் செல்வாக்கு இருக்கும்வரை ரஷிய மக்களுக்கு இந்த உலகவாழ்வு விஷயத்தில் கவலையில்லாமல், 'செத்தபின் வாழும் மேல் உலக வாழ்க்கையிலேயே கவலை உண்டாகும்படியான உணர்ச்சியே வலுத்திருந்தது. ஏழைகளுடைய கஷ்டம் இன்னது, தொழிலாளிகளுடைய கஷ்டம் இன்னது என்று உணராமலும் அனுபவ ஞானமில்லாமலும் ஏழ்மைத் தன்மையையும் உழைப்பையும் சிலாகித்துப் பேசி, மக்களுக்குப் பிரச்சாரம் செய்து வந்தவராவார்.

www.thamizham.net - Free E book No 3041

அப்படிப்பட்ட டால்ஸ்டாயிசம் ஒழிக்கப்பட்ட பிறகுதான் முன் சொன்னபடி மக்களுக்குச் சமதர்ம உணர்ச்சி பரவத் தொடங்கி, நாட்டையும் புரட்சிக்குத் தயாராக்கி முதலாளித் தன்மையையும் பாதிரித் தன்மையையும், ஏகாதிபத்தியத் தன்மையையும் இருந்த இடம்தெரியாமல் செய்து இன்றைய ரஷிய குழந்தைகளுக்கு—'ஒரு காலத்தில் சார் (சக்கரவர்த்தி) என்பவன் இருந்தான்; அவனுக்கு முதலாளி என்ற அடிமைகளும், பாதிரி என்ற தாசர்களும் இருந்தார்கள்' என்று கதை சொல்லும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டது. ஆதலால், அந்த நிலையை இந்தியாவில் ஏற்படக் கூடியதன் அறிகுறியாக இருந்த காங்கிரசும், காந்தீயமும் அழிவதானால் நாம் மகிழ்ச்சியடைய வேண்டுமேயல்லாமல் யாரும் அதற்காகக் கவலைப்படவேண்டியதில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

காந்தீயமும், காங்கிரசும் மறைபட வேண்டியதேற்பட்டதற்குப் பணக்காரர்களும், பார்ப்பனர்களும், படித்துவிட்டு உத்தியோகத்திற்குக் காத்திருக்கும் சோம்பேறிகளும் தான் விசனப்பட வேண்டுமே தவிர, மற்றபடி மனித சமூகத்தினிடம் அன்புகொண்டு சம நோக்குடன் மக்களுக்குச் சேவை செய்ய வேண்டுமென்ற ஆசையுள்ள மக்களுக்கு வேலையில்லாமல் போய்விடுமே என்று எவரும் பயப்பட வேண்டியதில்லை.

அப்படிப்பட்ட சமதர்ம நோக்கமுள்ள உண்மைத் தொண்டர்களை இரண்டு கைகளையும் நீட்டி மண்டியிட்டு வரவேற்கச் சமதர்ம இயக்கம் காத்திருக்கின்றது. அது உலக மக்கள் எல்லோரையும் பொறுத்த இயக்கம்; சாதி, மதம், வருணம், தேசம் என்கின்ற கற்பனை நிலைகளை எல்லாம் தாண்டிய இயக்கம். பிராமணன், க்ஷத்திரியன், சூத்திரன், ஹரிஜனன் என்கின்ற வருணங்களை ஒழித்து 'எல்லோரும் எப்பொழுதும் மனிதரே' என்று கூவும் இயக்கம். ஏழை என்றும் பணக்காரன் என்றும்; முதலாளி என்றும் தொழிலாளி என்றும்; எஜமான் என்றும் கூலி என்றும்; ஜமீன்தாரன் என்றும் குடியானவன் என்றும்—உள்ள சகல வகுப்புக்களையும், வேறுபாடுகளையும் நிர்மூலமாக்கித் தரைமட்டமாக்கும் இயக்கம். மற்றும் குரு என்றும் சிஷ்யன் என்றும்; பாதிரி என்றும் முல்லாவென்றும்; முன் ஜென்மம், பின் ஜென்மம், கர்ம பலன் என்றும்; அடிமையையும், எஜமானனையும், மேல்சாதிக்காரனையும், கீழ்சாதிக்காரனையும், முதலாளியையும், தொழிலாளியையும், ஏழையையும், பணக்காரனையும், குடிகளையும், மகாத்மாவையும் சாதாரண ஆத்மாவையும், அவனுடைய முன் ஜென்ம கர்மத்தின்படி அல்லது ஈஸ்வரன் தன் கடாட்சப்படி உண்டாக்கினான் என்றும் சொல்லப்படும் அயோக்கியத்தனமான சுயநலங் கொண்ட சோம்பேறிகளின் கற்பனைகளையெல்லாம் வெட்டித் தகர்த்துச் சாம்பலாக்கி, எல்லோருக்கும்—எல்லாம் சமம், எல்லாம் பொது என்ற நிலைமை உண்டாக்கும் இயக்கம். சாதி, சமய, தேசச் சண்டையற்று உலக மக்கள் யாவரும் தோழர்கள் என்று சாந்தியும், ஒற்றுமையும் அளிக்கும் இயக்கம்; இன்று உலகமெங்கும் தோன்றித் தாண்டவமாடும் இயக்கம்.

['குடி அரசு'-தலையங்கம்—30-7-1933]

## 6. அல்லாதார்கள் மகாநாடுகள்

தோழர்களே! மொத்த விஸ்தீரணத்தில் மூன்றிலொரு பாகப் பரப்புக்குமேல் ஜமீன் முறை ஆட்சியிலிருக்கும் இந்த சேலம் ஜில்லாவில் முதல் முதலாக இன்று இங்கு ஜமீன்தாரல்லாதார் மகாநாடு ஒன்று கூட்டப்பட்டதானது எனக்கு மிகுதியும் மகிழ்ச்சியைக் கொடுப்பதாகும்.

நாம் உலக பொதுஜனங்களுக்குச் செய்யவேண்டிய வேலைகளின் முக்கியத்துவம் எல்லாம் இம் மாதிரியாகப் பல 'அல்லாதார்கள் மகாநாடுகள்' கூட்டி அவர்களது ஆதிக்கங்களையும் தன்மைகளையும் ஒழிப்பதில்தான் பெரிதும் அடங்கியிருக்கின்றது. இன்னும் இதுபோலவே பல மகாநாடுகள் கூட்டவேண்டி இருக்கிறது. சுயமரியாதை மகாநாடுகள்

www.thamizham.net - Free E book No 3041

கூட்டப்படும் இடங்களில் இம் மாதிரி மகாநாடுகள் அடிக்கடி கூட்டப்படுமென்று எதிர்பார்க்கிறேன். உதாரணமாக, லேவாதேவிக்காரர்கள் அல்லாதார் மகாநாடு, முதலாளிகள் அல்லாதார் மகாநாடு, தொழிற்சாலை சொந்தக்காரர்கள் அல்லாதார் மகாநாடு, வீடுகளின் சொந்தக்காரர் அல்லாதார் மகாநாடு, நிலச்சுவான்தார் அல்லாதார் மகாநாடு, மேல் சாதிக்காரர்கள் அல்லாதார் மகாநாடு, பணக்காரர்கள் அல்லாதார் மகாநாடு என்பதுபோன்ற பல மகாநாடுகள் கூட்டி இவர்களின் அக்கிரமங்களையும், கொடுமைகளையும், மோசங்களையும் பொது ஜனங்களுக்கு விளக்கிக்காட்டி அவைகளை ஒழிக்கச்செய்ய வேண்டியது நமது கடமையாகும்.

உலகில் எந்த எந்த ஸ்தாபனங்களால், எந்த எந்த வகுப்புக் கூட்டங்களால் மனித சமூகத்திற்கு இடைஞ்சல்களும், சமத்துவத்திற்கும் முற்போக்குக்கும் தடைகளும், சாந்திக்கும் சமாதானத்துக்கும் முட்டுக்கட்டைகளும் இருக்கின்றனவோ அவைகளெல்லாம் அழிந்து ஒழிந்து என்றும் தலைதூக்காமலும், இல்லாமலும் போகும்படி செய்யவேண்டியது தான் சுயமரியாதை இயக்கத்தின் முக்கிய இலட்சியமாகும்.

மனித சமூகத்துக்கு உள்ள தரித்திரத்திற்குக் காரணம் செல்வவான்களேயாகும். செல்வவான்கள் இல்லாவிட்டால் தரித்திரவான்களே இருக்கமாட்டார்கள். மேல்வகுப்பார் இல்லாவிட்டால் கீழ்வகுப்பார் இருக்கவேமாட்டார்கள். ஆதலால்தான், இம் மாதிரி அல்லாதவர்கள் மகாநாடு கூட்டவேண்டுகின்றோம்.

இன்று ஏன் முதன்முதலாக ஜமீன்தார் அல்லாதார் மகாநாடு கூட்டினோம் என்றால் இன்றைய உலக ஆதிக்கம் அவர்கள் கையிலேயே இருந்து வருகின்றது. இதற்குமுன் இந்நாட்டு ஆதிக்கம் பார்ப்பனர்கள் கையிலேயே இருந்தது.

அதற்காகவே நமது இயக்கம் பல பார்ப்பனர் அல்லாதார் ஸ்தாபனங்களும், மகாநாடுகளும், வாலிபர் சங்கங்களும் புதிய முறையில் தோற்றுவித்தும், கூட்டுவித்தும் பார்ப்பனக் கொடுமைகளையும், மோசங்களையும் ஒருவாறு பாமரமக்களுக்கு விளக்குவதில் முனைந்து நின்று வேலை செய்ததின் பயனாய் ஓரளவுக்குப் பார்ப்பன ஆதிக்கத்தை ஒழிப்பதில் வெற்றி பெற்றோம். ஆனால், அந்தப் பார்ப்பன ஆதிக்கம் ஒழிந்தது என்கின்ற சந்தோஷத்தை அடைவதற்குள் அதற்குப் பதிலாக அதுபோன்ற கொடுமையும் மோசமுமான ஜமீன்தார் ஆதிக்கம் தலைதூக்கித் தாண்டவமாட ஏற்பட்டுவிட்டது. முன்பிருந்த கெடுதியும் தொல்லையுமே பார்ப்பன ஆதிக்கம் என்னும் பேரால் இல்லாமல் ஜமீன்தார் ஆதிக்கம் என்னும் பேரால் இருந்து வருகின்றன.

பார்ப்பனர்களைப் போலவே ஜமீன்தார்கள் பிறவியின் காரணமாகவே பரம்பரை உயர்வுள்ளவர்கள் என்று சொல்லிக் கொள்ளப்படுபவர்கள். பார்ப்பனர்களைப்போலவே ஜமீன்தார்கள் இன்றைய ஆட்சிமுறைக்குத் தூண்கள் போலவும் இருந்து வருகின்றவர்களாவார்கள். பார்ப்பனர்களைப் போலவே ஜமீன்தார்கள் என்பவர்கள் உலகத்துக்கு வேண்டாதவர்களும், உலக மக்கள் கஷ்டங்களுக்கெல்லாம் காரணமாயிருப்பவர்களுமாவார்கள்.

இந்த ஜமீன்தார்கள் எப்படி ஏற்பட்டார்கள்? எப்படியிருந்து வருகின்றார்கள்? இவர்களது செல்வமும் மேன்மையும் எதற்குப் பயன்படுகின்றன? என்பவைகளை யோசித்துப் பார்த்தால் இவர்கள் உலகுக்கு வேண்டாதவர்கள் என்பதும், ஒழிக்கப்பட வேண்டியவர்கள் என்பதும் நன்றாய் விளங்கும்.

இன்றைய தினம் சாதாரணமாய் ஜமீன்தார்கள் என்றால் என்ன என்று பார்ப்போமானால், ஒரு விஸ்தீரணமுள்ள பிரதேசத்தைச் சொந்தமாக உடையவர்கள் என்றும், அந்த விஸ்தீரணத்திலுள்ள பூமிகளுக்கு உள்ள வரி (கிஸ்தி) இந்த ஜமீன்தார்களுக்கே சேர்ந்தது என்றும் அதில் ஏதோ ஒருபாகம் சர்க்காருக்குச் செலுத்திவிட்டுப் பாக்கியைத் தாங்களே அனுபவிப்பவர்கள் என்றும்தான் அர்த்தமாய் இருந்து வருகின்றது.

www.thamizham.net - Free E book No 3041

பொதுவாக பூமிகளுக்குக் கிஸ்தி, அதாவது நிலவரி கொடுப்பது என்பது எதற்காக் வழக்கத்திலிருந்து வருகின்றது என்றால், பயிரிடும் மக்களின் நன்மைக்கும், பத்திரத்திற்கு மான காரியங்களைச் செய்யவே பயிரில் ஒருபங்கு கொடுக்கப்படுவதாகும். அதுபோலவே, சர்க்கார் வாங்கும் நிலவரிகளுக்கும் மற்றபடியான வரிகளுக்கும் சரியாகவோ, தப்பாகவோ ஒரு வரவு செலவுத்திட்டம் காட்டி, அதன்படி படிப்பு, சுகாதாரம், நீதி, பத்திரம், போக்கு வரவு சாதனம் முதலிய காரியங்களுக்குப் பயன்படுத்தி வருவதாய்ச் சொல்லியும், கணக்குக் காட்டியும் வருகிறார்கள். ஆனால், இந்த ஜமீன்தார்களால் குடிகளிடமிருந்து வாங்கும் நிலவரிக்கும், வாரத்துக்கும் இதுபோல் குடிஜனங்களுக்கு என்ன பிரதிப் பிரயோஜனம் இருந்து வருகின்றது என்பதை நாம் முக்கியமாய்க் கவனிக்கவேண்டும். ஜமீன்தார்கள் தங்கள் வரும்படியில் சர்க்காருக்கு ஏதோ ஒரு சிறு பாகம் கொடுப்பதாய்ச் சொல்லப்படுவ தெல்லாம் குடிகளிடமிருந்து வரியை எப்படியாவது வசூலிப்பதற்கும், ஜமீன்தார்கள் என்ன அக்கிரமம் செய்தாலும் குடிகளால் ஜமீன்தார்களுக்கு ஆபத்து இல்லாமல் இருப்பதற்கும் கூலியாகவே ஒழிய மற்றபடி ஜமீன் குடிகளுடைய நன்மைக்கு என்பதாக எண்ணங் கொண்டல்ல என்பதே எனது அபிப்பிராயம். இந்த ஜமீன்தார்களுக்கு இந்தப் பதவி வந்ததற்குக் காரணம் எல்லாம், ஆதியில் அன்னிய சர்க்கார் இத்தேசத்துக்கு வந்தபோது அவர்களுக்கு வேண்டிய சவுகரியம் செய்து கொடுத்தும், இங்குள்ள எதிர்ப்புகளை அடக்கி ஒடுக்க உதவி செய்ததுமான காட்டிக்கொடுத்த காரியங்களுக்குத்தான் சன்மானமாய் (இலஞ்சமாய்) கொடுக்கப்பட்டதே ஒழிய வேறில்லை.

இப்படிப்பட்ட இந்த ஜமீன்தார்களின் யோக்கியதையை நான் உங்களுக்கு அதிகமாய் சொல்லிக்காட்டவேண்டிய அவசியமில்லை. அவர்களுடைய அருங் குணங்களில் எல்லாம் குடிப்பதும், கூத்திமார்கள் வைப்பதும், பந்தய சூது ஆடுவதும் தலைசிறந்த குணங்களாகும். மேலும், இப்பொழுது சிறிது காலமாய் அதாவது பார்ப்பன ஆதிக்கம் ஒடுங்க ஆரம்பித்த பின்பு அரசியல் தேர்தல்களைப் பணத்தின் மூலம் வியாபார முறையில் நடத்தி வெற்றிபெற்று ஆதிக்கமடைந்து பெருமை அடைவதையும், பணம் சம்பாதிப் பதையும் மற்றொரு அருங் குணமாய்க் கொண்டிருக்கிறார்கள்.

மற்றபடி, இவர்களிடம் என்ன யோக்கியதை இருக்கிறது? இவர்களால் தேசத்துக்கோ மனித சமூகத்துக்கோ என்ன பயன் என்று பார்த்தால் ஒன்றும் இல்லை என்பது தெற்றென விளங்கும். இன்றைய ஜமீன்முறை நாளடைவில் எல்லா பூமியும் அவர்கள் கைக்கே போய்ச் சேரும்படியானதாகவும், எல்லா அதிகாரமும், பதவியும் அவர்கள் கைக்கே போய்ச் சேரும்படியான மாதிரியிலுந்தான் இருந்து வருகின்றது.

ஏனெனில், வரிகொடுக்கமுடியாத பூமிகளும், வரிகொடுக்கவும், செலவுக்கும் வரும்படி போதாமல் இருந்தவரும் குடியானவனுடைய பூமிகள் முழுவதும், பணக்காரர்களாயிருக் கின்ற ஜமீன்தார்களுக்குத்தான் நாளாவட்டத்தில் போய்ச் சேருகின்றதாய் இருக்கிறது. இந்தக் காரணத்தால்தான் ஒவ்வொரு ஜமீன்தார்களுக்கும் இலட்சக்கணக்கான ஏக்கர் பூமிகள் இருந்து வருகின்றன. இதுபோலவே, தேர்தல்களிலும், அது எப்படிப்பட்ட தேர்தலாய் இருந்தாலும் ஜமீன்தார்கள் தாராளமாய் 40,000, 50,000, 1 இலட்சம், 2 இலட்சம் என்கின்ற கணக்கில் ரூபாய்களை வாரி இறைத்து எலக்‌ஷன்களில் வெற்றி பெற்றும், மற்றும் வேறு இடங்களில் வெற்றிபெற்றவர்களுக்கு 1000, 5000 என்கின்ற கணக்கில் ரூபாய்களைக் கொடுத்து அவர்களைத் தங்கள் அடிமையாக்கியும், சகல பதவிகளையும், அதிகாரங்களையும் சுவாதீனப்படுத்திக் கொள்ளவும் முடிகின்றது. இந்த மாதிரி விலை கொடுத்துத் தங்களின் செல்வத்தின் பயனாயும், செல்வாக்கின் பயனாயும் பெற்ற பதவியும் அதிகாரமும், ஆதிக்கமும் எந்த வழியில் உபயோகப்படுத்தினாலும் கேள்வி கேட்பார் இல்லாமல் செலாவணியாகி வருகின்றதைப் பார்க்கின்றோம்.

ஜமீன்தார்களின் நடவடிக்கைகளை நாம் சொல்லித் தெரிந்துகொள்ள வேண்டிய நிலையில் இன்று யாரும் இல்லை என்றே நினைக்கின்றேன். சில ஜமீன்தார்கள் அவர்கள்

www.thamizham.net - Free E book No 3041

எல்லைக்குட்பட்ட விஸ்தீரணத்தில் எந்தப் பெண் ருதுவானாலும் அவர்களேதான் முதலில் சாந்தி முகூர்த்தம் செய்யவேண்டும் என்கின்ற (எழுதாத) சட்டம் அமுலில் இருந்துவருவது எனக்குத் தெரியும். இதில் ஒன்றும் அதிசயம் இருப்பதாக யாரும் நினைக்கவேண்டிய தில்லை. இந்தச் சட்டம் சில மதக் குருக்கள்மாருக்கும் இருந்துவருவது எனக்குத் தெரியும். இது தவிர, தனது குடிஜனங்களிடம் இருந்தும் நல்ல பெண், நல்ல மாடு, குதிரை முதலியவைகள் ஜமீன்தார்களுக்கே சொந்தமானது என்கின்ற முறையும் சில இடங்களில் இருந்துவருவது எனக்குத் தெரியும்.

மற்றும் பல ஜமீன்தார்கள் சுகவாசமும், வெளிநாடு சுற்றுப் பிரயாணமும் 10, 2000 கணக்கான மனைவிகளும், வைப்பாட்டிகளும், ஆயிரம் இரண்டாயிரக்கணக்கான தாசிகள், விபசாரிகள் ஆகியவர்கள் சம்பந்தமும் வைத்துக்கொண்டிருப்பதுடன் 40, 50, 100, 200 குதிரைகளும், 10, 20, 30 மோட்டார் கார்களும் 10, 20 அய்யர்கள் என்று பெயர் வழங்கும் மாமாக்களையும் உடையவர்களாக இருந்துகொண்டு, நெல் மரத்தில் காய்க்கின்றதா? கொடியில் காய்க்கின்றதா? செடியில் காய்க்கின்றதா? என்றுகூடத் தெரியாதவர்களும், வேஷ்டிகள் செடியில் காய்க்கின்றதா? அல்லது, தறியில் நெய்யப்படுகின்றதா? என்று தெரியாதவர்களும் ஏராளமாய் இருக்கிறார்கள். இவர்கள் வாழ்க்கை நிலையை அவர்களது பள்ளிக்கூட வாழ்வில் இருந்தே கவனித்தால் பெரும்பாலும் ஒவ்வொருவர்களுடைய யோக்கியதையும் விளங்கும். சாதாரணமாக, சென்னை மாகாணத்தை எடுத்துக்கொண்டோமேயானால், வருஷமொன்றுக்கு ஜமீன்தார்களுக்குக் குடிகளிடமிருந்து சுமார் இரண்டரைக் கோடி ரூபாய் வரையில் கிஸ்தி (நிலவரி) கிடைக்கின்றது. இதில் அரைக்கோடி ரூபாய் மாத்திரமே இவர்கள் சர்க்காருக்குச் செலுத்திவிட்டு, பாக்கி இரண்டு கோடி ரூபாய்களை இந்த ஜமீன்தார்கள் அனுபவித்து வருகின்றார்கள். இந்த இரண்டு கோடி ரூபாயில் 100-க்கு 90 பாகம் ரூபாய்கள் நான் மேற்குறிப்பிட்ட வழியிலேயே பாழாக்கப்படுகின்றன.

இந்த நிலவரியானது சென்னை அரசாங்கத்தாருக்கு மாகாணம் பூராவிலும் கிடைக்கும் நிலவரிக்கு 3-ல் ஒரு பங்குக்கு மேலானதென்றே சொல்லுவேன். இந்தப்படி விளைவின் பயனாய் உண்டான செல்வம்—அதுவும் எத்தனை ஏழைக் குடியானவன், விவசாயக் கூலிக்காரன் ஆகியவர்கள் பெண்டு பிள்ளைகள் சகிதம் தங்கள் சரீரங்களை தினம் 8 மணி முதல் 15 மணி வரையில் வியர்வையைப் பிழிந்து சொட்டுச் சொட்டாய்ச் சேர்த்த இரத்தத்திற்குச் சமானமான செல்வத்தை, ஒரு கஷ்டமும், ஒரு விவரமும் அறியாதவர்களும், ஒரு பொறுப்பும் இல்லாதவர்களுமான ஜமீன்தார்கள் சர்க்காரில் லைசென்சு பெற்ற கொள்ளைக் கூட்டத்தார்கள்போல் இருந்துகொண்டு மக்கள் பதறப் பதற, வயிறு வாய் எரிய எரிய, கைப்பற்றிப் பாழாக்குவதென்றால் இப்படிப்பட்ட ஒரு கூட்டம் உலகில் இருக்கவேண்டுமா என்றும், இவர்களின் தன்மையையும், ஆதிக்கத்தையும் இன்னும் வைத்துக்கொண்டிருக்கும் ஒரு ஜன சமூகம் சுயமரியாதையை உணர்ந்த ஜன சமூகமாகுமா என்பதைப் பற்றியும் யோசித்துப் பார்க்கும்படி வேண்டிக்கொள்கிறேன்.

சாதாரணமாக, ஜமீன் என்கின்ற மேற்கண்ட தன்மை, நாட்டில் அடியோடு இல்லாமல் இந்த இலாபங்களையும், அதாவது இந்த 2 கோடி ரூபாய்களையும் சர்க்காரே நேராய் அடைவதாய் இருந்தால் அதனால் மக்களுக்கு எவ்வளவு பயன் ஏற்படுத்தலாம் என்பதையும் யோசிக்க வேண்டுகிறேன்.

ஆதலால், மேல்சாதி, கீழ்சாதி முறை கூடாதென்றும், குருக்கள் முறை கூடாதென்றும் எப்படி நாம் பல துறைகளில் வேலை செய்கின்றோமோ அதுபோலவேதான் ஜமீன்தாரன், குடிகள் என்கின்ற தன்மையும், முறையும் கூடாதென்று வேலை செய்ய நாம் கட்டுப்பட்டவர்களாய் இருக்கின்றோம்.

[இராசிபுரத்தில், 20-8-1933-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 27-8-1933]



www.thamizham.net - Free E book No 3041

# 7. சமதர்மப் பிரச்சார உண்மை விளக்கம்

இ. பி. கோ. 124-A செக்ஷன்படி தொடரப்பட்டுள்ள 'பொதுவுடைமைப் பிரச்சாரத் திற்காகவும், 'இராஜ நிந்தனை' என்பதற்காகவுமுள்ள வழக்கு கோவையில் 12-ஆம் தேதி ஆரம்பிக்கப்பட்டபோது தோழர் ஈ. வெ. இராமசாமி அவர்கள் கோவை ஜில்லா கலெக்டர் G.W. வெல்ஸ் I.C.S. அவர்கள் முன் தாக்கல் செய்த ஸ்டேட்மெண்ட்.

1. என் பேரில் இப்போது கொண்டு வரப்பட்டிருக்கும் வழக்குக்கு ஆதாரமே கிடையாது.

2. வழக்குக்கு அஸ்திவாரமான 29-10-1933-ந் தேதி 'குடி அரசி'ன் தலையங்கத்தை இப்போது பலதரம் படித்துப் பார்த்தேன்; அதை நான் எழுதினேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன்.

3. அதில் எழுதப்பட்டிருக்கும் விஷயங்களுக்காவது, வாக்கியங்களுக்காவது, இராஜதுவேஷக் குற்றம் சாட்டப்படுமானால் இன்றைய அரசாங்கமுறை முதலியவைகளைப் பற்றி ஆராய்ச்சிசெய்து குறைகளை எடுத்துச் சொல்லவோ, அவற்றால் மக்களுக்கு ஏற்படக் கூடிய கஷ்டங்களை விலக்கப் பரிகாரம் தேட ஏற்பாடு செய்யவோ யாருக்கும் சுதந்திரம் கிடையாது என்றுதான் முடிவு செய்யப்பட்டதாகும்.

4. என்ன காரணத்தைக் கொண்டு என்மேல் ஆதாரமற்ற இந்தப் பிராது தொடரப் பட்டிருக்கிறது என்று யோசித்துப் பார்த்தால், என்னுடைய சமதர்ம பிரச்சாரத்தை நிறுத்தி விடச் செய்வதற்காக முதலாளி வர்க்கமோ அல்லது மத சம்பிரதாயக்காரர்களோ செய்த சூழ்ச்சியாக இருக்கவேண்டு மென்ற முடிவுக்குத்தான் வரவேண்டியிருக்கிறது. வியாசத்தின் விஷயத்திலாவது பதங்களிலாவது, நோக்கத்திலாவது சாட்டப்பட்ட குற்றத்தின் அமைப்பே கிடையாது.

5. முக்கியமாய் அதில் சொல்லப்பட்ட விஷயம் எல்லாம்—கல்வி இலாக்காவின் சம்பளங்கள் அதிகமென்றும், பிள்ளைகளுக்குக் கல்விச் செலவு அதிகமென்றும், அதற்கேற்ற பயன் விளைவதில்லை என்றும், ஏழைகளுக்குக் கல்வி பரவ சவுகரியம் இல்லை என்றும் இப்படிப்பட்ட முறையால் இலாபம் பெறும் பணக்காரர்களும், அதிகார வர்க்கத்தாரும், உத்தியோகஸ்தர்களும் சொல்லுவதைக் கேட்டு ஏமாந்துபோகாமல், வரப்போகும் (சீர்திருத்த) எலெக்ஷன்களில் ஜாக்கிரதையாய் நடந்துகொள்ள வேண்டுமென்று ஏழைப் பொது ஜனங்களுக்கு எடுத்துக்காட்டியதேயாகும்.

6. நான் 7, 8 வருஷகாலமாய்ச் சுயமரியாதை இயக்க சமதர்ம பிரச்சாரம் செய்து வருகிறேன். சமூக வாழ்விலும், பொருளாதாரத்திலும் மக்கள் யாவரும் சமத்துவமாய் வாழ வேண்டு மென்பது அப் பிரச்சாரத்தின் முக்கிய தத்துவமாகும்.

7. நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களை நாட்டு மக்கள் யாவரும் சமமாய் அனுபவிக்கவேண்டுமென்பதும் அவ்வுற்பத்திக்காகச் செய்யப்படவேண்டிய தொழில்களில் நாட்டு மக்கள் எல்லோரும் சக்திக்குத் தக்கப்படி பாடுபடவேண்டு மென்பதும் அதி தத்து வத்தின் கருத்தாகும்.

8. அவ்வியக்க இலட்சியத்திலோ, வேலைத் திட்டத்திலோ, பிரச்சாரத்திலோ அதற் காக நடைபெறும் 'குடி அரசு'ப் பத்திரிகையிலோ பலாத்காரம், துவேஷம், இம்சை இடம் பெற்றிருக்கவில்லை. எந்த விதத்திலாவது அவை நமது நாட்டில் இடம்பெறுவது என்பதும் எனக்கு இஷ்டமான காரியம் அன்று.

9. இதற்கு அத்தாட்சி வேண்டுமானால், பல வருஷங்களாக இரகசியப் போலீஸ் இலாக்கா சுருக்கெழுத்து அறிக்கைக்காரர்கள் எனது பிரசங்கத்தை விடாமல் குறித்து வைத்திருக்கும் அறிக்கைகளையும் சுமார் 10 வருஷத்திய 'குடி அரசு'ப் பத்திரிகையின்

www.thamizham.net - Free E book No 3041

வியாசங்களையும் சர்க்கார் கவனித்துவந்தும் என்மேல் இத்தகைய வழக்கு இதற்குமுன் ஏற்படுத்தியதில்லை என்பதே போதும்.

10. அரசாங்கமானது முதலாளித்தன்மை கொண்டதாய் இருப்பதால் அது இத்தகைய சமதர்ம பிரச்சாரம் செய்யும் என்னையும் எப்படியாவது அடக்கவேண்டுமென்று முயற்சி எடுத்துக்கொண்டிருப்பதில் அதிசயமில்லை. தற்கால அரசாங்க ஆட்சியில் பங்கு பெற்று போகபோக்கியமும், பதவியும், அதிகாரமும் அடைந்துவரும் பணக்காரர்களும் மற்றும் மதம், சாதி, படிப்பு என்கிற சலுகைகளைக் கொண்டு முதலாளிகளைப் போலவே வாழ்க்கை நடத்துகின்றவர்களும் இப்படிப்பட்ட அரசாங்கத்திற்கு நேர்முகமாகவும், மறை முகமாகவும் உதவி செய்து தீரவேண்டியவர்களாய் இருப்பதால் அவர்களும் இம் முயற்சிக்கு அனுகூலமாய் இருப்பதிலும் அதிசயமில்லை.

11. பல நூற்றாண்டுகளாக உலக வாழ்க்கையில் கடவுள் செயல் என்றும், இயற்கை என்றும் கருதும்படியாகச் செய்து நிலைநிறுத்தப்பட்டு நடைபெற்றுவரும் சமூக அமைப்பையும், பொருளாதார முறையையும் மாற்றுவது என்பது சிலருக்கு இஷ்டப்படாத காரியமாய் இருந்தாலும்–அவற்றை மாற்றி அமைத்தாலொழிய மக்கள் வாழ்க்கையிலுள்ள அனேக கஷ்டங்களும், குறைகளும் நிவர்த்தியாகி சவுக்கியமாகவும் திருப்தியாகவும் வாழ முடியாதென்பது எனது உறுதி.

12. இப்படிப்பட்ட ஒரு மாறுதல் உண்டாக ஆசைப்படுவதும் அதற்காக பலாத்காரம், துவேஷம், இம்சை ஆகியவைகள் இல்லாமல் பிரச்சாரம் செய்வதும் குற்றமாகாது.

13. ஏதாவது ஒரு கொள்கைக்குப் பிரச்சாரம் பரவ வேண்டுமானால் அக் கொள்கையில் நம்பிக்கை கொண்டவர்கள் அக் கொள்கைக்கு இடையூறு செய்பவர்களால் அடக்குமுறைக்கு ஆளாகவேண்டியதும் அவசியமேயாகும். அதற்காக நாமே வலுவில் போய்க் கஷ்டத்தைக் கோரி எடுத்துக்கொள்ளக்கூடாது; என்றாலும் தானாகவே ஏற்பட்ட ஒரு நல்ல சந்தர்ப்பத்தை யாரும் இழந்துவிடக்கூடாது. இந்தப் பிரச்சாரத்தைத் தடுக்க வேண்டுமென்று கருதி இந்த வழக்கைக் கொண்டுவந்திருக்கிறார்கள். ஆதலால், அவர்கள் எப்படியாவது எனது வியாசத்தில் துவேஷம், வெறுப்பு, பலாத்காரம் முதலியவைகள் இருப்பதாகக் கற்பனை செய்துதீரவேண்டியவர்கள் ஆகிவிட்டார்கள். அந்தப்படி செய்யப் படும் கற்பனைகளால் நான் தண்டிக்கப்பட்டாலும்—பொதுவாக என்மீது நம்பிக்கையும் நல்லெண்ணமும் உடையவர்களும், சிறப்பாக எனது கூட்டு வேலைக்காரத் தோழர்களும், தப்பான அபிப்பிராயம் கொள்ளக்கூடுமாதலால் அப்படிப்பட்ட கற்பனைகளை மறுத்து உண்மையை விளக்கிவிடவேண்டுமென்றே இந்த ஸ்டேட்மெண்டைக் கொடுக்கக் கடமைப் பட்டவனானேன்.

14. இதனால் பொதுஜனங்களுடைய கவனிப்பு இன்னும் அதிகமாவதோடு அவர்களது ஆதரவும் பெற நேர்ந்து கிளர்ச்சிக்குப் பலமேற்படக் கூடுமாதலால் என்மீது சுமத்தப்பட்ட இந்த வழக்கில் ஒரு ஸ்டேட்மெண்டை மாத்திரம் கொடுத்துவிட்டு, எதிர் வழக் காடாமல் இப்போது கிடைக்கப்போகும் தண்டனையை மகிழ்ச்சியோடு வரவேற்கின்றேன்.

15. இந்நிலையில் சர்க்கார் என்னைத் தண்டித்தாலும் சரி, அல்லது இந்தப் பிராதுக்குப் போதிய ஆதாரமில்லை என்று நியாயத்தையும் சட்டத்தையும் இலட்சியம் செய்து வழக்கைத் தள்ளிவிட்டாலும் சரி, இப்படிப்பட்ட அடக்குமுறையை வரவேற்குமாறு எனது தோழர்களுக்கு வழிகாட்ட எனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தைப் பற்றி மகிழ்ச்சி யடைகின்றேன்.

[12-1-1934-ல், கோவை ஜில்லா கலெக்டர்முன் தாக்கல் செய்த ஸ்டேட்மெண்ட்—'புரட்சி' 21-1-1934]

www.thamizham.net - Free E book No 3041

# 8. சமதர்ம எண்ண வளர்ச்சி

தலைவரவர்களே! தோழர்களே!

'குடி அரசு'ப் பத்திரிக்கையில் என்னால் எழுதப்பட்ட ஒரு சாதாரணமானதும், சப்பையானதுமான வியாசத்திற்காகத்தான் நான் சிறைக்குப் போக நேரிட்டதே தவிர, மற்றபடி செல்லத்தக்க ஒரு சரியான காரியம் செய்துவிட்டுச் சிறைக்குப் போகவில்லை. சர்க்கார் இந்த 'குடி அரசு'ப் பத்திரிகையின் பழைய இதழ்களைப் புரட்டிப் பார்த்தால் என்னை வருடக்கணக்காய்த் தண்டிக்கக்கூடியதும், நாடு கடத்தக்கூடியதுமான வியாசங்கள் நூற்றுக்கணக்காகத் தென்படலாம். ஆனால், அவர்கள் அந்தக் காலங்களிலெல்லாம் கவனித்ததாக எனக்குத் தெரியவில்லை. அவர்கள் ஏன் கவனிக்கவில்லை என்பதை இப்போது நான் கவனித்துப் பார்த்தால், காங்கிரஸிற்குப் பாமர மக்களிடம் இருந்த செல்வாக்கின் பயனாய் நமது வியாசங்களைப் பொதுஜனங்கள் இலட்சியம் செய்யமாட்டார்கள் என்கின்ற தைரியத்தால் சர்க்கார் அப்பொழுது சும்மா இருந்தார்கள் என்று தோன்றுகிறது.

ஆனால், இப்பொழுது இப்படிப்பட்ட சிறிய வியாசங்களையும் கண்டு இவ்வளவு வல்லமை பொருந்திய சர்க்கார் பயப்படும்படியான நிலைமை ஏற்பட்டுவிட்டது என்பது நன்றாய்த் தெரிகிறது.

இதிலிருந்து நாம் என்ன நினைக்கவேண்டியிருக்கிறது என்றால், நமது அபிப்பிராயத்தை மக்கள் மதிக்க ஆரம்பித்துவிட்டார்கள் என்றும், சுயமரியாதைக் கொள்கையை ஜனங்கள் ஆதரிக்கிறார்கள் என்றும் சர்க்கார் இப்போது உணர்வதாகத் தெரிகிறது. அன்றியும், மற்றும் பல புதிய புதிய தீவிரக் கொள்கைகளையும் ஜனங்கள் வரவேற்கிறார்கள் என்றும் தெரிகிறது.

இதுவரை நமதுநாட்டில் இருந்துவந்த அபிப்பிராயங்கள் எல்லாம் வெள்ளைக்காரர்களுக்கு இந்நாட்டில் என்ன வேலை? அவர்களுக்கு ஏன் ஆயிரக்கணக்கான ரூபாய் சம்பளம்? கறுப்பு மனிதனுக்கு ஏன் நூற்றுக்கணக்கான-பத்துக்கணக்கான ரூபாய்கள் சம்பளம்? அவர்களுக்கு ஏன் பெரிய அதிகாரம்? நமக்கு ஏன் சின்ன அதிகாரம்? என்பன போன்ற பிரச்சினைகளே தேசியம் என்னும் பேரால் முக்கியமாக இருந்துவந்தன. இதன் பயனாய் அரசாங்கத்தார்களும் இங்குள்ள பணக்காரர், படித்தவர், மேல்சாதிக்காரர் ஆகிய ஒருசிறு கூட்டத்தாருக்கு மாத்திரம் ஏதாவது வாய்பூசி மக்களின் 'தேசிய அபிலாஷைகளை'த் திருப்தி செய்துவந்துகொண்டும் இருந்ததால் பாமர மக்களின் எண்ணம், உணர்ச்சி, ஊக்கம் எல்லாம் அதிலேயே ஈடுபட்டுக்கிடந்தன. ஆனால், இப்பொழுதோ நாட்டில் வரவர அந்த எண்ணங்கள் மறையத் தொடங்கிவிட்டன. அவை வேறுவிதமாகப் பரிணமிக்க ஆரம்பித்து விட்டன.

எப்படியென்றால், வெள்ளையனுக்கு ஏன் 1000, 5000 ரூபாய் சம்பளங்கள்? கறுப்பனுக்கு ஏன் 100, 50, 10, 5 ரூபாய் வீதம் சம்பளம் என்பது போய்—மனித சமூகத்தில் யாராயிருந்தாலும் ஒருவனுக்கு ஏன் 5000, 10000 ரூபாய் சம்பளம்? மற்றவனுக்கு ஏன் 5 ரூபாய், 10 ரூபாய் சம்பளம்? என்கின்ற உணர்ச்சி தோன்றி எல்லா மக்களும், சாதி, மதம், தேசம் என்கின்ற பேதமும் பிரிவுமில்லாமல் சகலரும் சமமாய்ப் பாடுபடவேண்டும், பயனைச் சமமாய் அடையவேண்டும் என்கிறதான ஒரு சமதர்ம உணர்ச்சியில் திரும்பிவிட்டது. இந்த நிலைமையானது ஆட்சிக்காரருக்கு மாத்திரமோ அல்லது அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு மாத்திரமோ விரோதமானதென்றோ, அடக்கிவிட வேண்டியதென்றோ தோன்றாமல் நம் நாட்டிலுள்ள எல்லாப் பணக்காரர்களுக்கும் எல்லா மேல் சாதிக்காரர்களுக்கும் (அதாவது பாடுபடாமல் வயிறு வளர்க்கவும் போகபோக்கியம் அனுபவிக்கவும் கருதும் மக்களுக்கும்) படித்தவர்கள் என்கின்ற கூட்டத்திற்கும் தோன்றிவிட்டதுடன், இவர்களால் வாழ்ந்துவந்த மதப் புரோகிதர்கள் என்பவர்களுக்கும் தோன்றிவிட்டது. ஆதலால், இந்தக் கூட்டத்தார்கள்

www.thamizham.net - Free E book No 3041

எல்லோருமே அக் கொள்கைக்கு எதிரிகளாய் இருப்பதில் நான் அதிசயப்படவில்லை என்பதோடு, இதற்காக நான் ஜெயிலுக்குப் போக நேரிட்டதிலும் அதிசயமில்லை.

[ஈரோட்டில், 17-5-1934-ல் சொற்பொழிவு—'புரட்சி' 20-5-1934]

## 9. ஏழைகள் துயரம் நீங்க

தலைவரவர்களே! தோழர்களே!

இந்தத் தேசத்தில் ஏற்பட்டிருக்கும் ஜனசமூக அமைப்பின் அஸ்திவாரமே சரியாய் இல்லாமல் இருக்கிறது. இந்த அஸ்திவாரத்தின்மீது கட்டக்கூடிய எந்த அமைப்பும் ஜன சமூகத்திற்கு நன்மையளிக்கக் கூடியதல்ல.

ஒரு தகப்பன் வயிற்றில் பிறந்த பிள்ளைகளுக்கு எப்படிச் சம அந்தஸ்தும் சம உரிமையும் உண்டோ, அப்படியே ஒரு தேசத்தில் பிறந்தவர்களுக்கும் இருக்கவேண்டியது அவசியமாகும். அப்போதுதான் மக்கள் சுகமாக வாழமுடியும். ஏதோ—தான் பிறந்த வேளையின் பலன் கஷ்டத்தை அனுபவிக்கவேண்டியதுதான்; மற்றொருவன் சுகத்தை அனுபவிக்கப் பாத்தியதை உடையவன்தான் என்னும் சோம்பேறி எண்ணமே மக்களை அழித்து வருவதற்கு முக்கிய கருவியாய் இருக்கிறது. இந்த எண்ணம் மாறுபடவேண்டியது அவசியமாகும். இதற்காக எவ்வளவு தியாகம் செய்தாலும் அது வீணாகாது. ஜனங்களின் மனோபாவமும், வாழ்க்கையை நடத்தும் முறையும் மாறினாலொழிய, வேறு ஒரு முறை யாலும் நன்மை உண்டாகாதென்பது திண்ணம்.

தற்போதிருக்கும் நிலைமையில் சுயராஜ்யம் வந்தால்—குருட்டு நம்பிக்கையும், வைதிகமும்தான் வலுக்கும். தற்போது சுயராஜ்யம் அனுபவிக்கும் தேசங்களை எடுத்துக் கொள்ளுங்கள். ஏழைகள் நிலைமை அங்கே எப்படி இருக்கிறது? அமெரிக்கா ஜனநாயக ஆட்சியுடையதாகத்தான் இருக்கிறது. அங்கே இலட்சக்கணக்கானவர்கள் வேலையில்லாமல் திண்டாடுகின்றார்கள். அமெரிக்கா உலகில் செல்வத்திற்கே இருப்பிடமாயிருந்தும் அங்கே ஏழைகள் நிற்க நிழலின்றி, உறங்க இடமின்றித் தவிக்கிறார்கள். ஜெர்மனியின் நிலைமை இன்று எவ்விதமாக இருக்கிறதென்பது அனைவருக்கும் தெரிந்த விஷயமே. சூரியனே அஸ்தமிக்காத சாம்ராஜ்யத்தை உடையதென்று சொல்லும் இங்கிலாந்தும் சுயராஜ்ய தேசமேயாகும். உலகத்தில் பல நாடுகள் இங்கிலாந்தின் ஆளுகைக்குட்பட்டிருக்கின்றன. ஆனால், அங்கு ஏழைகள் படும் துயரம் கொஞ்ச நஞ்சமல்ல.

சுயராஜ்யமுள்ள ஒவ்வொரு தேசமும் இப்படித்தான் இருக்கிறது. சுயராஜ்யமோ, அன்னிய ராஜ்யமோ, குடியரசோ, முடிஅரசோ எந்தவிதமான முறையிலும் மக்கள் சுகம்பெற முடியாத நிலைமையில் உலகம் இன்று இருந்து வருகிறது.

ஆகையால், ஏழைகள் துயரத்தைப் போக்க இந்திய சுயராஜ்யம்–இப்போது சிலரால் கருதப்படும் முறையில் யாதொரு நன்மையும் கொடுக்கப் போவதில்லை என்பது நிச்சயம். சமதர்மத்தையும், பொது உடைமையையும் அஸ்திவாரமாகக் கொண்ட இராஜாங்க அமைப் பொன்றே மக்கள் சுகவாழ்க்கைக்குரிய வழியாகும். இதற்காக ஏன் நாம் தியாகம் செய்யத் தயாராயிருக்கக் கூடாதென்று கேட்கிறேன்.

உலகத்தில் பலவகையில் ஜீவராசிகள் மரணமடைகின்றன. பல நோய்களால் இறக்கிறவர்களின் தொகை சாதாரணமல்ல. மதத்தின் பெயரால் யாதொரு விவேகமு மில்லாமல் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொண்டு உயிரை மாய்த்துக் கொள்ளு கிறார்கள். இன்னும் பலவழிகளில் மரணமடையும்போது—மக்களின் உன்னத வாழ்க்கை அமைப்பை உத்தேசித்துச் சிலரோ, பலரோ உயிரைத் தியாகம் செய்வதுகூட பெரிய காரிய மாகுமோ என்று கேட்கிறேன். மனிதனுக்கு மனிதன் எதற்காக வித்தியாசங்கள் காண் பிக்கப்பட வேண்டும்? அறிவுள்ள எவரும் இனி இந் நிலைமையைச் சகித்துக்கொண்டு

www.thamizham.net - Free E book No 3041

ஒரு க்ஷணமாவது வாழமுடியாது. பலாத்காரம் கூடாது. இம் முறைகளை மாற்ற பலாத்காரம் ஒருபொழுதும் வெற்றியடைய முடியாது. பலாத்காரம் பலாத்காரத்தையே பெருக்கும்; உண்மை மறைந்துவிடும். ஆகையால், ஜனங்களுடைய மனதை மாற்றப் பாடுபடவேண்டியதுதான் முறையே ஒழிய, பலாத்காரத்தினால் சாதித்துவிடலாமென்று எண்ணுவது மனித இயற்கைக்கு விரோதமான தத்துவமாகும். இந்தத் தேசத்தில் முன்னேற்றமுள்ளவர்கள் ஒன்று, பிற்போக்கானவர்கள் மற்றொன்றாக இரண்டு கட்சிகளே இருக்கமுடியும். இப்படிப் பிரிக்கப்பட்டாலொழிய மக்கள் அபிவிருத்தியடைய மார்க்க மில்லை. நமது மக்களுக்கு விஷயத்தை அறியக்கூடிய பகுத்தறிவு விருத்தியடைந்தா லொழிய மற்றெந்த இராஜீய முறையாலும் ஒரு நன்மையும் விளைந்துவிடப் போவதில்லை.

[கும்பகோணத்தில், 8-7-1934-ல் சொற்பொழிவு—'பகுத்தறிவு' 9-9-1934]

## 10. வேலைத் திட்டம்

1. அரசாங்க உத்தியோக சம்பளங்கள் மக்களின் பரிசுத்தத் தன்மையைக் கெடுக்கக்கூடியதாகவும், பேராசையை உண்டாக்கக் கூடியதாகவும், இந்தியப் பொருளாதார நிலைமைக்கு மிகமிகத் தாங்கமுடியாததாகவும் இருப்பதால் அவைகளைக் குறைத்து, உத்தியோகஸ்தர்களுடைய வாழ்க்கையின் அவசிய அளவுக்கு ஏற்றதாகவும் மீத்துப் பெருக்கிவைப்பதற்கு இலாயக்கில்லாததாகவும் இருக்கும்படி செய்யவேண்டும்.

2. பொதுஜன தேவைக்கும், சவுகரியத்துக்கும், நன்மைக்கும் அவசியமென்று உற்பத்தி செய்யப்படும் சாமான்களின் தொழிற்சாலைகள், இயந்திரசாலைகள், போக்கு வரவு சாதனங்கள் முதலியவை அரசாங்கத்தாராலேயே நடைபெறும்படி செய்யவேண்டும்.

3. ஆகார சாமான்கள் உற்பத்தி செய்யும் விவசாயிகளுக்கும், அவற்றை வாங்கி உபயோகிக்கும் பொதுஜனங்களுக்கும் மத்தியில் தரகர்கள், லேவாதேவிக்காரர்கள் இல்லாதபடி கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஏற்படுத்தி அதன் மூலம் விவசாயிகளின் கஷ்டத்தையும் சாமான் வாங்குபவர்களின் நஷ்டத்தையும் ஒழிக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

4. விவசாயிகளுக்கு இன்றுள்ள கடன்களை ஏதாவது ஒருவழியில் தீர்ப்பதுடன் இனிமேல் அவர்களுக்குக் கடன் தொல்லைகள் ஏற்படாமல் இருக்கும்படியும் ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

5. குறிப்பிட்ட ஒரு காலத்திற்குள், ஒரு குறிப்பிட்ட அளவு கல்வியாவது எல்லா மக்களுக்கும் ஏற்படும்படியாகவும், ஒரு அளவுக்காவது மதுபானத்தின் கெடுதி ஒழியும்படி யாகவும், ஒரு அளவுக்கு உத்தியோகங்கள் எல்லா சாதி-மதக்காரர்களுக்கும் சரிசமமாய் இருக்கும்படிக்கும் உடனே ஏற்பாடுகள் செய்வதுடன், இவை நடந்துவருகின்றதா என்பதையும் அடிக்கடி கவனித்துத் தக்கது செய்ய ஏற்பாடு செய்யவேண்டும்.

6. மதங்கள் என்பவைகள் எல்லாம் அவரவர்களுடைய தனி எண்ணமாகவும் தனி ஸ்தாபனங்களாகவுமே இருக்கும்படி செய்வதுடன், அரசியலில்—அரசியல் நிர்வாகத்தில் அவை எவ்வித சம்பந்தமும், குறிப்பும் பெறாமல் இருக்கவேண்டும். சாதிக்கென்றோ, மதத்திற்கென்றோ எவ்விதச் சலுகையோ, உயர்வு-தாழ்வு அந்தஸ்தோ, அவற்றிற்காக அரசாங்கத்திலிருந்து தனிப்பட்ட முறைகளைக் கையாடுவதோ, ஏதாவது பொருள் செலவிடுவதோ ஆகியவை கண்டிப்பாய் இருக்கக்கூடாது.

7. கூடியவரை ஒரு குறிப்பிட்ட ரொக்க வரும்படிக்காரருக்கோ அல்லது தானே விவசாயம் செய்யும் விவசாயிக்கோ வரிப் பளுவே இல்லாமலும், மனித வாழ்க்கைக்குச் சராசரி தேவையான அளவுக்குமேல் வரும்படி உள்ளவர்களுக்கும், அன்னியரால் விவசாயம் செய்யப்படுவதன் மூலம் பயனடைபவர்களுக்கும் வருமானவரி முறை போல் நிலவரி விகிதங்கள் ஏற்படுத்தப்படவேண்டும்.

www.thamizham.net - Free E book No 3041

8. லோக்கல் போர்டு, முனிசிபாலிட்டி, கோவாப்பரேட்டிவ் இலாக்கா ஆகியவை களுக்கு இன்னமும் அதிகமான அதிகாரங்கள் கொடுக்கப்பட்டு, இவற்றின் மூலம் மேலே குறிப்பிட்ட பல காரியங்கள் நிர்வாகம் செய்ய வசதிகள்செய்து, தக்க பொறுப்பும் நாணயமும் உள்ள சம்பள அதிகாரிகளைக்கொண்டு அவைகளை நிர்வாகம் செய்யச் செய்யவேண்டும்.

9. விவகாரங்களையும், சட்டச் சிக்கல்களையும் குறைப்பதுடன் சாவுவரி விதிக்கப் படவேண்டும்.

10. மேலே கண்ட இந்தக் காரியங்கள் நடைபெறச் செய்வதில் நாமே சட்டங்கள் செய்து, அச் சட்டங்களினால் அமுலில் கொண்டுவரக் கூடியவைகளைச் சட்டசபைகள் மூலமும், அந்தப்படி சட்டங்கள் செய்துகொள்ள அதிகாரங்கள் இல்லாதவைகளைக் கிளர்ச்சி செய்து அதிகாரங்கள் பெறவும் ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

[29, 30-9-1934-ல் நடந்த சென்னை தென்னிந்திய நல உரிமைச் சங்க மாநாட்டிற்கு அனுப்பிய வேலைத் திட்டம்—' பகுத்தறிவு' 23-9-1934]

## 11. இலட்சியம்

தலைவரவர்களே! பெரியோர்களே!

நான், மனிதபேதம் ஒழிய வேண்டுமானால் மதம் ஒழியவேண்டும் என்கின்றேன்— அன்றியும் மதம் ஒழிந்த இடத்தில்தான் மனிதன் பிறப்பு பேதம் புதைக்கப்படுகின்றது.

அதுபோலதான், பொருளாதார ஏழ்மை, செல்வ பேதம் ஒழிய வேண்டுமானால் அவைகளின் உற்பத்தி ஸ்தானம், அதாவது தோன்றுமிடமும், காப்பு இடமும் ஒழிக்கப் படவேண்டும். ஏழ்மைக்கும் செல்வத்திற்கும் கர்த்தாவும், காவலும் கடவுளாய் இருக்கிறது. அப்படிப்பட்ட கடவுளைக் காப்பாற்றிக்கொண்டு, அல்லது அக் கடவுள் ஆணைக்கு அடங் கினவனாய் இருந்து கொண்டு, கடவுள் தன்மையை—செயலை—கட்டளையை நீ எப்படி மீற, சமாளிக்க, தாண்ட முடியும் என்று சிந்தித்துப் பார். அதனால்தான் மனித சமுதாய சமத்துவத்திற்கு மதம் ஒழிக்கப்பட வேண்டியது எப்படி அவசியமோ, அதுபோல் பொருளாதார சமத்துவத்திற்கும், அதாவது பொருளாதார சமத்துவம் வேண்டுமானால் பொருளாதார பேதத்துக்கும் பேதத் தன்மைக் காப்புக்கும் ஆதாரமாய் இருக்கின்ற கடவுள் தன்மை ஒழிக்கப்பட வேண்டியது அவசியமாகும்.

இது சமுதாய–பொருளாதார சமத்துவக்காரருக்கு A.B.C.D. படிப்பாகும். இதை எந்தச் சமுதாய சமத்துவ வாதியாவது, பொருளாதார சமத்துவ வாதியாவது பேசுகிறார் களா, சிந்திக்கிறார்களா என்று பாருங்கள். ஏன் சிந்திப்பதில்லை என்றால், இந்தத் துறையில் இன்று பாடுபடுகின்றவர்களாய்க் காண்பவர்கள் பெரிதும் பொருளாதாரத்திலும், சமுதாயத் திலும் நல்ல நிலையில், நல்வாழ்க்கையில் இருக்கும் ஆட்களேயாவார்கள். எலிகள் நலத் துக்குப் பூனைகள் பாடுபடுவதுபோல், சமுதாயத்தில் உயர்நிலையில் இருக்கும் பார்ப்பனர் களும், பொருளாதாரத்தில் சவுக்கியமாய் இருக்கும் பிள்ளைகளும் அவர்கள் வாழ்வு நலத்திற்கும் சுகத்திற்கும் உங்கள் பெயர்களைச் சொல்லிக்கொண்டு வாழ்கிறார்கள்.

கடவுளையும் மதத்தையும் ஒழிக்கத் தயாராக இல்லாதவனை உங்கள் கூட்டத்திற்குள் விடாதீர்கள். உங்கள் இளிச்சவாய்த்தனத்தினால் பொருளாதார சமுதாயப் பெயர்களைச் சொல்லிக்கொண்டு உங்களை ஏய்த்து வாழ்க்கை நடத்துகிறார்கள்.

[பெரம்பூரில், 4-3-1945-ல் சொற்பொழிவு–' குடிஅரசு '—10-3-1945]

www.thamizham.net - Free E book No 3041

சமதர்மம் என்பது என்ன ?

(1) இது ஒரு சமுதாய அமைப்புத் திட்டம் ;

(2) இது தனிப்பட்ட இனத்திற்கோ, சாதிக்கோ, வகுப்புக்கோ மாத்திரம் ஏற்றதல்ல ;

(3) இதைப் புகுத்த வேண்டுமென்றால் நாட்டு எல்லாமக்களுக்கும் ஒன்றுபோல் புகுத்த வேண்டும் ;

(4) ஒரு சமுதாயத்திற்கு, ஒரு வகுப்புக்கு எல்லா சவுகரியமும் அமைப்பது சமதர்மமாகாது ;

(5) பெரும்பான்மையோர் வாழ்வில் ஒவ்வொரு நிலைகளிலும் குறைபாட்டையும், குறைந்த அளவு தேவையற்றதுமான வாழ்வு வாழ்வதும் ; சிறுபான்மையோர்—சிறு கூட்டத்தினர்–சிறு வகுப்பினர் தேவைக்கு, தகுதிக்கு, அவசியத்திற்கு மேற்பட்டதாகவும், செல்வமும் பண்டமும் நாசப்படுத்தும்—நாசமாகும் தன்மையில் வாழ்வதுமாகியதான தன்மை தலைதூக்கி இருக்குமானால் அந்நாட்டை நரகவேதனை மிகுந்த நாடு என்றுதான் சொல்லவேண்டும்.

இந்நிலையில் வாழும், துன்பமடையும் மக்கள் பொறுமைசாலி மக்கள் அல்ல. மானமற்ற, கோழை, இழிமக்கள் என்றுதான் சொல்லவேண்டும். பாடுபட்டும் சராசரி வாழ்வுக்குப் போதியவசதி அற்றிருப்பது என்பதும் இதற்காகப் பல்லைக்காட்டிக் கெஞ்சுவதும் 'போராடுவதும்' மனிதன் தனது ஈனநிலையைக் காட்டிக்கொள்கிறான் என்பதுதான் பொருள். தர்மம் (பிச்சை) கொடுப்பவனிடம் பெறுவதும், அதற்காக அவனை வாழ்த்துவதும் ஒரு மனிதன் அவனது வாழ்வுக்காக அவனது மானத்தை (மனைவியை) அன்னியனுக்கு விட்டுக் கொடுத்துப் பயன் பெறுவதற்கே ஒப்பாகும்.

மனித வகுப்பில் ஒருவன் தன்னைக் கீழான வகுப்பினன் என்று எண்ணிக்கொண்டு வாழ்வதும், நாம் ஏழைகள், நமக்கு இதுதான் தகுதி என்று ஏழ்மை நிலையை ஏற்பதும், மனிதத் தன்மையும், மானமும் இல்லாமைக்கு நல்ல சாதனமேயாகும். இப்படிப்பட்ட இழிவானநிலை ஆறறிவுபடைத்த மனிதனுக்குள் புகுந்ததற்குக் காரணம் கடவுள், கர்மம், விதி, சகிப்புத் தன்மை என்பவைகளான விஷநோய்கள், தொத்துநோய்கள் ஆகும். இப்படிப்பட்ட நோய்களை உண்டாக்கும், பரவச்செய்யும் சாதனம்–மதம், கோவில் இவை சம்பந்தமான சாதனங்கள், பார்ப்பனர்கள், வைதிகக் காரியங்கள், பண்டிகை, உற்சவங்கள், மதத்தைப் பரிபாலிக்கும் ஆட்சிமுறைகள் ஆகியவைகளேயாகும்.

ஒரு மனிதன் தன் ஆயுளில் சமதர்மத்துக்காக, தாம் என்ன செய்தோம்? என்று சிந்தித்து—என்ன செய்யவேண்டுமென்று கருதுவானேயானால், அவன் மேற்காட்டிய சாதனங்களில் அவனவன் தகுதிக்குத் தகுந்த ஏதாவது ஒன்றையாவது அழிக்கவேண்டும். அப்போதுதான் அவன் தனது மானமற்ற நிலையை உணர்ந்தவனாகவாவது ஆவான்.

இந்தக் காரியத்தில் எவனுக்குக் கடும் துன்பமடையவோ, செல்வத்தையோ, வாழ்வையோ, உயிரையோ இழக்கநேரிடுகிறதோ, அவன் வீரன் ; உயிர்வாழும் சிரஞ்சீவி ஆவான்.

இக் கருத்துக்களைச் சமதர்ம சாத்திரம், சமதர்மம் என்று சொல்லலாம். ஆனால் சமதர்மத்தைப் பிரத்தியட்ச செயலில் காட்டும் காரியம் எதுவென்றால் மேடுகளைக் குறைக்க வேண்டும் ; அதாவது மேட்டைவெட்டிப் பள்ளத்தில்போடவேண்டும். சமநிலை—மட்டம் எந்த அளவிற்கு இருக்கலாம் என்று உத்தேசமாய்த் திட்டம் செய்துகொண்டு, அந்த மட்டத்திற்கு மேட்டைக் கரைக்கவேண்டும். மேடுகரைந்த அளவு உத்தேச மட்டத்திற்குப் போதவில்லை, கரையவில்லை என்று தோன்றினால், சரிமட்டமாக்குவதற்கு ஏற்ற, தேவையான திட்டங்களைத் தீட்டவேண்டும். இந்தத் திட்டங்களைத் தீட்டுவது என்பது பள்ளத்தை நிரவப் போதாத மண்ணை வெளியிலிருந்து கொண்டுவந்து கொட்டுவது

www.thamizham.net - Free E book No 3041

போலாகும். இதே இந்த வேலைசெய்யும் நேரத்திலேயே மக்களுக்குள் கடவுள், மதம், விதி, கர்மம், நம்பிக்கைகள் அற்றுப்போகும்படி செய்ய வேண்டும்.

அதற்கேற்ற ஆட்சிமுறை வகுக்கவேண்டும்; அதற்கேற்றவர்கள் ஆட்சிப்பீடத்தை அடையும்படி செய்யவேண்டும்.

['விடுதலை'-தலையங்கம்—18-1-1965]

## 12. கத்தி வைத்துக் கொள்ளுங்கள்

டில்லியில் காமராஜர் தங்கி இருந்த வீட்டுக்கு நெருப்பு வைத்து விட்டார்கள் பார்ப்பனர்கள்! ஏன் இப்படிச் சொல்லுகின்றேன் என்றால், நெருப்புவைத்த நாளில் சிருங்கேரி சங்கராச்சாரி, பூரி சங்கராச்சாரி முதலிய பார்ப்பன சமுதாயத் தலைவர்கள் டில்லியில் இருந்திருக்கிறார்கள்; தவிரவும், சந்நியாசிகள் (சாதுக்கள்) என்னும் பேரால் ஆயிரக்கணக்கான பார்ப்பனர்கள் பல பாகங்களிலுமிருந்து அன்று டில்லிக்கு வந்து இருக்கின்றார்கள். ஏன் இந்த சந்நியாசிகளைப் பார்ப்பனர்கள் என்கிறேன் என்றால், பார்ப்பனர் அல்லாத (சூத்திர) சாதிக்கு சந்நியாசம் கொள்ள உரிமை இல்லை. அவனைச் சாது வென்றோ, சந்நியாசி என்றோ சொல்லமாட்டார்கள்.

ஆகவே, அன்றையக் கலவரத்துக்கு, காலித்தனத்துக்கு நேரடியாகச் சம்பந்தப் பட்டவர்களும், தூண்டி விட்டவர்களும், ஆதாரமாக இருந்தவர்களும், தலைமை வகித்தவர்களும் பார்ப்பனர்கள் தவிர, மத தர்ம சம்பிரதாயங்களில் பார்ப்பனர்களுக்குச் சீடர்களாக இருந்தவர்களுந்தான் காரணஸ்தர்கள் ஆவார்கள் என்ற உறுதியால்தான் சொல்லுகிறேன். மற்றும் இராஜாஜி 'எலெக்ஷனுக்கு முன் காங்கிரஸ் ஆட்சியை ஒழித்தாக வேண்டும்' என்றும் 'எந்த அதர்மத்தைச் செய்தாவது ஒழித்தாக வேண்டும்' என்பதாகச் சொன்னதும், 'அஹிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டியதில்லை' என்பதும் ஆகப் பேசியதும் எனது உறுதிக்கு ஆதாரம் ஆகும்.

'பசு வதை தடுத்தல்' என்பது ஒரு பொய்யான காரணமேயாகும். உண்மைக் காரணம்—பார்ப்பனருடைய வருணாசிரம தர்மத்துக்குக் கேடு வந்துவிட்டது என்பது ஒன்றேதான். அந்தக் கேட்டை உண்டாக்கினது காமராஜர் என்கின்ற ஒரே காரணந்தான், காமராஜர் இருந்த வீட்டுக்கு நெருப்பு வைக்க முக்கியமான காரணமாகும்.

பார்ப்பானுக்கு மாட்டுக் கொலையைப்பற்றி அக்கறை இருக்கின்றதென்பது 'அப்துல்காதர் ஆடி அமாவாசையன்று தன் தகப்பனாருக்குத் தர்ப்பணம் கொடுத்தார்' என்பது போன்ற கதையேயாகும். இந்தச் சாதுக்கள், சங்கராச்சாரியார்கள், மற்றும் சர்வ பார்ப்பனர்களுக்கும் முன்னோர்களாகிய ரிஷிகள், முனிவர்கள், மகான்கள், தேவர்கள், இராமன், கிருஷ்ணன் முதலிய எல்லா ஆரியர்களுக்கும் மாடுதான் முக்கிய ஆகாரமாய் இருந்து இருக்கிறது. இவ்வுண்மை இன்றும் மனுதர்ம சாஸ்திரத்தில் பார்ப்பன தர்மமாய் இருந்துவருகின்றது.

உலகிலுள்ள மக்கள் 100-க்கு 100 பேர்கள் மாட்டின் பாலைக் குடிப்பதும், மாட்டின் உழைப்பைப் பயன்படுத்திக் கொள்வதும், 100-க்கு 50 பேருக்கு மேலாக மாட்டு மாமிசம் உண்பதும் 100-க்கு 90 பேர்கள் வேறு பல மாமிசம் உண்பவர்களாகவே இருந்து வருகின்றார்கள்.

இப்படிப்பட்ட மக்களுக்குப் பசுவதைத் தடுப்பு உணர்ச்சி ஏற்பட்டது என்றால், இதை எந்த மடையன்தான் உண்மை என்று நம்புவான்? எப்படி அது யோக்கியமான காரியமாய் இருக்க முடியும்?



www.thamizham.net - Free E book No 3041

காமராஜர் 'பார்ப்பனரை வதை செய்யும்' காரியத்தை உண்டாக்கியவர்; அதுதான் சமதர்மம் என்பது. காமராஜரின் 'சமதர்மம்' என்பதே 'பார்ப்பனக் கொலை தர்மம்' என்பதுதான் தத்துவார்த்தமாகும்.

'காமராஜர் சமதர்மம்' என்பது 100-க்கு 100 அமுலுக்கு வந்தால், 'பார்ப்பனீயப் பூண்டு' உலகத்திலேயே இருக்க முடியாது.

'காமராஜர் சமதர்ம'த்தில் எல்லோருக்கும் படிப்பு; எல்லோருக்கும் வீடு; எல்லோருக்கும் வேலை; எல்லோருக்கும் உணவு; எல்லோருக்கும் சம அந்தஸ்து ஏற்பட்டு விடும். பிறகு இதில் மனித பேதம் எப்படி இருக்க முடியும்? மனித பேதந்தானே பார்ப்பனீயம் என்பது!

ஆகவே, இதனால்தான் இந்தப் பார்ப்பனீயக் கலவரத்துக்கும், காலித்தனத்திற்கும், பார்ப்பனக் குருமார்கள், பார்ப்பனச் சாதுக்கள், பார்ப்பன அதிகாரிகள், பார்ப்பனர்கள், பார்ப்பனப் பத்திரிகைக்காரர்கள், பார்ப்பன தர்மிகள் காரணமாக, காரியசித்தர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதோடு, பிர்லா, பஜாஜ், டாட்டா முதலிய செல்வர்கள் பலபேர்கள் கூட்டமும், மற்றும் சொல்லவேண்டுமானால் நந்தாக்கள் முதலிய மந்திரிகள் கூட்டமும் உடந்தையாயும், ஆதரவாளர்களாகவும் இருந்திருக்கின்றார்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

நேரு தங்கைக்கும், மற்றும் நேரு சாதிக்கும் இந்தச் சமதர்மம் எதிர்க்கப்படவேண்டியதாகவே இருந்துவந்திருக்கின்றது. மற்றும், நந்தாக் கூட்டம் பெரிய அழுக்கு மூட்டைக் கூட்டமாகும். இந்தியப் பிரதமர் தேர்தலுக்கு நடந்த போட்டியில் ஒருவராக நிற்க முனைந்தவர் நந்தா; அதுவும் ஒரு பிரபல ஜோசியர் கட்டளைப்படி நின்றவர்; தேதி மாற்றத்தால் விலகிக் கொண்டவர்; இப்படிப்பட்ட அவர் எப்படிச் சமதர்மத்துக்கு உடந்தையாக இருக்கமுடியும்?

எனவே, டில்லிக் கலவரமும் காலித்தனமும் பார்ப்பனரின் மனுதர்மத்துக்கும், காமராஜரின் மனித (சம)தர்மத்திற்கும் ஏற்பட்டு நடந்து வரும் பலாத்காரப் போராட்டங்களில் ஒன்றேயாகும். எல்லாப் போராட்டங்களையும், கலவரத்தையும், காலித்தனங்களையும்விட நேற்று நடந்த டில்லிப் போராட்டத்தின் குறிப்பிடத்தகுந்த முக்கியம் என்னவென்றால், காமராஜர் தங்கி இருந்த வீட்டை காமராஜர் உள்ளே இருந்து தூங்கிக்கொண்டு இருக்கும்போது, நாலுபுறமும் சூழ்ந்துகொண்டு, நாலுபுறத்திலிருந்தும் நெருப்பு வைத்துக் கொளுத்தினதுதான் முக்கியமாகக் குறித்துக்கொள்ளத்தக்கதான சம்பவமாகும்.

இந்தச் செய்கை, காலிக்கூட்டத்தினரால் இலக்குவைத்துத் திட்டமிட்டு நடத்திய செய்கையாக இருக்கமுடியாது. பார்ப்பனச் சங்கராச்சாரியார்கள் பலர்களும், சாதுக்களும், ஆனந்தாக்களும், பிர்லாக்களும், பஜாஜ், டாட்டாக்களும், அழுக்குமூட்டை நந்தாக்களும் கூடி கலகம் நடத்திடத் திட்டமிட்டு, பல லட்ச ரூபாய் உதவி, பல அதிகாரிகளைச் சரிப்படுத்திக்கொண்டு நடத்திய சதித் திட்டமேயாகும்.

போலீஸ் 7–8 பேர்களைச் சுட்டது என்றால், ஏதோ அநாமதேயக் காலிகளைத்தான் சுட்டு இருக்குமேயொழிய, மேற்கண்ட கூட்டத்தினரில் ஒருவரைக்கூடச் சுடவில்லை. சுட நினைக்கவும் இல்லை என்றுதான் சொல்லவேண்டும். நான் 3-ம்தேதி எழுதி, 4-ம்தேதி நகல்படுத்தி, 5-ம் தேதி சென்னைக்குப் பதிப்பிக்க அனுப்பிய 'விடுதலை' பெயர்போட்டு 6-ம் தேதி எழுதிய 'சாதிப் பிரிவுகள்' என்ற தலையங்கத்தில் நல்லவண்ணம் விளக்கிக் கூறி இருக்கின்றேன். அதில் 'இனி நடக்கவேண்டியது மந்திரிகளைக் கொல்லவேண்டியதுதான்' என்று எழுதி இருக்கின்றேன். ஆனால், டில்லிச் செய்கை மந்திரிகளைக் கொல்லுவதாய் இல்லை.

www.thamizham.net - Free E book No 3041

மந்திரிகள் பல மாகாணங்களில் இச் செய்கைகளுக்கு ஆதரவானவர்களாக இருக்க நேர்ந்துவிட்டதால் (காங்கிரஸ்) தலைவரையே கொல்லத் திட்டமிட்டு அவர் இருந்த வீட்டில் அவர் தூங்கிக்கொண்டு இருக்கும்போது வீட்டைச் சுற்றி 4 புறத்திலும் நெருப்பு வைக்கச் செய்து விட்டார்கள். காமராஜர் தங்கி இருந்த வீட்டிற்குப் புழக்கடைப் பக்கம் வெளியேற ஒரு வழி இல்லாதிருந்தால் காமராஜரின் கதி அன்று என்னவாகி இருக்கும்?

இனி, இது தேசத் தலைநகரில் மாத்திரம் அல்லாமல் மாகாணங்கள் முழுவதிலும் இக் கொலை, நெருப்பு வைத்தல் முதலிய காரியங்கள் பரவும் என்பதிலும் ஆட்சேபணை இல்லை. இன்று பல மாகாண ஆட்சித் தலைவர்கள், பார்ப்பன அடிமைகள், வருணாசிரமக் காவலர்கள், சமதர்ம விரோதிகள் என்று சொல்லும்படியாகவே அமைந்துவிட்டார்கள்! ஆதலால் இந்த 'மாடல் டில்லிக் காலித்தனங்கள்' இனி எல்லா மாகாணங்களிலும் ஏற்பட்டே தீரும்—பலவற்றில் ஏற்பட்டே விட்டதே!

அதாவது, பார்ப்பன எதிரிகள், பார்ப்பனர்களின் எதிர்க்கட்சித் தலைவர்கள் என்பவர்களைக் கொல்லவும், அவர்கள் வீட்டையும் நெருப்புவைத்துக் கொளுத்தவுமான நிலை ஏற்படலாம். அவற்றிற்கு அரசாங்கப் பாதுகாப்பும் அதற்கு ஏற்ற அளவில்தான் இருந்துவரும். எதிர்க்கட்சிக்காரர்கள் (பார்ப்பன அடிமைக் கட்சிக்காரர்கள்) இப்போதே அடிக்கல் நாட்டிக்கொண்டு விட்டார்கள். அதுதான் 'அண்ணாதுரையைத் தாக்கினார்கள்' என்பது போன்ற கற்பனைகளாகும்.

தமிழ்நாட்டு ஆட்சி அமைப்பை மாற்றாவிட்டால் காமராஜருக்குப் பாதுகாப்பு ஏற்பட்டுவிடுமே என்றுதான் கருதுகின்றனர். என்னைப்பற்றிக் கவலையில்லை. எனக்கு 'ஒரு கால் நாட்டிலும் ஒரு கால் சுடுகாட்டிலும்' என்ற பருவத்தில் இருக்கின்றேன். ஆதலால் என்னைப்பற்றிக் கவலை இல்லை.

காமராஜர் இன்று இந்த நாட்டுக்கு இரட்சகராக இருக்கிறார்; அதனால்தான் பார்ப்பனர்களும் பார்ப்பன அடிமைகளும் காமராஜர்மீது கண்வைத்து இருக்கின்றார்கள்; அவர் இருந்த வீட்டைக் கொளுத்தினார்கள். காமராஜருக்கு ஏதாவது ஏற்பட்டால் அவருக்கு ஒன்றும் நட்டம் இல்லை; அவரது தாயார்கூட மயக்கம் வரும்வரை அழுவார்கள்; அவ்வளவுதான். பிறகு நம்நாடு வருணாசிரம தர்ம நாடாகிவிடும்! அது மாத்திரமல்ல; இன்றையப் பார்ப்பனக் கூலிகளான காங்கிரஸ் எதிர்க் கட்சிகளுக்கு, தலைவர்களுக்கு, பலர்களுக்கும் நாதியற்ற நிலை ஏற்பட்டுவிடும். 'பழைய கறுப்பர்'களாகி விடுவார்கள். பிறகு நாடு என்ன ஆகுமோ? எப்படி ஆகுமோ? எப்படியோ இருக்கட்டும். இனி காமராஜர் தக்க பாதுகாப்புடன் இருக்கவேண்டும்.

பார்ப்பன எதிர்ப்புக் கட்சித் தோழர்கள் ஒவ்வொருவரும் 6 அங்குல நீளத்திற்குக் குறையாத கத்தி ஒன்றைத் தற்காப்புக்காக வைத்துக்கொண்டிருக்க வேண்டும். கண்டிப்பாக சீக்கியர்களது மத தர்மம்போல், கண்டிப்பாகக் கத்தி வைத்துக்கொண்டிருக்க வேண்டும். இந்தக் காரியம் காமராஜரைப் பாதுகாக்க அல்ல. நம் நாட்டில் உள்ள 3 கோடி 'கீழ்சாதி' (சூத்திர) மக்களை இழிவில் இருந்தும் அடிமை நிலையிலிருந்தும் 'படுகுழிப் பள்ளத்தில்' இருந்தும் வெளியாக்கிப் பாதுகாக்கவேயாகும்.

நமது சரித்திரம் தெரிய, இந்த நாட்டில் காமராஜரைப்போல ஓர் இரட்சகர் இதுவரை தோன்றியதே இல்லை. புராணங்களில் இரண்யர்கள், இராவணர்கள் தோற்றுவிக்கப்பட்டு இருக்கின்றார்கள். அவர்கள் எல்லாம் கொல்லப்பட்டதாக—பிரகலாதன், அனுமான், விபீடணன்களைக்கொண்டு அழிக்கப்பட்டதாக எழுதிப் புராணங்களை முடித்திருக்கின்றார்கள்.

அந்தக் காலம் அப்படி; ஆனால் இந்தக் காலம் அதுபோன்ற புராண–சரித்திர காலம் அல்ல; உண்மை பிரத்யேக நடப்புக் காலம்; இதில் அந்த வித்தைகளை பலிக்கவிடக்கூடாது.

www.thamizham.net - Free E book No 3041

கத்தி வைத்துக்கொள்ளுங்கள்! காமராஜரைப் பாதுகாருங்கள்! மறுபடியும் எழுத இடம் வைத்துக்கொள்ளாதீர்கள். கண்டிப்பாய்க் கத்தி வைத்துக்கொள்ளுங்கள்!

['விடுதலை'—அறிக்கை—15-11-1966]

## 13. மக்களைப் பக்குவப்படுத்த வேண்டும்

ஜனநாயகம் என்றால் மக்களாட்சி என்பதுதான் உண்மையான கருத்து. அப்படிப் பட்ட ஜனநாயகத்திற்கு மக்கள் அறிவாளிகளாகவும், ஓரளவிற்காவது யோக்கியர்களாகவும் ஒழுக்கமுடையவர்களாகவும் இருக்க வேண்டும்.

நமது ஜனநாயக மக்கள் இயற்கையில் மூடநம்பிக்கையுடைய காட்டுமிராண்டி மக்களென்பதோடு அல்லாமல் கல்வி—எழுதப் படிக்கவே அறியாத நிலையில் தற்குறிகளாக, பகுத்தறிவென்பதே இன்னதென்றறியாத பாமர மக்களாக ஏராளமான பேர் இருக்கிறார்கள். இவர்களுக்குப் படிப்பில்லை என்பது மாத்திரமல்லாமல், பிடிவாத மூடநம்பிக்கையிலும் ஈடுபட்டிருக்கிறார்கள்.

மற்றபடி மக்கள், ஒழுக்கமென்பது மதம், அரசியல் காரணங்களால் ஒழுக்கத்தைப் பற்றிய கவலையேயில்லாமல் எந்தக் காரணத்தைக் கொண்டாவது பதவிபெறவேண்டும் என்பதையும், வயிறுவளர்க்க வேண்டுமென்பதையும் மூச்சாகக் கொண்டவர்களாக இருக்கிறார்கள். மக்களுக்கு, 'வயிறுவளர்ப்பது, காசு சம்பாதிப்பதுதான் ஜனநாயகம்' என்பது கொள்கையாக இருந்துவருகிறது.

இப்படிப்பட்ட இவர்களிடையில் சமதர்மம் என்றால், அரசாங்கமும், மக்களும் சிறிதும் சுயநலமில்லாமல் எல்லாத்துறையிலும், எல்லா மக்களுக்கு மொத்த சமநலம் ஏற்பட உழைக்க வேண்டியது என்கிற குணம் எப்படி ஏற்படமுடியும்?

ஒரே மனிதன் வைத்தியனாகவும், புரோகிதனாகவும் இருக்க நேர்ந்தால் அவனுக்கு வியாதியஸ்தனைப் பிழைக்கவைப்பதைவிடச் சாகடிப்பதில் தானே ஆசையிருக்கும்? ஏனென்றால், வியாதியஸ்தன் செத்தால் பசு தானம், கருமம், கருமாதி காரியம், திதி, திவசம் முதலாகிய காரியங்களில் செத்த விநாடி முதல் நீண்ட நாட்கள் வரை பயனடைய முடியும்.

வியாதியஸ்தன் குணம் பெற்றால் வைத்தியனுக்கு, வியாதி குணமாகித் 'தலைக்குத் தண்ணீர் ஊற்றும்போது' கொடுக்கப்படும் இரண்டு ரூபாயோ, நான்கு ரூபாயோ வரும்படியோடு விஷயம் முடிவுபெற்றுவிடும்.

ஆதலால், பதவி வேட்டைக்காரர்களும் பணவேட்டைக்காரர்களும், ஒரு நாளும் சம தர்மத்தை விரும்பமாட்டார்கள்.

மக்களைச் சமதர்மத்துக்குப் பக்குவப்படுத்தும் பணிபற்றிச் சிந்திக்கத் தக்கதாகும் என்பது என் கருத்தானாலும்—அதுவும் அவசரமான காரியமென்றே சொல்லுவேன்.

மூடநம்பிக்கை என்பவைகளில் முக்கியமானவை மத நம்பிக்கையும், கடவுள் நம்பிக்கையும் முதன்மையானவையாகும். விளக்கமாகச் சொல்லவேண்டுமானால், ஒரு மனிதன் சிவனையோ, விஷ்ணுவையோ, இராமனையோ, கிருஷ்ணனையோ, கந்தனையோ, சுப்பனையோ இருப்பதாகவும், அவர்களைக் கடவுளர்களாகவும் நம்பிக் கொண்டு சாம்பலையோ, மண்ணையோ நெற்றியில் பட்டையடித்துக் கொள்வதன் மூலம் பக்தி செலுத்திக் கொண்டு, 'நான் சமதர்மவாதி' என்று சொல்லுவானேயானால் அவன் உண்மையான, யோக்கியமான சமதர்மவாதியாக 'இருக்க முடியுமா? கொள்ள முடியுமா? முடியும் என்று கருதுகிறவர்கள் அறிவாளிகளாக இருக்க முடியுமா?

www.thamizham.net - Free E book No 3041

ஒரு மனிதன்—முதலாவதாகத் தனது நெற்றியைச் சுத்தமாக வைத்துக்கொள்ளும் படியான அறிவில்லாத ஒரு மனிதன்—எப்படிச் சமதர்மத்திற்கேற்ற அறிவுடையவனாகக் கருதப்பட முடியும்? அறிவின்மை என்பதைக் காட்டுவதுதானே நெற்றிக்குறி? நெற்றிக் குறி யென்றால் 'மூளைக்குறி' என்றுதானே பொருள்?

நான் நெற்றிக்குறி என்று சொல்லுவதில் குறி மாத்திரமல்ல; அவற்றுள் அடங்கி யிருக்கும் தத்துவங்களையே குறி கொண்டு சொல்லுகிறேன். அதாவது, மத சம்பந்தமான முட்டாள்தனம், மூடநம்பிக்கைகள் யாவற்றையும் கசக்கிப் பிழிந்து, காய்ச்சிச் சுண்ட வைத்து இறக்கிய சத்துதான் நெற்றிக்குறி! அதற்கு வேறு பொருள் என்ன சொல்ல முடியும்?

சமதர்மம் பேசும் காங்கிரசுக்காரர்களோ, மற்ற கட்சிக்காரர்களோ, 'மதக் கருத் தென்ன? நெற்றிக்குறிக் கருத்தென்ன? இதிகாச தர்மக் கருத்தென்ன?' என்பதைச் சிந்திக்கிறார்களா?

நான் ஒரு உண்மைச் சமதர்மவாதியென்றே நினைத்துக் கொண்டிருக்கிறேன். என் கழகத்தாரும், என்னை உண்மையாய்ப் பின்பற்றுகிறவருங்கூட சமதர்மப் போக்குக் காரர்கள் என்றே சொல்லுவேன். எங்கள் எல்லோருடைய நெற்றியும் சுத்தமாக இருக்கும்.

ஆகவே, உண்மையான சமதர்மவாதிகள் தன்னை—தன் அறிவை, தன் நெற்றியைச் சுத்தப்படுத்திக்கொள்ள வேண்டும்.

['விடுதலை'-தலையங்கம்— 15-12-1969]

# 14. நாத்திகமும் சமதர்மமும்

*அக்கிராசனர் அவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!*

என்னை நாத்திகன் என்று சொல்லுகிறவர்கள் நாத்திகன் என்பதற்கு என்ன அர்த்தம் கொண்டு சொல்லுகிறார்களோ, அந்த அர்த்தத்தில் நான் நாத்திகன்தான் என்பதை வலியுறுத்திச் சொல்லுகின்றேன். நாத்திகத்திற்குப் பயந்தவனானால் ஒரு காரியமும் செய்ய முடியாது. அதிலும், சமதர்மக் கொள்கையைப் பரப்ப வேண்டுமானால் நாத்திகத்தினால்தான் முடியும். நாத்திகம் என்பதே சமதர்மம் என்று பெயர். அதனால் ரஷியாவையும் நாத்திக ஆட்சி என்கிறார்கள். புத்தரையும் நாத்திகர் என்பதற்குக் காரணம், அவர் சமதர்மக் கொள்கையைப் பரப்ப முயற்சித்ததால்தான். நாத்திகம் என்பது சமதர்மக் கொள்கை மாத்திரம் அல்ல; சீர்திருத்தம்—அதாவது, ஏதாவது பழைய கொள்கைகளை மாற்ற வேண்டுமானால் அந்த மாற்றத்தையும்—ஏன், எவ்வித சீர்திருத்தத்தையுமே நாத்திகம் என்றுதான் யதாபிரியர்கள் சொல்லித் திரிவார்கள். எங்கு எங்கு அறிவுக்கு மரியாதை இல்லையோ, சமத்துவத்திற்கு இடம் இல்லையோ அங்கு எல்லாம் இருந்துதான் நாத்திகம் முளைக்கின்றது. கிறிஸ்துவையும் முகமது நபியையும்கூட நாத்திகர்கள் என்று யூதர்கள் சொன்னதற்கும் அவர்களது சமதர்மமும், சீர்திருத்தமும்தான் காரணமாகும். துருக்கியில் பாட்சாவும், ஆப்கானிஸ்தானில் அமீரும் நாத்திகர்கள் என்று அழைக்கப்பட்ட தற்கும் அவர்களது சீர்திருத்தம்தான் காரணம். ஏனென்றால், இப்பொழுது வழக்கத்தில் இருக்கும் கொள்கைகளும், பழக்கங்களும்—எல்லாம் கடவுள் செய்ததென்றும், கடவுள் கட்டளை என்றும், கடவுளால் சொல்லப்பட்ட வேதங்கள் சாஸ்திரங்கள் ஆகியவைகளின் கட்டளை என்றுமேதான் யதாப்பிரியர்கள் சொல்லுகின்றார்கள். ஆகவே, நாம் இப்பொழுது எதை எதை மாற்றவேண்டும் என்கின்றோமோ அவைகள் எல்லாம் கடவுள் செய்ததாகவும் அல்லது கடவுள் தனது அவதாரங்களையோ தனது தூதர்களையோ செய்யச் சொன்ன தாகவுமே சொல்லப்படுவதால், அவைகளைத் திருத்தவோ, அழிக்கவோ புறப்படுவது கடவுள் கட்டளையை மீறின—அல்லது கடவுள் கட்டளையை மறுத்ததே ஆகும்.

www.thamizham.net - Free E book No 3041

உதாரணமாக, மக்களில் நான்கு சாதி, கடவுளால் உற்பத்தி செய்யப்பட்டது என்று சொல்லப்படுகையில், மேற்படி சாதி ஒழியவேண்டுமென்றால், அவன் கண்டிப்பாகக் கடவுளை மறுத்தோ, அலட்சியம் செய்தோதான் ஆகவேண்டும். எல்லா மதங்களும், மதக் கொள்கைகளும் கடவுளாலோ, அவதாரங்களாலோ, கடவுள் தன்மையாலோ ஏற்பட்டவை என்று சொல்லப்படுகையில் அம் மத வித்தியாசங்கள் ஒழிய வேண்டும் என்றும் மதக் கொள்கைகள் மாற்றப்படவேண்டும் என்றும் சொல்லும்போது, அப்படிச் சொல்லுபவன் அந்தந்தக் கடவுள்களை, கடவுள்களால் அனுப்பப்பட்ட தெய்வீகத் தன்மை பொருந்தினவர்களை அலட்சியம் செய்தவனேயாகின்றான். அதனால்தான் கிறிஸ்தவர் அல்லாதவர் 'அஞ்ஞானி' என்றும், முகமதியரல்லாதவர் 'காபர்' என்றும், இந்து அல்லாதவர் 'மிலேச்சர்' என்றும் சொல்லப்படுகின்றனர்.

அன்றியும், கேவலம் புளுகும், ஆபாசமும் நிறைந்த புராணங்களை மறுப்பதே—இந்து மதக் கொள்கைப்படி நாத்திகம் என்றும் சொல்லப்படும்போது, சாதியையும் கர்மத்தையும் மறுப்பதை ஏன் நாத்திகம் என்று சொல்லமாட்டார்கள்?

சாதி, உயர்வு-தாழ்வு, செல்வம், தரித்திரம், எஜமான் அடிமை ஆகியவைகளுக்குக் கடவுளும் கர்மமும்தான் காரணம் என்று சொல்வதானால், பிறகு மக்களுக்கு விடுதலையும் முன்னேற்றமும் எங்கே இருக்கின்றன? கடவுளையும், கர்மத்தையும் ஒழித்தாலொழிய அதற்காக மனிதன் எப்படிப் பாடுபடமுடியும்? மேடும் பள்ளமும் கடவுள் செயலானால், மேட்டை வெட்டிப் பள்ளத்தில் போட்டு சமன் செய்வது கடவுள் செயலுக்கு விரோதமான காரியமே ஆகும். மனிதனுக்கு முகத்தில், தலையில் மயிர் முளைப்பது கடவுள் செயலானால், சவரம் செய்துகொள்வது கடவுள் செயலுக்கு எதிராகவே செய்யும்—அதாவது ஓரளவுக்கு நாத்திகமான காரியமும் ஆகும். பிச்சைக்காரனுக்குச் சோறு போடுவதும் நாத்திகமேயாகும். ஏனெனில், கடவுள் பார்த்து ஒருவனை அவனது 'கர்மத்திற்காக'ப் பட்டினி போட்டிருக்கும்போது நாம் அவனுக்குச் சோறு போடுவது கடவுளுக்கு விரோதமான காரியமேயாகும். அதாவது, கடவுளை நம்பாத—கடவுள் செயலை இலட்சியம் செய்யாத தன்மையே ஆகும். இப்படியே பார்த்துக்கொண்டு போனால் உலகத்தில் ஆத்திகன் ஒருவனும் இருக்கமுடியாது. ஆதலால், நம்மைப் பொறுத்த வரையில் நாம் பல மாறுதல் ஏற்பட விரும்புவதால் அவை கடைசியாய் நாத்திகமேயாகும். நாத்திகமும் சாஸ்திர விரோதமும், தர்மத்திற்கு விரோதமும் செய்யாமல் யாரும் ஒரு சிறிதும் உண்மையான சீர்திருத்தம் செய்யமுடியவே முடியாது.

நமது நாட்டினர்களே ஏழைகளை வஞ்சித்துக் கொள்ளை அடிக்கிறார்கள். பாமர மக்கள் கடவுள் செயல் என்று கருதிக்கொள்வதால் தினமும் ஏய்த்துக்கொண்டே வருகிறார்கள். அப்படிப்பட்ட பாமர மக்களை விழிக்கச் செய்து, 'நீங்கள் ஏழைகளாய், தரித்திரர்களாய் இருப்பதற்குக் கடவுள் செயல் காரணமல்ல; உங்கள் முட்டாள்தனம் தான் காரணம். ஆதலால், நீங்கள் கடவுள் செயலை இலட்சியம் செய்யாதீர்கள்' என்று சொன்னால்தான், செல்வந்தர்களின் அக்கிரமங்களைப் பாமர மக்கள் அறியக்கூடும். அப்பொழுது கடவுள் செயலையும்—அதிக மூடர்களிடம் கடவுளையும் மறுத்துத்தான் ஆகவேண்டும்.

இந்த நாட்டில் ஒருபுறம் ஏழைகள் பட்டினி கிடக்க; ஒருபுறம் சிலர் கோடீஸ்வரராய்க் கொண்டு தலைகொழுத்து டம்பாச்சாரியாய்த் திரிவது கடவுள் செயல் என்றால், இந்த நாட்டுச் செல்வத்தை வெளியான் சுரண்டிக்கொண்டு போவதும், அவன் இங்கு ஆடம்பரமாய் வாழ்வதும் கடவுள் செயல் என்றுதான் சொல்லவேண்டும். ஆகையால், கடவுள் செயல்கள் ஒரு காரியத்திற்கும் மற்றொரு காரியத்திற்கும் மாறுபடுவது போலவே—தர்மமும், நீதியும்கூட ஒரு சமயத்திற்கும் மற்றொரு சமயத்திற்கும் மாறுபடவேண்டியதே ஆகும். ஒரு காலத்தில் அரசர்கள் விஷ்ணு அம்சமாய் இருந்தார்கள். ஆனால், இப்போது அரசர்கள் கொள்ளைக்காரர்கள் என்று சொல்லப்படுகிறார்கள். அது போலவே, செல்வவான்கள் இந்தக் காலத்தில், 'இலட்சுமி புத்திரர்களாய்' இருக்கிறார்கள். இன்னொரு

www.thamizham.net - Free E book No 3041

காலத்தில், அவர்கள் 'பெருத்த வஞ்சகப் பகற்கொள்ளைக்காரர்கள்' என்று அழைக்கப் பட்டு, பலாத்காரத்தில் அவர்களிடம் இருக்கும் செல்வங்களைப் பிடுங்கிக் கொள்ளப்பட வேண்டியவர்கள் ஆவார்கள். உதாரணமாக, மனுதர்ம சாஸ்திரத்தில் 'சூத்திரன் பொருள் சேர்த்து வைத்து இருந்தால், பார்ப்பனன் அதைப் பலாத்காரத்தினால் பிடுங்கிக் கொள்ளலாம்' என்று இருக்கின்றதை இன்னும் பார்க்கின்றோம். கொஞ்ச காலத்திற்கு முன் இது அமுலிலும் இருந்து இருக்கிறதாம். இனிக் கொஞ்ச நாள் போனால் பார்ப்பான் பணம் வைத்து இருந்தால் பார்ப்பனரல்லாதார் பலாத்காரமாய்ப் பிடுங்கிக்கொள்ளலாம் என்று தர்மம் ஏற்பட்டாலும் ஏற்படும். அப்படி ஏற்படுவது முன்னைய வழக்கத்திற்கு விரோதம் என்பதாக யாரும் சொல்லமுடியாது. காலம் போகப் போக, நேரில் உழுது பயிர் செய்ய முடியாதவனுக்குப் பூமி இருக்க வேண்டியதில்லை என்றும், அப்படி இருந்தாலும் சர்க்காருக்கு வரி கொடுப்பது போல் ஒரு சிறு அளவுதான் பாத்தியமுண்டே யொழிய, இப்பொழுது இருப்பதுபோல் உழுகின்றவன் தன் வயிற்றுக்கு மாத்திரம் எடுத்துக்கொண்டு —ஏன், சில சமயங்களில் அதற்கும் போதாமலும் இருக்க, பூமிக்கு உடையவனுக்கு பெரும் பாகம் கொடுப்பது என்கின்ற வழக்கம் அடிபட்டாலும் அடிபடலாம். அதுபோலவே, இன்று கோயில் கட்டுவது தர்மமாக இருக்கிறது. ஆனால், பிற்காலத்தில் கோவிலை இடித்து விக்கிரகங்களை உடைத்துப் பள்ளிக்கூடங்களும், தொழிற்சாலைகளையும் ஏற்படுத்துவதும் தர்மம் என்று ஆகலாம். இதுபோலவே, அனேக விஷயங்களில் இன்றைய 'தர்மம்' நாளைய 'அதர்மம்' ஆகி, தலைகீழாக மாறக்கூடும். அப்பேர்ப்பட்ட நிலைமை வரும்போது, இன்றைய நிலைமை எல்லாம் கடவுள் கட்டளை என்றால் அதை மாற்ற முற் படுகிறவன் கடவுள் கட்டளையை மறுக்க—ஏன் கடவுளையே மறுக்கத் துணியவேண்டும். கடவுளை மறுக்கத் துணிந்தவனே தர்மத்தின் பேரால் உள்ள இன்றையக் கொடுமைகளை ஒழிக்க முடியும். அப்படிக்கில்லாமல், கடவுளுக்கும் மோட்சத்திற்கும் பயந்து கொண்டு இருப்பானானால் ஒரு காரியமும் செய்யமுடியாது என்பது உறுதி.

ஏனெனில், அரசியல், சமூக இயல், பொருளாதார இயல் ஆகியவைகளில் உள்ள இன்றையக் கொடுமையான நிலையும் முட்டாள்தனமான நிலையும், அயோக்கியத்தனமான நிலையும் எல்லாம் கடவுள் கட்டளையாலும், மோட்ச சாதனங்களாலும், சாஸ்திர தர்மங் களாலுமே ஏற்பட்டவைகளாகும். ஆகையால்தான், அவ்விஷயங்களில் நான் அவ்வளவு உறுதியாய் இருக்கிறேன்.

[திருச்சியில், 1-9-1930-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 7-9-1930]

சமதர்மம் என்கின்ற வார்த்தை—ஒரு பொது வார்த்தை. இது ஆங்கிலத்தில் உள்ள 'சோஷியலிசம்' என்னும் வார்த்தைக்குத் தமிழ் மொழி பெயர்ப்பாகக் கையாளப்படுகிறது என்றாலும், சோஷியலிசம் என்ற வார்த்தையே தேசத்துக்கு ஒருவிதமான அர்த்தத்தில் பிரயோகிக்கப்படுகிறது. அனேமாக அவ்வார்த்தை அந்தந்தத் தேச நிலைமைக்கும், தகுதிக்கும், சவுகரியத்துக்கும், அரசாங்கத்துக்கும் தக்கபடிதான் பிரயோகிக்கப்படுகிறது. சில இடங்களில் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டும், சில இடங்களில் சட்டதிட்டங்களுக்கு மீறினதாயும் உள்ள பொருள்களுடன் சமதர்மம் என்கின்ற வார்த்தை பிரயோகிக்கப் படுகிறது.

ஆகவே, சோஷியலிசத்துக்கு, இதுதான் அர்த்தம் என்று வரையறுக்க, அவ் வார்த்தையில் எவ்விதக் குறிப்பும் இல்லை.

சில இடங்களில் சோஷியலிசத்திற்கும் பொது உடைமை என்பதற்கும் பேதமே இல்லாமல் அர்த்தம் இருந்து வருகிறது. சில இடங்களில் வெகு சாதாரண விஷயத்துக்கும் அப் பெயர் இருந்து வருகிறது. சில இடங்களில் பொது உடைமை வேறாகவும் சமதர்மம் வேறாகவும் இருந்து வருகின்றன.

www.thamizham.net - Free E book No 3041

இங்கு, 'சமதர்மம்' என்கின்ற வார்த்தைக்குச் சமூகத் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் மக்கள் உயர்வு தாழ்வு இல்லாமல் சமத்துவமாய் (பேதமின்றி) வாழ வேண்டும் என்பதையே, சமதர்மம் என்று நான் கருத்துக் கொண்டு, சமதர்மம் என்கின்ற வார்த்தையை இங்கு பிரயோகிக்கின்றேன்.

ஏனெனில், மற்ற நாட்டின் சமூகத் துறையில் நமது நாட்டில் உள்ளது போன்ற உயர்வு தாழ்வு பேதாபேதம் இல்லை.

பொருளாதார சம்பந்தமே பெரிதும் மற்ற நாடுகளில் இருக்கின்றது. நமது நாட்டுச் சமுதாய உயர்வு தாழ்வானது, பிறவியிலேயே வகுக்கப்பட்டு, அதை மதத்தோடு பொருத்தி, அதற்கு அரசியல் பாதுகாப்பளிக்கப்பட்டு இருந்து வருகிறது. அரசியலில் உள்ள பாது காப்பை உடைப்பது என்று முதலில் ஆரம்பித்தால், அதற்கு நம் நாட்டு மக்கள்—அதுவும் பொருளாதாரத்தால் மிகவும் நொந்து ஏழ்மை நிலையில் இருக்கும் மத நம்பிக்கை கொண்ட பாமர மக்கள் என்பவர்களே சிறிது கூட ஒப்பமாட்டார்கள். ஒப்பமாட்டார்கள் என்பதோடு மாத்திரம் அல்லாமல், அவர்களே நமக்கு எதிரிகளாயும் இருப்பார்கள். ஏனெனில், பிறவி காரணமாய் உள்ள உயர்வு—தாழ்வு, மதத்தில் சம்பந்தப்பட்டு, அம் மதம் பாமர மக்கள் இரத்தத்தில் ஊறி இருக்கிறபடியாலும், அதுவே அரசியலுக்கு ஆதாரமாய் இருப்பதாலும், அதை மாற்றாமல் அதை மாற்றுவதற்குத் தகுந்த முயற்சி எடுக்காமல் மேல்நாட்டுச் சமதர்மம் பேசுவது, பாலைவனத்தில் இருந்து சத்தம் போடுவது போலவே ஆகும்.

முதலில் சமுதாயத்தில், பிறவியின் பெயரால் உள்ள பேதங்களை ஒழித்தாக வேண்டும். அதுவே இந்நாட்டுச் சமதர்மத்துக்கு முதற்படியாகும். அதனாலேயே பொருளாதார சமதர்மமே மனித சமூக சாந்திக்கு மருந்து என்று கருதி இருக்கும் நான், சமுதாயத்தில் வாழ்க்கையில் சமதர்மத்தை—அபேத வாதத்தை முக்கியமாய் வலியுறுத்தி வருகிறேன்.

நிற்க, பொதுவாகவே சமதர்மம் என்பது எந்த அர்த்தத்தில் இருந்தாலும்—சமுதாயம் முக்கியமானாலும் பொருளாதாரம் முக்கியமானாலும்—அதற்குக் கடவுள் உணர்ச்சி, மத நம்பிக்கை என்பவைகள் எதிராகவே இருந்து வந்திருக்கின்றன. ஆதலால், எந்தச் சமதர்ம வாதிக்கும் இதைப் பொறுத்த வரையில் அபிப்பிராய பேதம் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. இந்த வேலை அபிப்பிராய பேதமில்லாமல் நடந்துதான் தீரும்.

நம் நாட்டிற்கு இன்று முதலில் சாதி பேதங்கள் ஒழிந்து, மக்கள் யாவரும் பிறவியில் சமம் என்கிறதான 'சமதர்ம' முயற்சியே முதலில் செய்ய வேண்டியதாயிருக்கிறது. சாதி, பேதம், பிரிவு ஆகியவை ஒழிந்தால்தான் சமூக வாழ்க்கையில் சமதர்மமாய் வாழமுடியும். பொருளாதார பேதத்துக்கும் சமூக சாதி பேத முறைதான் பெரிதும் காரணமாய்—காவலாய் இருந்துவந்திருக்கிறது. இன்றும் பெருவாரியான மக்களுக்குச் சாதி பேதமே பொருளாதார சமதர்ம முறையை நினைக்கக்கூட இடம் தராமல் அடக்கி வருகின்றதுடன் பொருளாதார பேதத்துக்கு இடமளித்தும் வருகிறது.

எந்தக் காரணத்தைக் கொண்டாவது இன்று நாட்டில் உள்ள பொருள்களையெல்லாம் எல்லா மக்களுக்கும் சமமாக்கி வைத்துவிட்டாலும், நமது சாதி முறைகள் மறுபடியும் வெகு சீக்கிரத்தில் பழைய நிலைமையைத்தான் உண்டுபண்ணிவிடும். மற்ற நாட்டு மக்களுக்குப் பொருளாதார சமதர்ம உணர்ச்சி ஏற்பட்டதற்குக் காரணம் எல்லாம்—அவர்களில் பிறவியில் கீழ், மேல் நிலை இருக்கும்படியான சாதி பேதம் இல்லாததேயாகும். நமது மக்களுக்கு வெறும் பொருளாதாரச் சமதர்மம் சுலபத்தில் புரியவே புரியாது. 'சாதி பேதம்' ஒழிப்பது என்ற சமதர்மத்தைச் சொல்லி, பொருளாதார சமதர்மம் சொன்னால்தான் உண்மையாகக் கஷ்டப்படுகின்ற மக்களுக்கு உணர்ச்சி உண்டாக்க முடிகின்றது.

ஆகவே, சமூக சமதர்மம் ஏற்பட ஆசைப்படுகிற நாம்—சாதி பேதத்தை ஒழிக்க வேண்டும் என்று கருதுகின்ற நாம்—பொருளாதார சமதர்மத்துக்காகவே பிறவி சாதியை

www.thamizham.net - Free E book No 3041

ஒழிக்க வேண்டியிருக்கின்றது என்றும், பிறவி சாதியை ஒழிப்பதற்கு அதற்கு ஆதாரமான மதத்தையும் ஒழிக்கவேண்டும் என்றும் சொல்லுகின்றோம். மதத்தைப் பற்றியோ மதத்தில் உள்ள ஏதாவது ஒரு கொள்கையைப் பற்றியோ பேசினாலும், அதை ஒழிக்க வேண்டும் என்று சொன்னாலும் அதை நாத்திகம் என்று சொல்லிவிடுகிறார்கள். அதனால்தான் சமதர்மம் பேசுகின்ற யாரும் கண்டிப்பாய் நாத்திகர்களாகியே தீரவேண்டி இருக்கின்றது.

நாத்திகனாவதற்குக் கடவுள் இல்லை என்றுகூடச் சொல்ல வேண்டியதில்லை. மதக் கொள்கையைப் பற்றி ஆராய்ச்சி செய்து பேசினாலே போதுமானதாக இருக்கின்றது.

சாதிகள் கடவுளால் உண்டாக்கப்பட்டதாக—கடவுளால் கற்பிக்கப்பட்டதாக—கடவுளே சொன்னார் என்பதாக மத சாஸ்திரங்களில் சொல்லப்பட்டு இருக்கின்றது.

அந்த மத சாஸ்திரங்கள் வேதமாகவும், வேதம் போன்றதாகவும் கருதப்படுகின்றன. உதாரணமாக, பகவத் கீதை என்பது இந்துக்கள் என்பவர்களுக்கு மிகப் புனிதமானதும் மேலானதுமான புத்தகம் என்று பெயர்.

முகமதியர்கள் குரானை மதிப்பதைவிட, கிறிஸ்தவர்கள் பைபிளை மதிப்பதைவிட, கீதையை அதிக பக்தியாய் அனேக இந்துக்கள் மதித்து இருக்கிறார்கள். ஆனால், அப் புத்தகத்தில் நான்கு சாதிகளும், நான்கு பிரிவான சாதிப் பெயர்களும் அதற்குத் தனித் தனி வேலைக் கிரமங்களும் சொல்லப்பட்டு இருக்கின்றன. கீதை என்றாலே ‘பகவான் வாக்கு’ என்று அர்த்தம்.

சாதி ஒழியவேண்டும் என்று பேசுகிறவர்களில் கூட 100-க்கு 99¾ பேர்கள், ‘கீதையை பகவான் வாக்கு என்று நம்பிக்கொண்டுதான் இருக்கிறார்கள்.

சாதி வித்தியாசம், உயர்வு—தாழ்வு ஆகியவைகளைப் பற்றிக் கண்ணீர் விட்ட பெரியார் காந்தியார்கூட, கீதைக்குத் தன்னை ஆட்படுத்திக்கொண்டிருப்பதாய்ச் சொல்லியிருக்கிறார்.

இந்நிலையில் இப்படிப்பட்ட மக்களால் சாதிப் பிரிவுகளுக்கு உள்ள கீழ்—மேல் நிலைகளை எப்படி ஒழிக்கமுடியும்? கீதை முறை தவறு என்றோ, கீதை கடவுள் சொன்னது அல்ல என்றோ, அப்படித்தான் கடவுளே சொல்லியிருந்தாலும் அதைப்பற்றிக் கவலை இல்லை என்றோ சொல்லத் துணியாவிட்டால்—சொல்லத் தைரியம் இல்லாத மக்கள் யாவரையும் அந்தப்படி சொல்லத் தயார்செய்யாவிட்டால், சாதிப் பிரிவு, சாதி வித்தியாசம் ஆகியவை எப்படி ஒழியும்? ஆகவே, இந்தப்படி சொல்லும்படியான ஒருவன் கீதையையும், கிருஷ்ணனையும் நம்பும் மக்களால் நாத்திகன் என்று சொல்லப்படாமல் இருக்க முடியாது.

ஆதலால், நாத்திகனாகவோ, நாத்திகன் ஆவதற்குத் தயாராகவோ, நாத்திகன் என்று அழைக்கப்படுவதற்குக் கலங்காதவனாகவோ இருந்தாலொழிய ஒருவன் சமதர்மம் பேச முடியவே முடியாது.

இதுமாத்திரம் அல்லாமல், சர்வமும் கடவுள் செயல் என்றும், மனித சமூகத்தில் பிறவி மூலமாகவும் வாழ்வு மூலமாகவும் இன்று இருந்துவரும் பிரிவுக்கும் பேதத்துக்கும் உயர்வு தாழ்வுக்கும் கடவுளே பொறுப்பாளி என்றும், கடவுள் சித்தத்தினால்தான் அவற்றில் ஒரு சிறு மாற்றமும் செய்யமுடியும் என்றும் சொல்லப்படுமானால் அதை நம்பாமல் இருப்பது நாத்திகமானால் கண்டிப்பாக ஒவ்வொரு மனிதனும் நாத்திகனாகத்தான் வேண்டும்.

ஏனெனில், செல்வவான்களிடம் இருக்கும் செல்வமும் பார்ப்பான் பாராட்டிக் கொள்ளும் உயர்ந்த சாதித் தத்துவமும் கடவுள் கொடுத்தது என்றும், கடவுள் சித்தத்தால் ஏற்பட்டது என்றும் சொல்லப்படுமானால், அந்தக் கடவுளை யார்தான் ஏற்றுக் கொள்ள முடியும்?



www.thamizham.net - Free E book No 3041

அதை யார்தான் நிலைத்திருக்க விட்டுக்கொண்டிருக்க முடியும்? எந்த மாதிரியான மூடக் கடவுள்களும், எந்த மாதிரியான அயோக்கியக் கடவுளும் மனிதரில் ஒருவரை மேல் சாதியாக்கி, பாடுபடாமல் ஊரார் உழைப்பில் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்படிக்கும், மற்றொருவரைக் கீழ்சாதியாக்கி, பாடுபட்டுச் சோம்பேறிகளுக்கு அழுதுவிட்டுப் பட்டினியாய், நோயாய், கட்டக் கந்தையற்று, இருக்க இடமற்றுத் திரியும்படியும் சொல்லி இருக்கவே இருக்காது.

இந்தக் காரியங்களுக்குக் கடவுளைப் பொருத்துகின்றவர்களை யோக்கியர்கள் என்றோ, அறிவாளிகள் என்றோ யாராலும் சொல்லமுடியாது.

ஊரார் உழைப்பைக் கொள்ளை கொள்ளாமல் எவனும் பணக்காரனாக முடியாது.

இங்கு நாட்டுக்கோட்டையார்கள் 10 லட்சம், 20 லட்சம் கோடிக்கணக்கான ரூபாய் சொத்து உள்ளவர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்கு இந்தப் பணம் ஏது? இவர்கள் படும் பாட்டிற்கும், இவர்கள் அனுசரிக்கும் முறைக்கும், இவர்கள் நடந்துகொள்ளும் மாதிரிக்கும், எந்தக் கடவுளாவது இவ்வளவு பணம் கொடுத்திருக்க முடியுமா?

ஏதோ இதெல்லாம், அவரவர் பிரயத்தனத்தினால், தொழில் முறையினால், மன வலிமையினால், சம்பவங்களால் ஏற்பட்டதென்று சொல்லாமல் வேறு என்ன சொல்ல முடியும்?

இவ்வளவு பணம் இவர்களுக்குச் சேருவதற்கு ஆதாரமாய் இருந்த முறையை யார் தான் சரியானமுறை என்று சொல்லிக்கொள்ள முடியும்? இவ்வளவு பணம் இவர்களுக்குக் கொடுத்தவர்களில் பெரும்பான்மை மக்கள் இன்று இருக்கும் நிலையை யார்தான் நல்ல நிலை என்று சொல்லமுடியும்? இதையெல்லாம் மாற்றவேண்டும் என்று சொல்லும்போது கடவுளையும், மதக் கொள்கைகளையும் கொண்டுவந்து குறுக்கே போட்டால், அக் கடவுளையும் மதத்தையும் ஒழிக்காமல் எப்படி இருக்கமுடியும்?

மற்றும், கடன்பட்டு வட்டிகொடுத்த மக்களுடையவும், பாடுபட்டுப் பயனைக் கொடுத்த மக்களுடையவும் மனமும் வயிறும் வாயும் பற்றி எரிய எரிய, அப் பணங்களைக் கோவில் கட்ட, வாகனம் செய்ய, சாமிக்குக் கிரீடம் செய்ய, கலியாணம் செய்ய, தாசி வீட்டுக்குப்போக, தாசிகளை வைத்து உற்சவம்–வாண வேடிக்கை செய்யப் பாழ்பண்ணப் படுமானால்—யார்தான் சகித்துக்கொண்டு இருக்கமுடியும்? இந்த அக்கிரமங்களைப் பார்த்துக்கொண்டு எந்தக் கடவுள்தான் இருக்கமுடியும்?

அப்படியும் ஒரு கடவுள் இருக்கிறது என்று சொல்லப்படுமானால்—அப்படிப்பட்ட கடவுளை அழித்து ஒழித்து விடுவதில் யாருக்கு என்ன நஷ்டம் வரும்?

அப்படிப்பட்ட கடவுளை யாரும் ஒழிக்கமுடியாது என்று சொல்லப்படுமானால், அது ஒழிந்துபோகுமே என்று ஒருவராவது ஏன் வருத்தப்படவேண்டும்?

இதையெல்லாம் பார்க்கும்போது, கடவுளைக் கற்பித்தது நல்ல எண்ணம் கொண்டு என்பதாக நம்ப நம்மால் முடியவில்லை.

சோம்பேறிக் கொள்ளைக் கூட்டங்கள், கொடுங்கோன்மைக்காரன், பேராசைக்காரன் முதலிய கூட்டத்தாரின் சுயநலத்துக்குத்தான் பயன்படுகின்றதே ஒழிய வேறு காரியத் துக்குக் கடவுள் பயன்படுவதேயில்லை.

இதுவரை எந்தக் கடவுளால்—யாருக்கு—எப்படிப்பட்ட ஒழுக்கம் ஏற்பட்டது என்று யாராவது சொல்ல முடியுமா என்று கேட்கிறேன்.

கடவுளைச் சதாகாலம் கட்டியழுது, அதனாலேயே ஜீவனம் நடத்தும் அர்ச்சகர்கள், குருக்கள் ஆகியவர்கள் முதலில் ஒழுக்கமாய் இருக்கிறார்களா? இவர்களுடைய ஒழுக்கக் காரியங்கள் நமக்குத் தெரியாதா?

www.thamizham.net - Free E book No 3041

கடவுளுக்காக இலட்சம், பத்து இலட்சம் பணம் போட்டுக் கோவிலைக் கட்டிக் கும்பாபிஷேகம் செய்து, ஐந்து வேளை, ஆறு வேளை பூஜை செய்து மானியம் விட்ட கடவுள் பக்தர்களில் எவராவது ஒழுக்கமாய் யோக்கியமாய் நடக்கிறார்களா? கடவுளுக்காகவே சந்நியாசியாய், குருவாய், சங்கராச்சாரியாராய், தம்பிரானாய், 'முல்லா'வாய், 'மவுலானா'வாய், பாதிரியாய், பெரிய குருவாய் இருக்கின்றவர்களிலாவது எல்லோரும் ஒழுக்கமானவர்கள் என்று சந்தேகமறச் சொல்லத்தக்கவர்களாய் இருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா? இவர்கள் நிலையே இப்படி இருக்க, கடவுள் நம்பிக்கை உள்ள சாதாரண பாமர மக்களிடத்தில் எப்படி ஒழுக்கம், யோக்கியதை எதிர்பார்க்க முடியும்?

எப்படியானாலும் கடவுளைப்பற்றிய எண்ணமே யாருக்கும் இருக்கக்கூடாது என்பதற்காக நான் கூறவில்லை என்பதோடு, மனித சமூக சமதர்ம வாழ்வுக்குத் தடையாய் எந்தக் கடவுளும் இருக்கக்கூடாது என்றும், அப்படிப்பட்ட கடவுளை இருக்க விடக் கூடாது என்றும் நான் வற்புறுத்திக் கூறுகிறேன். மனித வாழ்க்கைக்கும் பேதா பேதங்களுக்கும் கடவுள் சம்பந்தமில்லை என்று சொல்லும் பட்சம் அக் கடவுளைப் பற்றி நமக்கு என்ன கவலை?

['குடிஅரசு'-கட்டுரை—18-6-1949]

## 15. சமதர்மவாதியின் கடமை

இந்தியாவில் உழைப்பாளி–சுகபோகி என்கிற இரண்டு வகுப்புகள் இருக்கின்றன. இந்த இரண்டு வகுப்புகளுமே பெரிதும் ஏழை என்பதாகவும், பணக்காரன் என்பதாகவும் சமுதாயப் பிரிவுகளைப் பரிணமிக்கச் செய்கின்றன.

எனவே, உண்மையான சமதர்மம் இந்தியாவில் நிலைநாட்டப்படவேண்டும் என்று விரும்புகின்றவன் மேற் கூறப்பட்ட நிலைமையை மறக்காமல் நினைவில் இருத்திக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியமானது.

ஒருவன் சமதர்மத்துக்கு உழைப்பதானால் அவன் முதலில் ஒரு உண்மையை அடிப்படையாகக் கொள்ளவேண்டும். உழைப்பதற்கென்றே பிறந்திருக்கும் வகுப்பு ஒன்று, இவர்களது உழைப்பின் பயனை அனுபவித்துக்கொண்டு சுகபோகியாய் வாழ்வதற்கென்றே பிறந்திருக்கும் வகுப்பு ஒன்று என்று இருப்பதை ஒழிக்கவேண்டும்—கிள்ளி எறியவேண்டும் என்பதே அந்த அடிப்படை நிலை. இதைச் செய்யாத வரையில் எந்தவிதப் பொருளாதார சமதர்மத்திட்டமும் இந்த நாட்டில் அரை வினாடி நேரமும் நிலைத்து நிற்காது என்பதைச் சமதர்மம் பற்றிப் பேசுவோர்–நினைப்போர்–ஆசைப்படுவோர் மனதில் கொள்ளவேண்டும்.

நம் நாட்டின் சமூக–பொருளாதார நிலையை நன்றாக அறிந்தபின்னும் பணக்காரனை மட்டுமே குறைகூறும் சமதர்மம் வெறும் பொறாமைச் சமதர்மமேயாகும்.

ஏன் இப்படிச் சொல்கிறேன் என்றால், இந்த நாட்டின் சமுதாய அமைப்பானது, பிறவியின் காரணமாகவே, ஏழையையும் பணக்காரனையும் அதாவது, உழைப்பாளியையும் சுகபோகியையும் உண்டாக்கியிருக்கிறது.

உதாரணமாக, இன்றைய சுகபோகிகள் பெரும்பாலும் மேல் சாதிக்காரர்களாகவும், பாட்டாளிகள் அல்லது உழைப்பாளிகள் அனைவரும் கீழ் சாதிக்காரர்களாகவும் இருப்பதைக் காணலாம்.

இன்றைய தினம் ஏதோ ஒரு புரட்சி மூலமோ ஒரு சர்வாதிகாரி மூலமோ இந்த நாட்டில் பொருளாதார சமதர்மப் பிரகடனம் ஏற்பட்டு விட்டதாகவே வைத்துக்கொள்வோம்; அந்தப் பிரகடனத்தின்படி, இந்த நாட்டில் உள்ள மக்கள் அனைவருக்கும் இந்த நாட்டில் உள்ள பொருட்கள் அனைத்தையும் பங்கிட்டுக் கொடுத்து விட்டதாகவே வைத்துக் கொள்வோம்.

www.thamizham.net - Free E book No 3041

பிறகு நடப்பது என்ன என்பதை யோசித்துப் பார்த்தால் என்ன விளங்கும்? மறுபடியும் பழைய நிலையே ஏற்படுவதற்கான காரியங்கள் நிகழ்ந்துகொண்டேபோய், ஒரு சில வருடங்களுக்குள் பொருளாதார உயர்வு–தாழ்வுகள் தாமாகவே பழையபடி ஏற்பட்டுவிடும் என்பதில் சிறிதும் ஆட்சேபணை இருக்காது.

ஏனெனில், பிரகடனத்தில் பொருளாதார சமதர்மம்தான் ஏற்படுமே ஒழிய அதுவும் தற்கால சாந்தியாய் அல்லாமல், சமூக - சமுதாய - சமதர்மம் ஏற்பட இடமில்லை. அது பிறவியின் பேராலேயே தங்கிவிடும்; அது தனது காரியத்தை எப்படிப்பட்ட பொருளாதார சமதர்மத்திலும் செய்துகொண்டுதான் இருக்கும்.

அதுவும் மதத்துக்கும், சாதிக்கும் பெயர்போன இந்த நாட்டு மக்களுக்குள்–கல்வி அறிவற்று மூடநம்பிக்கையில் ஆழ்த்திவைக்கப்பட்டிருக்கும் இந்த நாட்டுப் பாமர மக்களுக்குள் பிறவிபேதம் நீக்கப்படாதவரை எப்படிப்பட்ட பொருளாதார சமதர்மமும் கடுகளவு மாற்றத்தையும் உண்டாக்கிவிடாது.

மற்றும், பார்ப்பனரல்லாத சமூகத்தில் கீழ்சாதிக்காரர்கள் என்பவர்கள் எவ்வளவு செல்வம் தேடியபோதிலும் சாதி–மத சம்பிரதாயம் காரணமாக அடிக்கடி சறுக்கி விழுந்து கொண்டுதான் இருக்கிறார்கள்; அவ்வளவோடு மாத்திரமல்லாமல், சமூகத்தில் தாழ்ந்த நிலையில்தான் இருக்கிறார்கள். ஒரு சிலர் செல்வவான்களாய், கோடீஸ்வரர்களாய் இருந்தாலும்கூட, அவர்கள் சமூகத்தில் கீழ்சாதிக்காரர்களாய்த்தான் இருந்துவருகிறார்கள்.

சமதர்ம வாசனையே சிறிதும் இல்லாதவர்களும் சமதர்மத்துக்குப் பிறவி எதிரிகளாய் இருப்பவர்களுமான பார்ப்பனர்கள் எவ்வளவு ஏழைகளாகவும் எவ்வளவு 'பாப்பர்'களாகவும் இருந்தாலும், எவ்வளவு சோம்பேறிகளாகவும் எவ்வளவு உழைக்காதவர்களாகவும் இருந்தாலும் மக்களின் சராசரி வாழ்க்கையைவிட மேலாகவும் மனித சமூகத்தில் மேல் நிலையை உடையவர்களாகவும் தானே இருந்துவருகிறார்கள்!

இதனால்தான், பார்ப்பனர்கள் சமுதாய சமதர்மக்காரர்களைக் கண்டால் காய்ந்து விழுவதும் சமுதாய சமதர்ம இயக்கங்களைக் கண்டால் அவற்றை ஒழிக்கச் சூழ்ச்சி செய்வதுமாய் இருப்பதோடு, பொருளாதார சமதர்மக்காரர்கள் என்பவர்களை வரவேற்பது போலவும், பொருளாதார சமதர்ம ஸ்தாபனங்களை ஆதரிப்பது போலவும் காட்டிக்கொள்கிறார்கள்.

ஏனெனில், வெறும் பொருளாதார சமதர்மம் பார்ப்பனரை ஒன்றும் செய்துவிடாது. மேலும், பார்ப்பனருக்குப் பொருளாதார சமதர்மம் அனுகூலமானதேயாகும். எப்படி என்றால், இப்போது அவர்களால் பிச்சை வாங்கப்படும் நபர்கள் ஒரு பங்காய் இருந்தால் பொருளாதார சமதர்மத்தில் பார்ப்பனருக்குப் பிச்சை கொடுக்கும் நபர்கள் 10 பங்காக ஆகிவிடுவார்கள். அப்போது அவர்களுக்கு (பார்ப்பனர்களுக்கு) சமதர்மத்தில் பகிர்ந்து கொடுக்கப்படும் சொத்துக்கள் தவிர, மற்றும் சாதி, மத சடங்குகள் காரணமாக அதிகப் பிச்சையும் சேர்ந்து ஒவ்வொரு பார்ப்பனரும் ஒவ்வொரு சங்கராச்சாரி, மடாதிபதியாக சுலபத்தில் மார்க்கம் ஏற்பட்டுவிடும். இந்த நிலை மறுபடியும் வெகு சீக்கிரத்தில் பழைய நிலையை அதாவது இன்றைய நிலையை உண்டாக்கிவிடும்.

இந்த நாட்டில் சாதியும், மதமும், சிறப்பாகச் சாதி ஒரு கடுகளவு மீதியிருந்தாலும் எப்படிப்பட்ட சமதர்மமும் ஒரு நிமிட நேரத்தில் கவிழ்ந்து போகும் என்பதை சமதர்மிகள் என்பவர்கள் கருத்திலிருத்தவேண்டும் என்பதை வலியுறுத்த விரும்புகிறேன்.

மற்றும், சமுதாய சமதர்மத்துக்கு, அதாவது சாதிகளை ஒழிப்பதற்கு என்றால் பணக்காரன் சேருவான். ஏனெனில், எவ்வளவு பணக்காரனாய் இருந்தாலும் 100–க்கு 97 பேர் இன்றைக்குக் 'கீழ் சாதிக்காரர்'களாகவே இருக்கிறார்கள். ஆதலால் அவர்கள் சேருவார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

ஆனால், பணக்காரனை ஒழிக்கப் பார்ப்பனர் சேரமாட்டார்கள். சேர்வதாய் இருந்தாலும் சாதி இருப்பதன் பலனாய் மீண்டும் பணக்காரனை உண்டாக்கிக் கொள்ளலாம் என்று கருதியே சூழ்ச்சித் திறமாய்ச் சேருவான்.

இந்த நாட்டுக்கு—இந்த நாட்டு மக்களுக்கு நன்மைவேண்டும் என்று கருதுகிறவர்கள் இந்த நாட்டின் நிலை என்ன என்பதை உணர்ந்து அதற்கு ஏற்றபடி நடக்கவேண்டுமே ஒழிய, மேல் நாட்டைப்பற்றிப் படித்துவிட்டுப் புத்தகப் பூச்சியாய் இருப்பது வீண் பிரயாசையே ஆகும்.

சாதியை ஒழிக்கும் முயற்சியில் ஈடுபட்டு, சாதி முறையின் ஆணிவேராக இருக்கும் பார்ப்பனனை ஒழிக்கும் முயற்சியே சமதர்மவாதிகளின் முதற் கடமை என்பது நமது அபிப்பிராயமாகும்.

['விடுதலை'—தலையங்கம்—4-9-1973]

சமதர்மம் என்றால் சாதாரணமாக பாரபட்சமற்ற நீதி, சமத்துவம், உயர்வு—தாழ்வு இல்லாதநிலை என்பதாகும். ஆனால், இன்றைய வாழ்க்கையில் ஒவ்வொரு அம்சத்திலும் அதாவது சாதியில், கல்வியில், செல்வத்தில், வாழ்க்கை அந்தஸ்து நிலையில் மேல்—கீழ்நிலை இருந்து வருகிறது. இவற்றை ஒழித்து யாவற்றிலும் சமத்துவம், சமத்துவத்தை நிறுவுவதற்குச் சமதர்மக் கொள்கை ஆட்சி அவசியம் என்றால், மதக்காரர்களுக்கும், கடவுள் நம்பிக்கைகொண்ட ஆத்திகர்களுக்கும் கஷ்டமாக இருக்கிறது.

உழைப்பாளி மக்கள் உடல்வருந்தி உழைத்த பின்னும், குடிக்கக் கூழ் இன்றியும், கட்டக் கந்தையின்றியும் பரிதவிக்கும்போது, எந்தவிதமான வேலையும் செய்யாது, பணக்காரனாகத் தொழிலாளியைக் கொடுமைப் படுத்திக்கொண்டு, டம்பாச்சாரித்தனமாக வாழ்வது சரி அல்ல.

சாதாரணமாக, இன்று ஒரு குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரும் ஆளுக்கொரு வேலை செய்து சமமாக உண்டு உடுத்திக் களிப்புடன் வாழ்க்கை நடத்துவது இல்லையா? அதுபோலவே ஒரு கிராமம், ஒரு மாவட்டம், ஒரு மாநிலம் அல்லது தேசத்தில் உள்ள சகல மக்களும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் போலவும், உள்ள பூமியும் பொருளும் எல்லாம் குடும்பப் பொதுச் சொத்து என்பதுபோலவும், எல்லா மக்களுக்கும் பொதுவாகி அக் குடும்பத்துக்குச் சொந்தமே அன்றி தனித்தனியாக அவனவன் இன்பம்போல் அனுபவிக்கும் தனி உரிமை யாருக்கும் இல்லை.

இந்தச் சமத்துவமான வாழ்க்கை வேண்டும் என்று கூறும்போது சமதர்ம விரோதிகளான மதவாதிகளும், ஆத்திகர்களும் துள்ளிக் குதித்து 'அது கடவுளுக்காகாது; அவனவன் முன் பிறவியில் செய்த பாவ புண்ணியங்களுக்கு ஏற்றாற்போல் சுகமான வாழ்க்கையோ கஷ்டமான வாழ்க்கையோ நடத்துகிறான். பணக்காரனாகவோ, ஏழையாகவோ இருப்பது கடவுள் சித்தம். அவன் கடாட்சத்தால் அவனுக்கே தனி உரிமைகொடுக்கப்பட்ட பொருள்களைப் பொதுவுடைமை ஆக்குவது அநீதி' என்று கூப்பாடு போடப்படுகிறது.

ஏற்றத் தாழ்வுகள் மலிந்த இந்தச் சமூக அமைப்பு ஏற்பாட்டால் யாருக்காவது வாழ்க்கையில் பூரண இன்பமோ அமைதியோ ஏற்படமுடியுமா?

இருப்பவன் அதோடு திருப்தி அடையாது மேலும் மேலும் பணக்காரனாகவேண்டும் என்று கருதுகிறான்.

இந்த மனப்பான்மைக்குக் காரணம் என்ன வென்றால், கஷ்டப்பட்டு உழைக்காது சுக வாழ்வு நடத்துவதும், தேவைக்கு மேற்பட்ட சொத்துக்களுக்குச் சொந்தக்காரனாக இருப்பதும் ஒரு கவுரவம் என்றும், தனி மதிப்புக்குரிய பாத்திரமானது என்றும் கருதுகின்ற ஒரு மூடநம்பிக்கையே தவிர வேறில்லை. இந்த மூடநம்பிக்கையின் பயனாகத்தான் மனிதன் தேவைக்கு மேற்பட்ட பொருள் போகங்களைத் தானும் அனுபவியாது, பிறரையும்

www.thamizham.net - Free E book No 3041

அனுபவிக்கவிடாது, வைக்கோல் போரைக் காக்கும் நாய்போல் வாழ்கின்றான். இத் தனி உரிமையினால் வாழ்க்கையில் பலகோடிக்கணக்கான மக்களுக்குக் கிடைக்கவேண்டிய பல பொருள் சாதனங்கள் வீண் விரயம் செய்யப்படுகின்றன.

எனவே, தனிமனிதச் சொத்துரிமை ஒழியவேண்டும். பிறர் உழைப்பில் படோடோப வாழ்க்கை நடத்துவதும் அதிகப்படியான பொருள்களுக்கு அதிபதியாய் இருப்பதும் பெருமையான வாழ்க்கை என்று கருதப்படுகின்ற மூடநம்பிக்கை ஒழியவேண்டும். இதில் கவுரவமும் மரியாதையும் இல்லை என்பது தெளிவாக்கப்படவேண்டும்.

['விடுதலை'-தலையங்கம்—8-10-1973]

# 4. பொதுவுடைமை

## 1. பொதுவுடைமை

பொதுவுடைமை என்கின்ற வார்த்தையானது மக்களின் காதுகளில் படும்பொழுதே அது ஒரு பயங்கர சப்தம்போல் கருதப்படுகின்றது. கொஞ்ச காலத்திற்கு முன் நாத்திகம் என்ற வார்த்தையும் இந்தப்படிதான் மக்கள் காதுகளுக்கு ஒரு பெரிய அதிருப்தியானதும், வெறுப்பானதுமான சப்தமாகக் கருதப்பட்டு வந்தது. என்றாலும், இப்போது அது ஒரு தர்க்கவாதத்துக்கு ஏற்றதாகவும், சிலர் அதை ஒரு நாகரிகமாகக் கருதவும், சிலர் அவ் வார்த்தையின் கருத்தை, சாதாரண நோக்கத்தோடு கவனித்து 'அது அவரவர்கள் அபிப் பிராயம்' என்பதாகவும், சிலர் ஜன சமூக வாழ்க்கைக் கட்டுப்பாட்டிற்கு 'அந்தப்படி (கடவுள் என்பதான) ஒரு அபிப்பிராயம் இருந்தால் நல்லது' என்றும் கருதும்படியாகவும் இருந்துவருகின்றது.

நாத்திக விஷயத்தில் இப்போது ஆத்திரங் காட்டுபவர்கள் எல்லாம்—மதப் பிரச்சாரத் தினால் வாழலாம் என்று கருதுகின்றவர்களும், மதப் பிரச்சாரத்தைத் தங்களது வாழ்க் கைக்கு ஆதாரமாய்க் கொண்டவர்களும் தவிர, மற்றவர்களுக்கு அதைப்பற்றிச் சிறிதும் கவலையே இல்லாமல் இருந்துவருகின்றது. பொது ஜனங்களில் நாத்திகத்தைப்பற்றி எந்தக் கூட்டத்திற்காவது சிறிது அதிருப்தி இருக்கும் என்று கருத வேண்டுமானால்—அது, போதிய கல்வி அறிவு பெறாத சமூகமும், முரட்டுக் கட்டுப்பாட்டுக்குள் இருந்துவரும் பிடிவாத சமூகமும், தங்களைத் தவிர வேறுவித உலக அபிப்பிராயம் இருக்கின்றது என்று கூட உணர முடியாமல் வைக்கப்பட்டிருக்கும் பாமர கூட்ட சமூகமும் ஆகியவர்களுக் குள்ளாக இருந்துவரலாம்.

பொதுவாக 100-க்கு 10 அல்லது 12 பேரே படித்த மக்களும்; 100-க்கு 80, 90 பேர்கள் தற்குறிகளாகவும் இருக்கும் ஒரு தேசத்து மனித சமூகத்தில் நாத்திகத்தை வெறுக்கும் ஜனங்கள் சிலராவது இருக்கிறார்கள் என்பதில் அதிசயமொன்றுமில்லை. ஏனெனில், நாத்திகம் என்பது அறிவு வளர்ச்சியினாலும், ஆராய்ச்சித் திறத்தினாலும், சுதந்திர உணர்ச்சியாலும் ஏற்பட வேண்டிய விஷயமேயொழிய, கடவுள் சொன்னார் என்று எழுதப்பட்ட புத்தகங்களில் என்ன சொல்லியிருக்கிறது என்றும், தங்களைக் கடவுள் அவதாரமாகவோ, தூதர்களாகவோ, குருமார்களாகவோ சொல்லிக்கொண்டவர்கள் என்ன சொன்னார்கள் என்றும், பெரியோர்கள், ரிஷிகள், நபிமார்கள், நாயன்மார்கள், தீர்க்க தரிசிகள், ஆழ்வார்கள், சித்தர்கள், ஞானிகள், மகாத்மாக்கள் என்று சொல்லப்பட்டவர்கள் என்ன சொன்னார்கள் என்றும், அவர்கள் சொன்னதாக ஏற்பாடு செய்த ஏடுகளிலும், புத்தகத்திலும் என்ன எழுதியிருக்கிறது என்றும் கவனித்து அவைகளுக்கெல்லாம் அடிமை யாகியிருக்கும் அது விஷயத்தில் சுதந்திரமும், சுய அறிவும் இல்லாத மக்களுக்கு விளங்கக் கூடிய காரியமல்ல.

www.thamizham.net - Free E book No 3041

ஆகையால், அறிஞர்கள் அவ்வித மக்களின் கூப்பாடுகளை இலட்சியம் செய்யாமல் இருந்து வருவதுடன் ஆராய்ச்சியையும், சுயபுத்தியையும் பற்றிப் பிரச்சாரம் செய்து வருகிறார்கள். ஆதலால்தான், இப்போது நாத்திகம் என்னும் வார்த்தையானது மிகச் சாதாரண வார்த்தையாகவும், நாகரிக ஆராய்ச்சி அபிப்பிராயமாகவும் கொள்ளப்பட்டு வருகின்றது என்று சொன்னோம்.

அதுபோலவே, பொதுவுடைமை என்னும் வார்த்தையானது அதுபற்றிய ஆராய்ச்சியே இல்லாத காரணத்தாலும்; சுயநலத்தின் காரணமாய் அவ் வார்த்தைக் கெதிராகவே பிரச்சாரங்கள் நடைபெறுவதாலும் பொது ஜனங்களுக்குப் பொதுவுடைமை என்றால் வெறுப்பாயும், பயமாயும், தப்பிதமாயும் தோன்றலாம். எந்தப் புதிய கொள்கையும், அபிப்பிராயங்களும் ஆரம்ப காலத்தில் பாமர மக்களிடை வெறுப்பாகவும், கஷ்டமாகவுந்தான் தோன்றும். இதற்கு உதாரணங்கள் நாம் எடுத்துக்காட்ட வேண்டியதில்லை. ஏனெனில், புதிய அபிப்பிராயங்களையும், கொள்கைகளையும் கொண்டுவந்து புகுத்தியவர்களின் சரித்திரங்கள் என்பவைகளைப் பார்த்தால் இதுதானாகவே விளங்கிவிடும். ஆகவே, பொது வுடைமை என்னும் வார்த்தையும், கொள்கையும் பொதுஜனங்களால், பாமர மக்களால், சுயநலங்கொண்ட சோம்பேறிக்கூட்டங்களால் ஆதரிக்கப்படுகின்றதா, வரவேற்கப்படு கின்றதா, வெறுக்கப்படாமல் இருக்கின்றதா என்பவைகளைப்பற்றிக் கவனிக்காமல் அது விஷயமாய் நமக்குத் தோன்றியதை எழுதலாம் என்றே கருதுகிறோம்.

பொதுவுடைமை என்பது ஒரு குடும்பத்திலுள்ள சொத்துக்கள், வரும்படிகள், தொழில்கள், இலாப நஷ்டங்கள், இன்ப துன்பங்கள், போகபோக்கியங்கள், பொறுப்பு, கவலைகள் முதலாகியவை எல்லாம் எப்படி அக் குடும்ப மக்களுக்குப் பொதுவோ, அதுபோல் தான், ஒரு கிராமத்திலோ, ஒரு பட்டணத்திலோ, ஒரு மாகாணத்திலோ, ஒரு தேசத்திலோ, ஒரு கண்டத்திலோ, ஒரு உலகத்திலோ உள்ள மேற்கண்டவைகள் எல்லாம் ஆங்காங்குள்ள அவ்வளவு பேருக்கும் பொதுவானது என்பதாகும். சுருக்கமாய்ச் சொல்ல வேண்டுமானால், பொதுவுடைமைக் கொள்கையின் கட்சி இலட்சியம்–உலகம் பூராவும் ஒரு குடும்பம்; உலக மக்கள் எல்லோரும் சகோதரர்கள்; உலகத்திலுள்ள செல்வம், இன்பம், போக போக்கியம் முதலியவை எல்லாம் அக் குடும்பச்சொத்து; குடும்ப மக்கள் (உலக மக்கள்) எல்லோருக்கும் அக் குடும்பச் சொத்தில் (உலகச் சொத்தில்) சரிபாகம் என்கின்ற கொள்கையேயாகும். ஆகவே, பொதுவுடைமை என்பது ஒரு கணக்குப் பிரச்சினை (Mathemetic Problem) ஆகும்.

ஆகவே, இப்படிப்பட்ட கருத்துக்கொண்ட பொதுவுடைமைக் கொள்கையை வெறுக்கவோ, எதிர்க்கவோ நியாயமான முறையில் யாதொரு காரணமும் இருப்பதாய் நமக்குத் தோன்றவில்லை. ஆனால், சகோதரனுடைய பங்கை மோசம் செய்து சகோதர துரோகத்தின்மூலம் அதிகப் பங்கை ஆசைப்படுகிற மனப்பான்மை உள்ளவனும், குடும்ப வேலைகளில் தனக்குள்ள சரிபாகப் பொறுப்பைத்தான் ஏற்றுக்கொள்ளாமல் மற்ற சகோதரர் களையே அதிகமாய் உழைக்கச்செய்து தான் சோம்பேறியாயிருந்து, அதிகப் பங்கை யடைந்து, மற்றவர்களுக்குப் போதுமான அளவு கூலி கொடுக்காமல் வஞ்சித்து ஏமாற்ற வேண்டும் என்கின்றதான மனப்பான்மை உள்ளவனும்தான் பொதுவுடைமைக் கொள் கையை வெறுக்கவும் எதிர்க்கவும் கூடும்.

நிற்க, மற்றொரு விதத்திலும் பொதுவுடைமைத் தத்துவம் என்பது எல்லா ஜனங் களாலும் மதிக்கத்தக்கது என்கின்றதான வேதாந்த தத்துவம் என்பதுமாகும். எப்படி யெனில், எல்லா சரீரத்திலும் வசிக்கும் ஆத்மா ஒன்றேயென்றும்; எப்படி ஒரே சூரியன் பதினாயிரம் குடம் தண்ணீரில் பதினாயிரம் சூரியனாகக் காணப்படுகின்றதோ, அதுபோல் கோடானுகோடி ஜீவராசிகளினுள்ளும் கோடானுகோடி ஆத்மாவாகக் காணப்படுகிறது என்று சொல்லப்படுகின்றது. ஆதலால், ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறு ஆத்மாவாக

www.thamizham.net - Free E book No 3041

இருக்கிறதென்றோ, ஒவ்வொரு ஆத்மாவிற்கும் வெவ்வேறுவித சைதன்னிய—அதாவது ஞானமோ, வேற்றுமை உணர்ச்சியோ இல்லை என்கின்ற தத்துவமே வேதாந்தமாகும். ஆதலால், அப்படிப்பட்ட வேதாந்தக் கொள்கைக்குப் பொதுவுடைமைத் தத்துவம் எவ்விதத்திலும் விரோதமானதல்ல.

மதக் கொள்கைகளுக்கும் பொதுவுடைமைத் தத்துவம் விரோதமானதாக இல்லை. எப்படியெனில், எல்லா மதமும் மக்கள் யாவரும் சகோதரர்களென்றும், ஒருவருக்கொருவர் சகோதர உணர்ச்சியுடனிருக்க வேண்டுமென்றும், எல்லோரையும் எல்லோருமே சகோதரர்களாகப் பாவிக்கவேண்டும் என்றும், எல்லோருமே ஒரேவித இன்பத்தையும், ஒரேவித செல்வத்தையும் அடையவேண்டும் என்றும் கற்பிக்கின்றதாகச் சொல்லப்படுகிறது. ஆதலால், பொதுவுடைமைத் தத்துவம் எந்த மதக் கொள்கைக்கும் விரோதமானது என்று சொல்லிவிட முடியாது.

மற்றும், பொதுவுடைமைத் தத்துவமானது ஆத்திகம் என்பதற்கும் விரோதமானதல்ல. ஏனெனில், ஆத்திகமென்பது கடவுள் என்பதாக ஒன்று இருக்கின்றதென்றும், அது பாரபட்சமற்றதென்றும், சர்வசக்தியும் சர்வவியாபகமும் உடையது என்றும், அதுவே உலகத்தையும் உலகத்திலுள்ள வஸ்துக்களையும் ஜீவர்களையும் சிருஷ்டித்தது என்றும், உலகமும் உலக வஸ்துக்களும் அந்த ஜீவர்களுக்காகவே சிருஷ்டிக்கப்பட்டன என்றும் கருதுவதேயாகும். ஆகவே, அப்படிப்பட்ட கருத்துக்கு எல்லா மக்களும் சகோதரர் என்ற கொள்கையும், எல்லாப் பொருள்களும் இன்ப துன்பங்களும் எல்லா மக்களுக்கும் சரி சமமான பொது என்பதையும் எந்த ஆத்திகர்களும் ஆட்சேபிக்கவோ, எதிர்க்கவோ முடியாது என்பது விளங்கும்.

மேலும், மகாத்மாக்கள் என்பவர்களுக்கும் பொதுவுடைமைத் தத்துவம் வெறுப்பாகவோ, விரோதமாகவோ இருக்க நியாயமில்லை. ஏனெனில், மகாத்மா தத்துவம் என்பது எல்லா ஜீவர்களையும் சரிசமமாய்ப் பார்ப்பதும், எல்லா ஜீவர்களிடத்திலேயும் ஒரே ஆத்மா பரிணமிக்கின்றது என்பதை உணருகின்றதுமான வர்க்கமாகும். ஆதலால், அப்படிப்பட்ட தத்துவமுடையவர்களுக்குப் பொதுவுடைமைத் தத்துவம் என்பது ஆட்சேபிக்கத் தக்கதாவதற்கு இடமில்லை. இவை தவிர கிருஷ்ணர், புத்தர், ஏசு, முகமது, குருநானக், இராஜாராம் மோகன்ராய், தயானந்த சரஸ்வதி என்று சொல்லப்படுபவர்களான அங்கீகரிக்கப்பட்ட மதத் தலைவர்கள், சீர்திருத்தவாதிகள் என்பவர்களுடைய கொள்கைகளுக்கும், இலட்சியங்களுக்கும், எல்லா மக்களும் சகோதரர்கள்; எல்லாச் சொத்துக்களும் பொதுவானது என்னும்படியான கொள்கைகொண்ட பொதுவுடைமைத் தத்துவம் விரோதமாகவோ, ஆட்சேபிக்கத் தக்கதாகவோ இருக்கும்என்று சொல்லுவதற்கில்லை.

மற்றும், தேசியம் என்பதற்கோ, தேசியவாதிகள் என்பவர்களுக்கோ பொதுவுடைமைத் தத்துவம் விரோதமானது என்று சொல்லுவதற்கும் இடமிருக்கக் காரணமில்லை. ஏனெனில், தேசியவாதிகளுடைய கொள்கையெல்லாம் தங்கள் தேசத்துச் செல்வத்தை மற்றொரு தேசத்தார் கொள்ளை கொள்ளக்கூடாது என்பதும், தங்கள் தேச ஆட்சியை மற்றொரு தேசத்தார் ஆளக்கூடாது என்பதுமே முக்கியமானதாகும். ஆதலால், இதே கொள்கைகொண்டதான, அதாவது—ஒருவனுடைய உழைப்பின் பயனை மற்றவர்கள் கொள்ளைகொள்ளக் கூடாது என்பதும், ஒருவர்மீது ஒருவர் ஆதிக்கம் கொள்ளக்கூடாது என்பதும், எல்லோரும் சமமாய் உழைக்கவேண்டும், எல்லோரும் சமமாய் அடையவேண்டும், எல்லோருக்காகவும் எல்லோரும் ஆட்சிசெலுத்த வேண்டும் என்னும் கொள்கை கொண்ட பொதுவுடைமைத் தத்துவத்தை ஆட்சேபிக்க நியாயமேயில்லை. மற்றபடி சமூகசேவைக்காரருக்கோ, பொதுநலச் சேவைக்காரருக்கோ, நீதிக்கோ பகுத்தறிவுக்கோ, பொதுவுடைமைத் தத்துவம் மாறானதென்றோ, ஆட்சேபிக்கத் தக்கதென்றோ சொல்வதற்கு எந்தவிதத்திலும் ஆதாரம் இருப்பதாய்த் தெரியவில்லை.

www.thamizham.net - Free E book No 3041

ஆனால், யாருக்கு விரோதமாகவும், ஆட்சேபிக்கத் தக்கதாகவும், கெடுதி தரத் தக்கதாகவும் இருக்கும் என்று பார்ப்போமேயானால் சுயநலம் கொண்ட மக்களாகிய சக்கரவர்த்தி, அரசர், பாதிரி, குரு, முதலாளி, ஜமீன்தாரன், மிராசுதாரன், மேல்சாதிக்காரன் (பார்ப்பான்) என்று சொல்லப்படுபவர்களுக்கும்; இவர்களுக்குக் கூலிகளாய் இருப்பதினாலேயே உயர்வான வாழ்க்கை வாழ்ந்துகொண்டிருக்கின்றவர்களுமான மக்களுக்கும் ஆட்சேபணையாய் இருக்கலாம். இவர்களுடைய ஆட்சேபணைகளை நாம் இலட்சியம் செய்யவேண்டியதில்லை.

ஏனெனில், இவர்கள் யோக்கியதைகளை நன்றாய் உணர்ந்து, இவர்களால் மக்களுக்கு ஏற்படும் கஷ்ட நஷ்டங்களையும் இழிவுகளையும் அறிந்து, இவர்கள் தன்மைகளை ஒழிக்க வேண்டும் என்றும், மாற்றவாவது வேண்டுமென்றும் மக்கள் வெகு நாட்களாகவே பாடுபட்டு வருகிறார்கள். உதாரணமாக, ஏகாதிபத்தியத் தன்மை கூடாதென்றும், தனிப்பட்ட நபர்களான அரசர்களுடைய ஆட்சிகள் கூடாதென்றும் கிளர்ச்சிகள் வெகுகாலமாகவே நடந்து வருகின்றன. இதன் பயனாகவே சில ஏகாதிபத்தியங்கள் ஒழிந்து, சில அரசாட்சிகளும் வீழ்ந்து, பொதுஜன ஆட்சியென்றும், குடிகளுடைய ஆட்சி என்றும் சொல்லும்படியான ஆட்சிகள் ஏற்பட்டும் இருக்கின்றன; இனியும் ஏற்படுத்தும் முயற்சிகளும் நடந்து வருகின்றன. ஆதலால்தான், அவற்றைப்பற்றி நாம் கவனிக்கவேண்டியதில்லை என்றோம். மற்றபடி, மேல்சாதிக் கொடுமையையும் நன்றாய் உணர்ந்து அதை ஒழிக்கவேண்டும் என்று முயற்சி செய்ததோடு சிலவற்றை ஒழித்தும் வருகிறோம். மற்றபடி, ஜமீன் முதலாளி முதலியவர்களுடைய கொடுமைகளையும், அநீதியான வழியில் அவர்கள் செல்வம் பெருக்குவதையும் நன்றாய் உணர்ந்து அவர்களது கொடுமைகளை ஒழிக்கவும், அவர்களது அநீதிகளில் இருந்து மீளவும் முயற்சிகள் செய்துகொண்டுதான் வருகிறோம். கடைசியாக, குருமார்கள், பாதிரிமார்கள் என்று சொல்லுகின்ற கூட்டத்தார்களின் யோக்கியதைகளும் அறிஞர்கள் உணர்ந்ததேயாகும். எப்படியெனில் குரு, பாதிரி, முல்லா, புரோகிதர்கள் என்கின்ற கூட்டத்தார்கள், அரசர்கள் செல்வவான்கள், சோம்பேறிகள் ஆகியவர்களுடைய 'லைசென்சு' பெற்ற கூலிகளேயாவார்கள். இவர்களுடைய உழைப்பின் பயன் எல்லாம் அரசர்களுக்கும், செல்வந்தர்களுக்கும், சோம்பேறிக் கூட்டத்தார்களான மதப் பாஷாண்டிகளுக்குமே பயன்படத்தக்கதாதலால் அவர்களது அதிருப்தியைப்பற்றியோ, அழுகையைப் பற்றியோ நாம் சிறிதும் கவலைப்படவேண்டியதில்லை.

இருந்தபோதிலும், இந்தக் கூட்டத்தாரும் சாவதானமாய் இருந்து நல்லறிவைக் கொண்டு யோசித்துப் பார்ப்பார்களானால் பொதுவுடைமைத் தத்துவம் என்பது தங்கள் கூட்டத்தாருக்குக் கெடுதியில்லை என்பது விளங்கும். எப்படியெனில், பொதுவுடைமைத் தத்துவத்தினால் மனித ஜீவனுக்கு ஏற்படப்போகும் முக்கியமான மாறுதலும் அனுகூலமும் என்னவென்றால், மனிதனுக்குக் கவலை என்பது 100-க்கு 90 பாகத்துக்கு மேலாகவே குறைந்து போகும். இது தவிர, அதிருப்தி, பொறாமை என்று சொல்லும்படியான இயற்கைக் குணங்கள் என்பவைகள் எல்லாம் குறைந்துவிடும். இவைகளில் ஏதாவது ஒரு அளவும், பொதுவுடைமைத் தத்துவத்திலும் இருக்கும் என்று தர்க்கத்துக்காகச் சொல்ல வந்தாலும் அதுவும் பொதுநலத்தை உத்தேசித்து இருக்குமேயொழிய சுயநலத்தை உத்தேசித்து இருக்க முடியவே முடியாது. அதுபோலவே, மனிதனுக்குத் துக்கம் என்பது பெரும்பாகமும் மறைந்து போகும்.

இப்போது மேற்குறிப்பிட்டதான கவலை, அதிருப்தி, ஆசை, பொறாமை, துக்கம் முதலிய குணங்கள் தனி மனிதனில் ஆகட்டும், மனித சமூகத்திலாகட்டும் எந்த நிலைமையில் இருக்கின்றவர்களுக்கும் இருந்துதான் வருகின்றது. அரசனுக்கோ, செல்வவானுக்கோ, குருவுக்கோ, பார்ப்பானுக்கோ, மற்றும் பெரும் பதவியில் இருக்கின்றவன் என்பவனுக்கோ இக் குறைகள் இல்லை என்று சொல்லிவிடமுடியாது. இவர்களுக்குள்ள பெருமையெல்லாம் அன்னியர்கள் இவர்களைப் பெருமையாய் நினைக்கின்றார்கள் என்பதைத் தவிர தங்கள்



www.thamizham.net - Free E book No 3041

தங்களுக்குச் சொந்தத்தில் துக்கமும், கவலையும் இல்லாதவர்கள் இல்லவேயில்லை. மத சம்பந்தமான ஆதாரங்களில் காணப்படும் மோட்சத்திற்கும், முத்திக்கும் சொல்லப்படும் கருத்தெல்லாம் கவலையும், துக்கமுமற்ற தன்மை என்றுதான் சொல்லப்படுகின்றதே யொழிய, மற்றபடி வேறு ஒரு லோகத்தில் போய்—'வெல்வெட்' மெத்தையில் சதா தூங்கிக் கொண்டிருப்பது என்று சொல்லப்படவில்லை. ஆனால், இப்படி எங்காவது ஒன்று, இரண்டு இடத்தில் சொல்லப்படுவதாய்ச் சொல்லப்பட்டாலும் அது புரோகிதர்களுடையவும், முல்லாக்களுடையவும், பாதிரிகளுடையவும் அவர்களுடைய கூட்டத்தாருடையவும் வயிற்றுப் பிழைப்பிற்காகக் கற்பித்துக்கொண்ட புராணப் பிடுங்கல், கற்பனை என்பதை— எல்லா தத்துவஞான அறிஞர்களும் ஒப்புக்கொள்கின்றார்கள். ஆகையால், பகுத்தறிவுள்ள மனித ஜீவர்கள் வாழ்க்கையில் கவலையும் துக்கமுமில்லாத ஒரு நிலையை ஒரு நாளும் வெறுக்கவோ, மறுக்கவோ முடியவே முடியாது.

ஆகவே, பொதுவுடைமை என்பது பொது மனித தர்மமென்றும்; சகோதரத் தன்மையும், சமத்துவத் தன்மையும் கொண்டதென்றும்; வேதாந்த தத்துவத்துக்கும், ஆத்திகத் தன்மைக்கும், தத்துவத்திற்கும் ஏற்றது என்றும்; மதத் தலைவர்களுக்கும், தேசியத்துக்கும், நீதிக்கும், பகுத்தறிவுக்கும் ஒத்ததென்றும்; அரசர்களுக்கும் செல்வவான்களுக்கும் பாதிரிப் புரோகிதக் கூட்டங்களுக்கும் நன்மை பயக்கக்கூடியதென்றும்; பொதுவுடைமைத் தத்துவமேதான் மோட்ச நிலை என்பதும், முத்திநிலை என்பதுமாகும் என்றும் ஒருவாறு சுருக்கமாய் விளக்கிக் காட்டியிருக்கிறோம்.

['குடிஅரசு'—தலையங்கம்—10-9-1933]

## 2. மே தினம்

1933ஆம் வருடம் மே மாதம் 21-ந்தேதி ஞாயிற்றுக்கிழமை, சுயமரியாதையோரால் 'மே தினம்' தமிழ்நாடு முழுமையும் கொண்டாடப்படும்.

உலகெங்கும் கடந்த 50 வருஷமாக மே தினத்தை ஒரு பெருநாளாகத் தொழிலாளர், கிருஷிகள் முதலியோர் கவனித்து வருகின்றார்கள். தாழ்த்தப்பட்டவர்களுக்கும், ஒடுக்கப்பட்டவர்களுக்கும், ஏமாற்றப்பட்டவர்களுக்கும் இந்நாள் ஒன்றே உவந்த தினமாகும்.

இந்நாளில் கோடான கோடி மக்கள் தாங்கள்படும் கஷ்டங்களையும், குறைகளையும் தெரிவிப்பான் வேண்டி, ஆங்காங்கு கூட்டங்கள் போடுவதும், ஊர்வலம் வருவதும், உபந்யாசங்கள் செய்வதும் வழக்கமாயிருந்து வருகிறது. இவ் வருஷம் 'மே' தினமாகிய சென்ற திங்களில் (1933, மே 1) ஆங்கில நாட்டிலும் (England), பிரான்சு (France), ரஷ்யாவிலும் (Russia), ஜெர்மனி (Germany), இத்தாலி, (Italy), அமெரிக்காவிலும் (America), இந்தியாவிலும் (India), ஜப்பானிலும் (Japan)—மற்றுமுள்ள தொழிலாளர், முதலாளி தேசங்களிலும் கோடானுகோடி மக்கள் தம்தம் குறைகளைத் தெரிவித்தும், குறைகளுக்குப் பரிகாரம் தேடியும், யோசித்தும் பற்பல தீர்மானங்கள் செய்தும் வந்திருக்கின்றனர்.

இந்த வருஷம், பாரிஸ் பட்டணம், இந்நாளைத் தொழிலாளர் விடுமுறை நாளாகக் கொண்டாடியது. சமதர்ம நாடாகிய சோவியத் ரஷ்யாவில் 16 கோடி ஆண், பெண், குழந்தைகள் அடங்கலாக யாவரும் ரஷ்ய தேசமுழுமையும் இத் தினத்தைக் கொண்டாடினார்கள். சமதர்மிகளாகிய நாமும் இத் தினத்தைக் கவனிக்காமலிருப்பது பெருங்குறைவேயாகும். இம் மாதம் முதல்நாள் கடந்துவிட்ட போதிலும் வருகிற ஞாயிற்றுக்கிழமை மே மாதம் 21ஆம் தேதி சுயமரியாதை சமதர்ம சபைகள் யாவும், சமதர்மக் கொள்கைகளை ஏற்றுக்கொண்ட சங்கங்கள் யாவும், அத் தினத்தைப் பெருந் தினமாகக் கொள்ளல் மிக்க நலமாகும். அன்று காலையிலும், மாலையிலும் அந்தந்தக் கிராமங்களிலும், பட்டணங்

www.thamizham.net - Free E book No 3041

களிலும்—சமதர்மிகள் ஊர்வலம், சமதர்ம சங்கீதங்களுடன் வரலாம்; ஆங்காங்கு கூட்டங்கள் கூட்டி சமதர்மம் இன்னதென்றும், தொழிலாளருக்கும் விவசாயிகளுக்கும் விளக்கமுறச் செய்யலாம்; துர்ப்பழக்க ஒழுக்கங்களை ஒழிக்குமாறு பல தீர்மானங்களைச் செய்யலாம். இவ்விதமாக ஒழுங்காகவும், நியாய முறைப்படி கூட்டங்களையும் ஊர்வலங்களையும் நடத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கின்றேன்.

['குடி அரசு'-அறிக்கை—14-5-1933]

சர்வ தேசங்களிலுமுள்ள தொழிலாளர்கள்—ஆண்களும், பெண்களும் மே மாதம் 1-ஆம் தேதியைத் 'தொழிலாளர் தின'மாகக் கொண்டாடி வருகிறார்கள்,

ரஷ்ய சமதர்மத் தொழிலாளர்கள், தாங்கள் வெற்றி பெற்றுவிட்டதின் சந்தோஷத்தையும், பூரிப்பையும் அதன் பலனையும் எடுத்துக் காட்டுகிற தோரணையில் மே தினத்தை ரஷ்யாவில் கொண்டாடுகிறார்கள்.

பிற தேசங்களில், தொழிலாளர்களின் குறைபாடுகளைப் பகிரங்கப்படுத்தி, பரிகாரம் வேண்டுகிற முறையிலும்; தொழிலாளர்களின் சுபீட்ச வாழ்க்கை, சமதர்ம முறையாலும், தொழில் நாயக அரசாலும் (Ergotacracy) அதாவது—தொழிலாளர் குடி அரசாலுமே (Proletarian democracy) சித்திக்குமெனத் தீர்மானிக்கும் முறையிலும் 'மே தினம்' கொண்டாடப்படுகிறது.

இந்தியாவிலும் சில வருஷங்களாக, 'மே தினம்' இங்கொரு இடத்திலும் அங்கொரு இடத்திலுமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. சென்ற வருஷத்தில் இந்தியாவில் பல இடங்களில் கொண்டாடப்பட்டது. ஆனால், தமிழ்நாட்டிலோ மே மாதம் முதல் தேதி கொண்டாடப்பட்டது. பின், நமது பிரத்தியேக வேண்டுகோளின்படி மே மாதம் 21 ஆம் தேதி தமிழ் நாடெங்கணும் கொண்டாடப்பட்டது.

சுயமரியாதை வீரர்களே! சமதர்மிகளே! தொழிலாளர்களே! தொழிலாளர்களின் தோழர்களே! இந்த வருஷத்தில் மே தினத்தை மே மாதம் முதல் தேதியில் தமிழ் நாட்டின் ஒவ்வொரு ஜில்லாவிலும் உள்ள நகரங்கள்தோறும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களைத் திரட்டி வெகு விமரிசையாகக் கொண்டாட வேண்டுகிறேன்.

தேசம், மதம், சாதி என்கின்ற தேசிய உணர்ச்சிகளை மறந்து, உலகத் தொழிலாளர் எல்லாம் ஒரே சமூகமாய் ஒன்றுபட்டு எல்லா தேச, மத, சாதி மக்களுக்கும் வாழ்க்கையில் சம உரிமையும் சம சந்தர்ப்பமும் கிடைக்கும்படி கொண்டாட வேண்டும் என்றும்; தொழிலாளர் சம தர்ம இராஜ்யம் ஏற்பட வேண்டும் என்னும் ஒரே அபிப்பிராயம் ஏற்படும்படி தொழிலாளர்களிடையில் பிரச்சாரம் செய்யவும், வேறு சாதகங்கள் பெறவும் இம் முயற்சியில் ஈடுபடவேண்டும் என்றும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

['குடி அரசு'-அறிக்கை—28-4-1935]

## 3. பொதுவுடைமையா? பொது உரிமையா?

தமிழ்நாட்டில் பொதுவுடைமைப் பிரச்சாரகர்கள் பெரிதும் பார்ப்பனர்களாய் இருப்பதால், நாம் அவர்களிடம் வேறு என்ன எதிர்பார்க்க முடியும்? காங்கிரஸ் என்றாலும், பொதுவுடைமை என்றாலும், இந்து மதம் என்றாலும் அல்லது வேறெந்த பொதுநலப் பேரை வைத்துக்கொண்டாலும் பார்ப்பனர்கள் செய்யும் பிரச்சாரம் எல்லாம் ஜஸ்டிஸ் கட்சியையும், சுயமரியாதைக் கட்சியையும் பற்றி விஷமப் பிரச்சாரம் செய்வதல்லாமல் அவர்களால் வேறு என்ன செய்யமுடியும்?

www.thamizham.net - Free E book No 3041

இலண்டன் பார்லிமெண்டில் சென்ற மாதம் ஒரு மெம்பர் இந்தியா மந்திரியை ஒரு கேள்வி கேட்டார். அதாவது :—

' உலகத்திலேயே எல்லா மக்களையும்விடத் தங்களை உயர்ந்த பிறவிகள் என்று சொல்லிக்கொண்டும்—மற்றவர்களை விட்டு விலகி தனித்து இருந்துகொண்டும்—பாடு படாமல் இராஜபோகம் அனுபவிக்கும் இந்தியப் பார்ப்பனர்கள் இந்த நாட்டுப் பொதுவுடைமைக்காரர்களுடன் சேர்ந்திருக்கிறார்களே, இதன் அர்த்தமென்ன? என்று ஒரு கேள்வி கேட்டார். இதற்கு இந்தியா மந்திரி சிரித்தாராம் !

அதுபோல், பார்ப்பனர்கள் பாடுபடாமலும், எவ்விதக் குறைபாடு இல்லாமலும் வாழ்ந்துகொண்டும் மற்றவர்களுக்கு மேலானவர்களாக இருந்துகொண்டும் பொதுவுடைமைப் பிரச்சாரத்தில் காங்கிரசையும், பார்ப்பனீயத்தையும் கண்டிக்காமல்—அவற்றைக் கண்டிக்கும் ஜஸ்டிஸ் கட்சியையும், சுயமரியாதைக் கட்சியையும் ஏன் குறை கூறுகிறார்கள் என்றால்—இந்த இரண்டு கட்சிகளும் வருணாசிரம காங்கிரசுக்கும், பார்ப்பனீயத்திற்கும் விரோதமாக இருப்பதால்தானே ஒழிய வேறில்லை.

பார்ப்பனர்களுக்கே நன்றாய்த் தெரியும் ! என்னவென்றால், வருணாசிரமத்தையும், பார்ப்பனீயத்தையும் பத்திரப்படுத்திவிட்டு எப்படிப்பட்ட பொதுவுடைமையை ஏற்படுத்தி விட்டாலும், திரும்பவும் அந்த உடைமைகள்—வருணாசிரமப்படி பார்ப்பானிடம் தானாகவே வந்து விடும் என்றும் ; சாதி இருக்கிறவரையில் எப்படிப்பட்ட பொதுவுடைமைத் திட்டம் ஏற்பட்டாலும் பார்ப்பனர்களுக்கு ஒரு கடுகளவு மாறுதலும் ஏற்படாமல் அவர்கள் வாழ்வு முன்போலவே நடைபெறும் என்றும் தைரியம் கொள்ளத்தெரியும்.

ஆதலால், பார்ப்பனர் பேசும் பொதுவுடைமை, ' கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைப்பதால் ' அவர்களுக்கு நட்டம் ஒன்றும் இல்லை என்பதோடு, உடைபட்ட தேங்காயும் அவர்களுக்கேதான் போய்ச்சேரும். அதனால்தான் பார்ப்பனர்களுக்குப் பொதுவுடைமைப் பிரச்சாரத்தில் அவ்வளவு உற்சாகம் ஏற்படக் காரணமாகும்.

நம் தொழிலாளி மக்களும், ஏழை மக்களும், பொறுப்பற்ற வாலிபர்களும் யோசனை அற்றவர்களாதலால் இதில் சுலபத்தில் ஏமாந்து மயங்கி விடுகிறார்கள்.

பொதுவுடைமை வேறு ; பொது உரிமை வேறு. பொதுவுடைமை என்பது சமபங்கு என்பதாகும் ; பொது உரிமை என்பது சம அனுபவம் என்பதாகும்.

இந்நாட்டில் பார்ப்பனீயத்தால்—சாதியால் கீழ்ப்படுத்தப்பட்ட மக்களுக்கு சம உடைமை இருந்தாலும் சம உரிமை (அனுபவம்) இல்லை என்பது குருடனுக்கும் தெரிந்த சங்கதியாகும். அதனாலேயே அவர்கள் உடைமை கரைந்துகொண்டே போகிறதுடன் உடைமைக்கு ஏற்ற அனுபவமும் இல்லாமல் இருக்கிறார்கள்.

உதாரணமாக, இராஜா சர். அண்ணாமலை செட்டியார் கோடீஸ்வரர் ; சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் பல இலட்சங்கட்கு அதிபதி ; இருவரும் பெரும் தனி உடைமைக்காரர்கள். இவர்களுக்கு ஒரு சாதாரண பிச்சைக்காரப் பார்ப்பானுக்கு இருக்கும் பொது உரிமை இல்லை என்பதை அவர்களே ஒப்புக்கொள்வார்கள். ஆனால், தனி உரிமை உள்ள ஒரு கீழ்த்தரப் பிச்சைக்காரப் பார்ப்பானுக்கு உடைமையே அடியோடு இல்லாவிட்டாலும் அவனுடைய போக போக்கியம் குறைவு படுவதே இல்லை. அன்றியும், பாடுபடாமல்—கை முதல் இல்லாமல்—தனக்குள்ள தனிஉரிமை காரணமாகவே தன் மகனை அய். சி. எஸ். படிக்க வைத்து, ' ஜில்லா கலெக்டர் ', ' ஜில்லா ஜட்ஜ் ', ஏன்—'அய்க்கோர்ட் ஜட்ஜா'கவும், ' சங்கராச்சாரி ', ' ஜீயர் ' ஆகவும் ஆக்க முடிகிறது.

இந்த நிலையில் தனிஉரிமையை முதலில் ஒழித்துவிட்டோமானால், தனிஉடைமையை மாற்ற அதிகப்பாடுபடாமலே இந்த நாட்டில் பொதுவுடைமை ஏற்பட வசதி உண்டாகும். உண்மையான பொதுவுடைமையும் நிலைத்து நிற்கும்.

www.thamizham.net - Free E book No 3041

குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால், சாதி காரணமாகத்தான் பலர் மேன்மக்களாய்–பணக்காரர்களாய் இருக்கிறார்கள்; இருக்கவும் முடிகிறது. சாதி காரணமாகத்தான் எல்லோரும் கீழ் மக்களாய், ஏழைகளாக இருக்கிறார்கள்; இருக்கவும் வேண்டியிருக்கிறது. இது இன்றையப் பிரத்தியட்சக் காட்சியாகும்.

ஆங்கிலத்தில் 'கேஸ்ட்', 'கிளாஸ்' (caste, class) என்ற இரண்டு வார்த்தைகள் உள்ளன. அதாவது தமிழில் சாதி—வகுப்பு என்று சொல்லப்படுவனவாகும். சாதி–பிறப்பினால் உள்ளது; வகுப்பு–தொழில் அல்லது தன்மையினால் ஏற்படுவது.

தொழிலும், தன்மையும் யாருக்கும் ஏற்படலாம். சாதிநிலை, அந்தந்தச் சாதியில் பிறந்தவனுக்குத்தான் உண்டு; பிறக்காதவனுக்குக் கிடையவே கிடையாது.

மேல் நாட்டில் சாதி இல்லாததால், அங்கு பொதுவுடைமைக்கு முதலில் வகுப்புச் சண்டை துவக்கவேண்டியதாயிற்று. இங்கு சாதி இருப்பதால் பொதுவுடைமைக்கு முதலில் சாதிச் சண்டை துவக்கவேண்டியதாகும்.

பார்ப்பானும், பார்ப்பனீய உணர்ச்சியும் உள்ள மக்கள் பொதுவுடைமை வேஷம் போடுவதால் சாதிச் சங்கதியை மூடிவிட்டு, ஆகாத காரியமான—ஆனாலும் தங்களுக்குக் கேடில்லாததான வகுப்பு (class) உணர்ச்சியைப்பற்றிப் பேசி—சாதியை ஒழிக்கப் பாடுபடும் கட்சிகளோடு ஏழைகளை மோதவிடுகிறார்கள்; சாதியை ஒழிக்கச் செய்யப்படும் முயற்சியையும் அழிக்கப் பார்க்கிறார்கள்.

பார்ப்பனர்களுக்கும் மற்றும் மேல் சாதிக்காரர்களுக்கும் இருக்கும் உயர்வை முதலில் ஒழித்தாகவேண்டும். இதிலேயே அரைப் பாகம் பொதுவுடைமை ஏற்பட்டுவிடும். அதாவது, சாதியினால் அனுபவிக்கும் ஏழ்மைத்தன்மையும், சாதியினால் சுரண்டப்படுபவர்களாக இருக்கும் கொடுமையும் நம் பெரும்பான்மை மக்களிடமிருந்து மறைந்துவிடும்.

பொது உரிமை இல்லாத நாட்டில் ஏற்படும் பொதுவுடைமை மறுபடியும் அதிக உரிமை இருக்கிறவனிடம்தான் போய்ச் சேர்ந்துகொண்டே இருக்கும் என்பது பொதுவுடைமைத் தத்துவத்திற்குப் பாலபாடம் என்பதை மக்கள் உணரவேண்டும்.

இன்றுள்ள கோயில், குளம், உற்சவம், சடங்கு, பண்டிகை, சுபகாரியம், அசுப காரியம் என்பவைகள் எல்லாம் பிறவி காரணமாகவே சிலருக்கு அதிக உரிமை இருப்பதாலும்—சிலர் சுரண்டுகிறவர்களாய் இருப்பதாலும் ஏற்பட்டு இருந்து வருபவைகளே ஒழிய—அவர்களுக்காகவே இருந்து வருபவைகளே ஒழிய இவற்றிற்கு வேறு காரணம் ஒன்றுமே இல்லை. ஆகவே, சுரண்டப்படும் சாதியாரிடத்தில் உள்ள சாதி இழிவை, மடமையை ஒழிக்க சுரண்டும் சாதியார் முயற்சிப்பார்களா? அல்லது ஒழியத்தான் சம்மதிப்பார்களா?

திராவிடநாடு பிரிந்து—கிடைத்து, சுரண்டும் சாதி ஒழிக்கப்பட்டு, சம உரிமை எல்லோருக்கும் ஏற்படும்படியான உணர்ச்சி வந்துவிட்டால், பிறகு நாம் சுலபத்தில் எதுவும் செய்துகொள்ளமுடியும். அந்தக் காரியத்திற்காகத்தான் சுயமரியாதைக் கட்சி முயலுகிறது. இந்தக் கட்சியில் இன்று மேல்சாதியானுக்கோ அல்லது சாதிப் பேய்—பார்ப்பனீயப் பேய் பிடித்த பெரிய மனிதர்கள் என்பவர்களுக்கோ எவ்வித அதிகப்படியான செல்வாக்கோ, ஆதிக்கமோ இல்லை என்பதையும், இக் கட்சி சாதியிலேயே தொழிலாளர்களாகவும், உண்மைத் தொழிலாளர்களாகவும் ஏழைக் கூலி மக்களாகவும் உள்ள பெரும்பான்மையான மக்களுடைய கட்சி என்பதாகவும் மக்கள் உணரவேண்டும்.

['குடிஅரசு'–தலையங்கம்—25-3-1944]

www.thamizham.net - Free E book No 3041

## 4. பொதுவுடைமைக்கு விரோதியா ?

நம்முடைய மக்களின் குறைபாடுகளை உணராமல், நமக்குள்ளே ஒற்றுமை இல்லாமல், பார்ப்பனர்மீது குறைகூறுவதில் என்ன இலாபம் ? இவ்வளவு காலம் எடுத்துக் கூறியும் மதத் துறையிலே—கடவுள் துறையிலே—சாதித் துறையிலே யார் அறிவோடு நடந்துகொள்கிறார்கள் ? கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்வதோ, தேர்த் திருவிழா உற்சவம், கலியாணம், கருமாதி செய்வதோ நின்றதா ? மகாமகக் குளத்திற்குப் போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வது குறைந்ததா ? இந்த சூழல்களைக் கவனியாமல் நாடு ஏழை நாடு, மக்கள் படிக்காதவர்கள் என்றால் என்ன நியாயம் ? இந்த நாடு ஏழை நாடா ? டாட்டாக்களும், பிர்லாக்களும் ஒரு மினாட்சியம்மனிடத்தில் பிச்சை வாங்க வேண்டாமா ? படிக்க வசதியில்லை. குடிக்கக் கஞ்சியில்லை ! ஆனால், குழவிக் கல்லுக்குத் தங்க ஒடு ; செப்புச் சிலைக்கு வெள்ளித் தேர் ; அதை இழுப்பதற்கு ஆயிரம் முட்டாள்கள்-என்ன நீதி ?

இம் மாதிரியான அறிவுக்குப் பொருத்தமற்ற செயல்களை நீக்கவேண்டும். சிலர் நம்மீது குற்றஞ் சாட்டுகிறார்கள், நாம் பொதுவுடைமைக்கு விரோதிகள் என்று. இவர்களுக்குத் தெரியுமா, இந்த நாட்டில் யார் பொதுவுடைமைத் தத்துவத்தை முதலில் பேசியதென்று ? 14-11-1935-ல், ஜஸ்டிஸ் கட்சியின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் ஒப்புக்கொள்ளப்பட்ட என்னுடைய 15 திட்டங்களை இவர்கள் படித்துப் பார்க்கவேண்டும் ; பிறகு கூறட்டும்—இவ்வளவு அரிய பெரிய திட்டங்களையுடைய பொதுவுடைமைக் கட்சி, ஏதாவது உண்டா என்பதை !

[தஞ்சை மாவட்டத்தில், 26-11-1944 முதல் 30-11-1944 முடிய சொற்பொழிவு—' குடி அரசு ' 9-12-1944]

## 5. கம்யூனிசம்

தலைவரவர்களே ! தோழர்களே ! தாய்மார்களே !

கம்யூனிசம் என்பதற்குத் தமிழிலே பொதுவுடைமை என்பார்கள். இன்றைய தினம் உடைமை என்று கருதப்படுவதெல்லாம் தனித்தனி மனிதனுக்குச் சொந்தம். பொதுவுடைமையென்றால் எந்தச் சொத்தும் எந்த மனிதனுக்கும் சொந்தமல்ல. பொதுவுடைமை நாட்டில் அந்த நாட்டுச் சொத்துக்கள் எல்லாம் சர்க்காருக்கு (பொது மக்களுக்கு)ச் சொந்தம். நிலமாக இருந்தால் எல்லா மக்களும் பாடுபட்டுப் பயிர் செய்வது ; தொழிற்சாலையாக இருந்தால் எல்லோரும் தொழில் பண்ணுவது ; பாடுபட்டு வரும் பொருளை எல்லோரும் அனுபவிப்பது.

உதாரணமாக, இந்த உறையூர் ஓர் பொதுவுடைமை நாடாக ஆகின்றது என்று வைத்துக் கொள்வோம். உறையூர் மக்கள் எல்லாம் ஒரு குடும்பம் போன்றவர்கள். எப்படிக் குடும்பத்தின் சொத்தானது குடும்பத்திலுள்ள அத்தனை பேருக்கும் பொதுவானதாகின்றதோ, குடும்பத்தின் எல்லா மக்களும் எப்படிப் பாடுபட்டு உழைக்கின்றார்களோ, பிறகு வரும் வருவாயைக் குடும்பத்திலுள்ள எல்லோரும் எப்படி அனுபவிக்கின்றார்களோ, அதுபோலத்தான், பொதுவுடைமை நாடு என்பதும்.

நாட்டு மக்கள் எல்லாம் ஒரு குடும்பம்போல ; எல்லா மக்களும் பாடுபடவேண்டும் ; வருகின்ற இலாபம்—விளைபொருள் முதலியவற்றை எல்லா மக்களுக்கும் பகிர்ந்தளிப்பது. இதுதான் பொதுவுடைமையாகும்.

இதன் அடிப்படைத் தத்துவம் என்ன ? இப்படிப்பட்ட நிகழ்ச்சி ஏன் நடத்தப்படுகின்றது ? என்பனவற்றையெல்லாம் புரிந்துகொண்டால்தான் பொதுவுடைமைத் தத்துவத்தின் சிறப்பு விளங்கும். மனிதன் அறிவைக் கொண்டு வசதிகளைப் பெருக்கிக் கொள்ளலாம். ஆனால், மனிதனென்றால் கவலை உள்ளவனாகவே இருக்கின்றான்.

www.thamizham.net - Free E book No 3041

பிரதமரானாலும், முதன்மந்திரியானாலும் அவர்களுக்கும் கவலைதான்; 'கோடீசுவரன்' ஆனாலும் அவனுக்கும் கவலைதான்; நாட்டை ஆளுபவர்களுக்குப் பல பிரச்சினைகளைச் சமாளிக்கவேண்டிய கவலை நிலை உண்டாகிறது.

'கோடீஸ்வர'னுக்கு—எப்படித் தனது ஒரு கோடி ரூபாயைக் காப்பது என்பது கவலை; அத்தோடு நின்று விடுவதில்லை; தனக்கு ஒரு கோடி ரூபாய்தானே உள்ளது—அடுத்தவனுக்கு 2 கோடி இருக்கின்றதே என்று தம்மினும் மேம்பட்டவனைப்பற்றிக் கவலையடைகின்றான்.

ஏழை தனக்குச் சாப்பாட்டிற்கு வழியில்லையே—அவன் நல்வாழ்வு வாழ்கின்றானே என்ற வேதனையடைகின்றான். குச்சு வீட்டுக்கும் வழியில்லாத ஒருவன், வசதிபடைத்த ஒருவன் பங்களாவில் வாழ்வதைப் பார்த்து மனம் புழுங்குகிறான். இதுபோலக் கவலை, மனக் குறையென்பது எல்லாத் துறைகளிலும் இருக்கின்றது.

பெண்டு பிள்ளைகள் மட்டும் சும்மாவா? சும்மா இருக்கின்ற மனிதன் ஒருத்தியைக் கட்டிக்கொண்டு எவ்வளவு வேதனையும் கவலையும் படுகின்றான்? கட்டிக் கொண்டவளைக் காப்பற்றணும்; மற்றவன் கண்ணடிக்காமல் பார்த்துப் பாதுகாக்கணும்; அவள் குட்டிகள் போட்டால் அவைகளைப் பாதுகாக்கணும்; படிக்கவைக்கணும்; கலியாணம் செய்யணும். அப்புறம் கல்வி; இரண்டாவது, உத்தியோகம்—வேலை தேடிக் கொடுக்கணும். பிறகு, 'பிரமோஷனு'க்குப் பிறரிடம் பல்லைக் காட்டிக் கெஞ்சணும்; மாற்றலானால் 'கேன்சல்' பண்ணிச் சொந்த ஊருக்குக் கொண்டு வந்துவிட வேண்டும் எனக் கெஞ்சணும். இப்படியாக சதா கவலை, மனக் குறைவு உடையவனாகவே மனிதன் இருக்கின்றான். இந்தக் கவலைகளை, மனக் குறைகளை எல்லாம் பொதுவுடைமை ஒன்றினால்தான் நிவர்த்திக்க முடியும்.

பொதுவுடைமை என்று கூறுவதன் அடிப்படைத் தத்துவமே, மனிதன் கவலையற்ற வாழ்வு வாழவேண்டும் என்பதுதான். சொந்த உடைமை என்பது கவலை நிறைந்த வாழ்வாகும்.

மனிதனுக்கு உணவுப் பண்டம் பற்றவில்லையானாலும், சற்றுக் குறைவாக இருப்பதனாலேயே குறைகூறமாட்டான். ஒருவனுக்கு அதிகம்; இன்னொருவனுக்குச் சும்மா—ஒன்றுமில்லை என்றிருந்தால்தானே குறைபாட்டுக்கு—எதிர்ப்பதற்கு இடமேற்படும்!

மனிதனுடைய கவலைக்கும் குறைபாட்டிற்கும் பரிகாரமாக, முடிந்த முடிவாக அறிஞர்களால் பலகாலும் சிந்திக்கப்பட்டு ஏற்படுத்தப்பட்டதுதான் பொதுவுடைமைத் தத்துவம்.

இதன்மூலம் சந்தோஷமான, கவலை-துக்கமற்ற, தெளிவுள்ள வாழ்க்கை மக்களுக்குக் கிட்டுகின்றது. மனிதன் சிந்தித்து அறிவை வளர்த்துக்கொண்டே போனால் அங்குதான் (பொதுவுடைமையில்தான்) கொண்டுபோய்விடும்.

இன்றைக்கு இந்தக் கொள்கையினை ஏற்றுக்கொண்ட மக்கள் 100 கோடிகளுக்கு மேல் உலகில் வாழ்கின்றார்கள். ரஷ்யா பொதுவுடைமை நாடு; அங்கு 25 கோடி மக்கள் வாழ்கின்றார்கள். அடுத்து சீனா; அங்கும் கம்யூனிஸ்ட் ஆட்சிதான், 75 கோடி மக்கள் வாழ்கின்றார்கள். இவை இல்லாமல் அங்கேரி, போலந்து, செக்கோஸ்லோவேக்கியா, ஆஸ்ட்டிரியா, கிழக்கு ஜெர்மனி—இன்னும் அனேக கம்யூனிஸ்ட் நாடுகளும் உலகில் உள்ளன. ஏராளமான மக்கள் அங்கும் வாழ்கின்றார்கள்.

இந்த நாடுகளில் மக்களுக்குக் கடவுளோ, மதமோ, சாஸ்திரமோ, முன்னோர்கள் நடப்போ ஒன்றும் கிடையாது; அறிவுதான் பிரதானம்.

www.thamizham.net - Free E book No 3041

நம் நாட்டிலும் கம்யூனிஸ்டுக்காரர்கள் இருக்கிறார்கள்; இவர்கள் தங்கள் வயிற்றுப் பிழைப்புக்கு மட்டும் பொதுவுடைமையைச் சாதனமாகப் பயன்படுத்திக்கொள்கின்றார்களே ஒழிய, பொதுமக்கள் கடைத்தேற ஒன்றும் செய்யவில்லை; பொதுவுடைமை என்றால் மக்களுக்கும் ஒன்றும் தெரியாது.

எனவே, நாட்டில் பொதுவுடைமைக் கொள்கையைக் கொண்ட அரசாங்கம் ஏற்பட்டு முயன்றால்தான், மக்களின் குறைபாடுகள் நீங்குமே ஒழிய, பொறுக்கித் தின்னும் இந்தக் கம்யூனிஸ்ட்டுகளின் காலித்தனம், பலாத்காரத் தூண்டுதல் மூலம் ஒன்றும் முடியாது. அரசாங்கத்தைக் கைப்பற்ற ஆட்சி இந்தத் துறையில் ஈடுபட்டால்தான் மார்க்கம் ஏற்படும். ஒருவன் சட்டைப் பையில் இருப்பதை இன்னொருவன் எடுப்பதுபோல், ஒருவன் நிலத்தில் மற்றொருவன் பிரவேசிப்பதால் இது ஆகிவிடாது.

மோட்சம், முக்தி என்ற வார்த்தைக்கு 'துக்கநாசம்' 'சுகப் பிராப்தி' என்பது பொருள்.

இந்தத் துக்க நிவர்த்திக்கும், குறைபாடுகள் ஒழிப்பிற்கும் பரிகாரம்—பொது வுடைமைதான் ஆகும்.

குறைபாடு இரண்டு விதங்களில் உண்டு. போதவில்லை என்பது ஒன்று—அதாவது கால்படி அரிசி தேவையானால் அதற்கும் குறைவாகக் கிடைக்கின்றதே என்பது.

இரண்டாவது, போதுமான அளவுக்குமேல் வேண்டும் என்று ஆசைப்படுவது. உதாரணமாக ஒரு 'ரூமில்' வசிப்பவன் இரண்டு ரூம்கள் இருந்தால் நன்றாய் இருக்கும் என்று ஆசைப்படுவது.

இப்படி ஆசையினால் ஏற்பட்ட குறையும் தேவையினால் ஏற்பட்ட குறையும் பொது வுடைமையினால் தீர்ந்துவிடும்.

இருக்கின்ற உணவுப் பொருள் எல்லோர்க்கும் பகிர்ந்து கொடுக்கப்படும்போது, ஒரே விதமாக எல்லோருக்கும் உணவுப் பொருள் கிட்டுவதால், தமக்குக் குறைவு என்ற எண்ணம் ஏற்படாது; எல்லோருக்கும் ஒரு 'ரூம்'தான் என்று எண்ணி சமாதானம் அடைந்து கொள்வான்.

இதனாலேயே, போட்டி பொறாமை ஏற்பட வழி இருக்காது; கவலை ஒழிந்து எல்லோரும் மன நிறைவோடு வாழச் செய்யும்.

ரஷ்யாவில் புருஷனும் மனைவியுமாக வாழ்கின்றவர்களுக்கு வசிக்க அறை கொடுக்கின்றார்கள்; மற்ற வசதிகளும் செய்துகொடுக்கின்றார்கள். இருவரும் இஷ்டப் பட்டுச் சேர்ந்து வாழுகின்றனர்; இஷ்டம் இல்லாதபோது பிரிந்துகொள்கின்றனர்.

இருவரும் ஆபீசுக்குப் போகும்போது முத்தம் கொடுத்துவிட்டுப் போகின்றனர். திரும்பி வந்து பார்த்தால் 'டேபிளில்' ஒரு கார்டு இருக்கும். 'இதுவரைக்கும் நாம் இருவரும் இஷ்டப்பட்டுக்கூடி சந்தோஷமாக வாழ்ந்தோம். இனி எனக்கு இஷ்டம் இல்லை; பிரிந்து கொள்வோம்' என்று இருவரில் யாராவது ஒருவர் எழுதிவைத்து இருப்பார்கள்; ஒரு தகராறும் இல்லாமல் பிரிந்துகொள்வார்கள். அதனால் ஏதாவது விவகாரம் ஏற்படும் என்றால்—அது, இருவருக்கும் பிறந்த குழந்தைகளைப் பற்றியேயாகும்; 100-க்கு 90 பங்கு அவர்களே அதை 'பைசல்' பண்ணிக்கொள்வார்கள்—'இந்தப் பிள்ளை உன்னோடு இருக்க வேண்டியது; இது என்னோடு இருக்கவேண்டியது' என்று. தகராறு ஏதாவது ஏற்பட்டால்,அதற்கு என்று சில 'கோர்ட்டு'கள் இருக்கின்றன; அவைகள் அதைத் தீர்த்து வைக்கும்.

அங்கு. ஒருவன் மனைவியை இன்னொருவன் அனுபவித்தான் என்பது பற்றிய பேச்சே வராது; அனுபவிக்கப் பலாத்காரம் பண்ணினான் என்றால்தான், 'கேஸ்'.

www.thamizham.net - Free E book No 3041

அங்கு பிள்ளைகளைத் தாய் தந்தையர்தான் காப்பாற்றவேண்டும், வளர்க்கவேண்டும் என்ற கட்டாயமில்லை. அரசாங்கமே ஏற்று வளர்த்துக்கொள்கின்றது. இங்கு நம்மவர்கள் 'எதற்கடா குழந்தை?' என்றால், 'செத்த பிறகு கொள்ளிவைக்க, ஈமக்கடன் செய்ய' என்கின்றான்; மற்றும் 'அந்திய காலத்தில் எங்களைக் காப்பாற்ற, கஞ்சி ஊற்ற அவசியம் குழந்தை வேண்டும்' என்கின்றான்; 'என் சொத்துக்கு வாரிசாக வேண்டும்' என்கின்றான்.

ரஷ்யாவில் அப்படியல்ல. அவன் உடலில் வலுவுள்ளவரைக்கும் உழைத்துச் சாப்பிடுகின்றான்; வயோதிகம் வந்தால் அரசாங்கம் அவனுக்கு உணவு முதலிய வேண்டிய சவுகரியங்கள் எல்லாம் செய்துகொடுத்துக் காப்பாற்றுகின்றது. அங்கு தனி மனிதனுக்குச் சொத்து வைத்துக்கொள்ள உரிமையில்லாத காரணத்தினால், தம் சொத்துக்கு வாரிசு—பிள்ளை இருந்தாகவேண்டும் என்ற அவசியமுமில்லை.

தோழர்களே! பொதுவுடைமை நாட்டில் கடவுளோ, மதமோ, சாஸ்திர நம்பிக்கையோ இல்லை. அங்கு உயர்ந்தவன், தாழ்ந்தவன்; உயர்ந்த உத்தியோகஸ்தன், தாழ்ந்த உத்தியோகஸ்தன் என்கின்ற நிலையுமில்லை. எல்லோரும் சமமானவர்கள்; எல்லோருக்கும் சம்பளம் (வாழ்க்கை வசதி) ஒன்றுதான்—வேலைதான் வேறு, வேறு. அங்கு பெரிய வேலையை ஒத்துக்கொண்டால் பொறுப்புக்கள் அதிகம் என்று கருதுவான்.

எனவே, அங்கு மேல், கீழ் என்று பாராட்டப்படுவதேயில்லை.

இதனால் அங்கு உற்பத்தி பெருகுகின்றது. இங்கு 100 பங்கு விளைகின்றதென்றால் அங்கு 150 பங்கு, 200 பங்கு விளைகின்றது.

அங்கு ஒரு ஆள் இத்தனை மணி நேரம்தான் வேலை செய்ய வேண்டுமென்றும், இவ்வளவு வேலை செய்தாக வேண்டுமென்றும் உள்ளது. 'டைம்' முடிந்தால் நம் நாட்டுத் தொழிலாளர்கள்போல அவர்கள் ஓடமாட்டார்கள்; அதிகப்படியாகக் கொஞ்சநேரம் வேலை, அவனாக முன்வந்து செய்வான். இப்படிச் செய்கின்றவர்களின் வேலைகளையும் நேரத்தையும் கணக்கிட்டு, வருஷமோ, மாதமோ ஆன பிறகு அவர்களுக்குப் பட்டம் கொடுத்து மரியாதை பண்ணுவார்கள்.

தோழர்களே! அங்கு இந்த மரியாதையினைத்தான் எதிர்பார்ப்பானேயொழிய அதிகப்படி பணத்தை எதிர்பார்க்கவேமாட்டான். அங்கு புரட்டோ, திருட்டோ ஏமாற்றுவதோ அடியோடு கிடையாது.

அங்குக் கழிப்பிணித்தனம் அவமானமாகக் கருதப்படும்; நாணயம் என்பது மக்களிடம் கரைபுரண்டு ஓடும். அங்கு, நான் கூறியதுபோல—மக்களுக்கு எந்தவிதமான குறைபாடுகளோ, கவலைகளோ இல்லை. இதன் காரணமாக மக்கள் அங்கு 100 வயதிலும் 120 வயதிலும் பல்லாயிரக்கணக்கானவர்கள் வாழ்கின்றார்கள்.

அங்கு 1915-ல் புரட்சி ஏற்பட்டது; 1920-ல் சோவியத் ஆட்சி என்று பிரகடனப் படுத்தினார்கள்; இன்றைக்குச் சுமார் 54 வருஷங்கள் ஆகின்றன. இந்தக் காலத்துக்குள்ளாக எவ்வளவோ மேம்பாடு அடைந்து இருக்கின்றது. எனவே, இங்கு எனக்குத் தோன்றிய பொதுவுடைமை என்பதுபற்றிச் சுருக்கமாகக் கூறினேன்.

[ திருச்சி சிந்தனையாளர் கழகச் சார்பில், உறையூரில், 9-1-1972-ல் ஆற்றிய சொற்பொழிவு—
'உண்மை'-பிப்ரவரி, மார்ச் 1972]



www.thamizham.net - Free E book No 3041

# 5. தொழிலாளர் இயக்கம்

## 1. தொழிலாளர் சங்கம் ஏன்?

அக்கிராசனர் அவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

நான் இதுவரை எந்தத் தொழிலாளர் சங்கத்திலும் பேசியதே இல்லை. டாக்டர் வரதராஜுலு நாயுடுவுடன் இரண்டொரு சங்கங்களுக்குப் போயிருக்கிறேன். ஈரோட்டில் கூடிய தொழிலாளர் மாநாட்டில் உபசரணைத் தலைவராக இருந்து இரண்டொரு வார்த்தைகள் பேசி இருக்கிறேன்.

பொதுவாக, 'தொழிலாளர் சங்கம்' என்றாலே எனக்கு அதனிடத்தில் விருப்பம் இருப்பதில்லை. அதில் ஒரு சத்து இருப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை. சில, வெறும் வெளி ஆசாமிகள் அதைத் தம் நன்மைக்கும் கீர்த்திக்கும் ஏற்படுத்திக்கொண்ட சாதனமென்பதே என்னுடைய வெகுநாளைய அபிப்பிராயம். அல்லாமலும், நமது நாட்டில் உண்மையான தொழிலாளிகளே கிடையாது.

நமது நாட்டில் இப்போது தொழிலாளிகள் என்று சொல்லப்படுவோரெல்லாம் தொழிலாளிகளல்லர். அவர்கள் எல்லாம் கூலிக்காரர்கள்தாம். தொழிலாளி என்பவன்—நாட்டின் நன்மைக்காக ஒரு தொழிலைக் கற்று அத்தொழிலைத் தானாகவே சுயேச்சையுடன் செய்து அதன் பலன் முழுவதையும் தானும் தன் நாட்டு மக்களும் அடையும்படியான முறையில் தொழில் செய்பவன்தான் தொழிலாளி. நீங்கள் அப்படியில்லை. ஏதோ ஒரு முதலாளியின் கீழ் தினக் கூலிக்கமர்ந்து உங்களுக்கு எவ்வித சுதந்திரம் இல்லாமல் முதலாளி சொல்லுகிறபடி செய்துவிட்டு, அதன் பலன் முழுவதும் அவரே அடையும்படி செய்து, உங்கள் ஜீவனத்திற்குக்கூட போதுமானதாயில்லாத கூலியை வாங்கிப் பிழைக்கிறீர்கள். ஒரு முதலாளிக்குக் கீழ் வேலை செய்து கூலி வாங்குபவன் எவ்வளவு பெரிய கூலிக்காரனானாலும் அவன் கூலிக்காரன்தான்; அடிமைதான்.

தொழிலுக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? தொழிலின் பலனுக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? தொழிலின் அருமை, உங்களுக்கு ஏதாவது தெரியுமா? காலையில் பட்டறைக்குள் நுழைந்தால் மாலை வரை அவன் சொல்லுகிறபடி உழைக்க வேண்டியது! வாரம் ஒரு முறை கூலி வாங்கிக்கொள்ள வேண்டியது! தெருக்களில் கூலிக்கு மூட்டை தூக்கி அவ்வப்போது கூலி வாங்கும் நபருக்கும், உங்களுக்கும் என்ன வித்தியாசம்? அவர்கள் தங்களுக்குக் கூலி போதாது, அதிக பாரமாயிருக்கிறது இன்னும் சேர்த்துக் கொடு என்று முதலாளியைக் கேட்பதற்கும்—நீங்கள் சங்கம் என்று பெயர் வைத்துக் கொண்டு செய்யும் தீர்மானங்களுக்கும் என்ன வித்தியாசம்? சில சமயங்களில் கூலிக்காரனாவது தான் தூக்கும் பாரத்தையும், தூக்கிக்கொண்டு செல்லும் தூரத்தையும் அறிந்து கூலி அதிகம் கேட்கிறான். நீங்கள் அதுகூட இல்லை. உங்கள் தொழிலின் அருமை இன்னதென்றுகூட உங்களுக்குத் தெரியாமல், முதலாளியைப் பார்த்து, 'நீ இவ்வளவு ரூபாய் கொள்ளையடிக்கிறாயே; நீ இவ்வளவு சுகப்படுகிறாயே!' என்ற பொறாமையின் மேல்—'ஏன் எனக்கு இன்னும் கொஞ்சம் கூலிசேர்த்துக் கொடுக்கக் கூடாது?' என்று பல்லைக் காட்டிக் கெஞ்சுகிறீர்கள். தனித் தனியாய்க் கெஞ்சுவதற்குப் பதில் நாலுபேராய்ச் சேர்ந்து கெஞ்சுவதைத் தொழிற்சங்கம் என்கிறீர்கள். அதுவும் உங்களுக்குக் கெஞ்சிக்கேட்க சக்தி இல்லாமல்—உங்கள் தொழிலிலோ, கஷ்டத்திலோ கொஞ்சமும் சம்பந்தம் இல்லாத ஒருவரை, உங்கள் சங்கத் தலைவராயும், காரியதரிசியாயும் சில சமயங்களில் நிர்வாகஸ்தர்களாகவும் வைத்துக்கொண்டு கூலியை உயர்த்தும்படி கேட்கிறீர்கள்.

ஒரு முதலாளியிடம் வேறு ஒருவன் போய், 'அய்யா, உங்களிடம் உள்ள கூலிக்காரர்களுக்குக் கூலிபோதவில்லை; கொஞ்சம் சேர்த்துக் கொடுங்கள்' என்று கேட்டால்—அந்த முதலாளிக்கு, கூலிக்காரர்களிடம் என்ன மதிப்பு இருக்கும்? அதுபோலவே, உங்கள்

www.thamizham.net - Free E book No 3041

சவுகரியத்திற்கு வேறொருவன் போராடுகிறான் என்றால் உங்களுக்கு உங்களுடைய தேவை இன்னதென்று கூடத் தெரியவில்லை என்பதுதானே பொருள்? பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் உபாத்தியாயரிடம் போய், 'எனக்கு வயிறு வலிக்கிறதென்று எனது தாயார் சொன்னார்கள்; ஆதலால் இன்று எங்களுக்கு லீவுகொடுங்கள்' என்று கேட்பதுபோலவே—நீங்கள் வேறொருவரை உங்கள் சங்கத்திற்குத் தலைவராக வைத்துக்கொண்டு காரியங்களைச் செய்வதும், உங்களுக்குச் சம்பந்தமில்லாதவைகளைப் பின்பற்றுவதுமாகும். வெளியிலிருந்து உங்களுக்குத் தலைவராய் வருபவர்களுக்கு—முதலாவது உங்கள் வேலையிலுள்ள கஷ்டமும், உங்களுக்கு இருக்கும் கஷ்டமும் எப்படித் தெரியும்?

உதாரணமாக, இதுசமயம் நமது நாட்டுத் தொழிலாளர் சங்கத் தலைவர்களை எடுத்துக்கொள்ளுங்கள். யாருக்காவது உங்கள் தொழிலின் அருமை தெரியுமா? உங்கள் கஷ்டத்தின் கொடுமை தெரியுமா! அவர் தனது கீர்த்திக்காக உங்களுக்குத் தலைவராய் இருப்பார். அவர் ஒரு தொழிலும் செய்யாமல் மாதம் 500, 1000, 5000, 10,000 என்று பொதுஜனங்களின் பணத்தை உங்கள் முதலாளிகளைப் போலவே கொள்ளையடித்துக் கொண்டு, சுகபோகம் அனுபவித்துக்கொண்டு, தனது சுயநலத்தை நாடிக்கொண்டிருப்பவராயிருப்பார். அவர்களால் உங்களுக்கு எந்தவிதத்தில் அனுகூலம் கிடைக்கக்கூடும்? அவர்களைக் கண்டால் உங்கள் முதலாளிகள் எப்படி மதிக்கக்கூடும்? இதே முகாந்திரங்களால்தான் நமது நாட்டுத் தொழிலாளர் சங்கங்கள் இதுவரை உருப்படியாகாமல் போயின.

அனேக இடங்களில் வேலை நிறுத்தம் (Strike)—வெளியேற்றம்(Lock-out) நிகழ்கின்றன. இவைகள் ஏற்பட்டு என்ன பலன் கிடைத்தது? எவ்வளவு தொழிலாளிகளுக்கு வேலைபோய் கஷ்டம் உண்டாயிற்று? இவற்றை எந்தத் தலைவர் கவனித்தார்? எவ்வளவு தொழிலாளிகள் தம் தலைவர்களின் வார்த்தைகளைக் கேட்டதின் பலனாய், வயிறாரக் கஞ்சி இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள்? மற்றும் பல தலைவர்கள் தங்கள் பிள்ளை குட்டிகளுக்கு உங்கள் முதலாளிமார்களிடம் உத்தியோகம் பெற்றுக் கொண்டு தானிருக்கிறார்கள். விளக்கைப் பிடித்துக் கொண்டு கிணற்றில் விழுவதைப்போல, வெளியார்களை உங்கள் சங்கத் தலைவர்களாக வைத்திருக்கின்றீர்கள்.

இது மாத்திரமல்ல, உங்கள் சங்கதியே உங்களுக்குத் தெரியாமல் இப்படித் திண்டாடும் போது, சூதாட்டத்திற்குச் சமமான அரசியல் கட்சிகளில் உங்கள் சங்கங்களை நுழைத்துக் கொள்கிறீர்கள்; தனித் தனியாகவும் நுழைகிறீர்கள். கூலிக்காரனுக்கும் அரசியலுக்கும் வெகு தூரம். அரசியல் என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா? உங்கள் வயிற்றுக்குக் கூலிகேட்கவே உங்களுக்குத் தெரியவில்லையானால், உலகத்துக்குத் தேவையை நீங்கள் அறிவது எப்படி? உங்களுக்கு இருக்கும் வியாதிகள் இன்னதென்று உங்களுக்குத் தெரியாமலிருக்கும்போது, நீங்கள் ஊராருக்கு வைத்தியம் செய்வதென்பது சிரிப்பாயிருக்கவில்லையா? உங்களுடைய அரசியல் என்ன! முதலியாரை வண்டியில் வைத்து இழுக்கலாமா; நாயுடுவை வண்டியில் வைத்து இழுக்கலாமா; அய்யங்காரை வண்டியில் வைத்து இழுக்கலாமா; நாயக்கரை வண்டியில் வைத்து இழுக்கலாமா என்பது போன்றவையும்—யாரைச் சட்டசபைக்கு அனுப்பலாம்; யாருக்கு 'ஜே' போடலாம்; யாருக்கு ஓட்டுச் செய்யலாம் என்பதுதானே? நீங்கள் வண்டிசவாரி செய்யலாமா? நீங்கள் சட்டசபைக்குப் போய் உங்கள் தேவைகளைக் கவனிக்கலாமா—என்கின்ற கவலையே உங்களுக்கில்லையே! எப்பேர்ப்பட்ட உண்மைத் தலைவர்கள்—மகாத்மா போன்றவர்கள் அரசியல் என்பதை உதறித் தள்ளிவிட்டு ஏழைகள் கஷ்டத்தை நிவர்த்திக்க வேண்டும்; ஒடுக்கப்பட்டவர்களையும், தாழ்த்தப் பட்டவர்களையும் விடுதலை செய்யவேண்டும் என்று தனியே இருந்து இரவும் பகலும் உழைக்கும்போது—உங்களுக்கென்ன அரசியல் அழுகின்றது?

இப்போது அரசியலில் உழலும் யாருக்காவது விடுதலை என்றால் என்ன? உரிமை என்றால் என்ன? சுயராஜ்யம் என்றால் என்ன? தொழிலாளர் விடுதலை என்றால் என்ன

www.thamizham.net - Free E book No 3041

என்பது தெரியுமா? எப்பொழுதாவது வாயைத் திறந்து சொல்லி இருக்கிறார்களா? வயிற்றுப் பிழைப்பிற்கும் உத்தியோகத்திற்கும் 'உரிமை, உரிமை', 'சுயராஜ்யம், சுயராஜ்யம்', 'தொழிலாளர், தொழிலாளர்' என்று கத்தினால் நீங்களும் அதில் சேர்ந்து கத்துவதா? உங்கள் நிலைமையை இன்னதென்று அறியாமல் இப்படி மோசக் காரர்களுடன் சேர்ந்து, அவர்களை உங்கள் தலைவர்களாக்கிக் கொண்டு, அவர்கள் பின்னால் திரிந்தீர்களானால், நீங்கள் மற்றவர்களை வண்டியில் வைத்து இழுக்கவும், உங்கள் கழுத்தில் கயிறுகட்டிச் சந்தைகளில் கொண்டுபோய் விற்கவும்தான் ஆவீர்களே தவிர, ஒருக்காலும் நீங்கள் மனிதர்களைப்போல வாழமுடியாது.

கண்டிப்பாய் நீங்கள் அரசியலில் சேரவேகூடாது. அரசியல் உங்களிடம் வந்து சேரட்டும், அரசியல்காரர் உங்களைத் தலைவர்களாகக் கொள்ளட்டும். அப்பேர்ப்பட்ட நாளை எதிர்பாருங்கள்!

உங்கள் சங்கங்களுக்கெல்லாம் நீங்களே தலைவர்களாகுங்கள். உங்கள் நாட்டுத் தொழிலாளர் சங்கங்கள் எல்லாரையும் ஒன்றுசேருங்கள். பிறகு தொழிலாளர் கட்சி என்று ஒரு பொதுக்கட்சியை ஏற்படுத்துங்கள். அதில் உங்கள் தொழிலின் பலன் முழுவதையும் நீங்களே அடையத் தக்கதாகவும், தொழிலாளர்களுக்கு வேண்டிய நன்மைகளையும், பொது மக்களுக்கு வேண்டிய நன்மைகளையும் கொள்கையாக வைத்துப் பரப்புங்கள். அதில் எல்லோரையும் வந்து சேரும்படி செய்யுங்கள். தொழிலாளர் கட்சி நாட்டை ஆளும்படி செய்யுங்கள். அதை விட்டுவிட்டு, எடுப்பார் கைக் குழந்தையாகத் திரிவது தொழிலாளர் உலகத்திற்கே மானக்கேடு. உங்கள் நிலை என்ன? மாடு, கன்றுகள் வளர்க்கிறவர் களாவது, அவைகளிடம் வேலை வாங்கிய பின்னர் நிழலில் கட்டுகிறார்கள்; வேளா வேளைக்குத் தண்ணீர் காட்டுகிறார்கள். உங்களுக்கு அந்த சவுகரியங்கூட எங்கே இருக்கிறது? பகலெல்லாம் உழைக்க வேண்டியது; கூலி வாங்க வேண்டியது; அதை குடிக்கோ, கூத்திக்கோ, சூதுக்கோ செலவு செய்ய வேண்டியது; பட்டினி கிடக்கவேண்டியது; பெய்யும் மழையும் அடிக்கும் வெயிலும் உங்கள் மேலேயே படவேண்டியது என்கிற கேவல நிலைமையிலிருக்கின்றீர்கள். உங்களில் இரண்டொருவர் சுகப்படுவதை நினைக்காதீர்கள். பெரும்பான்மையாய் எப்படி இருக்கிறீர்கள்? இதைப்பற்றி யாருக்கும் கவலை இல்லை. உங்கள் ஓட்டுக்கு மாத்திரம் அதிகக் கிராக்கி; யாராவது பணம் கொடுத்து அல்லது யாருக் காவது பணம் கொடுத்து உங்கள் ஓட்டுகளை வாங்கிப் பதவியைப் பெற்று விடுகிறார்கள்.

ஆதலால், இன்று முதல் அரசியலையும், அரசியல்காரரையும் மறந்துவிடுங்கள். உங்கள் சங்கத்திற்கும், வருஷாந்திரக் கொண்டாட்டங்களுக்கும் தொழிலாளர்களையே தலைவர்களாக ஏற்படுத்துங்கள். அவர்களுக்குச் சக்தி இல்லையே என்று குறை கூறாதீர்கள். அது உங்களுக்கு அவமானம். அதைவிட மோசமானவர்களை நீங்கள் தலைவர்கள் என்கிறீர்கள். அயோக்கியர்களைவிட முட்டாள்கள் நல்லவர்கள் என்றே சொல்லுவேன். இருக்கிறவர்களை வைத்துக் கொண்டு காரியங்களை நடத்துங்கள். கூடிய சீக்கிரம் எல்லாம் சரிப்பட்டுப் போகும்.

நான் ஒரு சிறுகதை கேள்விப்பட்டிருக்கின்றேன். ஒரு குளத்திலுள்ள தவளைகள் ஒன்று சேர்ந்து தங்களுக்கு ஒரு தலைவர் வேண்டுமென்று கடவுளைக் கேட்டதாகவும், கடவுள் ஒரு மரக்கட்டையைத் தலைவராகக் கொடுத்ததாகவும், அம் மரக்கட்டை ஒன்றும் செய்யாமல் சும்மா இருந்ததாகவும், பிறகு தவளைகள் கடவுளிடம் எங்களுக்குக் கொடுத்த தலைவர் உபயோகமில்லையென்றும் வேறு தலைவர் வேண்டுமென்றும் கேட்டதாகவும், கடவுள் ஒரு பாம்பைத் தலைவராகக் கொடுத்ததாகவும், அப் பாம்பு தினம் 10 தவளை களைத் தின்று வந்ததாகவும், பிறகு தவளைகள் கடவுளை நோக்கித் தங்களுக்குக் கொடுத்த தலைவரை எடுத்துக்கொள்ளும்படி வேண்டி, தங்கள் காரியத்தை வேறொரு தலைவரில் லாமல் தாங்களே பார்த்து வந்ததாகவும் சொல்லப்படுகிறது.

www.thamizham.net - Free E book No 3041

அதுபோல, உங்களிலேயே உங்களுக்குத் தலைவர்களும், காரியதரிசியும், நிர்வாகிகளும் கிடைக்க வில்லையானால் கண்டிப்பாய் உங்களுக்குச் சங்கம் வேண்டாம். இந்த நிலையில் நீங்களும், சங்கம் வைத்து நடத்தச் சக்தியற்றவர்கள். உங்களுக்குள் தலைவர் ஏற்பட்டு நடத்த சக்தி ஏற்படும் வரை முதலாளிகளை அனுசரித்தே பிழையுங்கள். வீணாக, 'குளத்தைக் கலக்கிப் பருந்துக்கு விட்டதுபோல்' உங்கள் உழைப்பால் உங்கள் முதலாளிமார் பிழைப்பதோடல்லாமல்—உங்களால் மோசக்காரர் பிழைக்கும்படி செய்து நீங்கள் கஷ்டப்படாதீர்கள். நீங்கள் என்னைக் கூப்பிட்டபோதே இதைத்தான் சொல்லலாம் என்று நினைத்தேன். இதுதான் உங்கள் சம்பந்தமான எனது அபிப்பிராயம்.

அடுத்தபடியாக, நீங்கள் கதரை ஆதரிக்கவேண்டும். தொழிலாளராயிருப்பவன் முதலாவது செய்யவேண்டிய வேலை மற்றொரு தொழிலாளியை ஆதரிக்க வேண்டியது தான். ஆதலால், கிராமத்துப் பெண்மணிகள், நமது சகோதரிகள் தொழிலற்று—கூலியு மற்று—தமக்கும் தமது பிள்ளை குட்டிகளுக்கும் ஆகாரமில்லாமல் பட்டினி கிடந்து—விபச்சாரம் செய்யத்தக்க நிலையில் இருக்கும்போது, நீங்கள் அவர்களை அலட்சியம் செய்து, அவர்களது தொழிலை ஆதரிக்காமல் மல் துணிகளையும், மில் துணிகளையும் ஆதரிப்பதானது மிகவும் பாதகமான காரியமாகும். கதரை ஆதரித்தால் நீங்கள் காலக்கிரமத்தில் கூலிக்காரர்கள் என்ற பெயர் மாறி உண்மையான தொழிலாளியாவீர்கள்.

[நாகையில், 25-5-1926-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 30-5-1926]

## 2. பார்ப்பனரும் தொழிலாளரும்

சென்னைப் பார்ப்பனத் தலைவர்கள் தாங்கள்தாம் தொழிலாளர்கள் விஷயத்தில் அதிக அக்கறையுள்ளவர்களென்றும், தொழிலாளர்களுக்கு வேண்டிய சகல சவுகரியங்களும் தங்களால்தாம் செய்யக் கூடுமென்றும், தொழிலாளர்களுக்கு வேண்டிய பிரதிநிதித்துவங்களெல்லாம் தாங்கள்தாம் வாங்கிக்கொடுக்கக் கூடுமென்றும் சொல்லி, இதுகால பரியந்தம் தொழிலாளர்களை ஏமாற்றி, அவர்களுடைய ஓட்டுகளைப் பெற்றுப் பதவிபெற்று வந்தது யாவருக்கும் தெரிந்த விஷயமே. சென்ற வருஷத்திய முனிசிபல் தேர்தல்களிலும், சட்டசபைத் தேர்தல்களிலும், அதற்குமுன் நடந்த தேர்தல்களிலும் இப் பார்ப்பனர்களின் சூழ்ச்சிகளை அறியாமல் ஏமாந்து, தொழிலாளர்கள் தங்களுடைய ஓட்டுகளையெல்லாம் பார்ப்பன அபேட்சகர்களுக்கே கொடுத்து, பார்ப்பனரல்லாதாரைத் தோற்கடிக்கச் செய்ததும் யாவருக்கும் தெரிந்த விஷயமே. இப்படியிருக்க, இப்போது மேற்படி தொழிலாளச் சகோதரர்களில் தங்களுக்குத் தாங்களே பிரதிநிதியாய் இருக்கலாம் என்பதாகக் கருதி, வரப்போகும் சென்னை முனிசிபல் தேர்தலுக்குத் தங்கள் சகோதரர்களிலேயே இரண்டொருவரை அபேட்சகர்களாய் நிறுத்தத் தீர்மானித்திருக்கிறார்கள். இதை அறிந்த மேற்படி பார்ப்பனர்கள் தொழிலாளர்களை ஏமாற்றப் புதியதாய் ஒருவழி கண்டுபிடித்திருக்கிறார்கள்.

அது என்னவென்றால், தொழிலாளர்களுக்குப் பிரதிநிதித்துவம் வேண்டுமென்றால், அவர்கள் காங்கிரஸ் சுயராஜ்யக் கட்சியில் சேரவேண்டுமாம்; இல்லாவிட்டால் அவர்கள் நிற்கக்கூடாதாம். இது எவ்வளவு வஞ்சகமானதென்பதை வாசகர்கள் யோசிக்க வேண்டும். என்னவெனில், காங்கிரசிலோ சுயராஜ்யக் கட்சியிலோ தொழிலாளர்கள் சேருவதானால் தொழிலாளிகளின் முதலாளிமார்கள் அவர்களை எப்படியாவது கெடுத்துவிடக்கூடும்; அதனால் தொழிலாளிகள் காங்கிரசில் சேரமுடியாமல் போய்விடலாம்; இந்தச் சாக்கை வைத்துக்கொண்டு, தொழிலாளிகளைச் சுலபமாகத் தள்ளிவிடலாம் என்பதுதான். தொழிலாளிகளுடைய ஓட்டுப்பெறும்போது மாத்திரம் யாரையாவது பிடித்து அவர்களை ஏமாற்றி அவர்களுடைய ஓட்டுகளைப் பெற்றுவிடலாம் என்கிற தந்திரத்தின்பேரில் பார்ப்பனர்களின் 'தொழிலாளர் அனுதாபம்' நிற்கிறது. நமது தொழிலாள நண்பர்களோ இந்தச் சூழ்ச்சிகளை அறியாமல் 'எடுப்பார் கைக் குழந்தை'களாயிருக்கின்றார்கள். இவைகளை எல்லாவற்றையும்

www.thamizham.net - Free E book No 3041

அறிந்தேதான், நாம், தொழிலாளிகள் அரசியல் சம்பந்தமான எந்தக் கட்சியிலும் சேரக் கூடாது என்றும் அவர்கள் தங்கள் கால்களிலேயே நிற்கக்கூடிய சக்தியைப் பெறவேண்டு மென்றும், அது கொஞ்ச காலம் தாமதமானாலும் குற்றமில்லை என்றும் பேசியும் எழுதியும் வந்தோம். நாம் இப்படிப்பேசி, எழுதி வந்ததைப்பற்றிப் பல 'தொழிலாளர்கள் தலைவர் களுக்கும்' நம்மீது மனஸ்தாபம் ஏற்பட்டதும் நமக்குத் தெரியும். ஈரோட்டில் கூடிய தொழிலாளர் மாநாட்டு உபசரணைத் தலைவர் முறையிலும் இதையே சொன்னோம்; 'மித்திரன்' அதைப்பற்றி மிகுதியும் கோபம் கொண்டது. ஆனபோதிலும் இன்னமும் நாம் அதே கொள்கையுடன் தான் இருக்கிறோம்.

இப்போது சென்னை காங்கிரஸ் கமிட்டியில் முனிசிபல் தேர்தலுக்கு அபேட்சகர்கள் நிறுத்தும் விஷயத்தில் ஸ்ரீமான்கள் சிங்காரவேலு செட்டியாருக்கும், சத்தியமூர்த்தி, ரெங்கசாமி அய்யங்கார், சீனிவாசய்யங்கார் முதலியவர்களுக்கும் நடந்த சம்பாஷணை, அடிதடி சண்டை முதலியவைகள் நடந்திருப்பதையும்; தொழிலாளர் கூட்டத்தில் ஸ்ரீமான்கள் சிவராவ், கலியாணசுந்தர முதலியார் முதலியவர்கள் பேசிய பேச்சுகளிலிருந்தும் பார்ப்பனத் தந்திரங்கள் நன்றாய் விளங்குகின்றன. இனியாவது நமது தொழிலாள சகோதரர்கள் இவ்வரசியல் புரட்டுகளின் மாய்கையில் இருந்து விலகுவார்களா என்பதுதான் நமது கோரிக்கை. அப்படி அவர்கள் விலகித் தனிப்பட்ட ஓதாவில் தொழிலாளி என்கிற முறையில் தேர்தலுக்கு நிற்பார்களானால், நாமும் நம்மாலானதைச் செய்யத் தயாராய் இருக்கிறோம் என்றும், எந்தக் கட்சி எதிர்த்தாலும் அதை ஒரு கை பார்த்துவிடலாம் என்றும் நமது தொழிலாளர் சகோதரர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

['குடி அரசு'–தலையங்கம்—24-4-1927]

## 3. தொழிலாளர் சத்தியாக்கிரகம்

சகோதரர்களே!

தொழிலாளர்கள் குறைகள் உண்மையானவை என்பது எனது அபிப்பிராயம். இரயில்வேக்காரர்கள், திடீரென்று மூன்று, நான்கு ஆயிரம் பேர்களை வேலையிலிருந்து விலக்கவேண்டும் என்று சொல்லுகின்றார்கள். அது உண்மையான சிக்கனத்தை முன்னிட்டாவது அல்லது இலாபம் கட்டவில்லை என்பதற்காவது, அல்லது ஜனங்களின் நன்மைக்காக இரயில் சார்ஜைக் குறைப்பதற்கென்றாவது இத்திட்டத்தை அனுசரிப்ப தானால் எனக்குச் சந்தோஷமே.

அப்படிக்கில்லாமல், சீமையில் உள்ளவர்களுக்கு வேலை கொடுப்பதற்காக, அங்கிருந்து இயந்திரங்கள் தருவிக்கவும், வெள்ளைக்காரர்களுக்கும் அவர்கள் சார்பாருக்கும் வேலை கொடுப்பதற்கும் இம் மாதிரி சூழ்ச்சி செய்கின்றார்கள். தென்னிந்திய இரயில்வேக் காரர் மற்ற எல்லா இரயில்வேக்காரர்களைவிட அதிகக் கொள்ளை அடிக்கின்றார்கள். மற்ற இரயில்களில் மெயிலுக்குக்கூட மைலுக்கு இரண்டரைக் காசு சார்ஜ். ஆனால், இவர்கள் நான்கு காசு, நாலரைக் காசு வாங்குகிறார்கள். வண்டி சவுகரியம் மற்ற வண்டிகளைவிட எஸ். அய். ஆர். இரயிலில் மிகக் கொடுமையானது. சம்பளம், கூலி முதலியவைகளும் நம்மவர்களுக்கு மற்றவர்களைவிட மிகக் கொஞ்சமாகவே கொடுக்கின்றார்கள். இந்த நிலைமையில் இவர்கள் சிக்கனமென்பது இந்தியர்கள் வாயில் மண்ணைப்போட்டு வெள்ளைக்காரர்கள் வயிறுவெடிக்கச் செய்யும் கொடுமையேயாகும்.

நிற்க, இரயில்களில் நடந்த அபாயங்களுக்கெல்லாம் இரயில்வே அதிகாரிகளே காரண மாவார்கள். ஏனெனில், வேலைநிறுத்தம் செய்வதாக முன்னெச்சரிக்கை கொடுத்துத்தான் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள். அப்படி இருக்கும்போது இரயில்வேக்காரர்கள் எச்சரிக்கையாய் இருந்திருக்க வேண்டும். ஒரு வேலைநிறுத்தம்

www.thamizham.net - Free E book No 3041

என்றால் என்னென்ன காரியங்கள் நேரும் என்பது அதிகாரிகள் அறிந்த விஷயம்தான். மேல்நாடுகளின் வேலை நிறுத்த அனுபவம் தெரிந்த வெள்ளைக்காரர்கள் அலட்சியமாய் இருந்தது மிகவும் கண்டிக்கத் தகுந்தது. கலகக்காரர்களும், காலிகளும் தொழிலாளர்களிடம் அனுதாபம் கொண்ட வாலிப இரத்த ஓட்டமுள்ளவர்களும் இன்னமும் என்னென்ன செய்வார்கள் என்பது நாம் சுலபத்தில் முடிவு கட்டக்கூடியதல்ல. இதற்காகத் தொழிலாளர்கள் மீது குற்றம் சொல்லுவது அறியாமையேயாகும்.

உதாரணமாக, திருச்சி பாலக்கரை ஸ்டேஷனுக்கு அருகில் லயனில் உள்ள கேட்டில் கதவில்லை என்றும், காவலில்லை என்றும் தெரிந்து வண்டியைவிட எப்படி இரயில்வே அதிகாரிகள் சம்மதித்தார்கள் என்று நான் கேட்கின்றேன். அப்படிக் கவலையின்றி இஞ்சின் விட்டதால் மோட்டார் பஸ் மீது ஏறி 10 பேர்கள் கச கசவென்று நசுங்க நேர்ந்தது. இதற்கு யாரைத் தண்டிக்கவேண்டும் என்று நீங்களே யோசியுங்கள். நல்ல அரசாங்கமாய் இருந்தால் இஞ்சின் ஓட்ட ஆதாரமாய் இருந்தவர்களில் 10 பேரைத் தூக்கில் போட்டு, இனி இம் மாதிரி நடக்காமல் பந்தோபஸ்து செய்திருக்கும். அப்படிக்கில்லாமல், மேல்கண்ட 10 பேர் நசுக்கப்பட்டுப் போனதற்காக விசனப்பட்ட ஜனங்களைச் சுட்டார்களாம். இது என்ன ஒழுங்கு! இது அதிகாரம் இருக்கின்றது என்கிறதும், துப்பாக்கியும் குண்டும் மருந்தும், சொன்னபடி கேட்கப் போலீஸ் படையும் இருக்கின்றது என்கிறதுமான ஆணவத்தைக் கொஞ்சமாவதும் காட்டுகின்றதா, இல்லையா என்று கேட்கிறேன். இம் மாதிரிக் கொடுமைகளும் ஆத்திரம் மூட்டத்தக்க காரியமும் செய்துவிட்டு, ‘பொறுமையாய் இருங்கள்! சாந்தமாய் இருங்கள்!’ என்று சொன்னால் அது வார்த்தை அளவில் இருக்குமேயல்லாது காரியத்தில் பயனளிக்குமா?

தவிர, 144 போடுவதாலும், ஜெயிலில் வைப்பதாலும் என்ன காரியத்தைச் சாதிக்க முடியும்? 144-யை மீறுவது வெகு கஷ்டமானகாரியமா என்று கேட்கின்றேன். பலாத்காரமான காரியங்கள் யாராலானாலும் சரி, நடந்ததாகக் காணப்படாதிருந்தால் 144-யை மீறும்படியே கட்டளை இட்டிருப்பேன். ஜெயிலில் போடுவதால் யாரும் பயந்து விடமாட்டார்கள். ஜெயில் அனுபவம் எனக்கு நன்றாய்த் தெரியும். மூன்று, நான்கு தடவை நான் அனுபவித்துப் பார்த்தவன். உள்ளே போய் வெளியில் வரும்போது உடல் எடை 10 இராத்தல் அதிகமாகவே தான் வருவேன். ஆதலால், அந்தப் பூச்சாண்டிக்கு யாரும் பயப்படமுடியாது. மரியாதையாகத் தொழிலாளர் கோரிக்கைகளுக்கு இணங்கியோ, அல்லது அவர்களைச் சமாதனப்படுத்தியோ ஒரு முடிவுக்கு வருவதுதான் நலமாக முடியும்.

கடைசியாக, நான் பொதுமக்களையும், தொழிலாளர்களையும் கேட்டுக்கொள்வதாவது: எந்தக் காரணத்தை முன்னிட்டும் பலாத்காரமும், பொறுமை இழத்தலும் இல்லாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். ஏனெனில், பலாத்காரம் ஏற்படுவது அதிகாரிகளுக்கு நன்மையாகவும் நமக்குக் கெடுதியாகவும் முடியும். ஒத்துழையாமையின்போதுகூட திடீரென்று திருவாளர். காந்தி இயக்கத்தை நிறுத்த நேர்ந்ததற்குக் காரணம் பலாத்காரம் ஏற்பட்டதுதான். அதனாலேயேதான் அவ்வியக்கம் தோல்வி அடைந்ததாகக் கருதநேரிட்டது. ஆதலால், பலாத்காரம் இல்லாமல் பார்த்துக் கொள்ளவேண்டியது நமது கடமையாகும். போலீசார் மீது குற்றம் சொல்லுவதில் யாதொரு பயனுமில்லை. அவர்கள் சம்பளத்திற்காக மேல் அதிகாரி சொன்னபடி கேட்கும் நிபந்தனை இல்லாத அடிமைகள். அவர்கள் எஜமான் சொன்னபடி நடக்காவிட்டால் வேலை போய்விடும். 144 போட்ட மாஜிஸ்டிரேட்டிடமும் நாம் குற்றம் கண்டு பிடிப்பது முட்டாள்தனம். வெள்ளை அதிகாரிகள் சொன்னபடி உத்தரவு போடாவிட்டால் வேலை போய்விடும். அப்புறம் உபாதானமெடுக்க வேண்டியதோ கருமாந்தர வீட்டில் தட்சணைக்குப் போகவேண்டியதோ அவர்கள் கடமை ஆகிவிடும். ஆதலால், பொறுமை இழக்காமல் பலாத்காரம் இல்லாமல் பார்த்துக் கொள்ளுங்கள். எங்களாலான உதவி கடைசிவரை செய்யக் காத்திருக்கின்றோம். பலாத்காரம் ஏற்பட்டால், அதுவும் தொழிலாளர்களால் நடந்தது என்பதாகத் தெரிந்தால், நாங்களும் விலகிக் கொள்வோம்

www.thamizham.net - Free E book No 3041

என்பதைக் கண்டிப்பாய்ச் சொல்லுகின்றேன். மற்றபடி இங்கு நடத்தப்போவதாய் சொல்லப் படும் சத்தியாக்கிரகத்திற்கு என்னாலான பண உதவியும், ஆள் உதவியும் செய்யத் தயாராய் இருக்கின்றேன்.

[ஈரோட்டில், 27-7-1928-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 29-7-1928,
சென்னை 'திராவிடன்' தினசரி 30-7-1928]

## 4. தொழிலாளர் பிரச்சினை

தோழர்களே!

உங்களுடைய மாநாட்டில் தலைமை வகிக்கும் பேற்றை எனக்களித்து இந்தச் சந்தர்ப்பத்தில் எனது அபிப்பிராயத்தைத் தெரிவித்துக்கொள்ள வசதி அளித்ததற்கு எனது நன்றியறிதலை முதலில் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னைப் பற்றிப் பல தோழர்கள் கவிராயர்கள்போல் புகழ்ந்து கூறியதற்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவனாகிலும், அப் புகழ்ச்சி உரைகளுக்கு நான் தகுதி யுடையவனல்ல வென்றும், அப் புகழ்ச்சிகளில் ஏதாவது ஒரு பாகத்துக்காவது தகுதி யுடையவனாக என்னை ஆக்கிக்கொள்வதற்கு அவைகளை உபயோகப்படுத்திக் கொள் கிறேன் என்றும் உங்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். என்னைப் பற்றிப் பேசிய பலர் வைக்கம் சத்தியாக்கிரகத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்து அதை நடத்துவித்ததும் அது வெற்றியாய் முடிவுபெறக் காரணமாய் இருந்ததும் நானேயாவேன் என்று பேசினார்கள். அதையும் ஒப்புக்கொள்ள முடியாமைக்கு நான் வருந்துகிறேன். வைக்கம் சத்தியாக் கிரகத்தில் பெயரளவுக்கு என் பெயர் அடிபட்டாலும் அதன் உற்சாகமான நடப்புக்கும், வெற்றிக்கும் வாலிபத் தோழர்களுடைய வீரம் பொருந்திய தியாகமும், சகிப்புத் தன்மையும் கட்டுப்பாடுமே காரணமாகுமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

நிற்க, தோழர்களே! தொழிலாளர் பிரச்சினை என்பது உலக மக்கள் சமூகத்தின் பிரச்சினையேயாகும்.

ஏனெனில், உலக மக்களில் 100-க்கு 90 பேருக்கு மேம்பட்டவர்கள் 'தொழிலாளிகள்' என்னும் தலைப்பின் கீழ்தான் வருவார்கள். எப்படியெனில், தொழிலாளிகள் என்றாலே மனித சமூகத்தில் சரீரத்தினால் பாடுபட்டு வேலை செய்து ஜீவனம் செய்யும் மக்களாவார்கள்.

இந்தப்படி ஜீவனம் செய்வதிலும் அன்னியருக்காக என்று பாடுபட்டு, அன்னியர் சுகமாய்ப் போக போக்கியத்துடன்—சரீரத்தினால் பாடுபடாமல் வாழக்கூடிய ஒரு கூட்டத்திற்காக என்று உழைத்துவிட்டு, மேலும் மேலும் உழைப்பதற்கும், தாங்கள் சீக்கிரம் இறந்துவிடாமல் இருப்பதற்கும், தங்கள் ஜீவதசைக்குப் பிறகும் அன்னியருக்கு உழைத்துப் போடுவதற்காகச் சந்ததிகளை ஏற்படுத்தி, அவர்களையும் அன்னியருக்கு உழைக்கவே தற்புத்தி செய்யவும், எவ்வளவு வேண்டும் அவ்வளவை மாத்திரமே அடைவதற்குத் தகுதியுடையவர்களாகத் தங்களை ஆக்கிக் கொண்டிருக்கின்றவர்களா வார்கள்.

ஆகவே, இப்படிப்பட்ட மக்கள் உலக மக்கள் சமூகத்தில் 100-க்கு 90 பேர்களுக்கு மேலானவர்களாய் இருப்பதால்தான், இப்படிப்பட்ட தொழிலாளர்களுடைய பிரச்சினையை உலக மக்கள் பிரச்சினை என்று சொல்லவந்தேன். ஆனால், இப்படிப்பட்ட பெரும் சமூகப் பிரச்சினையை ஒரு தனிப் பிரச்சினை என்பதாக (தொழிலாளர் பிரச்சினை என்று) ஒதுக்கி வைத்திருப்பதும் மிகச் சிறு தொகை கொண்ட தனிப்பட்ட வகுப்பார்களது பிரச்சினையை —அதாவது பாடுபடாமல் அன்னியர் உழைப்பால் வாழும் மக்களாகிய எஜமானத் தன்மை— முதலாளித் தன்மை கொண்ட 100-க்கு 10 பேர்களாய் உள்ள மக்களின் பிரச்சினையைப்

www.thamizham.net - Free E book No 3041

பொதுப் பிரச்சினையாக்கி, அதைப் பற்றியே எல்லா மக்களும் கவனிக்கும்படியானதா யிருந்துவரும் காரணம் என்ன என்று உங்களில் பலர் கருதலாம். அதற்குக் காரண மெல்லாம், உலகம் – பாடுபடாத சோம்பேறிக் கூட்டத்தார், சூழ்ச்சிக் கூட்டத்தார் ஆகிய முதலாளித் தன்மை, புரோகிதத் தன்மைக் கூட்டத்தார் என்பவர்களின் ஆதிக்கத்தில் இருப்பதால் அப்படிப்பட்ட அவர்களுடைய பிரச்சினையே உலகப் பொதுப் பிரச்சினையாக ஆகிவிட்டது. முன் குறிப்பிட்ட தொழிலாளிக் கூட்டத்தார், எண்ணிக்கையில் பெரும் பான்மையானவர்களாய் இருந்தும், ஆதிக்கமற்றவர்களாகவும் அடிமைத்தனத்தின் பேரிலேயே தங்களது வாழ்வை நிர்ணயித்துக் கொண்டவர்களாகவும் இருந்துகொண்டு இந்தத் தன்மையையே ‘உலக இயற்கை’ என்று கருதிக்கொண்டிருப்பதால் (தொழிலாளர் பிரச்சினை) 100-க்கு 90 மக்களது பிரச்சினை–பொதுப் பிரச்சினையாகக் கருதப்படுவதற் கில்லாமல் போய்விட்டது.

ஆகவே, தொழிலாளி மக்கள் பிரச்சினை உலக மக்கள் பிரச்சினை என்கின்ற கருத்தின்மீதே அது சம்பந்தமாக எனக்குப்பட்ட சில விஷயங்களை உங்களுக்கு எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

தோழர்களே! இன்றைய உலக நிலை அதாவது, மனித சமூகத்தின் வாழ்க்கைத் தன்மையானது துக்கம், கவலை, அதிருப்தி, சாந்தியற்றதன்மை, ஒருவருக்கொருவர் தாழ்ந்த தன்மை, ஒருவரை ஒருவர் அடக்கி ஆளுந்தன்மை ஆகியவைகளுக்கு ஆளாகி அவதிப்பட்டுக்கொண்டு இருக்கத் தக்கதாகவே இருந்துவருகிறது. இந்த நிலையானது இன்று, நேற்று ஏற்பட்டது என்று சொல்லிவிடுவதற்கு இல்லாமல் உலகம் தோன்றியதாகச் சொல்லப்படும் காலமுதல் நாளதுவரையிலும் எவ்விதமான மாறுதலும் இல்லாமலே இருந்து வருகிறது.

மனித சமூகத்தில் உள்ள இவ்விதமான கஷ்டங்களையும், கொடுமைகளையும், குறைகளையும் நிவர்த்திப்பதற்காகவென்று வெகுகாலமாகவே அதாவது நமக்குச் சரித்திரப் பூர்வமாய் விளங்கும் பல ஆயிரக்கணக்கான வருஷங்களாகவே அனேக மனிதர்கள், கடவுள், கடவுள் அவதாரம், கடவுள் குமாரன், கடவுள் தூதன், கடவுள்தன்மை பெற்றவர் என்னும் பெயர்களாலும்; ரிஷிகள், முனிவர்கள், சித்தர்கள், மகாத்மாக்கள், ஞானிகள், ஆழ்வார்கள், நாயன்மார்கள் என்ற பெயர்களாலும் தோன்றி எவ்வளவோ காரியங்கள், திருத்தப்பாடுகள் உண்டாக்கியதாக எழுதிவைக்கப்பட்டும் சொல்லப்பட்டும் வருகின்றது. மேற்கண்ட ஒவ்வொருவருடைய தோன்றுதலுக்கும் காரணமாக—பெரிதும் உலகத்தில் தர்மம் குன்றி விட்டதாகவும், அதர்மம் அதிகரித்துவிட்டதாகவும், துஷ்டர்களால் சாதுக்கள் கஷ்டப்படுவ தாகவும், வலியோரால் எளியோர்கள் துன்பப்படுவதாகவும், அவைகளை யெல்லாம் போக்குவதற்காகவென்றே தோன்றி அதர்மத்தை ஒழித்து, துஷ்டர்களைச் சிட்சித்து, சாதுக்களையும் ஏழைகளையும் கஷ்டப்படும் மக்களையும் இரட்சிப்பதற்காகவே தோன்றினார்களென்றும் சொல்லப்பட்டு வருகிறது.

மற்றும், இந்த ‘தெய்வாம்சம் பெற்றவர்கள்’ என்ற கூட்டத்தவர்களால் மனித சமூக வாழ்க்கையின் ஒழுங்குக்கென்று ஏற்படுத்தப்பட்டிருக்கும் வேதங்கள், நீதிசாஸ்திரங்கள், மற்றும் நீதியைப் போதிக்கும் சாதனங்கள் என்பவைகளும், எண்ணிக்கைக்கும் எல்லைக்கும் கட்டுப்படாத அளவுக்குக் குவிந்து கிடக்கின்றன.

இவைகளின் பயனாகவெல்லாம் அனேக காலமுதல் நாளதுவரையில் பெரும்பான்மை யான மனித சமூகத்திற்குச் சிறிதாவது கஷ்டமோ, துன்பமோ, கவலையோ ஒழிந்திருப்ப தாகச் சொல்லமுடியுமா என்று யோசித்துப் பாருங்கள்.

எப்படிப்பட்ட கடவுளோ, அவதாரமோ, கடவுள்தன்மை பெற்றவர்களோ, ஞானிகளோ, மகான்களோ தோன்றிய காலங்களிலும் மற்றும் அவர்களது ஆதிக்கத்திலும்,



www.thamizham.net - Free E book No 3041

ஆட்சியிலும் உலகம் இருந்துவந்த காலங்களிலுங் கூட—ஜனசமூகத்திற்கு இன்று இருக்கிற கஷ்டமேதான் இருந்து வந்திருக்கிறதென்பதை எந்தச் சரித்திரத்திலும் காணலாம்.

'தர்ம ராஜ்யம்' 'ராம ராஜ்யம்' 'சத்தியகீர்த்தி ராஜ்யம்' என்று சொல்லும்படியான காலங்களில் எல்லாங்கூட இன்று காணப்படும் கொடுமையும், அதர்மமும், கஷ்டமும், தரித்திரமும், அடிமைத்தன்மையும் இருந்துகொண்டுதான் வந்திருக்கின்றன என்பது சரித்திரங்களிலும், சாஸ்திரங்களிலும், புராணங்களிலும் தாராளமாய்க் காணப்படுகின்றன.

எனவே, இவற்றிற்கெல்லாம் காரணமென்ன? இப்படிப்பட்ட பெரியார்கள் என்பவர்களால் மனித சமூகத்திற்குள்ள கஷ்டங்கள், துன்பங்கள் ஏன் ஒழிக்கப்படவில்லை? இவர்களால் எல்லாம் ஆகாத காரியம் நம்மால் ஆகிவிடுமா? என்பன போன்ற விஷயங்களை யோசித்து ஒரு முடிவுக்கு வந்த பிறகேதான், நாம் இனி என்ன செய்யவேண்டியவர்களாக இருக்கின்றோம் என்பதை யோசிக்க வேண்டியவர்களாக இருக்கின்றோம்.

அப்படிக்கெல்லாம் இல்லாமல், கூடிக் கூடிப்பேசி பழைய பாடங்களையே படித்து, கஷ்டப்படுபவர்களைப் பார்த்துப் பரிதாபப்பட்டு, அவர்களது கஷ்டங்களை வர்ணித்துப் பேசிக் கண்ணீர்விட்டுப் போவதென்பது, 'அரைத்த மாவை அரைத்தது போலும், சிரைத்த தலையைச் சிரைத்தது போலும் ஆகுமே ஒழிய பலன்தரத்தக்க காரியம் எதுவுமே நம்மால் முடியப்போவதில்லை.

ஆகவே, ஏன் இந்தப் பழைய நிலை மாறவில்லை என்றும், மாற்றுவதற்காகத் தோன்றிய பெரியார்கள் எல்லாம் ஏன் தோல்வி அடைந்துவிட்டார்கள் என்றும் யோசித்துப் பார்ப்போமேயானால், முறையே அதன் காரணமும் அப்படிப்பட்டவர்களின் தவறுதலும் நமக்கு நன்றாய் விளங்கும்.

எனக்குத் தோன்றிய வரையிலும் 'பெரியார்'களுடைய முயற்சிகளெல்லாம் வெற்றி பெறாமல் போனதற்குக் காரணம், அப்பெரியார்கள் 'கஷ்டநிலை' என்பதற்குக் காரணம் என்ன என்பதையே சரியாய் உணரவில்லை என்றுதான் சொல்லுவேன். அஸ்திவாரத்தில் உள்ள கோளாறுகளை இலட்சியம் செய்யாமல் மேலும் மேலும் கட்டடங்கள் கட்டியதாலேயே, கட்டின கட்டடங்களெல்லாம் இடிந்து விழுந்துகொண்டே வந்துவிட்டன. இதனால் இன்று இடிந்து விழுந்த பழுதுபட்ட சாமான்களும், வாழ்வுக்குதவாக் குட்டிச் சுவர்களுமாகத்தான் அம் முயற்சியின் பலன்கள் காணப்படுகின்றன. ஆதலால்தான் பயன்படவில்லை.

ஒரு விவகாரத்தை ஒழிக்க (பைசல் செய்ய) முன்வந்த ஒருவன் 5-ம், 5-ம் பன்னிரண்டு என்று கருதிக்கொண்டு விவகாரத்தைத் தீர்க்க முற்படுவானேயானால், அப்படிப்பட்டவனால் விவகாரம் சரியான தீர்ப்பு அடைய முடியுமா? அதுபோலவே, உலகக் கஷ்டத்தைப் போக்குவதற்குத் தோன்றிய அவதாரங்கள் (பெரியார்கள்) எல்லாம், மனித சமூகத்தின் கஷ்டங்களுக்குக் காரணமாயிருப்பது மனித சமூகத்திலுள்ள சிலரின் சூழ்ச்சி என்றும் அக்கிரமமான நடத்தை என்றும் கருதாமல், தங்களால் நிரூபிக்கச் சாத்திய மற்றதும் தங்களுக்கே புரியாததுமான ஒரு வஸ்துவைக் கற்பனை செய்து கொண்டு, அதற்கே சகல சக்திகளையும் கொடுத்து, எல்லாவற்றிற்கும் அதையே பிணையாக்கி, அதன் பேரிலேயே எல்லாப் பழிகளையும் போட்டு, அதற்கும் தங்களுக்கும் சம்பந்தம் இருப்பதாகக் காட்டி, அதன் தயவினாலேயே உலகக் கஷ்டங்களைப் போக்க முயற்சிப்பதாகச் சொல்லி, அந்தப்படியே மக்களையும் நம்பச் செய்துவிட்டுப் போய்விட்டார்கள்.

இப்பொழுது தோன்றுகிறவர்களும் தங்களை 'மகான்கள்' என்றும், 'ஞானிகள்' என்றும், 'உலகக் கஷ்டத்தை ஒழிப்பதற்குக் கடவுள் அருளால் தோன்றி, கடவுள் அருளால் இருந்து, கடவுள் கட்டளைப்படி நடந்து வருவதாகவும்' சொல்லுகிறபடியால் அவர்கள் ஒரு காரியத்தையும் செய்ய முடியாமல் இருப்பதோடும், கஷ்டங்களையும், கஷ்டத்திற்கு ஆதாரமாக இருப்பவைகளையும் என்றும் நிலைத்திருக்கக்கூடியதாகவே செய்து வருகிறார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

இவ்வளவோடு மாத்திரமல்லாமல் இத்தனை பெரியார்கள் என்பவர்களும் தங்கள் முயற்சியால் வெற்றிபெறாமல் போனதற்குக் காரணம் என்னவென்பதைக் கண்டுபிடிக்கச் சக்தி இல்லாமல் போய்விட்டதால், அவர்கள் அச் சக்தியற்ற தன்மையைத் தைரியமாய் ஒப்புக்கொள்ள இஷ்டப்படாமல் 'இவ்விதக் கஷ்டங்களும் துன்பங்களும், கீழ்-மேல் நிலையும், அதிருப்தியும், சாந்தமற்ற நிலையும் மனித சமூகத்திற்குத் தவிர்க்கமுடியாதது' என்றும், 'இதுவே உலக இயற்கை' என்றும் சொல்லிவிட்டுப் போய் இருக்கிறார்கள். இதைத்தான் இன்று சகல துறைகளிலும் அடக்கப்பட்டு, தாழ்த்தப்பட்டு, கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் மனித சமூகம் ஒட்டும் நம்பிக்கைகொண்டு இயற்கையையோ, தெய்வத்தின் அருளையோ எதிர்பார்த்துக்கொண்டு இருக்கிறார்கள்.

இதன்றி, இனி மற்றொரு காரணம் என்னவென்றால், அதாவது இன்றைய மேற்கண்ட நிலைகள் மனித சமூகத்திற்குப் பெருந் துன்பமாய் இருந்தும், மனிதனுக்குப் பகுத்தறிவு என்பதான ஒரு விசேஷ சிந்தனா சக்தி இருந்தும், அத் துன்பத்தை ஒழித்துக் கொள்ள அது பயன்படாமல் போனதற்கு மற்றொரு காரணம் என்னவென்றால், மனித வாழ்க்கையில் மனிதன் தான் இன்று உயிருடன் இருக்கும்போது அனுபவிக்கும் கஷ்டங்கள், துன்பங்கள் ஆகியவை எல்லாம் இலட்சியம் செய்யத் தக்கதல்லவென்றும் அதாவது, இந்த வாழ்வே நிலையற்றதென்றும், மனிதன் இறந்த பிறகு தீர்ப்பு நாளிலோ அல்லது மற்றொரு உலகமாகிய மேல் லோகத்திலோ அனுபவிக்கப்போகும் விஷயங்களே முக்கியமானதென்றும், அதைப்பற்றியே மனிதன் கவலை செலுத்தவேண்டும் என்றும் மதங்கள் மூலம் கற்பிக்கப்பட்டதும் ஒரு முக்கிய காரணமாகும். இத்தியாதி காரணங்களே—இந்தவிதமான கற்பனைகளே மனித சமூகத்தின் துக்கங்கள் ஒழிக்கப்படுவதற்கு இடையூறாய் இருந்து வந்திருக்கின்றன.

அப்படிக்கில்லாமல் இருக்குமானால், உலகிலுள்ள ஜீவராசிகளில் எல்லாம் விசேஷமானது என்றும் மனித ஜீவனுக்கு உயர்ந்த ஞானமும், அறிவும், சிந்தனாசக்தியும் இருந்து வருகின்றது என்றும் சொல்லப்பட்ட ஒரு சமூகம் இவ்விதக் கீழ்நிலையில் பல்லாயிரக்கணக்கான வருஷங்களாய் இருந்து வந்திருக்க முடியுமா என்பதை யோசித்துப் பாருங்கள்.

இது இப்படி இருக்க, தொழிலாளிகளுக்கு உள்ள கஷ்டங்களைப்பற்றிச் சிறிது ஆராய்வோம்.

தோழர்களே! உலகமானது தொழிலாளர்களாலேயே நிர்மாணிக்கப்பட்டுத் தொழிலாளர்களாலேயே நடைபெற்று வருவதாய் இருந்தாலும், உலக வாழ்க்கையில் உள்ள சகல விதமான தொல்லைகளுக்கும், துன்பங்களுக்கும், கவலைகளுக்கும், தொழிலாளிகளே ஆளாகி வருகின்றார்கள். சகல அய்ஸ்வர்யங்களும், சுகபோகத்துக்கு வேண்டிய சகல சாதனங்களும் தொழிலாளிகளாலேயே உண்டாக்கப்படுவதாய் இருந்தாலும்—தொழிலாளிகளுக்குத்தான் வயிறார உண்ண உணவில்லை என்கின்ற குறையும், இடுப்பாரக் கட்டத் துணி இல்லை என்கின்ற குறையும், இருக்க இடமில்லை என்கின்ற குறையும், நாளைக்கு என்ன செய்வது என்கின்ற கவலையும்; மற்றும் காயலா வந்தால் வைத்தியத்துக்கு என்ன செய்வது, பெண்சாதி பிரசவத்திற்கு என்ன செய்வது, பிள்ளை படிப்புக்கு என்ன செய்வது, சாவு, கல்யாணம் ஆகியவைகளுக்கு என்ன செய்வது என்பதுபோன்ற அனேகக் கவலைகள், குறைகள் இருந்து வருகின்றன. தொழிலாளிகள் அல்லாத மனிதருக்கோ இவ்வித கவலைகள் ஏதுமில்லை. இவர்களுக்கெல்லாம் தொழிலாளிகளின் உழைப்பால் சேமித்த பொருளை எப்படிப் பத்திரப்படுத்துவது, எப்படி மேலும் மேலும் பெருக்குவது, எப்படி அதிகமான சுகபோகங்களை அனுபவிப்பது என்பதுபோன்ற கவலைகளேயாகும். இன்னும் ஏதாவது கவலை இருக்குமானால், அது நாமே உலகில் பெரிய சீமானாக எப்படி ஆவது; நாம் செத்த பிறகும் நமது பெருமையும், புகழும், செல்வமும் நமது பிள்ளைகளுக்கும், நமது பேரன்களுக்கும் உலகமுள்ள அளவும் எப்படி நிலைத்திருப்பது என்பது போன்றவைகளுமேயாகும்.

www.thamizham.net - Free E book No 3041

இவைகள் தவிர, முதலாளிகள் என்பவர்கள் தங்கள் நிலை என்றும் நிலைத்திருக்கவும், தொழிலாளிகள் என்னும் பேரால் உலகப் பெரும்பான்மையுமான மனித சமூகம் தங்களை எதிர்க்காமலும், தாக்காமலும் இருப்பதற்காக வேண்டிய பந்தோபஸ்துக்காக ஓர் அரசாங்கத்தை ஏற்படுத்திக் கொள்ளவேண்டியவர்களுமாகின்றார்கள். நாளாவட்டத்தில் அந்த ஆட்சியின் ஆதிக்கத்தையும் தங்கள் கைக்குள் கொண்டு வந்துவிடவே முயற்சிப்பவர்களாகவுமிருந்து வருகிறார்கள். இதனால் முதலாளிகளின் வாழ்வுக்கும், செல்வம் சேர்ப்பிப்பதற்கும் மாத்திரம் தொழிலாளிகள் பாடுபடுகிறார்கள் என்பதில்லாமல், இந்த முதலாளிகளைக் காப்பாற்றவும் தொழிலாளிகளை அடக்கவுமான காரியத்தின் செலவுக்கும் இந்தத் தொழிலாளிகளே பாடுபட்டு உழைக்கவேண்டியவர்களாக இருக்கிறார்கள். இத்தியாதி காரணங்களால் சரீரத்தால் பாடுபட்டு உழைக்கும் மக்களாகிய தொழிலாளிகளுடைய நிலைமை நாளுக்குநாள் அடிமைத்தனத்திலும் தரித்திரத்திலுமே அமிழ்த்தப்படுகின்றது.

ஆதலால், தொழிலாளிகளுடைய கஷ்டமும், துன்பமும், அடிமைத்தனமும், கவலையும் குறையும் நீங்கவேண்டுமானால் முதலாளித்தன்மை என்பது இல்லாமல் போயே ஆக வேண்டும். அப்படிக்கு இல்லாமல், வேறு எப்படிப்பட்ட காரியம் செய்தாலும், தொழிலாளி துன்பமும், இழிவும், தரித்திரமும் ஒருநாளும் ஒழியாது. மனிதனுக்கு இருக்கும் தரித்திரமும், துன்பமும், குறைவும் என்பதெல்லாம்—மற்றவனைவிட நாம் அதிகமாய்க் கஷ்டப்படுகின்றோமே, மற்றவனைவிட நாம் தாழ்மையாய் வாழ்கின்றோமே, மற்றவன் நம்மை அடக்கி ஆளுகின்றானே என்கின்ற மனப்பான்மைகளேயாகும். இந்த மனப்பான்மையை ஒழிக்க வேண்டுமானால், மற்றவனுக்கும் நமக்கும் வித்தியாசம் காணப்படாத ஒரு நிலையை உண்டாக்குவதேயாகும்.

உதாரணமாக, 100 வருஷத்திற்கு முன், 50 வருஷத்திற்கு முன் மனிதர்களின் சாதாரண வாழ்க்கை இருந்ததைவிட, இன்றைய வாழ்க்கைத் திட்டங்கள் அனேக வழிகளில் ஓரளவுக்கு உயர்ந்திருக்கின்றது என்பது பிரத்தியட்சம். அப்படியிருந்தும் அந்த அளவுக்கே மற்ற நிலையில் உள்ளவர்கள் திட்டமும் உயர்ந்துவிட்டதால், திட்டம் உயர்ந்தாலும் நிலைமையும் தன்மையும் முன்போலவேதான் இருக்கின்றது. தொழிலாளிகளின் கவலை எல்லாம் தங்களுக்கு எவ்வளவு வேண்டும் என்பதல்ல; தங்களுடைய நிலைமை மற்ற யாருடைய நிலைமைக்கும் தாழ்ந்ததாக இருக்கக்கூடாது என்பதேயாகும்.

எந்தக் காரணத்தை முன்னிட்டாவது பாடுபடும் மக்கள் நிலை தாழ்ந்திருக்கவும்; பாடுபடாத மக்கள் நிலை உயர்ந்திருக்கவும், ஆதிக்கம் செலுத்தவும் கூடாது என்பதுதான் தொழிலாளர்கள் கிளர்ச்சியின் முக்கியத்துவமாய் இருக்கவேண்டும்.

அப்படிக்கில்லாமல், ஏதோ 2 அணா, 4 அணா கூலி உயர்த்தப்படுவதற்காகப் போராடுவதென்பது பயனற்றதேயாகும். ஏனெனில், நமது கிளர்ச்சியில் 2 அணா கூலி உயர்த்தித் தருவானேயானால், தொழிலாளிகளால் செய்யப்படும் சாமான்களின் பேரில் முதலாளிகள் ஒன்று சேர்ந்து நாலணா விலை அதிகப்படுத்திவிடுவார்கள். அந்த உயர்ந்த விலையைக் கொடுத்துச் சாமான் வாங்கவேண்டியவர்கள் தொழிலாளிகளேயாவார்கள். ஆகவே, முதலாளிகள் தொழிலாளிகளுக்கு வலது கையில் கூலி அதிகம் கொடுத்து, இடது கையில் அதைத் தட்டிப் பிடுங்கிக் கொள்வார்கள். முதலாளிகளுடன் கூலித் தகராறு என்பது, முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் இடையில் உள்ள புல்லுருவிக் கூட்டமான தரகர்களுடைய சூழ்ச்சியேயாகும். 4 அணா கூலிக்கு வேலை செய்த மக்கள் இன்று 14 அணா கூலி பெறுவது எனக்குத் தெரியும். இதன் பயனாய் அவனுடைய நிலை சிறிது கூட உயர்ந்ததாகச் சொல்லமுடியாது. அடிமைத் தன்மையும், தரித்திரமும் அவனைச் சூழ்ந்துகொண்டே இருக்கின்றது. 4 அணா கூலி கொடுத்த முதலாளி அப்போது இருந்ததைவிட இப்போது 14 அணா கொடுக்கும்போது எத்தனையோ பங்கு மேன்மையாய் மோட்டாரிலும், ஆகாய ரதத்திலும் செல்லுகிறான்; சந்திரகாந்த மண்டபத்தில் வசிக்கிறான். ஒருநாளைக்கு 4 அல்லது 5 கையெழுத்துப் போடுவதுடன் அவனது வேலை

www.thamizham.net - Free E book No 3041

முடிவடைந்து விடுகின்றது. இந்த நிலையை அவன் பிள்ளை பிள்ளை தலைமுறைக்குப் பத்திரப்படுத்திக் கொள்கிறான். தொழிலாளி நிலை இந்த அளவுக்கு உயர்ந்து இருக்கிறதா பாருங்கள். அவன் பிள்ளைகள் 3-வது, 4-வது பாரம் வரையிலும்கூட படிக்கமுடியவில்லை; ஓதம் (ஈரம்) இல்லாத இடத்தில் படுக்கமுடியவில்லை; இடுப்புக்குத் தவிர மேலுக்குத் துணி இல்லை. இந்த நிலையில்தான் இருக்கிறார்கள்.

[5-9-1933-ல் கொச்சியிலும், 10-9-1933-ல் ஆலப்புழையிலும், 23-9-1933-ல் திருநெல்வேலியிலும் சொற்பொழிவு—'குடிஅரசு' 1-10-1933]

# 5. இரயில்வே தொழிலாளர் வேலைநிறுத்தம்

இந்தியாவிலுள்ள இரயில்வேக்களில் வேலை பார்க்கும் சிப்பந்திகள் யாவரும் இம் மாத இறுதியில் வேலைநிறுத்தம் செய்யப்போவதாக ஏற்பாடுகள் சில நாட்களாகவே நடந்துவருகின்றன. இன்றைய 'முதலாளித்தன்மை ஆட்சி'யில் தொழிலாளிகள், சிப்பந்திகள் தங்கள் மனிதத் தன்மையான வாழ்வுக்கு வேலைநிறுத்தம் செய்து, இடர்ப்பட்டு சமாளித்துத்தான் வெற்றிபெற முடியுமே அல்லாமல் மற்றபடி எந்தச் சமதர்ம 'தேவதையும்' வந்து இந்தக் காரியத்தைச் சாதித்துக்கொடுக்க முடியாது. இந்தப்படி ஒரு பெருங்கூட்ட மக்கள்—அதுவும், அல்லும் பகலும் உடலுழைத்துப் பாடுபட்டு, உணவுக்கும் உடைக்கும் கூடத் தொங்கலோடு அல்லல்பட்டுக் கஷ்டப்படுகிறார்களே, இதற்கு ஏதாவது வழிசெய்ய வேண்டுமே என்கின்ற கவலை எந்தக் கடவுளுக்குமே கிடையாது. மக்களாகவே பார்த்து ஏதோ கஷ்டப்பட்டுத் தங்கள் குறைகளை நீக்கிக்கொண்டால், அப்புறம் கடவுள்கள் வந்து விடுவார்கள்; தங்களால்தான் குறைகள் நீக்கப்பட்டனவென்றும் அதற்குக் கூலி வேண்டு மென்று கேட்டு வாங்கிக்கொண்டும் போய்விடுவார்கள். அவ்வளவுதான் இந்தப் பாட்டாளி மக்களின் விஷயத்தில் கடவுளின் கடமையாகும்.

ஆனதால், ஒவ்வொருவரும் கடவுள்மீது பாரம் போடுவதில் பயன் விளையாது. தங்களுக்குத் தாங்களேதான் பாடுபட்டாக வேண்டும். அந்த முறையில் தொழிலாளிகள், தங்களுடைய குறைந்த, மிக்க பலவீனமான ஆயுதமாகிய வேலைநிறுத்தத்தைப் பயன் படுத்துவதில் யாரும் குற்றம்சொல்ல முடியாது. நினைத்ததற்கெல்லாம்—வெகு சாதாரண காரியங்களுக்கெல்லாம் பள்ளிப் பிள்ளைகள் வேலைநிறுத்தம் செய்கின்றனர். தங்களோடு சேராத பிள்ளைகளை உதைத்து, அடித்துக் காலித்தனம் செய்கின்றனர். அவற்றை யெல்லாம் தேசியத் தலைவர்களும், தேசியப் பத்திரிகைகளும், பள்ளி ஆசியர்களும் சில சமயங்களில் அதிகாரிகளுங்கூட ஆதரிக்கின்றனர். அப்படியிருக்கும்போது, தொழிலாளி மக்கள் செய்யும் வேலைநிறுத்தத்தைப் பொதுமக்களும், மற்ற தொழிலாளிகளும், அவர்கள் போன்ற—'வயிற்றுப் பிழைப்பு அளவுக்கு மாத்திரம்' என்று வேலை செய்யும் மற்ற இலாக்கா சிப்பந்திகளும் ஆதரிக்கவேண்டியது உடன்பிறந்த கடமையாகும்.

தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தால் முதலாளிகள்—முதலாளித் தன்மையி லிருப்பவர்கள், தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்படும் சம்பளம், கூலி முதலியவை தொழிலாளியின் வயிற்றுக்குப் போதுமானதாக இருக்கிறதா என்பதை மாத்திரம் பார்க்கக் கூடாது. இந்தக் காலம் முதலாளித் தன்மைக்குப் பெருமையிருக்கும் காலம்; ஏராளமான வருவாய் இருக்கும் காலம்; எவ்வளவு இலாபம் வேண்டுமானாலும் பெறக்கூடிய காலம். ஒவ்வொரு சிறு தொழிலில் வியாபாரம் செய்கிறவனும் அவனவன் எதிர்பார்ப்பதற்கு மேல் பலமடங்கு பணம் சம்பாதித்து மீத்துவைக்கும் காலம்; மீத்துவைத்த பணத்தை என்ன செய்வது, எப்படிச் செலவிடுவது என்பதற்கு வழிதேடியலையும் காலம். பொறுப்பும், கட்டுப்பாடும் இல்லாத தினக் கூலிகளுக்கு அவர்கள் தங்களிஷ்டப்படி கூலி கேட்டு வாங்கி, இஷ்டப்படி அனுபவிக்கும் காலம். எந்தக் காரியத்தை எவன் செய்தாலும் நஷ்டத்திற்கு இடமில்லாத காலம்.

www.thamizham.net - Free E book No 3041

இப்படிப்பட்ட இந்தக் காலத்தில் இரயில்வே தொழிலில் சம்பந்தப்பட்டு, இரயில் போக்குவரத்தைச் சரியானபடி நடத்திக்கொடுத்துக்கொண்டு, இரயில்வே முதலாளி ஏராள மாய்ப் பணம் சம்பாதிப்பதையும், மற்ற முதலாளி ஏராளமாய் மூட்டை கட்டுவதையும் அதில் பிரயாணம் செய்கிறவர்கள் ஆடம்பரங்களோடு ஆனந்தமாய்ப் பிரயாணம் செய்வதையும் பார்த்துக்கொண்டு இருக்கிறவன்—தனது வாழ்க்கையைப்பற்றிக் கவலைப்பட்டுத் தனக்கும் ஏதாவது உயர்ந்த கூலியோ சம்பளமோ வேண்டுமென்றால், அதற்கு, 'உணவுப் பொருள் எப்படி விற்கிறது? தொழிலாளிகளுக்குக் குடும்பச் செலவிற்கு மாதம் என்ன ஆகும்? இவ்வளவு போதாதா? அவ்வளவுக்குள் சரிப்படுத்திக்கொள்ளக் கூடாதா?' என்றெல்லாம் கணக்குப் பார்த்துச் சம்பளத் திட்டம் ஏற்படுத்துவது என்றால், இத் தொழிலாளிகள் சொன்னபடியெல்லாம் நடந்து, சோற்றுக்கு மாத்திரம் வகைசெய்துகொள்ளப் பாடுபடவேண்டிய அடிமைகளா என்று கேட்கிறோம். அவர்களது வாழ்வும் உழைப்பும் சோற்றுக்குத்தானா, வேறு மனமகிழ்ச்சிக்கு இடமில்லையா என்று கேட்கிறோம். தொழிலாளி என்றால் அவன் பணம் சேர்க்க வேண்டாமா? அவன் பெண்டு பிள்ளைகளுக்கு மற்றவர்களைப்போல்—அதாவது அவனது ஊழியத்தில் வாழும் மற்றவர்களைப்போல் வாழ்க்கை நடத்த வசதிகள் வேண்டாமா? அவன் பெண்டு பிள்ளைகள் நல்ல நகை, துணிகளுடன் நல்வாழ்க்கை வாழ வேண்டாமா என்று கேட்கிறோம். இவைகளுக்கு இடம் வைத்துத்தானே இனித் தொழிலாளர்கள் சம்பளங்களை நிர்ணயிக்க வேண்டும்? காலம் மாறிவருகிறது; உணர்ச்சியும் உரிமை வேட்கையும் பெருகி வருகின்றன; வாழ்க்கையின் உயர்வும் ஆசாபாசமும் வளர்ந்து வருகின்றன என்பதை யார் மறுக்க முடியும்? ஆகவே, இப்படிப்பட்ட நிலையில், இந்தக் காலத்தில், இனித் தொழிலாளிகளை உண்டிக்கு மாத்திரம் உழைக்கும் பிராணிகள் என்று கருதாமல், அவர்கள் முதலாளிகளின் பங்காளிகள்; உண்மையுள்ள கூட்டாளிகள்; அவர்கள், தங்கள் வாழ்க்கைச் செலவு போக இலாபத்தில் சரி விகிதாசாரம் பெற உரிமையுடையவர்கள் என்கின்ற கருத்தில் நடத்தப்பட வேண்டியவர்களும்—கொடுக்கப்பட வேண்டியவர்களும் ஆவார்கள்.

முதலினாலும், தொழிலினாலும் ஏற்படும் வருவாயை முதலுக்கும் தொழிலுக்கும் சரியாய்ப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும் என்பதுதான் தொழிற்சாலைகளைத் தேசியமயமாக்கவேண்டும் என்பதன் கருத்தாகும். முதலாளி—மனைவி; தொழிலாளி—கணவன்; இருவரும் சேர்ந்து பெற்ற பிள்ளைதான் உற்பத்தி என்பதாகும். மக்களுக்குச் சம சுதந்திரம் அளிப்பதாகச் சொல்லும் தேசிய சர்க்கார், மற்றெந்தக் காரியம் செய்வதற்கும் முன்பு இதை, இந்தத் தொழிலாளிகள் சம உரிமையைச் செய்துவிட வேண்டும். இதில் பேரம் பேசுவது அடிமைத் தன்மையை வலியுறுத்துவதேயாகும்; அதை அமுல் நடத்துவதேயாகும். ஆகையால், இந்தத் தொழிலாளிகள் கிளர்ச்சிப் போராட்டம் என்பதால் இரயில் நிர்வாகக் குழுவில் தொழிலாளர்களுக்குச் சம பிரதிநிதித்துவம் கொடுத்து வரவு-செலவுக் கணக்குகளை அவர்கள் முன்னால் வைத்து ஆளுக்கு எவ்வளவு எடுத்துக் கொள்ள வேண்டும்; எவ்வளவு பாதுகாப்புக்குக் காப்பு நிதியாய் ஒதுக்கவேண்டும் என்பவைகளை முடிவுசெய்யவேண்டும். அப்படியில்லாமல், உணவுப் பொருள் விலைவாசி பார்த்துப் பேரம் பேசுவது, இக் காலத்தில் மனித சமுதாயத்திற்கு—சிறப்பாகத் தொழிலாளிகளுக்கு மிகமிக இழிவேயாகும்.

ஆகையால், தொழிலாளிகள் இந்த நிலையை மாற்றப் பாடுபடவேண்டியதும், அதனால் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களை அனுபவிக்கத் துணிவு கொள்ளவேண்டியதும் மிகவும் தேவையான காரியம் என்றே சொல்லுவோம். ஆதலால், இப்போது இரயில்வே தொழிலாளர்களுடைய உள்ளத்தில், சிந்தனையிலிருக்கும் வேலை நிறுத்த உணர்ச்சியை, முயற்சியை நாம் பாராட்டி வரவேற்கிறோம். அவர்கள் கிளர்ச்சிக்குக் காரணம் சொல்லும்போது விலைவாசிகளை, வாழ்க்கைச் செலவுகளைக் காரணமாய்க் காட்டக் கூடாது. முதலாளி வாழ்க்கைத் தன்மையையும், அனுபவ உரிமையையும்; தங்கள் வாழ்க்கைத் தன்மையையும், அனுபவ உரிமையையும் எடுத்துக்காட்டி—அந்தப் பேதத்தைச் சொல்லி,

www.thamizham.net - Free E book No 3041

அவை, எந்த அளவுக்குச் சமமாக்க முடியும் என்கின்ற பிரச்சினை (இஸ்ஸு)யின் மீது வாதம், போராட்டம் துவக்கப்பட வேண்டும். இம் மாதிரியான தன்மையில் நடக்கும் தொழிலாளி போராட்டம் தான் ஒரு சாந்தியான வெற்றியைக் கொடுக்குமேயல்லாமல், ஏதோ ஓரளவுக்குக் கூலி உயருவதால் மனச் சாந்தி ஏற்பட்டுவிடாது. ஆகவே, போராட்டம் முக்கியமானது என்பதையும், அவசியமானது என்பதையும், அவசரமானது என்பதையும் நாம் வலியுறுத்துக் கூறுவோம்.

போராட்டம் துவக்குமுன்பு விளைவை நன்றாய்ச் சிந்தித்து ஒருவாறு அதன் பலாபலனை ஏற்க நம்மைத் தகுதியாக்கிக்கொள்ள வேண்டும். தொழிலாளிகளுக்காகப் பரிந்து பேசுவதாக வேஷம் போட்டுக்கொண்டு, தொழிலாளிகளைச் சுற்றிக்கொண்டிருக்கிறவர்கள் நயவஞ்சகத் துரோகிகளாக இருக்கக்கூடாது. தொழிலாளர்களின் தலைவர்கள் —வழிகாட்டிகள் என்பவர்கள் முதலாளித்தன்மை கொண்டவர்களாகவோ, முதலாளிகளின் இரகசியக் கூலிகளாகவோ இருக்கக்கூடாது. இன்றைய அரசாங்கம் பொது ஜனங்கள் அரசாங்கம் என்று சொல்லப்பட்டாலும், அது முதலாளிகள் ஆட்சியென்பதும், முதலாளித் தன்மையும்—சோம்பேறி வாழ்க்கையில் கைகண்டதும்—ஊரார் உழைப்பில் சுகவாழ்க்கை நடத்தும் முதலாளிகளுக்கும் மேம்பட்ட வஞ்சக சுகவாசிகள் ஆதிக்கத்தில் இருப்பதுமான ஆட்சி என்பதையும் மறந்துவிடக்கூடாது. நாட்டிலுள்ள மற்ற சாதனங்கள், அதாவது பத்திரிகைகள், பிரச்சாரங்கள், வாயாடிகள், பொது மக்கள் கருத்தை உண்டாக்குகிறவர்கள்; அதை உருப்படுத்துகிறவர்கள், தங்கள் இஷ்டப்படி பயன்படுத்துகிறவர்கள் ஆகியவர்கள் தொழிலாளிகளுக்குப் பிறவி எதிரிகள் என்பதை நன்றாய் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இவர்களை முதலாளிகள் எந்த நிமிஷத்திலும் என்ன விலை கொடுத்தேனும் வாங்கித் தங்கள் கையாட்களாகத் தங்கள் நலனுக்கேற்ற தன்மையாக நடத்திக் கொள்வார்கள் என்பதை உறுதியாக்கிக்கொள்ள வேண்டும். பத்திரிகைக்காரர்கள் ஒரு பித்தலாட்டச் செய்தியைக் கற்பனை செய்துகொண்டு, பழி ஏற்படுத்தி ஒரு தலையங்கம் எழுதித் தொழிலாளர்களில் பலரையே சரணாகதியடையும்படி செய்துவிடுவார்கள். இந்தப்படி இதற்குமுன் பலதடவை சில பத்திரிகைக்காரர்கள் செய்து, தொழிலாளிகளின் முயற்சியை நாசமாக்கி, ஸ்தாபனங்களையே பாழாக்கியிருக்கிறார்கள். இப்படிப்பட்ட இவர்கள், இந்தப் பத்திரிகைக்காரர்கள் இப்பொழுதே தொழிலாளிகளைப் பயப்படுத்தியும், எச்சரிக்கை செய்தும், தங்கள் அதிருப்தியைக் காட்டியும், மக்கள் மனம் தளரும்படியும், தொழிலாளிகள் மீது குற்றங்காணும்படியும் செய்துவருகிறார்கள்.

இன்றைய இரயில்வேக்களில் பத்திரிகைக்காரர்கள் ஆதிக்கமும் பார்ப்பனர்கள் ஆதிக்கமும் ஏகபோகமாய் இருந்து வருவதை அசாதாரணமாகவோ சாதாரணமாகவோ கருதிவிடக்கூடாது. இந்தப் பத்திரிகைக்காரர்களும், கிளப்பி விடுகிறவர்களும் இதற்குமுன் நடந்த பல போராட்டங்களில் எப்படி நடந்துகொண்டிருக்கிறார்கள்? அதனால் எவ்வளவு இலாபம் அடைந்தார்கள்? என்கின்ற அனுபவத்தையும் கவனிக்கவேண்டும். ஏனெனில், எந்த முயற்சிகளுக்கும் பொதுஜன ஆதரவு எப்படியிருக்கும் என்று பார்த்துத்தான் எதிரிகள் வசமாவதும், நமக்கு வெற்றி ஏற்படுவதும் பெரிய அளவுக்கு இருந்து வருகிறது. முதலாளிகளும் அதற்குத்தான் இணங்கி இறங்கிவருவார்களேயொழிய மற்றபடி நியாயம், நீதி, கடமை, உரிமை ஆகியவைகளைப் பார்க்கமாட்டார்கள். இவைகளைப் பார்க்காத தன்மைதான் முதலாளித் தன்மையாகும்.

ஆகையால், இரயில்வேத் தொழிலாளர்களான நமது உண்மைத் தோழர்கள் இவைகளை எல்லாம் சிந்தனையில் வைத்துத் தங்கள் நிலைமையையும் பார்த்து, நல்லபடி சிந்தித்து, இவற்றைச் சமாளிக்கத் தகுந்த வகைகள் வகுத்துக்கொண்டு தங்கள் போராட்டத்தைத் தாமதமின்றித் துவக்க வேண்டுமென்றும் அவர்களுக்குப் பூரண வெற்றி கிடைக்கவேண்டுமென்றும் உள்ள நம் ஆசையைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

['விடுதலை'–தலையங்கம்—10-6-1946]

www.thamizham.net - Free E book No 3041

# 6. திராவிடர் கழகம்—தொழிலாளர் நிறுவனமே!

தலைவரவர்களே! தோழர்களே! பெரியோர்களே!

இக் கூட்டம் தொழிலாளர்களின் தற்காலப் பிரச்சினையாகிய 'பக்கிங்ஹாம்-கர்நாடிக் மில் ஸ்ட்ரைக்' சம்பந்தமாக, திராவிடர் கழகத்தாரால் கூட்டப்பட்ட கூட்டம் என்று தோழர் என். வி. நடராசன் சொன்னார். 'தொழிலாளர்களுக்கும்—திராவிடர் கழகத் தாருக்கும் அதிக ஒற்றுமையில்லை; திராவிடர் கழகத்தார் தொழிலாளிகளை சரிவரக் கவனிப் பதில்லை' என்பது ஒரு புகார். இது தொழிலாளர்களின் தெரியாத்தனமேயாகும். தொழி லாளிகளும், தொழிலாளர் இயக்கங்களும்—பெருவாரியாய் காங்கிரஸ், கம்யூனிஸ்ட், 'புராண பிரசிங்கிஸ்ட்' ஆகிய ஸ்தாபனங்களோடுதான் அதிக சம்பந்தம் வைத்துக்கொண்டு அவைகளை ஆதரித்து வருகிறார்களே தவிர, திராவிடர் கழகத்தினிடம் தொழிலாளர் களுக்குப் பற்றில்லை. இது எனது 20-25 வருஷ அனுபவம். என்றாலும், நான், தொழி லாளர்கள் நம்மை ஆதரிக்கவில்லையே என்று ஒரு காலத்திலும் கவலைப்பட்டதில்லை. அதற்காக அவர்களைப் பிடிக்க நான் வலை வைத்ததுமில்லை. எங்கள் தொண்டு யாவும் தொழிலாளர்களுக்காகவேதான்; நாங்களும் தொழிலாளிகள்தாம். ஆகவே, வாய்ப்பினால் மாத்திரம் தொழிலாளிகளில்லாமல் பிறவியினால், சட்டத்தினால், சாஸ்திரங்களால், கடவுள்களால், கடவுள் சிருஷ்டியினால் நாங்கள் தொழிலாளிகளாக ஆக்கப்பட்டவர்கள். அப்படிப்பட்ட தொழிலாளிகள்தாம் திராவிடர்கள். இப்போது தொழிலாளர் இயக்கத்தைச் சேர்ந்த தொழிலாளிகளில் உண்மைத் தொழிலாளிகள் 1000-த்தில் ஒரு பாகமாகத்தான் இருப்பார்கள்.

தொழிலாளி என்கின்ற பதத்துக்கு அர்த்தம் என்ன? வேலை செய்கிறவன் என்று அர்த்தமாகும். 'யாவருந்தான் வேலை செய்கிறார்கள். அப்படியிருக்க ஒரு கூட்டத்திற்கு மாத்திரம் தொழிலாளி என்று பெயர் கொடுக்கப்பட்டிருப்பானேன்?' என்றால், பிறருக்காகத் தொண்டுசெய்து மனுதர்ம சாஸ்திரப்படி தொழிலாளியாகவே வாழ்பவர்கள், தொழிலாளி என்று அழைக்கப்படுகிறார்கள். அந்தக் கருத்தில் பார்த்தால், திராவிடர்களாகிய நாம் யாவரும் தொழிலாளர்கள் அல்லவா என்று கேட்கிறேன். இயந்திரங்களின் முன்னால் நிற்பவர்கள் மாத்திரம்தானா தொழிலாளர்கள்? வண்டி ஓட்டுகிறவர்கள், வண்டி இழுக்கிற வர்கள், வீதி கூட்டுகிறவன், கக்கூசுக்காரன், வண்ணான், நாவிதன், குயவன், உழுபவன், விதைப்பவன், தச்சன், கொல்லன், சக்கிலி, பறையன், செக்கு ஓட்டுகிறவன், நெசவு நெய்பவன் முதலியவர்கள் சரீரத்தாலுழைத்து, வயிற்றுக்கு, வாழ்வுக்கு மாத்திரம் சம்பாதித்து அன்றாட வாழ்க்கைக்கு அன்றாட வரும்படி எதிர்பார்த்து நிற்கும் யாவரும் தொழிலாளி அல்லவா என்று கேட்கிறேன்.

இன்று, இம் மாதிரித் தொழிலாளர்கள் யார்? பிராமணர்களா? சத்திரியர்களா? அல்லவே! சூத்திரர்கள்தானே இந்த மாதிரித் தொழிலாளிகளாய் இருக்கிறார்கள்? அந்தச் சூத்திரர்கள் யார்? திராவிடர்களாகிய நாம்தானே—'சூத்திரர்' என்கின்ற பட்டியலில் சட்டப்படியும், சாஸ்திரப்படியும், கடவுள் சிருஷ்டிப்படியும் காரியத்தில் நடப்புப்படியும் இருந்துவருகிறோம்! இதை எந்தத் தொழிலாளியாவது மறுக்கமுடியுமா? நான் மேலே சொன்ன தொழில்களில் ஒரு 'பிராமணன்' இருக்கிறானா? ஆகவே, சரீரத்தினால் பாடுபடும் வேலை அவ்வளவும் சூத்திரர்கள் என்று அழைக்கப்படும்—ஆக்கப்பட்டிருக்கும் திராவிடர்களாகிய நம் கையிலேயே இருப்பதால், திராவிடர் இயக்கம் தொழிலாளர் இயக்கம் என்று சொல்லுகிறேன்.

எதற்காகத் திராவிடர் இயக்கம் வேலை செய்கிறது என்றால், திராவிடர் நாலாவது சாதியாக இருக்கக்கூடாது; தொழிலாளர் சாதியாக இருக்கக்கூடாது என்பதற்காகவே யாகும்.

www.thamizham.net - Free E book No 3041

சில தொழிலாளர் தலைவர்கள் என்பவர்கள் என்மீது குரோதம் கொண்டிருக்கிறார்கள். என்னைப்பற்றி விஷமப் பிரச்சாரம் செய்கிறார்கள். நீங்கள்—வாயில்லாப் பூச்சி, அறிவில்லா ஜந்து என்கின்ற மாதிரி, அந்த வஞ்சகப் பேச்சுக்குக் காது கொடுத்து பைத்தியக்காரர்களாக இருந்து வருகிறீர்கள். என்னவென்றால்,

'ராமசாமி நாயக்கர் மதத்தில், கடவுளில் பிரவேசிக்காவிட்டால் நான் அவருடன் நேசமாக இருப்பேன். ஆனால், அவர் நாத்திகம், மதத் துவேஷம் பேசுகிறார். ஆகையால் ஜாக்கிரதையாயிருங்கள்!' என்று உங்கள் தலைவர்களில் சிலர் சொல்லி, உங்களை என்னிடம் அணுகவிடாமல் செய்கிறார்கள் என்று கேள்விப்பட்டேன். எனக்கு அதைப்பற்றிக் கவலையில்லை. ஆனால், உங்களை ஏய்க்க இப்படிப்பட்ட பேச்சுப்பேசும் உணர்ச்சி உள்ளவர்கள் தொழிலாளர்களுக்குத் தலைவர்களாக இருக்க யோக்கியதை உண்டா என்று கேட்கிறேன். இவர்களை நம்பினவர்கள் முன்னுக்கு வரமுடியுமா என்று கேட்கிறேன்.

எது மதம், எது கடவுள் என்பது இந்த அன்னக் காவடிகளுக்குத் தெரியுமா என்று கேட்கிறேன். நான் எந்த மதத்தை, எந்தக் கடவுளை ஒழிக்கவேண்டும் என்று சொல்லுகிறேன் என்பது இந்தத் தற்குறிகளுக்குத் தெரியுமா என்று கேட்கிறேன்.

எந்த ஒரு மதம்—ஒரு மனிதனைப் பிராமணனாகவும் ஒரு மனிதனைச் சூத்திரனாகவும் அதாவது தொழிலாளியாகவும், பாட்டாளியாகவும், பறையனாகவும் உண்டு பண்ணிற்றோ, அந்த மதம் ஒழியவேண்டும் என்று சொல்லுகிறேன். ஒழிய வேண்டுமா, வேண்டாமா? ('ஆம், ஒழிய வேண்டும்' என்ற பேரொலி) எந்தக் கடவுள் ஒருவனுக்கு நிறையப் பொருள் 'கொடுத்தும்', ஒருவனுக்குப் பாடுபடாமல் ஊரார் உழைப்பில் வாழ உரிமை கொடுத்தும்; மற்றொருவனை உழைத்து உழைத்து ஊரானுக்குப் போட்டுவிட்டுச் சோற்றுக்குத் திண்டாடும்படியும், இரத்தத்தை வேர்வையாய்ச் சிந்தி உடலால்உழைத்த வண்ணமிருந்து கீழ்மகனாய் வாழும்படி செய்கிறதோ—அந்தக் கடவுள் ஒழிய வேண்டும் என்று சொல்லுகிறேன். அந்தக் கடவுள் ஒழியவேண்டுமா, வேண்டாமா? ('ஆம்! ஆம்! ஒழிந்தேயாகவேண்டும்' என்கின்ற பேரொலி). ஆகவே, தோழர்களே! இது சொன்னால், நான் நாத்திகனும்—மதத் துவேஷியுமா? 'ஆம், ஒழிய வேண்டும்' என்று சொன்ன நீங்கள் மதத் துவேஷிகளா, நாத்திகர்களா? தோழர்களே, நம்மை நாத்திகர்கள் என்கின்ற இந்தப் பாஷாண்டங்கள்தாம் நாத்திகர்களாவார்கள்.

[சென்னையில், 30-6-1946-ல் சொற்பொழிவு—'விடுதலை' 1-7-1946]

# 7. தி. வி. தொ. சங்கம் ஏன்?

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

திராவிட விவசாயத் தொழிலாளர் கழகம் என்கிறதான ஒரு அமைப்பு, திராவிடர் கழகத்தின் சார்பிலே இருக்கவேண்டும் என்று எனக்குத் திருச்சியிலே நினைப்புத் தோன்றியது. அந்தப்படிதான் இன்று திராவிடர் கழகத்தின் சார்பாக, திராவிட விவசாயத் தொழிலாளர் கழகங்களை நாடெங்கும் ஏற்படுத்தி வருகின்றோம்.

இந்தப்படியான ஒரு அமைப்பை, அதாவது திராவிட விவசாயத் தொழிலாளர் கழகத்தைத் துவக்க வேண்டுமென்பதாக ஏன் தோன்றியது என்றால், இன்றைய தினம் விவசாயம் செய்கிறவர்கள் நிலத்திலேயே இறங்கிப் பாடுபடுகிறார்கள். பண்ணையாள், கூலியாள் முதலியோரும்—அதே மாதிரி நாட்டின் எல்லாத் தொழில்களை—அதாவது மில்லில் வேலை செய்வது, மூட்டைதூக்குவது, கல்லுடைப்பது, வண்டி இழுப்பது இன்னும் இதுபோன்ற உடலுழைப்பு வேலை செய்கிறவர்கள் எல்லாம் திராவிட மக்கள்தாமே தவிர வேறு யாருமல்லர். பார்ப்பானுக்கும் உடலுழைப்புக்கும் வெகு தூரம். இந்தப்படி



www.thamizham.net - Free E book No 3041

இருக்கும்போது, இந்த நாட்டுத் திராவிட மக்களின் நலனுக்குமாகவே பாடுபட்டுவரும் திராவிடர் கழகம் இந்தத் துறையிலே வேலை செய்ய வேண்டியது; அந்தத் தொழிலாளி களுடைய வாழ்வை முற்போக்கு அடையச்செய்ய வேண்டியதில் முழுப்பங்கு எடுத்துத் தொண்டாற்ற வேண்டுவது அவசியமாகும்.

அதோடு, இன்றைய தினம் விவசாயத் தொழிலாளர்களுக்கு என்று பாடுபடுவதற் காகப் பல கட்சிகள் இருந்துவருகின்றன. கம்யூனிஸ்டுகள் விவசாய சங்கம் என்பதாக ஒரு அமைப்பு ஏற்படுத்திக்கொண்டு வேலைசெய்து வருகிறார்கள். அதுபோலவே, சோஷிய லிஸ்டுகள் கிசான் சங்கம் என்பதாக ஒரு அமைப்பை ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். அதைப்போலவே, காங்கிரசுக்காரர்களும் விவசாயிகள் சங்கம் வைத்துக்கொண்டிருக் கிறார்கள். மற்றும், பல தொழிலாளர் சங்கங்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

இந்தப்படி விவசாயிகளுக்கும், தொழிலாளர்களுக்கும் ஆக வேலை செய்துவருகிற எந்தக் கட்சியாரும், திராவிடர் கழகத்தின் கொள்கைகளை ஒத்துக்கொள்ளாதவர்கள்.

இன்றையத் தொழிலாளர், விவசாய சங்கத்தை அமைத்துக் கொண்டிருப்பதைக் குறித்துப் பொதுவாக எனக்குத் தோன்றும் கருத்து என்னவென்றால், இந்தப்படியான ஸ்தாபனங்களை வைத்துக்கொண்டு—ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கட்சிக் காரியத்துக்கு இவைகளைப் பயன்படுத்திக்கொள்கிறார்கள் என்பதுதான். மற்றபடி, இன்றையத் தொழி லாளிகளின் இழி வாழ்க்கைத் தன்மை ஒழியவோ, வேறு வசதியான நிலை அவர்களுக்கு ஏற்படவோ யாரும் பாடுபடுவது இல்லை.

இந்த நாட்டிலே இன்றைய தினம் இருக்கிற விவசாயத் தொழிலாளர்கள் கூலிக்காரர் களாக இருப்பது இன்று நேற்று ஏற்பட்டது அல்ல. பாரம்பரியமாக, வழி வழியாக இவர்கள் தொழிலாளர்கள் தான்.

அன்றாடக் கஞ்சிக்காக—அன்றாடம் வேலை செய்து, கூலி பெற்று, அந்தப்படி பெற்ற கூலியை, அன்றையக் கஞ்சிக்கே செலவு செய்துவிட்டு, அடுத்த நாள் கஞ்சிக்கு யாரிட மாவது வேலைக்குப் போய்க் கூலி வாங்கித்தான் வழி செய்து கொள்ள வேண்டும் என்ற தன்மையிலேயே வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

இன்றைய தினம் தொழிலாளர் சம்பந்தப்பட்ட கிளர்ச்சிகள் நடக்கின்றன என்றால் எதற்காக நடக்கின்றன? அவனுடைய தொழிலாளித் தன்மை ஒழிவதற்காகவா? இல்லவே இல்லை.

ஒரு மாதம், இரண்டு மாதம் 'ஸ்ட்ரைக்' செய்து, அடிதடிப்பட்டு, பல கஷ்ட நஷ்டங் களை யேற்று கிளர்ச்சி செய்தால் இரண்டணா கூலி உயர்வு தரப்படுகிறது. ஆனால், கூலி உயர்வு தரப்படுகிறதே தவிர, அவனுடைய தொழிலாளத் தன்மை அப்படியேதான் இருக் கிறது. அவ்வளவு கஷ்டப்பட்டுக் கூலி உயர்வு சம்பாதித்த தொழிலாளி, அந்தப் பணத் தினால் ஏதாவது இலாபம் பெறுகிறானா என்றால் அதுவும் இல்லை.

கூலி உயர்வு பெற்றவுடன்—தொழிலாளி, எங்கே தேர்த் திருவிழா நடக்கிறது? எந்தச் சாமிக்கு 'அர்ச்சனை' செய்யலாம், என்பதிலேதான் கவனத்தைச் செலுத்துகிறான். கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பணம், அவனிடத்திலே குவிந்திருக்கும் முட்டாள் தனத்தின் காரணமாகக் கல்லுச் சாமிக்கும், திருவிழாக் கூத்துக்கும் போய் விடுகிறது.

அதுமட்டுமல்ல; தொழிலாளிக்கு முதலாளி, இரண்டணா கூலி கூட்டிக்கொடுப் பதினால் முதலாளிக்கு எந்தவிதமான நஷ்டமும் ஏற்பட்டுவிடுவதில்லை; அவனுடைய தன்மைக்கும் எந்தவிதமான ஆபத்தும் ஏற்படுவதில்லை. அதற்குப் பதிலாக, கூலி உயர்வு கொடுத்து, தொழிலாளர்களுக்கு ஏற்படுகிற முற்போக்கு உணர்ச்சிகளை மழுங்கச் செய்து, அவனுடைய முதலாளித்தன்மையைக் காப்பாற்றிக் கொள்கிறான்.

www.thamizham.net - Free E book No 3041

அதோடு, முதலாளி என்ன செய்கிறான் என்பதை நீங்கள் கவனித்துப் பார்த்தால் தெரியும்.

தொழிலாளிக்குக் கூலியில் இரண்டணாவை அதிகப்படுத்தினவுடனேயே, முதலாளி தன் பண்டங்களின் விலையின்மீது இரண்டணாவைக் கூட்டி உயர்த்தி வைக்கிறான். இதனால் பொருள்களின் விலையேற்றத்தால் பொதுமக்கள் பாதிக்கப் படுகிறார்கள். அதோடு, தொழிலாளியும் தான் முதலில் ஓரணாவுக்கு வாங்கிக்கொண்டிருந்த அதே சாமானை, கூலி உயர்வு கிடைத்தபின் ஒன்றேகால், ஒன்றரை அணா கொடுத்து வாங்க வேண்டியவனாகிறான்.

எனவேதான், நான் சொல்லுகிறேன்: 'இந்தக் கூலி உயர்வுக் கிளர்ச்சியும், அதற்காகத் தொழிலாளர்களுக்கு அடி, உதை, துப்பாக்கிக் குண்டு சாவு வாங்கிக் கொடுப்பதும் வெறும் கேலிக் கூத்து ஆகும்' என்று.

தொழிலாளி உயரவேண்டுமென்றால் தொழிலின் இலாபத்தில் அவனுக்கும் பங்கு வேண்டும்; தொழிலின் நிர்வாகத்தில் அவனுக்கும் பங்கு இருக்கவேண்டும். இந்தப் படியாகக் காரியம் செய்தால்தான் தொழிலாளி நிலைமை ஒழிந்து மனித வாழ்க்கையில் சம நிலைப் பங்காளிநிலை ஏற்படுமே தவிர—கூலிக்குக் கிளர்ச்சி என்பது, தொழிலாளி தொழிலாளியாகவுமே, ஏழை ஏழையாகவுமே, பணக்காரன் மேலும் பணக்காரனாகவுமே இருப்பதற்கு—அதாவது முதலாளி, முதலாளியாகவுமே இருப்பதற்குத்தான் உதவுமே தவிர வேறு எதற்கும் இல்லை. அன்றியும், தொழிலாளிக்குப் பாடுபடுகிறவர்கள் சர்க்காரிடம் நேரிடை நடவடிக்கை எடுத்துச் சட்ட திட்டம் செய்யவேண்டும்.

அடுத்தபடியாக, திராவிடர் கழகத்தின் அடிப்படைக் கொள்கைகளை ஒத்துக்கொண்டு அந்தப்படிக் காரியம் செய்தால்தான் 'தொழிலாள நிலை' ஒழிந்து சமநிலை காணமுடியும் என்பேன்.

உதாரணமாக, நான் ஒரு தொழிலாளியைப் பார்த்து, 'நீ ஏழையாய் மற்றவர்களுக்கு உழைத்துப் போட்டுவிட்டு, நீ ஏன் ஒன்றும் இல்லாமல் இருக்கிறாய்?' என்று கேட்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அந்தத் தொழிலாளி என்ன நினைப்பான்?

'அவன் (முதலாளி, பணக்காரன்) மகாராஜன்—போன ஜன்மத்திலே புண்ணியம் செய்திருப்பான்; நானென்ன பாவம் செய்தேனோ, இந்த ஜன்மத்தில் இவ்வளவு கஷ்டப் பட!' என்றுதான் சொல்லுவான். இது, இந்த நாட்டில் மற்றெல்லா நாட்டைவிட அதிக மாகும். ஆதலால், இந்த நாட்டுத் தொழிலாளர் நலம் பெற, தொழிலாளிகளைப் பார்ப்பானிடமும் முட்டவிட வேண்டும்.

அன்றியும், இன்று தொழிலாளிகளுக்குப் பாடுபடுவதாகச் சொல்லுகிற ஸ்தாபனங்கள் எல்லாம் தொழிலாளிக்கு நாத்திகம் தேவையில்லை; அவன் சாமி கும்பிடுவதையோ, கோயில் குளங்களுக்கு, திருவிழாக்களுக்குப் போவதையோ தடுக்க வேண்டிய அவசிய மில்லை என்பதாகவெல்லாம் சொல்லுகிறார்கள். அந்தப்படி இருப்பதினால், நான் முன்னே சொன்ன மாதிரி தொழிலாளி தனக்குக் கிடைக்கும் பணத்தை இந்த மாதிரிக் கோவில், குளம், திருவிழாக்களிலே செலவிட்டு, மூடத்தனத்திற்கும், முட்டாள்தனத்திற்கும் பலியாவானே தவிர—சேர்த்த பொருளை மீத்தாமல் கண்டதுக்கு, கண்மூடித்தனத்துக்குச் செலவிடுவானே தவிர, வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்ளவோ, வாழ்க்கைத் தேவைகளைச் சரிக் கட்டிக் கொள்ளவோ முடியாதவனாக ஆகிவிடுகிறான்.

இந்தப்படி இருக்கிற யதார்த்தமான நிலைமையைப்பற்றி, யாரும் எடுத்துச் சொல்வ தில்லை. என்ன காரணத்தாலோ ஏதோ முதலாளிக்கும் தொழிலாளிக்கும் சண்டையை உண்டாக்குவதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்து, தொழிலாளிக்கு அடி, உதை பெறும் படியாகச் செய்வார்கள். பார்ப்பானிடமும் முட்டவிடத் தயங்குவார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

அதுமட்டுமல்லாமல் மற்றொரு சங்கதியையும் நீங்கள் கவனிக்க வேண்டும். தொழிலாளர்கள் சார்பாகப் பேசுபவர்கள் எல்லோரும் முதலாளியைத் திட்டியும் தொழிலாளிக்கும், முதலாளிக்கும் இருக்கிற பேதாபேதத்தையும் சுட்டிக் காட்டியும்தான் பேசுவார்களே தவிர, முதலாளி–தொழிலாளி தன்மைக்குப் பாதுகாப்புத் தருகிற சர்க்காரை—பார்ப்பானை ஒன்றும் செய்யமாட்டார்கள். அதாவது, முதலாளியின் முதலாளித் தன்மைக்கு ஆபத்து வராமல் தொழிலாளியைச் சுரண்டிப் பெறும் உடைமையை அனுபவிக்க அவனுக்கு உரிமை கொடுத்து, அந்தப்படி அவன் அனுபவிக்கிற பொருளுக்கு எந்த விதமான தீங்கும் நேராமலும் தனி உடைமை அனுபவிப்புக்குப் பாதுகாப்பு அளிக்கும் சர்க்காரை இவர்களிலே யாரும் ஒன்றும் செய்வதில்லை. அதை விட்டுவிட்டு, தொழிலாளிக்கு, முதலாளியிடம் வெறுப்பை யூட்டி, முதலாளியின் பொருளைப் பலாத்கார நடவடிக்கையின் மூலமாகக் கொள்ளையடிப்பது, தீ வைப்பது, நாசமாக்குவது போன்ற காரியங்களைச் செய்ய ஏவிவிடுகிறார்கள். தொழிலாளி அந்தப்படி செய்கிறபோது, முதலாளி தன்னுடைய நிலைமைக்கு அனுமதி அளித்தும், பாதுகாப்பு அளித்தும் வரும் சர்க்காரிடம் உதவிக்குப் போகிறான். சர்க்காரும் உள்ளே புகுந்து தொழிலாளியை அடக்குகிறது. இதுதான் இன்றைய தினம் முதலாளி—தொழிலாளிப் போராட்டத்தின் பிரத்தியட்ச நிலைமையாய் இருப்பதை நாம் பார்க்கிறோம்.

எனவேதான் நான் சொல்லுகிறேன்: ‘இன்றைய பேத நிலைமைக்குக் காரணமாக இருக்கிற அமைப்பும், அந்தப்படியான அமைப்புக்கு ஆதரவளித்துப் பாதுகாப்பாக இருக்கும் சர்க்காரும் ஒழிக்கப்படவேண்டும். தொழிலாளிகளிடையில் இந்தப் பிரச்சாரமே அதிகமாக இருக்கவேண்டும்.

திராவிட விவசாயத் தொழிலாளர் கழகத்தை நான் துவக்குவதற்கு இன்னும் பல காரணங்கள் உண்டு.

இன்னொன்று சொல்லுகிறேன். உதாரணமாக, சோஷியலிஸ்டுகள் தொழிலாளர் சங்கம் என்பதாக வைத்துக்கொண்டு வேலை செய்து வருகிறார்கள். எலெக்ஷன் வருகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது அந்த எலெக்ஷனில் நாம் ஒரு ஆளை நிறுத்துகிறோம் அல்லது நிற்கிற யாரையாவது ஆதரிக்கிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள். அந்த எலெக்ஷனில் தொழிலாளர் சங்கம் வேறு ஆளை ஆதரிக்கிறது அல்லது நிறுத்துகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது திராவிடர் கழகத்தில் இருக்கும் தொழிலாளி யாருக்கு ஓட்டுப்போடுவான்?

திராவிடர் கழகத்திலிருந்தாலும் தொழிற் சங்கத்துக்காரன், தொழிலாளி என்கிறதால் தொழிற் சங்கம் ஆதரிக்கிற, நிறுத்துகிற ஆளுக்குத்தான் ஓட்டுப்போடுவான். அப்போது நாம் ஆதரிக்கிற ஆள் என்ன ஆவது? நமக்குச் சட்டசபை சம்பந்தமே வேண்டாமா?

திராவிட விவசாயத் தொழிலாளர் கழகம் நாம் ஏற்படுத்தி இருப்பதுபற்றிப் பலர் குற்றம் சொல்லலாம். கம்யூனிஸ்டுகளும் நம்மை, ‘முதலாளிகளின் கையாட்களாகிய இவர்கள் இப்படிச் செய்கிறார்கள்’ என்று சொல்லலாம்.

சோஷியலிஸ்டுகள், ‘இதனால் எல்லாம் ஒன்றும் காரியம் நடக்காது’ என்பதாகக் குற்றம் சொல்லலாம். மற்றவர்கள் நம்மைப்பற்றிச் சொல்லுகிற குறையைப்பற்றி நமக்குக் கவலையில்லை. திராவிட விவசாயத் தொழிலாளர் கழகத்தை நாம் ஆரம்பித்தது மற்றவர்களுக்குப் போட்டியாகவோ அல்லது மற்ற கட்சிக்காரர்கள் காட்டுகிற தப்புகளுக்கோ அல்ல என்பதை நம்முடைய பின் நடத்தையின் மூலம் அவர்களே தெரிந்துகொள்வார்கள்.

அதோடு மற்றொரு சங்கதியையும் நான் உங்களுக்குச் சொல்ல ஆசைப்படுகிறேன். அதாவது, கம்யூனிஸ்ட் கட்சியோ, சோஷியலிஸ்ட் கட்சியோ இந்த நாட்டுக் கட்சிகள் அல்ல. அவற்றுக்குத் தலைமை இங்கு இல்லை. மேலிருந்து—ஹைகமாண்டிலிருந்து என்ன உத்தரவு வருகிறதோ அதை நிறைவேற்ற வேண்டியதே இங்கு இருக்கிற ஆட்களுடைய கடமையாகும். அதுவும் கம்யூனிஸ்ட் கட்சி உலகம் பூராவுக்கும் சம்பந்தப்பட்ட கட்சியாகும்.

www.thamizham.net - Free E book No 3041

எனவே, அந்தக் கட்சிகளின் மேலிடத்திலிருந்து வரும் உத்தரவுகள் எல்லாம் நம்முடைய நல்லதுக்கு ஏற்றபடியே—நலத்துக்காகவே வரும் என்று எப்படிச் சொல்லமுடியும்?

அதோடுமட்டுமல்லாமல், திராவிடர் கழகம்தான் இந்த நாட்டினுடைய தேசிய ஸ்தாபனம் ஆகும். மதத்திலும், அரசியலிலும், பொருளாதாரத்திலும் பார்ப்பனர்களுக்கும் வடநாட்டார்களுக்கும் அடிமைப்பட்டிருக்கும் இந்த நாட்டைப் பார்ப்பனர், பனியாக் கூட்டத்தினிடமிருந்து விடுவித்து, சுதந்திர நாடாக்கும் விடுதலைக் கிளர்ச்சி ஸ்தாபனம் தான் திராவிடர் கழகம். திராவிடர் கழகத்தினால்தான்—இந்த நாட்டை விடுதலை செய்து, இங்கு சுயமரியாதையுடன் கூடிய நல்ல நிலைமையை—உயர்ந்த பண்பை—சவுகரியமான வாழ்வை அமைக்கமுடியுமென்று நாம் கருதுகிறோம்.

அந்தப்படி கருதி நாம் ஆற்றிவரும் தொண்டில், நாம் நாலணா அளவுக்குத்தான் காரியம் சாதித்திருக்கிறோம். இதற்குள்ளேயே எத்தனையோ துரோகத்துக்கும், ஐந்தாம் படைக்காரர்களின் சதிக்கும் தப்பிக் காரியம் சாதித்திருக்கிறோம். பல பார்ப்பனர்கள், பல பணக்காரர்கள் கம்யூனிசத்தில் இருப்பதுபோல நடித்துக்கொண்டிருக்கிறார்கள். நம்மிடம் பணக்காரர்கள் ஆதிக்கம் இல்லை என்றாலும் இவைகளுக்கெல்லாம் தலை கொடுத்துக்கொண்டுதான் இந்த நாட்டிலே காரியம் செய்ய வேண்டியிருக்கிறது.

இன்னமும் திராவிடர் கழகத்தின் இலட்சியங்கள் நிறைவேறவும், இந் நாட்டு மக்கள் உயரவும் பார்ப்பனர்கள் தவிர மற்ற மக்கள் அனைவரும் திராவிடர் கழகத்தில் பங்கு கொண்டு காரியம் ஆற்ற வேண்டியிருக்கிறது. எனவேதான், நாம் நம் இனத்தைச் சேர்ந்த அனைவரின் பிரச்சினையையும் கவனித்துக் காரிய மாற்றும் வேலையில் இறங்கி, திராவிட விவசாயத் தொழிலாளர் கழகம் ஏற்படுத்தியிருக்கிறோமே தவிர, மற்ற கட்சிக்காரர்கள் நினைப்பதுபோல் போட்டிக்கு அல்ல; மற்றவர்களுடன் சண்டை போடுவதற்கு அல்ல.

தோழர்களே! இன்னமும் சொல்லுகிறேன்: திராவிட விவசாயத் தொழிலாளர் கழகத்தின் திட்டம் இத்தோடு முடிந்துவிடுவதல்ல. இந்த நாட்டின் சகல துறைகளிலேயும் விஞ்ஞான ரீதியான மாற்றத்தை ஏற்படுத்துவதுடன், தனி உடைமையை ஒழித்து அனைவருக்கும் அனைத்தும் என்கிறதான நிலையை ஏற்படுத்தவும், அப்படி ஏற்படுத்த இருக்கும் மற்ற கட்சிகளுடன் தாராளமாக—ஏன் வலியவும் ஒத்துழைக்கவும் விரும்புகிறது என்றும் சொல்லுகிறேன்.

இந்த நாட்டு விவசாயத் துறையை எடுத்துக்கொண்டால், 2000 வருடங்களுக்கு முன் வயல் வேலைகளில் எப்படிப்பட்ட முறைகள் இருந்துவந்தனவோ—எந்த விதமான ஏர், கலப்பை உபயோகப்படுத்தப்பட்டு வந்தனவோ—எப்படி உழுவது, விதைப்பது, வயலுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதிலேயிருந்து அறுவடைக் காரியம் வரை செய்துவந்தார்களோ—அதே முறைகள்தாம் இன்றும் இருந்துவருகின்றன. போதுமான முற்போக்கும் காணப்பட வில்லை. இந்தத் துறைகளில் பாட்டாளி சிறிதும் நலம் பெறவில்லை.

மேல்நாடுகளைப் பார்த்தால் இங்கு 10 ஏகராவில் செய்கிற வெள்ளாமை, விளைச்சலை அங்கே 4 ஏக்கரிலேயே விளைக்கிறான். இங்கு 2 ஏகராவுக்குச் செலவழிக்கப்படும் உழைப்பை அங்கே 10 ஏகராவுக்குச் செலவழித்து நலம் காண முடிகிறது விஞ்ஞான முறையில். இங்கே காலங்காத்தாலே—கோழி கூவும்போது எழுந்துபோய் சூரியாஸ்தமனம் வரையிலும் கஷ்டப் பட்டு உழைத்துவிட்டு வந்தும் கஷ்டப்பட்டதற்கு ஏற்ற விளைச்சலைக் காணமுடிவதில்லை.

மேல்நாடுகளில் மற்ற துறைகளில் வளர்ச்சியடைந்தது போலவே இந்தத் துறை யிலேயும் வளர்ச்சியடைந்திருக்கிறார்கள். ஆகவே, இன்றைய விவசாய முறைகளிலேயும் விஞ்ஞானத்தின் அடிப்படைப்படி மாற்றம் காணவேண்டும்.

மேல்நாட்டில் நிலத்திலே வேலை செய்கிறவனுக்கு விளைச்சலில் பங்கு உண்டு, ஆனால், இங்கு அப்படியல்ல. நிலத்துச் சொந்தக்காரன் எங்கோ இருந்துகொண்டு

www.thamizham.net - Free E book No 3041

நிலத்தை வாரத்திற்கு விட்டுவிட்டு, அந்தப்படி வாரத்திற்கு நிலத்தைப் பெற்ற குத்தகைக் காரன் நிலத்தைப் பண்படுத்தி உழுது விளைச்சல் எடுத்துக்கொடுக்க, சும்மா உட்கார்ந் திருந்த நிலத்துச் சொந்தக்காரன் பெரும் பகுதியை எடுத்துக்கொள்வான். குத்தகைக் காரனுக்கு முட்டுவழிச்செலவு, ஆட்கள் கூலிச் செலவு போக, கடைசியில் ஒன்றும் இல்லாத வனாக—'உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்குக்கூட மிச்சமில்லை' என்ற மாதிரியில், ஆற்றுப் பாசனமில்லாத மிராசுதாரன் நஷ்டப்படவேண்டியிருக்கிறது. இந்த முறையினா லேயே அவன் பாட்டாளிக்குச் சரிவரக் கொடுக்கமுடியாமலும், ஏதும் மீத்த முடியாமலும் போகிறது. பாட்டாளி அன்றாடக் கூலிக்காரனாகவே—ஒரு சில பெரு நிலப் பிரபுக்கள் தவிர, மற்றவர்கள் இருந்து வழிவழியான கூலிக்காரனாக வாழவேண்டியிருக்கிறது.

இந்த நிலைமையேற்படாமல் முதலாளி எப்படி மீத்து வைக்கிறானோ அப்படியே தொழிலாளியும் விவசாயியும் மீத்து வைக்கும்படியானபடி அனைவருக்கும் தொழிலின் இலாபத்தில் பங்கு இருக்க வேண்டுமானால் தொழில்முறையும் விஞ்ஞான ரீதியில் முன்னேற வேண்டும்.

சீக்கிரத்திலேயே ஒரு காலம்வரும். என் காலத்திலேயே வந்தாலும் வந்துவிடும் என்று தான் நான் கருதுகிறேன். அதாவது, பூமி பூராவும் ஏராளமாக ஒரு மனிதன் வசமே தேக்கப்பட்டிருக்கக் கூடாது. அனைவருக்கும் அவரவர்கள் அளவுக்குப் பிரித்துக் கொடுக்கும் காலம் வரும். அந்தப்படியான காலத்தை விரைவில் ஏற்படுத்த நாம் வழி காட்டிகளாயிருக்க வேண்டும். 20 ஆண்டுகளுக்கு முன்பே இந்தப்படியாக நான் சில திட்டங்கள் வகுத்து இருக்கிறேன். அவை இன்று செல்வாக்குப் பெற்று வருகின்றன.

இன்றைய விவசாயத் தொழிலாளர்களின் துயரைப் போக்கி தொழிலாளி–முதலாளி என்கிற, நிலத்துக்குச் சொந்தக்காரன்—நிலத்துக் கூலிக்காரன் என்பதான சொல்லே அகராதியில் இல்லாதபடி செய்ய வேண்டும் என்பதுதான் திராவிடர் கழகக் குறிக்கோள்.

இந்த நிலைமையெல்லாம் நாட்டிலே மலரவேண்டுமென்றால் நாடெங்கும் திராவிட விவசாயத் தொழிலாளர் கழகங்கள் ஏராளமாக ஏற்படுத்தப்பட வேண்டும். விவசாயத் தொழிலாளர்கள் அனைவரும் அதிலே ஏராளமாகச் சேர்ந்து பணியாற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

[தாதம்பட்டி, சிவதாபுரம் சொற்பொழிவுகள்—'விடுதலை' 22-3-1952]

## 8. தொழிலாளர் கிளர்ச்சி

தோழர்களே!

தொழிலாளர் கிளர்ச்சியே வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. மக்கள் உள்ளத்திலே முதலாளித்துவப் பாதுகாப்பு சர்க்கார்—பேத அமைப்புக்குப் பாதுகாப்புத் தேடுகிற சர்க்கார் எதற்காக என்கிறதைத் தெளிவாக்கவேண்டும். இந்தப்படி இருக்கிற இந்த சர்க்காரை ஒழித்தாகவேண்டும் என்கிற உணர்ச்சியை மக்களுக்கு ஊட்டவேண்டும். அதற்காக என்று சர்க்கார் கொடுக்கும் தொல்லையைச் சகித்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் மாறுதல் ஏற்படும். இதைத்தான் நாங்கள் கூறுகிறோம்—எங்கள் கழகம் கூறுகிறது.

இப்போது தொழிலாளர் கிளர்ச்சி என்பது எப்படியாகிவிட்டதென்றால், முதலாளி யோடு சண்டை போடுவதுதான் என்பதாகிவிட்டது. நான் சொல்லுகிறேன்: முதலாளிக்கும், முதலாளித்துவ முறைக்கும் பாதுகாப்புத் தரும் சர்க்காருடன் நாம் போராடவேண்டும்.

இந்த நாடு திராவிடநாடு; இந்த நாட்டுத் தொழிலாளர் இயக்கம் திராவிட நாட்டுத் தொழிலாளர் இயக்கமாகத்தான் இருக்கும். உலகத் தொழிலாளர் இயக்கம் என்பதாக இருக்கிறது. அதைப்போலவே அந்தந்த நாட்டுக்கு—அந்தந்த நாட்டின் பெயரால்

www.thamizham.net - Free E book No 3041

தொழிலாளர் இயக்கங்கள் இருக்கின்றன. அதாவது, இங்கிலாந்து தொழிலாளர் இயக்கம், அமெரிக்கத் தொழிலாளர் இயக்கம், இந்தியத் தொழிலாளர் இயக்கம் என்று இருப்பது போல, திராவிட நாட்டு விவசாய சங்கம், தொழிலாளர் இயக்கம்—திராவிட விவசாயத் தொழிலாளர் இயக்கமாக இருக்கிறது. அதோடு, மற்ற நாட்டுத் தொழிலாளர் இயக்கங்களுக்கும் இந்த நாட்டுத் தொழிலாளர் இயக்கத்துக்கும் ஒரு பெருத்த வேற்றுமை உண்டு. அதாவது, மற்ற நாடுகளில் பணக்காரன்—ஏழை என்கிற பேதத்தோடு நின்றுவிடும். ஆனால், இங்கோ பணக்காரன் – ஏழை என்கிற பேதத்தோடு மாத்திரமல்லாமல், அந்தப் பேதத்துக்குப் பாதுகாப்புத் தருகிற பார்ப்பான்—சூத்திரன், பறையன் என்கிற அதைவிடக் கொடுமையான பேதமும் உள்ளது. நாம் அந்தப் பேதத்தையும் களைந்தாக வேண்டும். எனவே, மற்ற நாட்டு முறைதான் இங்கும் சிலாக்கியமானது என்று விவாதிப்பது என்பதானால், அது ஒன்று அறியாமையாய் இருக்கவேண்டும்; அல்லது வடிகட்டின பித்தலாட்டமாக இருக்கவேண்டும்.

திராவிட விவசாயத் தொழிலாளர் கழகம் என்கிற ஸ்தாபனம் இப்போது சமீபத்தில் தான் திருச்சியில் ஆரம்பித்தோம். சாதாரணமாக இப்போது இந்தத் தமிழ்நாடு முழுவதும் திராவிடத் தொழிலாளர்கள் பலர் தங்கள் தங்கள் தொழிலின் பேரால் திராவிட விவசாயிகள் கழகம் என்றும், திராவிடத் தொழிலாளர்கள் கழகம் என்றும், திராவிட தையல் தொழிலாளர் கழகம் என்றும், திராவிட சலவைத் தொழிலாளர் கழகம் என்றும், திராவிட மருத்துவத் தொழிலாளர் கழகம் என்றும் இன்னும் இதுபோன்ற தொழிலாளர் கழகங்கள் பலவற்றை நாடு பூராவும் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

இத்தனை நாள் இல்லாமல், திராவிடர் கழகம் இன்று ஏன் இந்தத் துறையிலே தனியான ஸ்தாபனத்தின் பேரால் சேவை செய்ய ஆரம்பித்தது என்று நீங்கள் கேட்பீர்களானால், ஏறக்குறைய இந்த 25 ஆண்டுகளாக எங்களுடைய போராட்டங்கள், பிரச்சாரங்கள், சேவைகள் எல்லாம் தொழிலாளர்கள் சங்கதியையே—அதாவது கீழ்சாதி மக்களுடைய—பாடுபடுகிற பாட்டாளி மக்களுடைய—சூத்திர, பஞ்சம மக்களுடைய நல்வாழ்வுக்கு என்றே அமைக்கப்பட்டிருந்தாலும்; சுயமரியாதை இயக்கம், சமதர்ம இயக்கம், ஜஸ்டிஸ் கட்சி, திராவிடர் கழகம் என்பன போன்ற பல ரகங்களால் வேலை செய்து வந்தாலும், தொழிலாளர்கள் மத்தியிலே தனி ஸ்தாபனமாக வேலை செய்யவில்லை. பொதுவில்தான் காரியங்களைக் கவனித்துவந்தோம். அவ்வப்போது வேண்டிய உதவிகளைச் செய்துவந்தோம். பல நேரங்களில் நாங்களும் நேரடியாகக் கலந்துகொண்டோம்.

[பூந்துறையில், 13-9-1952-ல் சொற்பொழிவு—'விடுதலை' 7-10-1952]

# 6. தொழிலாளரும் நாமும்

## 1. தொழிலாளரும் நாமும்

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

நம்முடைய முயற்சிகள், தொழிலாளி – முதலாளி ஆகியோர் கூட்டாளிகள் என்கிற தான தன்மை ஏற்பட வேண்டும் என்பதற்கே. அதற்குப் பலாத்காரம்தான் சாதனம் என்பது அல்ல! அல்லது ஸ்ட்ரைக் செய்துதான் அந்தக் காரியத்தைச் சாதித்துக்கொள்ள வேண்டும் என்ற தன்மை இருக்கக்கூடாது. வேறு முறைகளைக் கையாள வேண்டும். முதலாளிகளை மிரட்டுவது என்பதையே இலட்சியமாகக் கொண்டிருக்கக் கூடாது. முதலாளி முறை ஆட்சியிலுள்ள வரையில் முதலாளிகளை நம்மால் ஒன்றும் செய்துவிட முடியாது.

www.thamizham.net - Free E book No 3041

சில ஆயிரம் ரூபாய்கள் அவர்களுக்கு நஷ்டம் ஏற்படும்படி செய்வதால் அவர்கள் இணங்கிவிட மாட்டார்கள். கூட்டுக் கம்பெனிக்கு-'லிமிடெட் கம்பெனிக்கு' முதலாளியே கிடையாது. நிர்வாகிகளோடு செய்யும் போராட்டம் கல்லிலே முட்டிக்கொள்வது போன்றதே யாகும். அவர்களோடு போராடுவதால் அவர்களுக்கு நம்மீது பழிவாங்க வேண்டும் என்ற எண்ணம்தான் தோன்றும்; நம் கஷ்டங்களுக்குப் பரிகாரம் செய்யவேண்டும் என்கிற புத்தி தோன்றாது; இது இயற்கை. இந்த இடத்தில் நமக்குத்தான் அதிகப் பொறுப்பும் சரியான வழியும் தேவையாக இருக்கின்றன.

அடிக்கடி சோஷலிஸ்டுகள் 'இரயில்வே பொது ஸ்ட்ரைக்' என்று சர்க்காரை மிரட்டு வதும், அதனால் தங்களுக்கு வசதியும் பெருமையும் சம்பாதித்துக் கொள்வதுமாய் இருக் கின்றனரே, இதை சர்க்கார்தான் மதிக்குமா? மற்ற கட்சிகள்தாம் மதிக்குமா? பொது மக்கள்தாம் மதிப்பார்களா? சில கட்சிகளுக்கு இது ஒரு பிஸினெஸ் (Business) வியாபார மாகப் போய்விட்டது என்பதாகத்தானே ஆகி விட்டது? 'ஸ்ட்ரைக்' முறை தொழிலாளி களுக்கு வெற்றி தரவில்லை என்பதை அனுபவ மூலமாக இந்த 25 ஆண்டுகளில் உணர்ந்து விட்டோம்.

மற்றும், அடுத்தபடியாக இன்று பார்த்தால் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் பரஸ் பரம் நல்லுறவு என்பதே கிடையாது; ஒருவருக்கொருவர் துவேஷமும் வெறுப்பும் இல்லாதபடி நடந்துகொள்ள முடியவில்லை. தொழிலாளியைக் கண்டால் முதலாளிகள், மேலதிகாரிகள் 'உர்' என்று இருப்பதும் மேலதிகாரிகளைக் கண்டால் தொழிலாளர்கள் கொடூரமாக இருப்பதுமாகவே எங்கும் இருந்துவருகிறது. இந்த நிலை யாருக்கும் நல்ல தல்ல; நாட்டுக்கும் பொதுமக்களுக்கும் செல்வ வளர்ச்சிக்கும் கேடானது. ஒருவருக் கொருவர் பரஸ்பரம் அன்பு, நல்லெண்ணம் இருக்கவேண்டும்; ஒருவருக்கொருவர் தனிப் பட்ட முறையில் தாக்கிக் கொள்ளக்கூடாது; கலவரத்தை உண்டாக்கிக் கொள்ளக்கூடாது. இரயிலில் இருப்பவர்கள் எங்கள் சிற்றப்பன், பெரியப்பனல்ல! எல்லாம் கடைந்தெடுத்த பார்ப்பனர்கள் தாம். பின், ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என்றால், கலவரத்தையும் பலாத் காரத்தையும் நாமே பழக்கித் தந்தால் மக்கள் கதியும், நாட்டின் பொது நிலையும் என்னாவது?

மற்றும் சொல்லுகிறேன். தொழிலாளர்களுக்குள் நல்ல ஒற்றுமையும், கட்டுப்பாடும் வேண்டும். குறிப்பாக எடுத்துக் கொண்டால், தொழிலாளிகள் அனைவரும் ஒரே சாதி மக்கள் என்ற உணர்ச்சிவேண்டும். தொழிலாளிகள் என்றால் யார்? எல்லோரும் திராவிட மக்கள்தாமே! திராவிட மக்கள்தாம் உழைக்கும் மக்களாய், பாடுபடும் பாட்டாளிகளாய் இருக்கிறார்களே தவிர எந்தப் பார்ப்பான் தொழிலாளியாய் இருக்கிறான்?

தொழிலாளர்களுக்காகப் பாடுபடுகிறோம் என்று சொல்லுகிறவர்களெல்லாம் இந்தச் சங்கதியை, பேதத்தை அதாவது 'திராவிட மக்கள்தாம் தொழிலாளிகள்'; திராவிட மக்களாய் இருப்பதாலேயே சமுதாயச் சூழ்நிலையும், விதி மத சாஸ்திர முறையும் அவர் களைத் தொழிலாளியாக்கி வைத்திருக்கிறது; அது போலவே, பார்ப்பானாய் இருப்ப தாலேயே முதலாளி சாதி மகனாய், உட்கார்ந்து சாப்பிடும் வசதி வாய்ப்பு உடையவனாய், மேல் சாதிக்காரனாய் இருக்கும்படியாகக் கடவுள், மத, சாஸ்திர அமைப்பும், சமுதாய நடப்பும், தன்மையும் இருக்கின்றன—என்கிறதை யாரும் எடுத்துச் சொல்லவில்லை; சொல்லாததோடு மட்டுமல்ல—இந்தச் சங்கதி தொழிலாளி மகனுக்குத் தெரியக்கூடாது என்றும் நினைக்கிறார்கள். இன்றைய தினம் இருக்கிற இந்தப் பேதத்தை மாற்றுவதற்கு முயலாமல், தொழிலாளிகளின் கவனத்தை அடிதடி, கலவரம், கூலி உயர்வு என்று சொல்லி சூழ்ச்சியாய் வேறு பக்கம் திருப்பிவிட்டு விடுகிறார்கள். ஜெயப்பிரகாச நாராயணன், எஸ். குருசாமி, பி. ராமமூர்த்தி, ஆர். வெங்கட்டராமன் முதலிய தொழிலாளர் தலைவர்கள் பார்ப்பனர் (பிறவி முதலாளிகள்) என்பதை மறந்துவிடாதீர்கள்! V. V. கிரியும், கிருஷ்ண

www.thamizham.net - Free E book No 3041

ரீவுமான தொழிலாள மந்திரிகள் பார்ப்பனர்கள் என்பதையும் மறந்துவிடாதீர்கள்! சர்க்காருக்கு இந்தத் துறையில் இவர்கள் உள் ஆட்கள் ஆவார்கள்!

அதனாலேயே, சமுதாயத் துறையைப்பற்றி ஒரு தொழிற் சங்கம்கூட கவலை எடுத்துக்கொள்ளவில்லை. ஏன் ஒரு சாதி மக்கள் மட்டும் உடலுழைப்புக்காரர்களாகவே இருக்கவேண்டும்? ஏன் ஒரு சாதி மக்கள் அதற்கு மாத்திரம் தகுதியுடையவர்கள்; மற்ற காரியங்களுக்குத் தகுதி அற்றவர்கள் என்று யார் கேட்டார்கள், எங்களைத் தவிர? காங்கிரஸ் கேட்டதா? சோஷியலிஸ்ட் கேட்டதா? அல்லது இந்த கம்யூனிஸ்ட் வீரர்கள் தானாகட்டும் கேட்டார்களா? இல்லையே! கம்யூனிஸ்டுகள் இதைப்பற்றி நாம் சொல்லப் போனால், 'சே! சே! இது பிற்போக்கு சக்தி; நாங்கள் முற்போக்கு வீரர்களாக்கும்; எங்கள் கண்ணுக்கு இந்தச் சிறிய சங்கதியெல்லாம் தெரியாது' என்று போய்விடுவார்கள். அதேபோல் மற்றவர்கள் இதை வகுப்பு வாதம் என்று சொல்லிவிடுவார்கள்.

இதைப்பற்றி நாங்கள்தான் கவலை எடுத்துக்கொண்டு காரியம் செய்து வருகிறோம். ஏன்? இது எங்கள் நாடு; எங்கள் முதல்; தொழிலாளிகள் எங்கள் சாதி—இவை மூன்றும் பார்ப்பனருக்குக் கிடையாது; அறவே கிடையாது.

திராவிட மக்கள் அனைவரும் தொழிலாளிகள்; திராவிட மகனாய் இருக்கிறதாலே அவன் தொழிலாளியாகவும்; பார்ப்பானாய் இருக்கின்றதாலே இன்னொருவன் முதலாளி யாகவும், முதலாளி சாதியாகவும் இருக்கிறான் என்பதை நன்றாய் ஞாபகத்தில் வையுங்கள். இந்தப் பேதம் இருக்கக் கூடாது. தொழிலாளிகளின் கவனம் ஸ்ட்ரைக், சம்பள உயர்வு, அடிதடி என்கிற பக்கத்திலே செலுத்தப்பட்டதே தவிர, இந்தப் பேதத்தை ஒழிக்கும் முயற்சியிலே திருப்பி விடப்படவில்லை என்பதைத் திரும்பவும் கூறுகிறேன். உள்ளபடி சொல்லுகிறேன். இந்த இரயில்வே தொழிலாளர்கள் மட்டுமாவது இந்த இன உணர்ச்சி யோடு, பார்ப்பான்—திராவிடர் என்ற உணர்ச்சியோடு அதைப்பற்றிக் கவலை எடுத்துக் கொண்டு பாடுபட்டிருப்பார்களேயானால், இந்நேரம் இந்த இரயிலே நமக்கு ஆகி இருக்குமே!

நம்முடைய தொழிலாளி தன்னுடைய சம்பளத்தைப்பற்றிக் கவலைப்படுகிறானே தவிர, இந்த 2000, 3000 ஆண்டுகளாக நாம் ஏன் அடிமைகளாக, இழிந்த சாதி மக்களாக இருக்கிறோம்; பார்ப்பான் எப்படி 2000, 3000 வருடங்களாக உயர்ந்த சாதிக்காரனாக—முகத்திலே பிறந்த முதல் சாதிக்காரனாக—உழைக்காமல் சாப்பிடுகிற உயர்ந்த சாதிக் காரனாக இருக்கிறான் என்பதைப்பற்றிக் கவலையே படுவதில்லையே! ஏன்? நம்முடைய மக்கள் படிக்கவேண்டும் என்று சொன்னால் தகுதியில்லை, திறமையில்லை என்று சொல்லப் படுகிறதே! இதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாமா? 1000 வருடமாகவா ஒரு சமுதாயத்து மக்கள் 'தகுதி', 'திறமை' இல்லாதவர்களாக இருப்பார்கள்? இப்படியே இருந்து கொண்டிருந்தால் இவற்றையெல்லாம் யார் கவனிப்பார்கள்? மேல் படிப்பு என்பதெல்லாம் அவர்களுக்கே! அதே போல அந்தச் சாக்கில் உத்தியோகம், மேல் உத்தியோகம் எல்லாம் பார்ப்பனர்களுக்கேதான்.

இவற்றைப் பற்றி யார் கவனித்தார்கள்—எங்களைத் தவிர? தொழிலாளி மகன் எப்படி எஸ். எஸ். எல். சி., எஃப். ஏ., பி. ஏ. படிப்பது? படித்தால்தானே குமாஸ்தாவாக வாவது வரமுடியும்? இதை யார் கவனிக்கிறார்கள்?

நான் சொல்கிறேன், நம்முடைய தொழிலாளர்களுக்கு ஒன்றும் பெரிய வேலை கொடுக்கப்படாவிட்டாலும், கொடுக்கிற சம்பளமாவது அதிகமாகக் கொடுக்கக் கூடாதா? நல்ல வசதியான அறையிலே 'Fan'-னுக்குக் கீழே உட்கார்ந்து கொண்டு, மேஜை நாற்காலியோடு வேலை செய்கிற குமாஸ்தாவுக்கு 100 ரூ. சம்பளம்; நெருப்பிலே உழன்று சம்மட்டி அடிக்கிற தொழிலாளிக்கு 30, 50 ரூபாய்தானா?



www.thamizham.net - Free E book No 3041

கொடுக்கிற வேலைக்குத்தான் தகுதி, திறமை பார்க்கிறாய்! வாழ்க்கைக்குக் கூடவா தகுதி திறமை? சம்பளத்திலாவது சரி சமன் செய்யக் கூடாதா? தகுதி, திறமை உடையவன் அதிகமாகச் செலவழிக்கவும், தகுதி, திறமை இல்லாதவன் குறைவாகவுமா செலவழிக்கிறான்? எதற்குச் சொல்கிறேன் என்றால், ஒரு பெரிய சமுதாயத்தை நிரந்தரமாகத் தலை முறை, தலை முறையாக அடிமைகளாகவே வைத்திருப்பதற்கு எவை எவைகளின் பேரால் சூழ்ச்சிகள் நடத்தப்படுகின்றன என்பதை எடுத்துக் காட்டத்தான். பள்ளிக் கூடத்துக்குப் போய் எம். ஏ. பட்டம் வாங்காததால், அவன் மனித சமுதாயத்திலே மதிக்கப் படத் தகாதவனாக ஆகி விடுவானா? வாழ்வில் சராசரித் தேவைகள் வசதிகள் கூட அற்ற வனாக வாழ வேண்டுமா? இப்படியெல்லாம் செய்து, அவன் மேலுக்கு வரமுடியாதபடி அமுத்தி அமுத்தி வைத்துக் கொண்டே 'நீ எம். ஏ. படி; உனக்குத் தகுதி திறமை இருக்கிறதா? அப்படியானால் தருகிறேன்'—என்கிறாய்! கொடுப்பதே சோற்றுக்குக் கணக்குப் பார்த்துத்தானே! அப்புறம் எப்படி அவர்கள் முன்னுக்கு வரமுடியும்? இரண்டரை அணாவுக்கு வேலை செய்த ஆள் இன்றைக்குக் கூலி ஒன்றரை ரூபாய் கேட்கிறான். ஏனென்று கேட்டால், 'சாமி! தவசம் என்ன விலை விற்கிறது என்று பாருங்கள்; சோற்றுக்குக் கணக்குப் பார்த்துக் கொடுங்கள்,' என்கிறான். 'பத்து அணாவுக்கு விற்ற புல்கட்டு என்னம்மா ஒரு ரூபாய் சொல்லுகிறாய்?' என்று கேட்டால், 'கம்பு, சோளம் என்ன விலை விற்கிறது என்று பார்த்துக் கொடுங்கள், சாமி!' என்று தானே பதில் வருகிறது. அந்தத் தன்மை மாறவேண்டும். சோற்றுக்குப் போய் கணக்குப் பார்த்து வரும்படி என்பது போய் வாழ்வுக்கு, வசதிக்குத் தேவையான வருமானம் என்கிற நிலைமை ஏற்படவேண்டும்.

அதை விட்டு விட்டு சும்மா ஜன்னல் வைப்பது, நாலாவது வரை சம்பளமில்லாமல் குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லித் தருவது, ஆஸ்பத்திரி கட்டிவிடுவது—இது போன்ற சாதாரண வசதிகளைத் தொழிலாளிகளுக்குச் செய்து கொடுத்து விட்டு, பெரிய பிரச்சினை களிலே, உரிமைக் கிளர்ச்சியிலே, அவர்களின் கவனம் செல்ல வொட்டாமல் தடுக்கப் படுகிறது.

நம்முடைய தேவை அதுவல்ல; நம்மால் செய்யப்படுகிற கிளர்ச்சியும் அதற்காகவல்ல. நம்முடைய தேவையெல்லாம் அடிப்படையில் மாற்றம் ஏற்படவேண்டும். அதாவது, தொழி லாளிகளுக்கு இலவச (Free) காலேஜ் வேண்டும். அதில் தொழிலாளிகள் மக்கள் 2000 பேராவது எப்போதும் இலவசமாய்ப் படித்து, ஆண்டுக்கு 200 பேர் வெளியாக வேண்டும். அவர்கள் மேல் வேலைக்குத் தகுதி ஆக வேண்டும். இப்படிப்பட்ட மாற்றம் ஏற்பட வேண்டும்.

முக்கியமாக எந்தக் காரணம் கொண்டும் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இன்றைக்கு இருக்கிற மாதிரி 'ஏழாம் பொருத்தம்' இருக்கக் கூடாது; இருவருக்குள்ளும் பரஸ்பரம் நல்லெண்ணமும், சுமுகமான உறவும் கூட்டுப் பொறுப்பும் ஏற்படவேண்டும். இந்தத் தன்மை ஏற்பட அடிப்படையில் மாறுதல் ஏற்பட வேண்டும். முதலாளியும் தொழிலாளியும் பங்காளிகள், கூட்டாளிகள் என்கிற நினைப்பு ஏற்படுத்தப்பட வேண்டும்.

தொழிலாளி என்றால் யார்? முதலாளி என்றால் யார்? எவனொருவன் தன் வயிற்றுப் பிழைப்புக்காகத் தனது உழைப்பை மாற்றுப் பண்டமாகப் பிறருக்குக் கொடுக்கிறானோ அல்லது பிறர் இஷ்டப்படி நடக்க வேண்டியவனாகிறானோ அவன்தான் தொழிலாளி அல்லது வேலையாள் ஆவான். எவனொருவன் தன் உழைப்பைத் தன் இஷ்டமான விலைக்கு, பிரதிப் பிரயோசனத்திற்கு மாற்றுப் பண்டமாக விலை பேசுகிறானோ அவன் முதலாளி அல்லது எஜமான் ஆவான். இவைதாம் தொழிலாளி என்பதற்கும் முதலாளி என்பதற்கும் அடிப்படைக் கருத்துக்கள் ஆகும்.

ஒரு வெற்றிலைப் பாக்குக் கடைக்காரன் முதலாளிதான்—எப்படி? அவன் சாமா னுக்குச் சொன்ன விலையைக் கொடுத்து நாம் வாங்குவோம். அது போலவே, தட்டுக்

www.thamizham.net - Free E book No 3041

கடைக்காரனும் இன்னும் செருப்புக் கடைக்காரனும் முதலாளிகளே யாவார்கள். இவர்களில் யாரும் தங்களுடைய உழைப்பைத் தங்கள் வயிற்றுக்குத் தேவையான அளவுக்குப் பிறர் இஷ்டத்திற்கு செலவழிப்பவர்களல்லர். அவர்கள் சொல்கிற விலைக்குச் சாமான்கள் வாங்கிக் கொள்ள வேண்டும். நாம் அவர்களிடத்தில் சேவிப்பதானால், சோற்றுக்குக் கணக்குப் பார்த்து அவர்கள் கொடுப்பதை நாம் பெற்றுக்கொள்ள வேண்டும். இன்று அவர்கள் வியாபாரம் செய்யலாம் அல்லது செய்யாமலும் இருக்கலாம். அவர்களை ஏன் செய்ய வில்லை, ஏன் இவ்வளவு அதிக விலை சொல்கிறார்கள், குறைந்த கூலி கொடுக்கிறார்கள் என்று கேட்க முடியாது.

எவ்வளவு பெரிய சம்பளம் வாங்குகிறவனாக இருந்தாலும், மாதம் 100, 200 என்று சம்பாதித்தாலும்—சம்பளத்துக்காக அவன் தன் உழைப்பைப் பிறர் இஷ்டத்திற்குச் செலவழிக்கிறான். ஆகவே, அவன் தொழிலாளிதான். இதுதான் முதலாளி–தொழிலாளி நிலைமையே தவிர, பணக்காரனெல்லாம் முதலாளி; ஏழையெல்லாம் தொழிலாளி என்பதல்ல.

ஆதலால், நம் கிளர்ச்சி வெறும் கூலிக்காக மட்டுமல்லாமல் உரிமைக்காக இருக்க வேண்டும். இதுதான் இந்தச் சங்கத்தின் குறிக்கோள் ஆகும்.

பொதுவாக, தொழிலாளர்கள் உலகத்திலும், முதலாளிகள் உலகத்திலும் பொதுநலத் தன்மை பற்றிய பொறுப்பு இல்லை. முதலாளி நினைப்பதென்ன? ‘சம்பளத்துக்குத்தானே தொழிலாளி வேலை செய்கிறான். அவன் எப்படி நடத்தப்படுவதும் சரிதான்’ என்று நினைக்கிறான். அதுபோலவே தொழிலாளியும், ‘சும்மாவா கூலி கொடுக்கிறான்—வேலை செய்கிறோம், கூலிகொடுக்கிறான், இவனென்ன பெரியவன்?’ என்று முதலாளியைப் பற்றி நினைக்கிறான். இப்படி, இரண்டுபேரும் ஒருவருக்கொருவர் இந்த மாதிரிக் கணக்குப் போட்டுக் கொண்டிருப்பதால் தொழிலின்மீது பொறுப்பு இல்லாதவர்களாகவும், தொழிலுக்கு நல்ல பலன் கிடைக்க முடியாதபடி செய்துவிடுபவர்களாகவும் இருக்கிறார்கள்.

முதலாளி எந்நேரமும் எப்படி இந்தத் தொழிலாளர்களுக்குக் குறைவாகச் சம்பளம் கொடுத்து அவர்களை அடக்கி ஒடுக்கி வைத்திருப்பது என்று திட்டம் போட்டுக்கொண்டே இருக்கிறான். அதுபோலவே தொழிலாளியும், இவன் கொடுக்கிற சம்பளத்திற்கு இந்த வேலை போதும் என்று தன் வேலையைக் குறைத்துக்கொள்வதிலேயே கவனமாக இருக்கிறான். இப்படி ஒருவருக்கொருவர் ஏமாற்றிக் கொள்கிறதனால் நமக்கு என்ன என்றால், பொதுநிலையில் எவ்வளவு கஷ்டம் ஏற்படுகிறது? பொதுத்தன்மை கெட்டுப் போவதுமட்டுமல்லாமல், முதலாளியும் தொழிலாளியும் கீரியும் பாம்பும் போல எப்போதும் சண்டை போட்டுக்கொண்டிருப்பதால் உற்பத்திக் குறைச்சலும், விலைவாசி உயர்வும் ஏற்பட்டு மக்களை எவ்வளவு தூரம் பாதிக்கின்றன? முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இருசாராருக்கும் பொறுப்பும் நாணயமும்—ஒருவருக்கொருவர் பரஸ்பரம் நல்லெண்ணம் நல்லுறவு இல்லாத வாழ்வுபெருகுவது, பொதுநலத்திற்கும் ஒழுக்க வளர்ச்சிக்கும் கேடே யாகும். இருசாராருமே தாங்கள் பொதுமக்களின் தர்மகர்த்தாக்கள் என்பதாகக் கருதுவதோடு, தங்கள் தொழிலின் காரியத்தைத் தங்கள் தங்கள் சொந்தக் காரியம் போல் பொறுப்புடன் கருதும்படியான நிலை ஏற்படவேண்டும். அப்போதுதான், நாட்டில் செழிப்பும், மக்களுக்குத் திருப்தியான வாழ்வும் ஒழுக்க உயர்வும் ஏற்படமுடியும்.

சாதாரணமாக, இரயிலைக் கவிழ்க்கிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள். இரயில் விழுவதால் யாருக்கு என்ன நஷ்டம்? இரயில்வே பெரிய உத்தியோகஸ்தர்களில் ஒரு பார்ப்பான் அதைப்பற்றிக் கவலைப்படுவானா? அல்லது வடநாட்டு ஆட்சி கவலைப்படுமா? அவனுக்கென்ன? இரயில் விழுந்தால் நம்முடைய பணத்திலிருந்து வேறு இரயில் வரவழைத்துக் கொள்கிறான்; அதில் தரகு பெறுகிறான். நட்டத்தைச் சரிக்கட்டிக் கொள்கிறான். நமக்கு அப்படியா? எவ்வளவு பொருள் நட்டம்! உயிர் நட்டம்! பார்ப்பனர்கள் நம் உயிரைப்பற்றிக் கவலைப் படுவார்களா? அவர்களுக்கென்ன கவலை?

www.thamizham.net - Free E book No 3041

வேண்டுமானால் விழுந்திறந்து கிடக்கிறவர்களில் எத்தனை பேர் திவசம் பண்ணுகிறவர்கள் என்று பார்ப்பான்; வண்டிவண்டியாகப் பிணம் போனாலும் பார்ப்பானுக்குத் திவசம் பண்ணுவதிலேதானே கண்!

அதோடு மட்டுமல்ல; இவ்வளவு விஞ்ஞான காலத்திலே—நாகரிக காலத்திலே சோற்றுக்காக – கூலியை உயர்த்திக் கொள்வதற்காக இரயிலைக் கவிழ்ப்பதா? 'இந்த டிபார்ட்மெண்ட்டிலே இந்த மேலதிகாரி உன்னை, வேலை சரியாகச் செய்யவில்லை என்று கூறித் திட்டினானா? சரி, இன்றைக்கு இராத்திரி ஒருவருக்கும் தெரியாமல் போய், அந்த மிஷினை உடைத்து விடு' என்று தொழிலாளியைத் தூண்டிவிடுவதா? இது பொறுப்புள்ள யோக்கியன் செயல் ஆகுமா? கொஞ்சமாவது நாட்டைப்பற்றியும், பண்டத் தைப் பற்றியும், மக்களைப் பற்றியும், தொழிலைப் பற்றியும், பொது நிலையைப் பற்றியும் கவலைப்படவேண்டாமா? இன்று ஒரு தொழிற்சங்கத்திற்கும் இந்தக் கவலை இல்லையே!

சாதாரணமாக, நெருப்புப் பிடித்துக்கொண்டால், 'நெருப்பு எவ்வளவு அழகாக எரிகிறது பார், பார்!—அடுத்த வீட்டுக்குத் தாவுகிறது! இன்னும் பிடிக்கிறது! அடடா— அதற்குள் அணைத்து விட்டார்களே!' என்று சத்தமிட்டு, சிறு பையன்கள் நெருப்புப் பிடித்து எரிவதைப் பார்த்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டும், நெருப்பு பரவுவதைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தும், நெருப்பு அணைக்கப் படுவதைப் பார்த்துத் துக்கப்படுவது போலவும் அல்லவா சில தொழிற்சங்கங்கள் நடந்துகொள்ளச் செய்யப்படுகின்றன? சிறு பையன் களுக்கு என்ன பொறுப்பா? கவலையா? அந்த மாதிரிச் சிறு பையன்கள் போல், பொறுப் பற்ற முறையிலா இவர்கள் நடந்து கொள்வது? நாட்டைப்பற்றியும், சமுதாயத்தைப் பற்றியும், மனித உயிரைப் பற்றியும் இப்படியா பொறுப்பற்ற முறையில் கவலையற்று நடந்து கொள்வது?

இந்த நாட்டில் பஞ்சம், பண நெருக்கடி இருக்கிறது என்றால் ஏன்? தோழர் ஆச்சாரி யார் அவர்கள் சொல்கிற மாதிரியான மழையில்லாததாலா? அல்லவே அல்ல.

மற்றென்ன வென்றால், ஆச்சாரியார் அவர்கள் விவசாயச் சட்டம் செய்வதற்குக் காரணம் சொன்னாரே அதுதான். அதாவது, 'விவசாயி—பண்ணையார் தகராறில் உற்பத்தி சரிவர ஆவதில்லை' என்று சொன்னாரே அதேதான். உற்பத்திப் பெருக்கக் கவலை இருவருக்கும் கிடையாது. இருவரும் 'இலாபமும் கூலியும் அதிகமாக வேண்டும்' என்ற கருத்தில் ஒருவரையொருவர் ஏமாற்றுவதிலேயே கவலை செலுத்துகிறார்களே தவிர, காரியத்தில் கொஞ்சங்கூடக் கவலைப்படுவதில்லை. அடிக்கடி வேலை நிறுத்தம் செய்வது; இரண்டு மாதங்கள் மூன்று மாதங்கள் என்று தொழில் நிலையங்கள் வேலை செய்யப் படாமல் சும்மா பூட்டியே கிடப்பது! அப்புறம் எப்படித் தொழில் வளர்ச்சியும் உற்பத்திப் பெருக்கமும் ஏற்படும்?

இப்போது எடுத்ததற்கெல்லாம் 'ஸ்டிரைக்' ஆரம்பித்து விடுகிறார்கள். இதில் பெரும்பான்மை ஸ்டிரைக்குகள்—சங்கங்களை நடத்துகிற ஆட்களின், ஸ்தாபனங்களின் சொந்த நலனுக்கும், மற்றபடி தங்கள் சொந்தக் காரியங்களைச் சாதித்துக் கொள்ளவுமே செய்கிறார்கள்.

ஸ்டிரைக்கினால் ஏற்படுகிற விளைவுகள் என்ன? நான் முன் சொன்னது போல் தொழில் வளர்ச்சி கெட்டு, உற்பத்தி குறைவதோடு மட்டுமல்ல; பொது மக்களுக்கும் எவ்வளவு தொந்தரவு ஏற்படுகிறது?

இரயில்வேயில் 'அனைத்து இந்திய ஸ்டிரைக்' இரண்டு மாதம் செய்து சம்பளத்தில் 5–10 ரூபாய் உயர்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். பண்டித நேருவோ தோழர் கிரியோ தங்கள் வீட்டுக் காசிலிருந்து கொடுக்கிறார்களா? இல்லை. 'சரி, இவர் களுக்குச் சம்பளம் 10 ரூபாய் உயர்த்திக் கொடுத்து விட்டு, 2-வது 'கிளாஸ்' மைலுக்கு 6 தம்பிடி 'சார்ஜ்' உயர்த்து; 3-வது 'கிளாஸ்' 2 தம்பிடி உயர்த்து' என்று சொல்லி

www.thamizham.net - Free E book No 3041

விடுகிறார்கள். இதனால் யாருக்கு நட்டம்! இரயிலில் ஏறுகிற மக்களுக்குத்தான். இந்த அதிகப்படியான பணத்தைப் பொதுமக்கள்தாம் கொடுக்கிறார்கள்.

அது போலவே, மில் தொழிலாளர்கள் ஸ்டிரைக் செய்தால் அவர்களுக்குக் கூலியை உயர்த்திக் கொடுத்துவிட்டு, அதைச் சரிக்கட்ட, துணியில் கெஜத்துக்கு இரண்டு அணா உயர்த்துகிறான். 10 ரூபாய் அதிகச் சம்பளம் பெற்ற இரயில்வே தொழிலாளி, மில் தொழிலாளர்கள் ஸ்டிரைக்கால் உயர்த்தப்பட்ட விலையைத் துணிக்குக் கொடுக்கிறான். அதே மாதிரி ஸ்டிரைக் செய்து அதிகச் சம்பளம் பெற்ற மில் தொழிலாளி, ஸ்டிரைக்கால் உயர்த்தப்பட்ட 'சார்ஜ்' கொடுத்து இரயிலில் போகிறான். அதுபோலவே 'ட்ராம்வே' தொழிலாளி ஸ்டிரைக் செய்தால் 'ட்ராம்' நிர்வாகம், சார்ஜில் 3 தம்பிடியை உயர்த்தி விட்டு, 'ட்ராம்' தொழிலாளிக்குச் சம்பளத்தை உயர்த்தி விடுகிறது. இந்த உயர்த்தப்பட்ட 'சார்ஜை' யார் கொடுப்பது? பொது மக்களும், இரயில்வேத் தொழிலாளியும், மில் தொழிலாளியும் போன்றவர்கள்தாமே! இப்படியாக ஸ்டிரைக் செய்வதன் மூலமாக வேலை மெனக்கெடுவதோடு இருசாராரும் தொல்லை, துயரத்துக்கு இலக்காகி விலைவாசிகளும் உயரும் தன்மை இருக்கிறது. இதைப் பற்றிச் சிந்திக்க வேண்டாமா? அதோடு இந்த மாதிரி 'ஸ்டிரைக்', பலாத்காரம், நாசவேலை முதலிய காரியங்களால்தானே போலீஸ் படையும், எம். எஸ். பி., எஸ். ஏ. பி. என்றும் ஏற்பட்டது! இப்படியா செய்வது! இவ்வளவு தொல்லை, துயரப்பட்டா பரிகாரம் காணுவது? மற்றும், இவ்வளவு கஷ்டத்திற்குக் காரணம் அரசாங்கம் என்பதைத் தெரிந்தும் தொழிலாளர் தலைவர்கள் என்பவர்கள் அரசாங்கத்தைப் பற்றிக் கவலை கொள்ளாமல், வாயில்லாப் பூச்சிகளாகிய தொழிலாளர்களைக் கஷ்டத்திற்குள்ளாக்கிப் பெருமை, பயன் அடைகிறார்கள்.

இந்த நாட்டுக்கு ஏற்ற மாதிரியில்—இந்த நாட்டுத் தன்மைக்கு ஏற்ற மாதிரியில் தொழிலாளர் பிரச்சினைகளை அணுக வேண்டும். மற்ற நாடுகளில் நடந்ததுபோல் இங்கும் நடத்த வேண்டும் என்பதும் அந்த முறையிலேதான் போக வேண்டும் என்பதும் அவசிய மற்றதாகும்.

மற்ற நாட்டிலே இருக்கிற நிலைமை வேறு; இந்த நாட்டு நிலைமை வேறு. அதாவது, இந்நாட்டில் தொழிலாளிகள் என்பவர் பிறவித் தொழிலாளிகள் ஆவார்கள். இப்படிப் பிறவித் தொழிலாளி யாக்கி வைத்து, அவர்களைத் தலையெடுக்க வொட்டாமல்—மாற்ற மடையச் செய்யாமல் பார்த்துக் கொள்கிறவர்கள் மற்றொரு சாதியார். அந்தச் சாதிதான் இன்று ஆட்சியிலும் தொழிலாளர் தலைமையிலும் இருந்துவருகிறது. இன்று தொழிலாளர் நலமாக இருவரின் 'சதிதான்' இருந்து வருகிறது.

இந்த நிலை மற்ற நாடுகளில் இல்லை. மார்க்ஸ¤ம், லெனினும் 'சதிக்கென்று' ஒரு சாதி இல்லாத நாட்டைச் சேர்ந்தவர்கள். ஆதலால் அவர்கள், சதிகாரர்களின் சதிச் செயலுக்கும், தொழிலாளர் சாதி ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் அழுத்தப்பட்டுக் கிடப்பதற்கும் பரிகாரம் சொல்லவேண்டிய அவசியமில்லாதவர்களாய் இருந்திருக்கிறார்கள்.

ஆதலால், தொழிலாளி பேதம் மட்டுமல்லாமல் முதலாளித் தன்மையில் சாதி உயர்வு-தாழ்வு பேதம் நடப்பு இருக்கிற போதும், அதைப் பாதுகாக்க ஒரு சாதி இருக்கிற போதும், அவர்கள் தொழிலாளர் கிளர்ச்சியை நடத்துகிற போதும்—'மார்க்ஸ் சொன்னபடிதான் செய்யவேண்டும்; லெனின் என்ன சொன்னாரோ அந்தப்படிதான் செய்யவேண்டும்' என்று சொல்லிக் கொண்டிருந்தால் என்ன அர்த்தம்? இது சதிகார சாதிக்குத்தான் அனுகூலம், மார்க்ஸேதான் தொழிலாளர் பிரச்சினைக்கு முடிவானவரா? அல்லது லெனினே கடைசியானவரா? நாளுக்கு நாள் நடப்பும் கருத்தும் மாறிக் கொண்டே வருகின்றனவே! சாதியின் பேரால் தொழிலாளர் சமுதாயம் இருக்கக் கூடாது என்கின்ற கிளர்ச்சியே 1925-ல் தானே துவக்கப்பட்டது—கண்டு பிடிக்கப்பட்டது! இந்த நிலையில் மார்க்ஸ¤ம் லெனினும் முக்கால முணர்ந்த தீர்க்க தரிசிகளா, அவர்களுடையதே முடிவு என்று சொல்ல? மதவாதிகள்—?

www.thamizham.net - Free E book No 3041

பார்ப்பனர்கள் எப்படி மகாவிஷ்ணு, பரமசிவன் என்று சொல்கிறார்களோ அப்படியா பகுத்தறிவு வாதிகள், மார்க்சிஸ்டுகள் சொல்லுவது? காலம் வேறு; ஆட்சி வேறு. அங்கு முதலாளி ஆளுகிறான்; இங்கு பார்ப்பான் ஆளுகிறான். பண்டித நேருவும் இராஜாஜியும், இராம மூர்த்தியும் யார்? கிரியும், கிருஷ்ணராவும் ஜெயப் பிரகாசும், குருசாமியும் யார்? மற்றும் இரயில்வே மந்திரியும், தட்சிண இரயில்வேக்களின் ஏஜண்டும் யார்?

இதற்கும் தொழிலாளர் பிரச்சினைக்கும் சம்பந்தம் இல்லை என்று யாராவது சொன்னால் அவர்களை யோக்கியர்கள் என்றோ அல்லது அறிவாளி என்றோ ஒரு நாளும் சொல்ல முடியாது. ஏன் இப்படிச் சொல்கிறேன்? இந்த மாதிரித் தொழிலாளிக்குச் சம்பந்தப்பட்ட எல்லா ஸ்தானங்களிலும்—ஆட்சிக்குச் சம்பந்தப்பட்ட எல்லாத் தலைமைகளிலும் பார்ப்பனனே இருக்கவேண்டிய அவசியமென்ன? இது அகஸ்மாத்தாக ஏற்பட்டதா?

அல்லது, பார்ப்பனர்தான் இருக்கவேண்டும் என்கின்ற அவசியத்தினால் ஏற்பட்டதா கம்யூனிஸ்டுகள்தாம் இதற்குப் பதில் சொல்லட்டுமே! 'சாதிபற்றி-வகுப்புபற்றி-பார்ப்பான் சதியைப்பற்றிப் பேசுவது பிற்போக்குச் சக்தி' என்று சொல்லி விடுவதே இவற்றிற்குப் பரிகாரமாகிவிடுமா? அல்லது மார்க்ஸ், லெனின் சொன்னபடிதான் தொழிலாளர்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று சொன்னால் என்ன அர்த்தம்?

மார்க்ஸ் நினைத்திருப்பாரா, இந்த நாட்டில் பார்ப்பனர்கள் என்கிற சதிகாரர்கள் செய்து வருகிற கொடுமைகளையும், புரிந்து வருகிற ஆதிக்கத்தையும், நடத்துகிற சதித் திட்டங்களையும்—மற்றும் இந் தநாட்டின் சொந்த மக்கள் பிறவிச் சூத்திரர்களாக்கப்பட்டு, வேசி மக்களாய்க் கருதப்படுகிற நிலைமையையும் பற்றி? அதற்கு ஏற்ற மதம், சாஸ்திரங்கள் கடவுள்கள் பற்றி? ஆதலாலேயே, அவர் அந்த நாட்டிற்குத் தகுந்த மாதிரி நிலவி வந்த முதலாளித்துவம், அதன் ஆதிக்க முறைகள், அவைகளுக்கு மதம் அளிக்கும் ஆதரவு பற்றிச் சொல்லிப்போனாரே தவிர, இந்த நாட்டைப்பற்றி—பாவம், அவர் என்ன கண்டார்?

ரஷ்யாவில் என்னை அதிசயமாகக் கேட்டார்களே! ரஷ்யாவிலே ஒரு மாணவன் என்னைப் பார்த்து, 'என்ன, உங்கள் நாட்டிலே மகாராஜாக்கள் இருக்கிறார்களாமே! அதுபோலவே, பறையர் இருக்கிறார்களாமே! அவர்களெல்லாம் எப்படி இருப்பார்கள்?' என்று அதிசயமாகக் கேட்டான். (அதாவது மகாராஜா, பறையர் இருக்கிறார்களாமே என்று) நான் சொன்னேன்—'அதோடு மட்டுமல்ல—பார்ப்பானும் அதாவது பிராமணன் என்பவனும் எங்கள் நாட்டில் இருக்கிறான்' என்றேன்.

அவனைப்பற்றியும் சொன்னேன். அதற்கு அவன் ஆச்சரியப்பட்டுப் போய் விட்டான். எதற்கு இதைச் சொல்கிறேன் என்றால், அந்த நாட்டிலே இதைப்பற்றித் தெரியாது. அப்படி இருக்கும்போது அதுதான் 'வேத வாக்கு' 'ஞான சூத்திரம்' என்று சொன்னால், என்ன அர்த்தம்?

இவ்வளவு பாடுபட்டும் இன்னும்—இந்தக் காலத்திலும் பார்ப்பான் இருக்கிறான்; சூத்திரன் இருக்கிறான்; பறையன் இருக்கிறானே! இந்தக் காலத்திலா இத்தகைய பேதங்கள் இருப்பது? அந்தச் சாதிகளில் ஒன்றுதானே தொழிலாள சாதி! பாழும் சுயராஜ்யம் வந்தும் ஒரு பார்ப்பான் குறையவில்லை; ஒரு பார்ப்பான் ஆதிக்கமும் குறைய வில்லை. சூத்திரன் குறையவில்லை; பறையனும் குறையவில்லை; அவர்களது இழி நிலை, பாட்டாளித் தன்மை குறையவில்லை. இவை குறையவில்லை என்பதோடு மட்டு மல்ல—இந்தப் பேதங்கள் இந்த சுயராஜ்யக் குடியரசிலே இன்னும் அதிகமாகப் பலப் படுத்தப் படுகின்றனவே!

இதைப்பற்றிக் கொஞ்சமாவது, தொழிலாளர்களுக்குப் பாடுபடுவதாகச் சொல்லிக் கொள்ளும் இந்த வீரர்கள் கவலைப்பட வேண்டாமா? இந்த நாட்டுக்கு இது ஒரு முக்கிய மான சங்கதி. இத்தனை நாளும் யாரும் இதைப்பற்றிக் கவலை எடுத்துக்கொள்ள

www.thamizham.net - Free E book No 3041

வில்லையே, எங்களைத் தவிர ! வீராதி வீரர்கள் என்றெல்லாம் 'விருது' பெற்ற 'சூரர்கள்' இதைப்பற்றி ஒரு வார்த்தையாவது சொல்லியிருக்கிறார்களா? சும்மா தொழிலாளர்களை உசுப்பிவிட்டு அடி உதை வாங்கி வைப்பதில்தானே அவர்கள் கவனம் செலுத்தினார்கள்? தொழிலாளிக்கு அடி உதை; அதோடு மட்டுமா? தொழிலாளர் குடும்பப் பெண்கள் எத்தனை பேர்கள் கற்பழிக்கப்பட்டார்கள்? எத்தனை பெண்களைக் குடுமியைப் பிடித்துக் கொண்டு தெருவிலே கொண்டு வந்து போட்டு அடித்தார்கள்? இவ்வளவு பாடுகள் படச் செய்தா இரண்டணா கூலி உயர்த்தித் தருவது? குறைந்த கஷ்ட நஷ்டத்தில் அதிகப்படியான இலாபத்தை அல்லவா பெற வேண்டும்? இதை நினைத்தால் எனக்கு மனம் பதறுகிறது. நம் மக்கள் இப்படி ஏமாற்றப்படுகிறார்களே என்கின்ற ஆத்திரத்தில் சில சமயங்களில் இரத்தக் கொதிப்பு ஏற்படுகிறது. எத்தனை நாளைக்கு இப்படி நடந்தாலும் சூத்திரன் (தொழிலாளி) சூத்திரனாகவும் பார்ப்பான் (பிறவி முதலாளி) பார்ப்பானாகவும்தானே இருப்பர் ?

நியாயமாக—எந்தவிதமான ஒளிவு மறைவுகளன்னியில்—எந்தவிதமான கட்சி சுயநலமன்னியில்—வெளிப்படையாக—பலாத்காரம் இல்லாமல் காரியம் செய்தால், இந்தத் தொல்லைகள் படவேண்டிய அவசியமே இல்லை. இன்றைய தினம் தொழிலாளிகள் நாள் தவறாமல் சோறு தின்னாவிட்டாலுங்கூட, அடி, உதை தின்று கொண்டிருக்கிறார்களே, இந்த நிலைமை மாற்றியமைக்கப்படவேண்டும். மாற்றியமைக்கிறேனா இல்லையா என்று பாருங்கள்.

நாங்கள் இந்த 25 ஆண்டுகளாக பார்ப்பன ஒழிப்புப் பிரச்சாரம் செய்து வருகிறோமே! எவ்வளவு பேசியிருக்கிறோம்? அதனால் இதுவரை ஏதாவது கலவரம் உண்டாயிற்றா? ஒரு பார்ப்பானுக்காவது ஒரு சிறு அடியாவது பட்டிருக்குமா? ஒரு பார்ப்பனப் பெண்ணின் உடம்பிலாவது, கை மேலே பட்டிருக்குமா? மற்றும் எந்தப் பார்ப்பான் வீட்டிலாவது நாங்கள் புகுந்து கலவரம் செய்தோமா? பார்ப்பனர்களுடைய கொள்கைகளை அவற்றின் சூதுகளைத் திராவிட மக்களுக்கு எடுத்துக் காட்டி, அவர்கள் விடுதலை பெற வேண்டும் என்று பிரச்சாரம் செய்து வந்தோமே தவிர, வேறு என்ன செய்தோம்?

சமுதாயத்தில் அவர்கள் வேறு; நாம் வேறு. நம் விடுதலைக்கு—முற்போக்குக்கு நம் மக்கள் நடந்து கொள்ள வேண்டியதை நாம் பேசுகிறோம்; விஷயங்களை எடுத்துச் சொல்கிறோம். கொள்கையின் அடிப்படையிலே பேதப்படுத்துகிறோம் என்ற—நாகரிகமான முறையில் இருக்கிறோமே தவிர, 'குத்து, வெட்டு, கொலை, பலாத்காரம், நாசம், ஒழுங்கு மீறிய காரியம் செய், கொள்ளையடி'! என்றா சொல்லிக்கொண்டு திரிந்தோம்? அப்படியெல்லாம் செய்யாததால் எங்கள் கருத்து சிறிதும் வெற்றி பெறாமலா போய்விட்டது?

கம்யூனிஸ்டுகளுடைய கஷ்டமே தீர்ந்தது என்றால், எப்படித் தீர்ந்தது? 'புத்தி வந்தது, இனிமேல் நாங்கள் பலாத்காரத்தில் ஈடுபடமாட்டோம்; 'பார்லிமெண்டரி' முறையிலேயே இருக்கிறோம்; 'அண்டர் கிரவுண்ட்' வேலையெல்லாம் வைத்துக் கொள்வதில்லை'—என்றெல்லாம் சர்க்காரிடத்தில் சொல்லிக்கொண்டதால்தானே, அவர்கள் விடுதலை செய்யப் பட்டார்கள்? அவர்கள் மீதிருந்த 'வாரண்ட்'களெல்லாம் ரத்து செய்யப்பட்டன? சிறையில் இருந்தவர்கள் விடுதலையடைந்தார்கள்; வழக்குகள் சில வாபஸ் வாங்கப்பட்டன. நான், அதை ஒன்றும் கேவலமாகச் சொல்லவில்லை. பலாத்காரத்தை விட்டுவிட்டு எந்தக் காரியத்தையும் நேரிடையாகச் செய்ய ஆரம்பிப்பது என்றாலே அதிலே நிச்சயம் ஜெயம் உண்டு. அதை யாரும் மறுக்க முடியாது.

[பொன்மலையில், 10-9-1952-ல் சொற்பொழிவு—'விடுதலை' 20-9-1952]

www.thamizham.net - Free E book No 3041

## 2. சாதித் தொழிலாளி—கூலித் தொழிலாளி

இந்த நாட்டில் விவசாயத் தொழிலாளி, உழவர், வேளாளர் ஆகிய சாதியைச் சேர்ந்தவர்; நெசவுத் தொழிலாளி, கைக்கோளர், தேவாங்கர், சாலியர், பட்டுநூல்காரர் முதலிய சாதிகளைச் சேர்ந்தவர்கள்; உலோக, மரத் தொழிலாளிகள், விஸ்வகர்ம ஆச்சாரி வகுப்பைச் சேர்ந்தவர்கள்; சிற்பத் தொழிலாளிகளில் உலோகம், மரம், கல், மண் கட்டடம் ஆகியவைகளுக்கு விஸ்வகர்மாக்களுடன் மற்றும் உப்பாரன் என்னும் உப்பிலியர், ஒட்டர், கொல்லத்துக்காரர் முதலிய சில சாதிகளைச் சேர்ந்தவர்கள்; இவர்களைத் தவிர்த்து மற்றும் குடிமக்கள் என்னும் பேரால் மனித சமூக வாழ்க்கைக்கு அவசியமான பல தொழில்களுக்கும் குடிமக்கள் என்னும் தலைப்பில் பலவகை வாணியர், வலையர் குயவர், வண்ணார், நாவிதர்; இன்னும் மக்களுக்குப் 'போக இன்பம்', நாட்டிய இன்பம் அளிக்கும் தொழில்களை மேற்கொண்ட தொழிலாளர் மக்கள்—எல்லோருமே நம் நாட்டில் 'இந்து சமயம்' காரணமாக ஒவ்வொருவரும் ஒவ்வொரு சாதியின் பேராலேயே வகுக்கப் பட்டிருக்கிறார்கள்.

இந்துமத ஆதாரப்படி-இந்துமத தர்ம சாஸ்திரங்களின் விதிப்படி இத்தொழிலாளிகள் இவ்வளவுபேரையும் உழவர், நெசவர், வாணியர், பல தொழில் தச்சர்கள் உட்பட யாவரையும் வருணாசிரம சாதி முறையில் நாலாம்சாதி—சூத்திர சாதியாய் ஆக்கி; மற்றும் அதனுள்ளும் கீழ்–மேல் படி வைத்து, ஒருவருக்கொருவர் உண்பன, தின்பன, தொடுதல்–நெருங்குதல் கூட இல்லாமல் இருக்கும்படியான இழிவுகளை உண்டாக்கி—ஒருவரை ஒருவர் இழித்துக் கூறிக்கொள்ளும்படியாகச் செய்துவைத்து, இந்த முறையும்கூட நாட்டுக்கு ஒருவிதமாய் நடப்பிலிருக்கும்படியாக ஆக்கிக் கீழ்மைப்படுத்தி—அவர்கள் ஒன்றுசேர்ந்து தங்கள் நலனுக்கும், மேன்மைக்கும் முயற்சிசெய்ய வழிஇல்லாமல் செய்துவைக்கப்பட்டிருக்கிறது.

இது ஒருபுறம் கல்லின்மேல் எழுத்துப்போல் ஆதாரத்திலும் அனுபவத்திலும் இருந்துவந்தாலும்—இந்தத் 'தொழிலாளர் சாதியார்கள்' ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தனி சாதியையும், வகுப்பையும் உயர்வாகப் பேசிக்கொள்வதிலும் வழிதேடிக்கொள்வதிலும் எவரும் இளைத்தவர்கள் அல்லர்!

உண்மையில், பகுத்தறிவுப்படி இந்தியனாகவோ, இந்து சமயத்தானாகவோ இல்லாமல் உலகப் பொதுமகனாக இருந்து ஒருவன் நோக்கினானேயானால், இவ்வளவு தொழிலாளர் சமூகமும், இன்னும் இதில் குறித்திராத பள்ளு, பறை, சக்கிலி, தோட்டி என்று சொல்லப்படும் சமூகங்களும் யாவரும் பிறவியில் பேதமில்லாத மனித சமூகம் ஆவார்கள்.

மொத்தத்தில் தொழில் என்பது மக்களின் சமுதாய வாழ்க்கைக்கு இன்றியமையாத தொன்றாகும். மனிதன் காட்டுமிராண்டி வயதில் தன்னந்தனியாய்—மிருகங்களைப்போல் காடுகளில் திரிந்த காலத்தில் இம் மாதிரித் தொழில்முறைகள் தேவை இருக்காது. ஆனால், சமுதாயமாகச் சேர்ந்து கூட்டு வாழ்க்கை வாழ ஆரம்பித்த பின்—காலம் செல்லச் செல்ல—அறிவு பெருகப் பெருக, தேவைகள் வலுக்க வலுக்க பல தொழில்கள் செய்யவேண்டியது மனிதனுக்கு அவசியமாயிற்று. அதிலிருந்து நிலைமைக்குத் தக்கபடி தொழில்களும், தொழில் செய்யவேண்டிய அவசியமும் மக்களுக்கு ஏற்பட்டன. அவற்றை ஒவ்வொரு மனிதனும் அவனவன் உடல் சக்தி, அறிவு சக்தி ஆகிய காரணங்களுக்குத் தக்கபடி செய்து வருகின்றான். இதற்குச் 'சாதியோ', 'வகுப்போ' இல்லாமல், அவரவர்கள் சவுகரியம் இச்சை ஆகியவைகளுக்குள்ளாகவே தொழில்கள் சார்ந்துவிட்டன. அந்த முறைதான் இன்றளவும் உலக முழுதும் நடந்துவருகின்றது. கஷ்டமானதாகவோ, அசவுகரியமான தாகவோ ஒரு தொழில் இருக்குமானால் அந்தத் தொழில் நாளாவட்டத்தில் கஷ்டக் குறைவாகியும், அசவுகரியக் குறைவாகவும் செய்யப்படவேண்டியதுதான் அறிவுடைமையே தவிர—தொழில்களில் உயர்வு தாழ்வு கற்பித்து நிலைநிறுத்துவதோ, தொழில்களுக்குத் தத்துவார்த் தங்கள் கண்டு பிடிப்பதோ, அவற்றை மற்றவர்கள் தலையில் போடப் பார்ப்பதோ,

www.thamizham.net - Free E book No 3041

தொழிலாள சாதியர்கள் தங்கள் தொழிலை மாற்றாமல் சாதியை உயர்த்திக்கொள்ள நினைப்பதோ எவ்வித பயனும் அளிக்காது.

உழவுத் தொழிலாளியும், விஸ்வகர்மத் தொழிலாளியும் ஒன்று என்பதுதான் நமது அபிப்பிராயம். சாதிப் பிரிவால் பேதப்படுத்தப்பட்டுவிட்டதல்லாமல் மனித சமூக வாழ்வுக்கு இவர்கள் யாவரும் சமுதாயத்திற்கு அஸ்திவாரம் போன்று இன்றியமையாதவர்கள்; ஒரே விதமாகத் தொண்டாற்றுகிறவர்கள். இவர்களில் எதற்காகப் பேதம் காணவேண்டும்? சமயத்தில், சாஸ்திரத்தில் சொல்லும் பேதங்கள் அல்லாமல் பிரத்தியட்சத்தில் என்ன பேதம் காணமுடியும்? ஆதலால், தொழில்களில் உயர்வு–தாழ்வுகளையும், தொழிலாளி சமூகங் களில் உயர்வு–தாழ்வுகளையாக்கும் சாதிபேதங்களையும் அழிப்பதற்கு முயற்சிப்பதுதான் தொழிலாளர் முன்னேற்றமாகும். ஒரு தொழிலாளிக்கு மற்றொரு தொழிலாளி எவ்வளவு உயர்ந்த சாதியானாலும், சாதி முறையில் அவன் மற்றொரு சாதிக்குக் கீழ்ப்பட்டவனாக ஆகித்தான் தீருவான். ஆதலால், அவைகளை வலியுறுத்தும் சமயமும், சாஸ்திரமும் முதலில் அழிக்கப்படவேண்டும். அப்படியில்லையானால், கல் தச்சனும், நெசவாளியும் பிராமணனாக முயற்சித்தால் மற்றொரு தொழிலாளி ரிஷியாக முயற்சிக்கிறான். இதன் பயனாய், பிராமணன் என்பவன் உயர்ந்தவன் என்பதும், ரிஷிகள் என்பவர்கள் உயர்ந் தவர்கள் என்பதும், தேவர்கள் என்பவர்கள் உயர்ந்தவர்கள் என்பதும்தான் நிலைநிறுத்தப் பாடுபட்டதாக ஆகுமேயல்லாமல்—தொழில் முறைக்கோ, தொழிலாளி சாதி இழிவு என்பதற்கோ யாதொரு பயனும் ஏற்படப்போவதில்லை.

நாட்டில் எந்தக் காரணத்தைக் கொண்டானாலும் சரி—பாடுபட்டு உண்கின்றவனும், பாடுபடாமல் உண்கின்றவனுமான இரண்டு பிரிவுகள் உள்ளவரை மனிதனில் மேல்–கீழ் நிலைமை இருந்துதான் வரும். இது உலகமெல்லாம் இருந்துதான் வருகிறது. பாட்டாளி, அன்னியன் கையை எதிர்பார்க்க வேண்டியவனாய் இருக்கிறான். இது மாறவேண்டு மானால், பாட்டாளிகளின் ஒற்றுமைப் பலத்தினால்தான் முடியும். பாட்டாளிகளுக்குள் முதலில் சாதிபேதம் இருக்கக்கூடாது; தொழில்களை உயர்வு தாழ்வாய்க் கருதக்கூடாது.

எல்லோரும் ஒன்றுசேர வேண்டும். பேதமும்–இழிவும் கற்பிக்கும் சமய சாத்தி ரங்களை அழிக்கவேண்டும்; அரசியலைக் கைப்பற்றவேண்டும். உயர்ந்த சாதியார் என்பவர்களையோ, சோம்பேறிகளாய் உடலுழைப்பு இல்லாமல் வாழ்கிறவர்களையோ, எதிரிகளாகக் கருதி—அக் கொள்கைகளை நிர்மூலமாக்கவேண்டும். ஒவ்வொரு தொழிலாளி வகுப்பும், 'தங்களால்தான் உலகம் இருக்கிறது; தங்களால்தான் மக்கள் வாழமுடிகிறது; மனித சமுதாயக் கூட்டு வாழ்க்கைக்குத் தாங்களே அஸ்திவாரமானவர்கள்' என்பதை உணரவேண்டும். உணருவது மாத்திரமல்லாமல், 'அப்படிப்பட்ட தொழிலாளர் சமூகம் சமுதாயத்தில் கீழ்நிலையில் இருப்பானேன்? இது நம்முடைய அறிவீனமும் ஒற்றுமையற்ற தன்மையும் அல்லவா?' என்று சிந்திக்கவேண்டும். இந்த இரண்டும் இல்லாததனாலேயே தொழிலாளர்களுக்குப் பொதுத் தலைவர் இல்லை; பகுத்தறிவு இல்லை; முன்னேற்றத் திட்டம் இல்லை. சோம்பேறிகளுக்கு–ஊரார் உழைப்பில் வாழ்பவர்களுக்குக் கை ஆயுதமாய் அவர்கள் இருக்க நேரிட்டது.

இந்த நிலையை மாற்றுவதற்கே இன்று இந் நாட்டில் இருக்கும் பிராமணர்—பிராமணர் அல்லாதார் போராட்டம் என்பது ஏற்பட்டதே ஒழிய, வேறு எந்தக் காரியத்திற் காகவும் ஏற்பட்டதல்ல. இதைத் தொழிலாளி மக்கள் உணராமல் சோம்பேறி வாழ்க்கைப் பிரியர்களான பார்ப்பனர்களுக்குக் கையாட்களாக ஆனதின் பயனாலேயே—தொழிலாளி களுக்கும், தொழில் முறைக்கும் நாளதுவரை எவ்வித முற்போக்கும் ஏற்படவில்லை. 'பார்ப்பனர் அல்லாதார் கட்சி' என்னும் 'ஜஸ்டிஸ் கட்சி' தனக்கு அரசியல் ஆதிக்கம் சிறிதளவும் கிடைத்த காலத்திலும்—அது இந்த சாதி உயர்வு–தாழ்வு பேதத்தை ஒழிக்க எவ்வளவோ வேலை செய்தது. பெரும்பாலும் அதனுடைய வேலைப்பயன் தொழிலின்



www.thamizham.net - Free E book No 3041

காரணமாகத் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தில், பிற்படுத்தி வைக்கப்பட்ட மக்கள் விஷயத்தில் எவ்வளவோ முன்னேற்றத்தை உண்டாக்கியிருக்கிறது. தொழிலாளிகள் என்பவர்கள் யாராய் இருந்தாலும், 'சாதித் தொழிலாளி'யானாலும், 'கூலித் தொழிலாளி'யானாலும் சரீரத்தால் பாடுபடுகிறவர்கள் என்றால் அவர்கள் அத்தனைபேரும் பார்ப்பனரல்லாதவர்களாகவே இருக்கிறார்கள். அவர்களைத் தவிர்த்த மற்றவர்கள் பெரிதும் சாதியால் பார்ப்பனர்களாகவும் சிலர் அவர்களைப்போல் பாடுபட இஷ்டப்படாத சோம்பேறிகளாகவும் இருப்பவர்கள். இவர்களும் தங்களை ஒரு வித மேல் (சாதியார்) வகுப்பார் என்று சொல்லிக்கொள்பவர்களாக இருப்பார்கள். ஆனாலும், பார்ப்பனர் தவிர மற்றவர்கள் சூத்திரர்களாக இருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை.

['விடுதலை'—தலையங்கம்—16-2-1940]

## 3. 'குறிப்பிட்ட தொழில் ஏன்?'

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

நான் 1927-லேயே சொன்னேன், கூலி உயர்ந்தால்—அதுவே தொழிலாளருக்குப் போதாது; அவன் பிள்ளைகளைப் படிக்கவைக்க வேண்டும் என்று. இதெல்லாம் தொழிலாளருக்குத் தெரியாது. தவறிக் காலின்மேல் கோடரியைப் போட்டுக் கொண்டால் கூட 'இது கடவுள்செயல்' என்று கூறிக்கொள்வான்; முதலாளி 40 இலட்சம் சம்பாதித்தால் 30 இலட்சம் வரியாகக் கொடுக்கவேண்டும். அரசாங்கம் 30 இலட்சம் வரியாக வாங்குவதை, 5500 தொழிலாளர்கள் வேலைசெய்தால் அவர்களின் பிள்ளைகள் 4500 பேர் படிக்க வசதி செய்ய 7, 8 இலட்சம் அதிலிருந்து செலவு செய்யவேண்டும். தொழிலாளியின் மகனைப் படிக்கவைத்தால் அவன் முன்னேற வழி உண்டு. படித்தபிறகு அவனும் கோடரி, மண்வெட்டி எடுக்கவேண்டிய நிலை ஏற்படாது; 'பிச்சை எடுத்தாகிலும் வயிற்றைப் பார்த்துக் கொள்வேன்' என்று கூறுவானே தவிர, பரம்பரைக் கூலியாகவே இருக்கமாட்டான். பரம்பரைத் தொழிலாளி நிலை மாறவேண்டும். மேலும், இந்த நாட்டில் நாற்று நடுதல், ஏர் உழுதல் போன்ற வேலைகள் குறிப்பிட்ட ஒரு சாதியாருக்கு, சூத்திரருக்கு என்று இருக்கிறது. மனிதன் செய்யும் தொழில் என்று இருக்குமானால் குறிப்பிட்ட ஒரு சாதியார் மட்டும் ஏன் செய்யாமல் இருக்கவேண்டும்? எந்தப் பார்ப்பான் ஏர் உழுகிறான்? எந்தப் பார்ப்பனத்தி நாற்று நடுகிறாள், புல் விற்கிறாள்? பார்ப்பனத்திகளுக்குச் சாமான் கழுவத் தெரியாதா? நம் பெண்கள் அந்த வேலையைச் செய்யவேண்டும் என்பது என்ன சம்பிரதாயம்? நம் பெண்கள் சாமான் கழுவ கல்லூரிபோய்ப் படித்துவிட்டு வந்திருக்கிறார்களா? பார்ப்பனத்தி, பார்ப்பான் என்றைக்கு அந்த வேலையைச் செய்கிறார்களோ அன்றுதான் அது தொழிலாளி செய்யும் வேலை ஆகும். சிறிது நாட்களுக்கு முன் பார்த்தோமே, நம் பெண்கள் சதிர் ஆடினார்கள்; அவர்களைத் தேவடியாள்கள் என்று கூறினார்கள் பார்ப்பனர். அவர்களே ஆட ஆரம்பித்தார்கள்; உடனே அது பரதநாட்டியம் என்று சொல்லிவிட்டார்கள். பார்ப்பனர்கள் துணி சலவைசெய்தல் முதலிய வேலைகளைக் கட்டாயம் செய்தே ஆகவேண்டும். இந்த மாதிரி அமைப்பு ஏற்பட்டால்தான் தொழிலாளிகளுக்குள் இருக்கும் வேறுபாடுகள் மறையும்; இல்லாவிட்டால் மறையாது. மிராசுதார்களுக்கும் இன்று இல்லாவிட்டாலும் நாளைக்குச் சட்டம் வந்துவிடும். ஆகவே, அவர்களும் பரவாயில்லை என்று சொல்லத்தக்க அளவில் நடந்துகொள்ள வேண்டும். தொழிலாளர்களும் கட்டுப்பாட்டோடு இருக்கவேண்டும். மற்றவர் பேச்சைக் கேட்டுக் கலகத்தில் இறங்கக்கூடாது. கூடிய சீக்கிரத்தில் தொழிலாளருக்கு இலாபம் ஏற்படும்படியான நிலைமை வரும்.

[புகளூரில், 26-7-1956-ல் சொற்பொழிவு—'விடுதலை'—10-8-1956]

www.thamizham.net - Free E book No 3041

# 4. பிறவி முதலாளி

தலைவரவர்களே ! தோழர்களே ! தாய்மார்களே !

பெரியவன்–சின்னவன், பணக்காரன்–ஏழை, எஜமான்–அடிமை, நிலப்பிரபு–கூலி என்னும் வேறுபாடுகள் இருக்க வேண்டுமென்பது நீண்ட நாளாக உலகத்திலே இருந்துவருகிற சம்பிரதாயம்; விதி. ஆனால், இந்தப்படியான அமைப்புகள் எதற்காக இருக்க வேண்டும் ?

மனித சமுதாயத்தில் இம் மாதிரியான பேதங்கள் இருந்துவர வேண்டியதன் அவசியம் என்ன ? இந்த அமைப்புமுறை மாறிவிடுவதனால் சமுதாயப் பொதுநிலைமைக்கு என்ன நட்டம், பங்கம் வந்துவிடும் ? இந்த மாதிரியான ஒரு அமைப்புமுறை இருந்து வருவதனால் ஒரு பெரும் ஜனக்கூட்டம் கஷ்டப்படவும், தங்களுடைய சராசரித் தேவைகளைக்கூடப் பெற முடியாமல் நசித்துக்கொண்டு போகவுமான நிலைமைதான் வளருமே தவிர, இன்னொரு கூட்டம் ஏழைகள்மீது குதிரையேறிக் கொண்டிருக்கத்தான் பயன்படும் என்பதை அனுபவ பூர்வமாகக் கண்டறிந்து, நிலைமையை மாற்றியமைக்கக் கிளர்ச்சி செய்யப்பட்டது.

இந்த மாதிரியான பணக்காரன்–ஏழை, முதலாளி–தொழிலாளி, நிலப்பிரபு–பண்ணையாள் என்பதான முறை ஆண்டவனாக, கடவுளாகப் பார்த்து மனித சமுதாய வாழ்வுக்காக வகுத்துவைத்தது என்கிற எண்ணமே—நம்பிக்கையே நீண்டநாளாக, பேதம் உள்ள அமைப்பை இருக்கும்படி செய்துவிட்டது. இது கடவுள் செயல் அல்ல; சில சுயநலக்காரர்கள் தங்களின் வாழ்வு ஆதிக்கத்துக்காக ஏற்படுத்திக்கொண்ட முறைதான் இது என்று மக்கள் தெளிந்த பிறகுதான்—கிளர்ச்சி ஏற்பட்டு, மேல் நாடுகளில் மாறுதல் ஏற்பட்டது. இந்த மாதிரியான கிளர்ச்சிகள் மற்ற நாடுகளிலேதான் வெற்றிபெற்றனவே தவிர, இன்னும் இந்த நாட்டில் பேதம் இருப்பதைப் பார்க்கிறோம்.

இந்த நாட்டிலே பார்க்கிறோம் முதலாளி–தொழிலாளி மற்றும் இதுபோன்ற பேதங்கள் இருப்பதை. இந்தப் பேதங்கள் மாத்திரமல்லாமல், இன்னும் இதைவிடக் கொடுமையாய், இந்த நாட்டிலே, பார்ப்பான்–சூத்திரன்–பறையன் என்பதான பிரிவுகள் இருக்கின்றன. மற்ற நாடுகளில் ஏழை–பணக்காரன் என்ற பேதம் இருந்ததே தவிர, பார்ப்பான்–பறையன் என்ற பேதம் அங்கு எல்லாம் இல்லை. ஆனால், இங்கு பணக்காரன்–ஏழை என்கிற பேதத்தோடு மட்டும் இல்லாமல் பிறவியிலேயே உயர்சாதிக்காரப் பார்ப்பானும், இழி சாதிக்காரப் பறையனும் இருக்கிறார்கள். அதோடு மட்டுமல்லாமல், ஏழை–பணக்காரன் என்பது, எப்படிக் கடவுள் அமைப்பு என்று சொல்லப்பட்டு வந்ததோ, அதைப்போலவே இந்தச் சாதி உயர்வு–தாழ்வுத் தன்மை கடவுளின் பேரால் நிலைநிறுத்தப் பட்டுள்ளது.

முதலாளி என்பவன் பரம்பரை பரம்பரையாக வருபவனல்லன். இன்றைக்கு ஒருவன் முதலாளியாக இருக்கலாம்; நாளைக்கே அவன் ‘இன்ஸால்வென்ட்’ கொடுத்து ‘பாப்பர்’ ஆகிவிடலாம். அதுபோலவே, இன்று கஞ்சிக்குத் திண்டாடியவன் அடுத்த நாள் பெருத்த முதலாளியாக வரலாம். ஆனால், பார்ப்பான் என்பது அவன் உயர் சாதிக்காரன், கடவுளுக்கு நேராகத் ‘தந்தி’ சொல்கிறவன் என்பது பரம்பரை பரம்பரையாக—வாழையடி வாழையாக வருவது ஆகும். அழுக்குப் பிடித்த பார்ப்பான் ஆனாலும், குஷ்டம் பிடித்து அழுகிய பார்ப்பான் ஆனாலும், அயோக்கியப் பார்ப்பான் ஆனாலும் பார்ப்பார சாதியிலே பிறந்து விட்டதால், அவன் உயர்ந்த சாதிக்காரன் ஆகிவிடுகிறான்; அவன் மற்றவர்களால் மரியாதை செய்யப்பட வேண்டியவனாகி விடுகிறான். அதேபோல, எவ்வளவு அறிவாளியாய் இருந்தாலும், திறமைசாலியாய் இருந்தாலும், ஒரு சாதியில் பிறந்ததாலேயே அவன் பறையன், சூத்திரன், தேவடியாள் மகனாகக் கருதப்பட்டு, மேல்சாதிக்காரர்களுக்கு கை கட்டிச் சேவகம் செய்து வாழ வேண்டியவனாகக் கருதப்படுகிறான்.

www.thamizham.net - Free E book No 3041

முதலாளியாவது, நிலப் பிரபுவாவது அசையும் சொத்து, அசையாச் சொத்து என்பவைகளை வைத்துக்கொண்டு, முதல் வைத்துக்கொண்டு உயர்வுத் தன்மை படைத்தவனாக வாழ்கிறான்.

ஆனால், இந்தப் பார்ப்பானோ கை முதலே இல்லாமல் கடவுளைக் காட்டி, மதத்தைக் காட்டி, தர்ப்பைப் புல்லைக் காட்டி மேல்சாதிக்காரனாக உழைக்காமல் உண்டு கொழுப்பவனாக வாழ்கிறான்.

இந்த விசித்திரமான நிலைமை பாழாய்ப்போன இந்த நாட்டைத் தவிர வேறு எந்த நாட்டிலும் இல்லை. உள்ளபடியே சொல்லுகிறேன்,—இன்று ஏன் நாம் தொழிலாளமக்களாய் இருக்கிறோம்? சாதி அமைப்பின் காரணமாகத்தானே!

சூத்திர சாதி என்பதால் நாம் பார்ப்பானுக்கு உழைத்துப்போட வேண்டியவர்கள். பார்ப்பனர்கள் என்பதால், அவர்கள் எல்லாவற்றையும் தங்கள் வயிற்றுக்கே வாய்க்கால் வெட்டி விட்டு உயர் வாழ்வு வாழ்கிறவர்கள். இன்னும் சொல்லப்போனால், சாதி உட்பிரிவுகள் இருக்கின்றனவே, அவைகள் எதற்காக ஏற்படுத்தப்பட்டன? பார்ப்பன பாஷைப்படி எடுத்துக்கொண்டால்கூட, தொழிலுக்குத்தானே சாதிப் பிரிவு? பறையடிக்கிறவன்—பறையன்; வெளுப்பவன்—வண்ணான்; மண்பாண்டம் செய்கிறவன்—குயவன். ஆனால், வேதம் ஓதுகிறவர்—அய்யர், இப்படித்தானே! இதில் பார்ப்பனரைத் தவிர மற்றையோரெல்லாம் உடலுழைப்புக்காரர்கள், சாதியின் முறைப்படியே—சமுதாயத்தின் அமைப்புப்படியே! எனவேதான் சொல்லுகிறேன்—இன்றைய அமைப்பு முறை, பேதத் தன்மை, ஏழ்மை-உயர்வு நீங்க வேண்டுமென்றால் இந்த நாட்டிலே முதலாளியை ஒழித்தால் மட்டும் போதாது; பார்ப்பன உயர்வுத் தன்மை, அதற்குக். கடவுள் மத சாஸ்திரத்தின்மீது கட்டப்பட்டுள்ள பலமான பாதுகாப்பு—இவைகளை ஒழித்தால்தான் முடியும்.

1000 முத்தையா செட்டியார்களும் சரி,—ஒரு சங்கராச்சாரிப் பார்ப்பானும் சரி. நாளை எல்லோருக்கும் நிலம் பொதுவானது என்று பிரித்துக் கொடுத்து விடுகிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள். வருஷம்தோறும் சிரார்த்தம், திவசம் என்பவைகளின் பேரால் பார்ப்பான் கறந்துகொண்டுதானே இருப்பான்! கடவுளின் பெயரால் அர்ச்சகப் பார்ப்பான் சுரண்டிக்கொண்டுதானே இருப்பான்! எனவே, இந்த நாட்டுப் பேதங்கள் நிலைநிறுத்தப் பட்டிருப்பதற்குக் காரணம் எல்லாம் கடவுள், மதம், சாஸ்திரம் என்பவைகளும், அவைகளின் பேரால் வாழுகிற கூட்டமும்தான் என்பதை உணர்ந்து இவைகளை ஒழித்தால்தான், 'எல்லார்க்கும் எல்லாமாய்' என்று சொல்லுவார்களே—அந்த நிலைமை இங்கு ஏற்படும்.

[குளித்தலை-வதியத்தில் சொற்பொழிவு—'விடுதலை' 2-7-1952]

## 5. திராவிடத் தொழிலாளர் என்பது ஏன்?

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

இந்த மாநாடு திராவிடத் தொழிலாளர் மாநாடு. விவசாயத் தொழிலாளர் கழகங்கள் ஏராளமாக உண்டு. அவைகள் இருந்தும் ஏன் தொழிலாளர்களுக்கு நன்மை ஏற்படவில்லை? அவர்கள் விடுதலைக்கு வேண்டிய கொள்கைகளைச் சொல்லலாமென்றுதான் திராவிடத் தொழிலாளர் சங்கம் என்று வைத்தோம். இதன் பலன் தெரிந்துகொண்டு திராவிட கம்யூனிஸ்ட் கழகம் வைக்கலாம் என்று இருக்கிறோம். திராவிடம் என்ற சொல்லை ஏன் புகுத்துகிறோம்? பொதுவாக இருக்கவேண்டிய கழகத்திற்கு, ஏன் திராவிடர் கழகம் என்று வைத்தோம்? பொதுவுடைமை என்பதற்கு ஏன் திராவிடப் பொதுவுடைமை என்று வைக்க ஆசைப்படுகிறோம்?.

www.thamizham.net - Free E book No 3041

இந்த நாட்டில் விவசாயிகள், தொழிலாளர்கள் அனைவரும் திராவிடர்கள்தாம்; மங்கோலியரோ, நீக்ரோக்களோ, ஆரியரோ அல்லர். திராவிடர்தான் பாட்டாளிகளாய், விவசாயிகளாய் வாழ்கிறார்கள். சாதாரணமாக விவசாயி, தொழிலாளி என்பது ஒரு பொது நிலைமை. அதில் திராவிட சம்பந்தமில்லை. பொதுவான பெயரே போதுமென்று மற்ற கழகங்கள் கருதுகின்றன. ஆனால், திராவிடனாக இருப்பதால்தான் தொழிலாளியாக இருக்கிறான் என்று நாங்கள் கருதுகிறோம். சரீரத்தால் பாடுபடும் சமுதாயம் திராவிட சமுதாயந்தான். திராவிடரல்லாதவர்கள் யாரும் தொழிலாளியாக இல்லை. கடவுளால் தொழில் செய்வதற்காகவே ஏற்படுத்தப்பட்ட பிறவி திராவிடன் என்று சாத்திரத்தில் எழுதி வைத்துவிட்டார்கள். திராவிடர்களாய் இருப்பதால்தான் தொழிலாளர்களாக இருக்கிறார்கள் என்ற நிலைமையை உணர்த்துவதற்காகத்தான் திராவிட விவசாயத் தொழிலாளர் கழகம் என்று வைத்தோம்.

[கள்ளக்குறிச்சியில், 4-10-1953-ல் சொற்பொழிவு—'விடுதலை' 8-10-1953]

## 6. தொழிலாளர் நிலை

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

எனக்குத் தெரிந்து விக்டோரியா மகா ராணி, ஜார்ஜ் எட்வர்ட், அய்ந்தாம் ஜார்ஜ். ஆறாம் ஜார்ஜ், இப்பொழுது எலிஸபெத் ஆளுகிறார்கள். இவர்களின் அரசாட்சியே போய் விட்டது. நம் நாட்டில் உள்ள இராசாக்கள், ஜமீன்தார்கள் எல்லாம் சட்டத்தினால் அடிபட்டுப் போய்விட்டார்கள். ஏன், இவர்கள் நினைத்தால் வெற்றி அடைய முடியாதா? ஏன் போய்விட்டார்கள்? மக்களின் மனது மிகவும் மாறிக்கொண்டு வருகிறது. யாரை யார் ஆள்வது என்ற உணர்ச்சி! பணக்காரர் மட்டும் என்ன மிஞ்சப்போகிறார்கள்? பணக்காரன் இலாபத்துக்கும் அரசாங்கம் சட்டம் போட்டது. அவன் ஒரு ரூபாய் சம்பாதித்தால் 12 அணா வரியாகக் கொடுக்கவேண்டும். பூமியை வேறு பிடுங்கிக்கொள்ளப் போகிறோம் என்று அரசாங்கத்தார் கூறுகிறார்கள். இது தேர்தல் தந்திரப் பேச்சு. நேரு காலத்தில் சிறிது தாமதமானாலும் ஆகலாம்; நேருவிற்குப் பிறகு சீக்கிரம் பிடுங்கிக்கொள்வார்கள். அப்படி அரசாங்கத்தார் பிடுங்கிக்கொள்ளாமல் விட்டால் மக்களே பிடுங்கிக்கொள்வார்கள். அரசாங்கம் கொடுத்தது; கடவுள் கொடுத்தார்; பார்ப்பனர் செய்த மந்திரத்தால் வந்தது என்று சொன்னதெல்லாம் என்ன ஆச்சு? தொழிலாளர் சமபங்காளியாக வேண்டும். தொழிலாளரைப் பற்றிய என் கொள்கையை நீண்டநாட்களாகவே நான் சொல்லிவருகிறேன். 'தொழிலாளருக்குப் பாடுபட்டோம்' என்று சொல்லும் சிலர் தங்களால்தான் கூலி உயர்ந்து விட்டதென்று கூறலாம். ஆனால், கூலி வேலை செய்பவன், தோல் வேலை செய்பவன், வண்டியோட்டுபவன், புல் விற்பவன் இன்றைக்கு முன்பைவிட நான்கு மடங்கு அதிகமாகக் கூலி சொல்கிறானே! அவனுக்காக யார் பாடுபட்டார்கள்? எந்தக் கட்சி பாடுபட்டது? அரிசி மூட்டை ரூ. 10 விற்றது; இப்பொழுது (1956) 45 ரூபாய் விற்கிறதே; அவர்கள் எந்தச் சங்கம் வைத்து விலை ஏற்றினார்கள்? சில அரசியல் கட்சியினர் வேண்டுமென்றே ஒன்று மறியாத தொழிலாளரிடம், 'நாங்கள்தான் பாடுபட்டோம்' என்று சொல்லி ஏமாற்று கிறார்கள். காலம், சூழ்நிலை இவைகளால் தானாகவே பொருள்களின் விலை அதிக மாயிற்று; கூலியும் அதிகமாயிற்று. மில்லில் 100 ரூபாய் என்று ஒரு பங்கு இருந்தால் அதற்கு 120 ரூபாய் கொடுக்கிறான்; 20 ரூபாய் இலாபம். இது கம்யூனிஸ்டுகளுக்கு நன்றாகத் தெரியும். இருந்தும் முதலாளிகளிடத்தில் பிச்சைக் காசு வாங்கிக்கொண்டு தொழிலாளிக்கு இலாபத்தில் பங்கு கேட்பதில்லை. முதலாளி, தொழிலாளிக்கு உதை கொடுக்காமல் சும்மா நாலணா அதிகமாகக் கொடுக்கமாட்டான். நான் ஒருவன்தான் கேட்டேன்; 'முதலாளிக்கு ஏற்படும் இலாபத்தில் சரிபங்கு தொழிலாளிக்கும் கொடுக்க வேண்டும்; தொழிலாளர்களால்தானே இலாபம் ஏற்பட்டது? ஆகவே, தொழிலாளிக்கும் இலாபம் கொடுக்கவேண்டும்' என்று. மேலும், தொழிலாளியின் கூலி உயர்ந்தால் மட்டும்

போதாது. அவன் அந்தஸ்து உயரவேண்டும். இரண்டு ரூபாய் உயர்ந்தால் கோவிலுக்கும், சினிமாவிற்கும், குடிக்கும் பாழாக்கிவிடுகிறான். ஆறுமாத சம்பளம் போனசாகக் கொடுத்தால் காசி, இராமேஸ்வரம், தேர்திருவிழாவுக்குப் போகிறான். கேட்டால் சாமி கொடுத்தது என்கிறான்.

[புகளூரில், 26-7-1956-ல் சொற்பொழிவு—'விடுதலை' 10-8-1956]

தோழர்களே! தாய்மார்களே!

என்னுடைய அனுபவத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். இந்தத் தொழிலாளர் இயக்கங்கள் நாட்டில் ஏற்பட்ட பிறகுதான் தொழிலாளர்களின் ஒழுக்கமே கெட்டுப்போய் விட்டது. அவர்கள் ஒழுக்கம் மட்டும் அல்லாமல் முதலாளிகளின் ஒழுக்கமும் கெட்டு, அதனால் மக்களுக்குப் பெருந்தொல்லையும் ஏற்பட்டுவிட்டது. அப்படியானால், தொழிலாளர் சங்கமே கூடாது என்பதல்ல. இன்று தொழிலாளர்கள் இயக்கங்கள், தொழிலாளர்கள் கையில் இல்லை. தொழிலாளர்களாக இல்லாதவர்கள் கையில்—அதாவது அதைக்கொண்டு வயிறு வளர்ப்பவர்கள் கையில்தான் உள்ளது. தொழிலாளர் சங்கம் ஏற்பட்ட நாள் தொட்டு, அரசியல் கட்சிக்காரர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தொழிற்சங்கம் என வைத்துப் பதவிப் பலன் பெற்றுப் பொறுக்கித் தின்கின்றார்கள்!

எனது 50 ஆண்டு அனுபவத்தின் பயனாகக் கூறுகின்றேன். அந்தக் காலத்தில் காங்கிரசுக்காரர்களே (பார்ப்பனர்கள்) தொழிலாளர்களைப் பயன்படுத்திப் பிழைக்கவும், பெருமையடையவும் தொழிலாளர்களை வேட்டையாட ஆரம்பித்தார்கள். இந்தநிலை அன்னி பெசன்ட் காலத்தில்தான் முதன்முதல் ஏற்பட்டது எனலாம். மற்றும் வாடியாவுக்கு (Wadia) என்று ஒரு தொழிற்சங்கம்; திரு.வி.கவுக்கு என்று ஒரு தொழிற்சங்கம்; பிறகு ரெங்கசாமி அய்யங்காருக்கு ஒன்று; சத்தியமூர்த்திக்கு ஒன்று, வரதராஜுலு (நாயுடு)வுக்கு ஒன்று என இப்படியாக ஏற்பட்டுவிட்டது.

இன்று தொழிற்சங்கம் என்றாலே, 'முதலாளிகளுடன் சண்டை பிடிக்கக்கூடிய ஸ்தாபனம்' என்றுதான் இயங்கிக்கொண்டு வருகின்றது. இதனால் உற்பத்தி குறைகின்றது; இந்தத் தகராறு முதலாளி-தொழிலாளி இருவர்களோடு மட்டும் போகாமல் பொதுமக்களுக்குப் பாதகமாகவும் முடிகின்றது.

நல்ல தொழிலாளர் சங்கம் என்ற ஒன்று இருக்கவேண்டுமென்றால், அது முதலாளி இடத்தில் விசுவாசம்—சொந்தப் பொறுப்புபோலக் கருதித் தொழில் முன்னேற்றத்திற்குப் பாடுபடுவது, முதலியவற்றைக் கொள்கைகளாகக் கொண்டிருக்கவேண்டும்.

அதுபோலவே, சிறந்த முதலாளிகள் என்பவர்களும் தொழிலாளர்களைத் தங்கள் சொந்தப் பிள்ளைகள்போல் பாவித்து அவர்கள் நன்மையில், மேம்பாட்டில் நாட்டம் செலுத்த வேண்டும்.

நான் சிறிய முதலாளியாக இருந்தவன். எங்கள் அய்யா பெரிய முதலாளி, கணக்கப் பிள்ளைக்கு ரூ. 7 தான் அப்போது சம்பளம்; காரியஸ்தருக்கு 6 தான் மாதம் கொடுப்பார்கள். இவர்கள் ஒவ்வொருவருக்கும் 4, 5 பிள்ளை குட்டிகள் இருக்கும். அவர்கள் வாங்கும் சம்பளம் சாப்பாட்டிற்குத்தான்; மற்றபடி பிள்ளைகள் படிக்க, புத்தகம், துணிமணிகள், கலியாணம் எல்லாவற்றிற்கும் முதலாளிகள் தனியாகப் பணம் கொடுத்துப் பெருமையாக நடத்துவார்கள். சண்முகம் பிள்ளை என்ற என் குமாஸ்தா கலியாணத்திற்கு, சதிர்க் கச்சேரியுடன், சாரட்டில் ஊர்வலம் வைத்தேன். அவர் என் 'குடி அரசு' ஆபீஸிலும் 1945 வரை இருந்து, 40 வருஷம் உழைத்துச் செத்தார். 'விடுதலை' ஆபீசு வாட்சுமேன் பழனி என்பவர் 35 வருஷமாக என்னிடம் இருக்கிறார்.

தொழிலாளர்களைக் கெடுத்தது தொழிலாளர்கள் சங்கங்கள்—தலைவர்கள் மட்டுமல்ல; அரசாங்கமும் கெடுக்கின்றது. அவர்கள் சட்டம் எந்த நல்ல தொழிலாளியையும் கெடுத்துவருகிறது.

www.thamizham.net - Free E book No 3041

தொழிலாளி மகன் தொழிலாளியாக இருக்கக்கூடாது என்பது எனது இலட்சியச் சொல். 'கம்பாசிட்டர்' மகன் கம்பாசிட்டராகவே இல்லாமல், சிறு அச்சு ஆபீஸ் வைத்து நடத்துபவராக ஆகவேண்டும்; அல்லது ஆபீஸ் மானேஜர் அல்லது குமாஸ்தாவாகவாவது ஆகவேண்டும்.

தொழிலாளி மகன் பரம்பரை பரம்பரையாகத் தொழிலாளி என்பது இல்லாமல் மறையவேண்டும். மேலும், இந்த நாட்டில் தொழிலாளியே இருக்கக்கூடாது. அப்படியானால், தொழிலாளி இல்லாவிட்டால் தொழில் எப்படி நடக்கும் என்று கேட்கலாம். அது பற்றி உங்களுக்கு என்ன கவலை? எப்படியாவது போகிறது; அவசியம் உள்ளவன் செய்துகொள்கிறான். கக்கூஸ் எடுப்பவன் பரம்பரை பரம்பரையாகக் கக்கூஸ் எடுத்துக் கொண்டுதான் இருக்க வேண்டுமென்றால் என்ன நியாயம்? அவன் எடுக்கமாட்டேன் என்றால் கட்டாயப்படுத்த முடியுமா? இப்படி எடுப்பதற்கென்றே ஓர் சாதி இருப்பதுதான் ஜனநாயகமா? அதுபோல் தொழிலாளி என்ற ஓர் பரம்பரை இருக்கலாமா?

நான் தொழிலாளி கூடாது என்பதெல்லாம்—அவர்கள் பரம்பரையாகத் தொழிலாளிகளாக இருக்கக் கூடாது என்பதற்காகவே! தொழிலாளர்கள் தொழிலில் பங்குதாரர்கள் ஆகவேண்டும்.

என் கருத்து என்னவென்றால், தொழிலாளிக்கு இலாபத்தில் பங்கு கிடைக்க வகை செய்யவேண்டும்; தொழிலாளி தொழிற்சாலையில் பங்குதாரர்போல என்பதேயாகும்.

[சென்னை, தினத்தந்தி அலுவலகத்தில், 14-4-1959-ல் சொற்பொழிவு—'விடுதலை' 18-4-1959]

தோழர்களே! தாய்மார்களே!

நான் ரஷ்யா, ஜெர்மனி, பிரான்ஸ், போர்ச்சுக்கல், ஸ்பெயின், இங்கிலாந்து ஆகிய நாடுகளுக் கெல்லாம் சென்று அங்குள்ள தொழிலாளர் ஸ்தாபனங்களின் நடை முறையைப் பார்த்து வந்தேன். தொழிற் சங்கங்களின் சிபாரிசின்பேரில்தான் ஒரு நாடு விட்டு மற்றொரு நாட்டுத் தொழிற் சங்கங்களுக்குச் சென்றேன். நான் போய்ப் பார்த்த அத்தனை ஊர்களிலும் நான்கண்ட கருத்து, முதலாவதாக தொழிலாளர்கள் பெரிதும் நாத்திகர்கள். ரஷ்யாவில் அந்நாட்டு இயற்கையே நாத்திகம்; ஜெர்மனி, இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய நாடுகளிலும் தொழிலாளர்கள் நாத்திகர்கள்தாம்.

நாத்திகர்கள் என்றால் அறிவுவாதிகள்–பகுத்தறிவைப் பயன்படுத்துபவர்கள் என்று அர்த்தம். இரண்டு காரியங்கள்: முதலாவதாக, அந்தத் தொழிற் சங்கத்தின் மீது பாதிரிமார்கள் போராட்டம் செய்கிறார்கள். இரண்டாவதாக, அரசாங்கத்தினிடம் போராட்டம். அதனால் அரசாங்கம் எல்லாத் தொழிற் சங்கங்களுக்கும் சி. அய். டி. போட்டிருக்கிறார்கள். சில ஊர்களில் தொழிற் சங்கங்களின் சார்பாக நான் இறங்கிய காரணத்தால் என்னுடைய 'பாஸ் போர்ட்டைப்'ப் பிடுங்கிக் கொண்டு விட்டார்கள்; பிறகு கஷ்டப்பட்டு வாங்கினேன்.

நம் நாட்டில் தொழிலாளர் ஸ்தாபனங்களை உருவாக்கி அதற்குத் தலைவராக இருப்பவர்கள் கம்யூனிஸ்டுகள் என்றால், அந்தக் கம்யூனிஸ்டுகள் தங்களால் நடத்தப் படுகின்ற தொழிலாளர் இயக்கங்களில் பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்வது இல்லை. பகுத்தறிவுக்கு அவர்களைப் பக்குவப்படுத்தி, நாத்திகர்களாக ஆக்குவதில்லை.

தொழிலாளி நாத்திகனாக ஆனால்தான், தான் ஏன் தொழிலாளி ஆனான் என்பது தெரிய முடியும்.

அடுத்தபடியாக, வாழ்க்கையின் செலவைச் சிக்கனமாகச் செய்து பழக வேண்டும்; வரவுக்கு அடங்கிய முறையில் செலவு செய்து காசை மீதியாக்க வேண்டும். இந்தக் கடவுள், மதம், சாஸ்திரம், புராணம் சம்பந்தப்பட்ட மதச் சடங்குகள் போன்ற காரியங்களுக்கு—சம்பிரதாயங்களுக்குக் கண்டிப்பாய்ச் செலவு செய்யக் கூடாது என்ற அறிவைக் கற்றுத்தர

www.thamizham.net - Free E book No 3041

வேண்டும். அவர்கள் கண்டபடி ஒன்று இரண்டுக்கு மேல் பிள்ளைகள் பெறக் கூடாது. ஆனால், இங்குள்ள தொழிலாளர் ஸ்தாபனத் தலைவர்களிடமும், தொழிலாளர்களிடமும் இந்தக் குணம், நடப்பு இல்லவே இல்லை. அதன் பலன் என்னவென்றால், எவ்வளவுதான் சம்பளவு உயர்வு வந்தாலும் அது போதாது என்ற நிலைதான் ஏற்பட்டுள்ளது. இதனால் மக்களிடையேயும், தொழிலாளர்களிடையேயும் ஒழுக்க ஈனம் தான் வளரும். பேராசை ஒரு புறம் இருப்பினும் வரவுக்கு மீறிச் செலவு செய்வது என்பது, ஒழுக்கக் கேட்டைத் தான் வளர்க்கும்.

அதனால்தான் கண்டிப்பாக நாங்கள் அவர்களையும் நாத்திகர்களாக ஆக்க முயலு கிறோம். எங்களோடு சம்பந்தப்பட்ட வரையில் உள்ள தொழிற் சங்கங்களில் உள்ளவர்கள் அனைவரும் 100-க்கு 90 பேர் நாத்திகர்களே ஆவார்கள்.

கடவுள் கொடுக்கிறார் என்று கூறிக்கொண்டு கடவுளை வணங்குவது வெறும் வேஷம்; முட்டாள்தனம் ஆகும். முதலாளி என்பவன் மூட்டை அடிக்கிறான்—எனவே அவன் 'கடவுள் கொடுத்தார்' என்று கூறி மக்கள் தன்மேல் ஆத்திரப்படாமல் இருக்கக் 'கடவுளை' வணங்குகிறான். தொழிலாளியாக உனக்கு நாளைக்குச் சோற்றுக்கு வழியில்லை. கடவுள் நம்பிக்கை உனக்கு இருக்குமானால்—கடவுள் என்று ஒன்று இருக்கு மானால் அந்தக் கடவுள் உன்னைத் தொழிலாளியாக—மறுவேளைச் சோற்றுக்கு வழி இல்லாதவனாக உண்டாக்கியிருக்குமா? நிறையச் சோற்றுக்கு வகை இருப்பவனுக்கு மேலும் பணம் கொடுக்குமா? என்று சிந்திக்கவேண்டும். தொழிலாளர் நிலை வளராமல் இருப்பதற்கு இதுதான் காரணம்.

எப்பாடு பட்டாவது தன் மக்களைப் படிக்கவைத்து வசதிசெய்து கொடுத்து, தகப்பன் வேலையை விட்டு, சாதி வேலையை விட்டு, வேறு வேலைக்கு அனுப்ப வேண்டும். எந்தத் தலைமுறையும் தன் சாதி வேலைக்கே வராமல் செய்வதுதான் முக்கிய கடமை ஆகும் என்று கூறிப் பாடுபட்டு வருகிறோம்.

தொழிலாளி என்றால் என்ன? முதலாளி என்றால் என்ன? தொழிலாளி என்று கூறுபவன் தன்னுடைய அருமையான புத்தியை, தொழிலின் திறமையை வெறும் சோற்றுக்கு விற்பவன்; வயிறு வளர்ப்பதற்காகத் தன்னுடைய அறிவை—தொழிலை மாற்றுப் பண்டமாக விற்கிறவன். எவ்வளவுதான் புத்திசாலியாக—திறமையுடையவனாக இருந்தாலும், கூலி உயர்வு கேட்கும்போது தன் முதலாளியிடம் தன்னுடைய வேலைத் திறமையை எடுத்துக்கூறி—வயிற்றுக் கொடுமையை எடுத்துக்கூறி—'எனவே, சம்பளம், கூலி அதிகமாகவேண்டும்' என்றுதான் கேட்பான். அதாவது, 'தாங்கள் தரும் சம்பளம், என் குடும்பத்திற்குப் போதுமா? நான் பிள்ளை குட்டிக்காரன் ஆயிற்றே! சாமானின் விலை என்ன? அரிசி என்ன விலை விற்கிறது? வீட்டுவாடகை எவ்வளவு? பையன்கள் வேறு படிக்கவேண்டி இருக்கிறதே, ரூ. 50 போதாது; ரூ. 75 சம்பளம் தாருங்கள்' என்று கேட்பான். தனது சாமர்த்தியத்தைக் கூறி, இந்த வேலைத் திறமைக்குச் சம்பளம் போதாது அதிகமாகத் தரவேண்டும் என்று கேட்காமல், வயிற்றுச் சோற்றுக்குக் கணக்குப் பார்த்துக் கேட்பான்.

அதேபோல், ஒரு சக்கிலியிடம் செருப்பு விலை கேட்டால் ரூ 4-50, என்பான். உடனே நாம், 'என்னப்பா, ரூபாய் இரண்டுக்குத் தரக் கூடாதா?' என்றால், 'என்ன சாமி, அரிசி என்ன விலை விற்குது? கேழ்வரகின் விலை என்ன? இப்படிக் கேட்கிறாயே?' என்றுதான் கூறுவானே தவிர, செருப்பின் இன்றியமையாத தன்மையைக் கூறி விலை கேட்கமாட்டான். சிறு பெட்டிக்கடை முதலாளியிடம், 'ஒரு கட்டு பீடி என்ன விலை?' என்றால், 'மூன்றணா' என்பான். 'என்னப்பா, அதிகமாகக் கூறுகிறாயே?' என்றால், 'பேச நேரமில்லை; வாங்கினால் வாங்கு; வாங்கா விட்டால் போ' என்று தான் இஷ்டப்பட்ட விலையைக் கூறுவானே தவிர, அவன் வீட்டு வாடகை சாமான்களின் விலை உயர்வு பற்றிக் கணக்குப் போட்டுக் கூறமாட்டான்.

www.thamizham.net - Free E book No 3041

முதலாளி—தொழிலாளி இருவரும் ஒன்று சேர்ந்தால்தான் உற்பத்தி செய்யமுடியும். உற்பத்தி நடக்கவேண்டுமென்றால் பணம்—தொழில் இரண்டும் தேவை. உற்பத்தி, மக்கள் நலனுக்கு—உலக நலனுக்கு மிகமிக அவசியம் ஆகும் என்றாலும் முதல் (பணம்) இருந்தால்தான் உற்பத்தி தலை காட்டமுடியும்.

முதலாளி—தொழிலாளி இருவர்களும் கணவன்—மனைவி போன்றவர்கள் ஆவார்கள். கணவனும் மனைவியும் குடும்பம் நடத்திப் பிள்ளை பெறுவதுபோல்தான் முதலாளியும், தொழிலாளியும் சேர்ந்து தொழில் நடத்திப் பண்டங்களை உற்பத்தி செய்வதாகும். கணவன், மனைவி ஒற்றுமையாக இருக்கவேண்டும். நம் நாட்டில் முன்பு இருந்த முறை, கணவனுக்கு மனைவி அடிமையாகத்தான் இருக்கவேண்டும். கணவன் மனைவியை அடித்தால்கூட ஏன் என்று கேட்பதற்குக்கூட உரிமை கிடையாது. அதுதான் 'பிராமணன்—சூத்திரன்' தன்மை. அந்த முறையில்தான் தொழிலாளி—முதலாளிப் பிரச்சினையும் இருந்தது. ஆனால், இன்று என்ன ஆயிற்று? கணவன்—மனைவி சிநேகிதர்கள் போன்றவர்கள்; எஜமான்—அடிமை என்ற முறையில்லை; இருவருக்கும் சம உரிமை என்ற நிலைக்கு வந்துவிட்டது.

கணவன்—மனைவி நிலை மாறியதுபோல் எஜமான்—தொழிலாளி நிலை மாற வேண்டும்; இருவரும் சம உரிமை உள்ள கூட்டாளிகள் என்ற நிலை வந்தாகவேண்டும். அதற்கு இருவரும் விறைத்துக் கொண்டிருந்தால் முடியுமா? கணவன்—மனைவி நிலை மாறியதுபோல் எஜமான்—தொழிலாளி நிலை மாறி, சம உரிமை உள்ள கூட்டாளிகளாக ஆவதை நடக்காமல் தடுத்து வருகின்றனர், இந்தத் தொழிலாளி ஸ்தாபனங்களை நடத்திச் செல்லும் தலைவர்கள்.

தொழிலாளர்களிடையே நாணயம், ஒழுக்கம், பொறுப்பு, கடமை இவை ஏற்பட வேண்டும்; இவை ஏற்பட்டு வளரவேண்டுமென்றால் அதற்கு எஜமான்—அடிமை; முதலாளி—தொழிலாளி என்ற நிலை இருக்கக்கூடாது. இந்த நிலைமை இருக்குமளவுக்கு இவை வளராது. அதற்குக் காலம் வரவேண்டுமானால், தொழிலாளர்கள் தன்மை ஆள வேண்டும். நம்நாட்டிலே அந்தத் தன்மை வரத் தொழிலாளர் தலைவர்கள் முதலில் பாடுபட வேண்டும்.

நம்முடைய அரசாங்கம் தொழிலாளர்கள்மீது கவலை எடுத்துக் கொள்கிறதா என்றால், இல்லை. சும்மா அவர்களைத் திருப்திப்படுத்த ஏதோ மேலுக்குச் செய்கிறார்கள்.

உண்மையில், அரசாங்கம் தொழிலாளர்களுக்கு நன்மை செய்யக் கருதினால் தொழிலாளர் ஸ்தாபனங்கள் நடத்துவதைத் தனிப்பட்டவர்களிடம் கொடுத்திருப்பதை மாற்றி, அரசாங்கமே தொழில் ஸ்தாபனத்தை நடத்தவேண்டும். அரசாங்கம் நடத்துகிறது என்றால், பொதுமக்கள் நடத்துவதாகத்தான் அர்த்தம். 10 மணி நேரத்தை 8 மணி வேலை நேரமாகக் குறைப்பதும், 8 மணி நேரத்தை ஏன் 6 மணி நேரமாக ஆக்கக்கூடாது என்று கேட்பதும்; மூன்று ரூபாய் சம்பளம் அய்ந்து ரூபாயாகக் கேட்பதும், பின்பு அய்ந்து ரூபாய் என்ன—அதை ஏன் ஆறு ரூபாயாகத் தரக்கூடாது என்பதிலும்தான் இன்று தொழிலாளிகளின் விருப்பம் போய் நிற்கிறது. அதாவது—'நீ எவ்வளவு எடுத்துக் கொண்டாலும்சரி, எனக்குக் கவலை இல்லை; எனக்கு இவ்வளவுதான் என்று ஒதுக்கி விடு' என்று கேட்கும் மனோபாவம்தான். முதலாளியும் எப்படியாவது இவனுக்குப் பங்காளி உணர்ச்சி வராமல் இருந்தால் போதும் என்று நினைத்துக் கூலி உயர்வு சிறிது ஏற்றித் தந்து ஏமாற்றிவிடுகிறான்.

தொழிலாளர்கள் பகுத்தறிவுவாதிகளாக ஆகவேண்டும். கடவுள், மதம், சாஸ்திரம், சம்பிரதாயம் முதலிய காரியங்களில் நம்பிக்கை இல்லாமல் இருக்கவேண்டும். மனிதத் தன்மையிலும், மானத்திலும், ஒழுக்கத்திலும் நம்பிக்கை இருக்கவேண்டும்.



www.thamizham.net - Free E book No 3041

தொழிலாளி என்றால் கீழான சாதி என்றும்; முதலாளி என்றால் மேல்சாதி என்றும் தான் அர்த்தம். பாடுபடுகின்ற தொழிலாளி கீழ்ச்சாதி, பாடுபடாத முதலாளி மேல்சாதி. தொழிலாளியின் உழைப்பின் பயனாய்வரும் பணத்தைக்கொண்டு சுகபோகமாய் வாழும் முதலாளி, மேல்சாதி. அதாவது, சூத்திரன்–பிராமணன் என்பது மாதிரியான நிலைமை. சூத்திரன் எவ்வளவுதான் உயர்ந்தவனாகவும், திறமைசாலியாகவும் புத்திக் கூர்மை உள்ள வனாகவும் இருந்தாலும் சூத்திரன், சூத்திரன்தான். அவன் மேல்சாதியாக–பார்ப்பானாக ஆகமுடியாது. அதுபோல், எவ்வளவுதான் இழிகுணம்–இழிநிலை உடைய பார்ப்பானாக இருந்தாலும் அவன் மேல்சாதி–மேல்சாதிதான், பார்ப்பான்தான். அதுபோல, இதிலே அந்தமுறை இருக்கிறது. அதாவது, தொழிலாளி என்றுமே தொழிலாளிதான். அதை விட்டு, அவன் எவ்வளவு திறமையுடையவனாக இருப்பினும் மாறமுடியாது. தொழிலாளி என்ற முறை மாறவேண்டும்; சமுதாயத்தில் உள்ள சாதி முறையும் மாறவேண்டும்; நாலாவது சாதியான் சூத்திரன் தொழில்செய்து பிழைக்க வேண்டியவன் ஆகும். அன்றாடக் கூலிபெற்றுச் சாப்பிட்டுவரக்கூடிய தன்மை உடையவன்; அவன் கையில் காசு சேர்த்து வைத்துக்கொள்ளக்கூடாது; இப்படித்தான் இந்த நாட்டில் சாதியமைப்பு முறை இருக்கிறது. இதை மாற்றினால் தொழிலாளியின் நிலை இப்படியே இருக்காது; நிச்சய மாகத் தானாகவே மாறிவிடும்.

தொழிலாளி பகுத்தறிவு பெறக்கூடாது—பெற்றுவிட்டால், தான் அந்தத் தொழில் ஸ்தாபனத்தின் மூலம் சம்பாதிப்பது பாதிக்கப்படும் என்ற காரணத்தால் தொழிற்சங்கத் தலைவர்கள், தொழிலாளர்களை–சம்பளம் போதாது என்ற பிரச்சினையிலேயே தூண்டி விடுகிறார்களே தவிர, ஏன் இந்த இழிநிலை—அதாவது அவன் ஏன் முதலாளி, நான் ஏன் தொழிலாளி–என்று கேட்பது கிடையாது. அதற்கு மாறாக நம்மைப் பார்த்து மிகப் புத்தி சாலித்தனமாகக் கேட்கிறார்கள், 'கக்கூஸ்காரன் மகன் படித்து வேறு வேலைக்குப் போய் விட்டால், பிறகு யார் மலம் எடுப்பது? அந்தத் தொழில்செய்ய ஆள் வேண்டாமா?' என்று. மலம் எடுப்பதற்கு என்று ஏன் வேறு ஆள்? மலம் கழிக்கிறவனே எடுக்கட்டுமே! ஒரு மனி தனின் மலத்தை எடுப்பதோடு இழிமகனாகவும் இருக்கவேண்டுமா? தொழிலாளர் நலத்துக் காகப் பாடுபடுகிறவர்கள் இந்த மலமெடுப்பவர்கள் விஷயத்தில் என்ன செய்தார்கள்?

[பெங்களூரில், 1-5-1961-ல் சொற்பொழிவு—'விடுதலை' 9-5-1961]

## 7. முதலாளி – தொழிலாளி தொல்லை

தோழர்களே! தாய்மார்களே!

இன்று பொதுவாகவே உலகம் முழுவதும் ஒரு தொல்லை இருக்கிறது. அந்தத் தொல்லை பலவேறு உருவங்களில் காட்சியளிக்கின்றது. அந்தத் தொல்லை என்ன வென்றால், மனித சமுதாயத்தில் உடையவன்–இல்லாதவன் என்ற தொல்லை. இந்தத் தொல்லை உலகம் முழுவதும் நீக்கமற நிறைந்துள்ளது. மனிதன் இயற்கையாகவே ஆசை குடிகொண்டுள்ள ஜீவன். அதன் பயனாகத்தான் உலகில் உடையவன்–இல்லாதவன் என்கின்ற இரண்டுவித நிலைமைகள் உண்டாகிவிட்டன. இந்த நிலைமைகளை மதமும், கடவுளும் பாதுகாத்து வருகின்றன. அதற்கு ஏற்ப அரசாங்கமும் அமைந்துவிடுகிறது.

ஆனால், நம் நாட்டைப் பொறுத்தவரையில் உடையவன்–இல்லாதவன் என்கின்ற கவலையோடு மற்றொரு கவலையும் சேர்ந்துகொண்டது. அதுதான் சமுதாயத்தில் மேலான சாதி, கீழான சாதி என்று பாகுபடுத்தப்பட்டுள்ள தொல்லை. இந்தத் தொல்லை உலகில் வேறெங்கும் இல்லாத தொல்லை. இதற்கு எந்தவிதமான ஆதாரமும் இல்லை. நம் மக்களிடம் குடிகொண்டுள்ள முட்டாள் தனத்தினாலும் மானமற்ற தன்மையினாலும் இந்தத் தொல்லை நீண்டநாட்களாக நம்மிடையே இருந்துவருகிறது. உடையவன்–இல்லா தவன் என்ற தொல்லையை ஒழிக்க உலகில் போராட்டம் நடந்தபடியே உள்ளது. அதைக்

www.thamizham.net - Free E book No 3041

காக்க சட்டம், வெடிகுண்டு, ஆகாயக் கப்பல், அணுகுண்டு ஆகிய அனைத்தும் உண்டு. ஆனால், மேல்சாதி—கீழ்சாதி என்ற குறை அஸ்திவாரம் இல்லாமலேயே வளர்ந்தது. நம் மக்களின் முட்டாள்தனமும், மானமற்ற தன்மையும் சேர்ந்துதான் அதை வளர்த்து நம் நாட்டில் நிலைநிறுத்தி வைத்துள்ளன. அதை நீக்க நாம் முயலவேண்டும். உடையவன்—இல்லாதவன் என்ற தொல்லை நீங்க உலகில் கிளர்ச்சிகள் நடந்தபடியே உள்ளன. தொழிலாளர்கள் கிளர்ச்சி, விவசாயிகள் கிளர்ச்சி ஆகிய கிளர்ச்சிகளெல்லாம் முதலாளித்துவம் நிலைக்க உபயோகப்படுகின்றனவே ஒழிய அடிப்படையை மாற்றியமைக்கவில்லை. நம் நாட்டிலுள்ள மேல்சாதி—கீழ்சாதிக் கொடுமை அஸ்திவாரம் இல்லாததும் மூட நம்பிக்கைகளை அடிப்படையாகக் கொண்டதுமாக இருப்பதால் கிளர்ச்சிகள் செய்ய முடியாதபடி தந்திரமாக அமைந்துள்ளது. இங்கு சாதித் தொல்லைகளை ஒழிக்கப் பாடுபடவேண்டியது தான் முதல் தேவை என்பது என் கருத்து.

முதலாளி—தொழிலாளி என்கிற பிரச்சினை எங்கிருந்து வந்தது? மூடநம்பிக்கையிலிருந்து வந்ததல்ல. அந்தப் பிரச்சினை ஆதாரத்தோடுதான் உள்ளது. எப்படி இருக்கிறான் முதலாளி? சட்டத்தின்படி இருக்கிறான். அரசாங்கத்தின் பாதுகாப்பின்படி இருக்கிறான். அரசாங்கத்தின் சலுகையால்தான் அவன் முதலாளியாக வாழமுடிகிறது. ஆகையால், முதலாளி கூடாது என்றால் அவனைப் பாதுகாக்கும் அரசாங்கத்தின் மீது திரும்ப வேண்டும். முதலாளிமீது பாய்வதால் பலன் ஏதுமில்லை. முதலாளிமீது போராட்டம் துவக்கி, தொழிற் சங்கங்கள் இந்த அம்பது வருட காலமாகச் சாதித்தது என்ன?

[பொன்மலையில், 27-9-1953-ல் சொற்பொழிவு—'விடுதலை' 3-10-1953]

## 8. பாராட்டு

சேரன் போக்குவரத்துக் கழகம், தொழிலாளர்களுக்கு முதலீட்டிலும், நிர்வாகத்திலும் பங்கு அளிக்க எடுத்திருக்கிற துணிச்சலான ஒரு திட்டத்தைப் பற்றி அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறேன், தி. மு. க. அரசாங்கம் சாதித்துவரும் பெரும் மவுனப் புரட்சிகளில் இது சரித்திர சாதனை என்பேன்.

நான் கடந்த நாற்பது ஆண்டு காலமாக இதை என்னுடைய கொள்கையாகக் கூறி வருகிறேன்.

1944-ல் சேலத்தில் நடத்திய மாநாட்டில், 'இலாபத்தில் தொழிலாளர்களுக்குப் பங்கு வேண்டும்; அவர்களுக்கு நிர்வாகத்திலும் உரிமை வேண்டும்' என்னும்படியாக ஒரு தீர்மானமே நிறைவேற்றி இருக்கிறோம்.

இது ஒன்றுதான் வேலைநிறுத்தம், கதவடைப்பு போன்ற எல்லா வகையான கெடுதல்களுக்கும் முடிவான மருந்தாகும்; இது தொழிலாளிகள் நடுவில் கட்டுப்பாட்டு உணர்ச்சியையும் பொறுப்பையும் ஏற்படுத்தும்.

தொழிலாளி வர்க்கத்தை இனி யாரும் சுரண்ட முடியாது.

நம்முடைய சேரன் போக்குவரத்துக் கழகத்திற்கும், ஆற்றலும் சொல் திறனும் ஒருங்கே அமைந்த நமது மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் தலைமையிலான தமிழ் நாட்டு அரசாங்கத்திற்கும், என்னுடைய பாராட்டைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அதேபோல துடிப்பும், திறமையும் வாய்ந்த இளைஞர் நம்முடைய போக்குவரத்து அமைச்சர் மாண்புமிகு எஸ். இராமச்சந்திரன் அவர்களுக்கும் என்னுடைய பாராட்டைத் தெரிவிக்கிறேன்.

இதுபோன்ற செயற்கரிய காரியத்தை மற்றவர்களும் பின்பற்றுவார்கள் என்று நம்புகிறேன்.

['விடுதலை'—பாராட்டுச் செய்தி—5-5-1973]

www.thamizham.net - Free E book No 3041

# 1. இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி

## 1. இந்திப் புரட்டு

முதலாவது, இந்தி மொழி என்றால் என்ன? அதற்கும் தமிழ்நாட்டு மக்களுக்கும் என்ன சம்பந்தம்? அதைப் படித்ததினால் தமிழ்நாட்டு மக்களுக்கு ஏற்படும் பயன் என்ன? என்பவைகளை முதலில் கவனிப்போம்; இந்தி மொழி என்பதை அகில இந்திய மொழியாகக் கருதவேண்டும் என்பதுபற்றிப் பின்னால் யோசிப்போம்.

இந்தி மொழி படித்த மக்களுக்கு அதனால் ஏற்படும் பயன் என்ன? இதுவரை தமிழ் நாட்டில் காங்கிரஸ் பணத்திலிருந்தும், மற்றும் பொதுமக்களிடமிருந்தும் இந்திக்காக செலவு செய்யப்பட்ட பணத்தில் எவ்வளவு பார்ப்பனரல்லாதார்கள் படித்தார்கள்? அதை எதற்கு உபயோகப்படுத்துகின்றார்கள்? என்பவைகளும் கவனிக்கத் தக்கதாகும்.

இந்திமொழி என்பது தமிழ் மக்களுக்கு விரோதமான ஆரிய மொழியாகும். அதிலுள்ள வாசகங்கள் முழுவதும் ஆரியப் புராணங்களும் மூடப் பழக்க வழக்கங்களும் கொண்டனவும் பார்ப்பனர்களின் உயர்வுக்கு ஏற்பட்டனவுமாகும். இந்த நாட்டில் இப்போது சமஸ்கிருதம் இருப்பது போலவும் அது உபயோகப்படுவது போலவும்—இந்தி ஒரு சிறிதும் தேவையில்லாததாகும். அப்படியிருந்தாலும் அது ஏதாவது வடநாட்டுக்குப்போய் வியாபாரம் செய்யும் வியாபாரிகளுக்காவது உதவுமா என்று பார்ப்போமானால், அப்படியும் சொல்லுவதற்கில்லாமல், இதுவரை இந்தி படித்தவர்களில் 100-க்கு 95 பேர் பார்ப்பனர்களே படித்து அந்தப் படிப்பைக்கொண்டு வடநாட்டிற்கு உத்தியோகத்திற்கோ பிச்சைக்கோ சென்று, அதன்மூலம் பார்ப்பனரல்லாதார்களுக்குத் துரோகம் செய்யவே உதவப்பட்டு வருகின்றது. அதற்காகச் சம்பாதித்த பணங்கள் முழுவதும் பார்ப்பன ஆதிக்கத்திலேயே இருந்துவருகின்றது. ஒரு சமயம் பார்ப்பனரல்லாதவர்களும் இந்தி படித்திருப்பதாக வைத்துக்கொண்டாலும் இந்த நாட்டில் அவர்களுக்கு அது என்ன பயனைக் கொடுக்கும்? இதுவரை இந்தி படித்த பார்ப்பனரல்லாதாரில் எவராவது அதனால் இன்ன பிரயோஜனம் அடைந்தார்கள் என்று ஏதாவது ஒரு சின்ன உதாரணமாவது காட்டமுடியுமா?

இந்தியாவுக்கு ஒரு பொதுமொழி வேண்டுமானாலும், அல்லது வியாபாரத்திற்கு ஒரு பொதுமொழி வேண்டுமானாலும் ஆங்கில மொழியைத் தேர்ந்தெடுத்து அதை எல்லா மக்களிடையிலும் பரப்ப முயற்சிக்க வேண்டுமேயல்லாமல், வேறுமொழியைப்பற்றி யோசிப்பது முட்டாள்தனமோ அல்லது சூழ்ச்சியோதான் ஆகும்.

ஆங்கிலம் உலக மொழி; உலக வர்த்தக-விஞ்ஞான மொழி; இந்திய அரசாங்க மொழி; அதுமாத்திரமல்லாமல் மூடப் பழக்க வழக்கமும், பார்ப்பனீயமும் இல்லாமல் அவ்வளவும் அடிப்படையான கலைகளை வாசகமாகப் பெற்ற மொழியாகும்.

இவைகள் மாத்திரமல்லாமல், இந்தி, உருது முதலியவற்றுக்குத் தாய்மொழியாக உள்ள துருக்கி மொழிகூட, ஆங்கில மொழிக்கும் ஆங்கில எழுத்துக்கும் மதிப்புக்கொடுத்து தனது நாட்டுத் தாய்மொழியாகிய தன்னையே மாற்றிக்கொண்டது. அன்றியும், நமது பிரிட்டிஷ் அரசாங்கம் உள்ளவரை—மேல்நாடுகளின் வர்த்தக உடன்பாடோ, கலை சம்பந்தமோ, கல்வி சம்பந்தமோ உள்ளவரை—ஆங்கிலம் இல்லாமல் முடியவே முடியாது. இப்படி எல்லாம் இருக்க, இதைச் சற்றும் கவனியாமல் இப்போது தமிழ் நாட்டில் இந்தி மொழி பரப்ப வந்திருப்பதென்பது தற்காலம் தமிழ் நாட்டில் உள்ள உணர்ச்சியை ஒழிக்கச் செய்யும் சூழ்ச்சியேயாகும். ஆதலால், இதற்கு எந்தப் பார்ப்பனரல்லாதாராவது பணம் கொடுத்தோ அல்லது ஆதரித்தோ பேசினாலும் அது பெரிய சமூகத் துரோகமாகும்.

['குடி அரசு'—தலையங்கம்—20-1-1929]

www.thamizham.net - Free E book No 3041

இந்தி என்பது, பார்ப்பன ஆதிக்கத்திற்கு ஏற்படுத்தப்பட்ட புரட்டு. இந்தியாவில் 35½ கோடி மக்கள் இருந்தாலும் பல மொழி, மதம், நாகரிகம், நடை, உடை, பாவனைகளாக இருந்துவருவதை யாரும் மறுக்கமுடியாது. அப்படி இருந்தாலும் மக்களுக்குள் மதத்தின் பேராலும், சாதியின் பேராலும், மொழியின் பேராலும் போட்டிகள் நடந்துவருவதும் மறுக்கக் கூடியவை அல்லவென்றே சொல்வோம்.

இந்த நிலைமையிலுள்ள சமூகங்களை—பிரிவினைக்கு ஆதாரமாய் இருப்பன வற்றைக் கண்டுபிடித்து, அவைகளை ஒழிக்க முயற்சிக்காமல், கண்மூடித்தனமாய் எல்லோரையும் 'இந்தி' கற்றுக்கொள்ளவேண்டுமென்று அரசியலின் பேரால் நிர்ப்பந்திப் பது எப்படி ஒழுங்காகும்? 'இந்தி' என்பது அனேகமாக வடமொழியின் சார்போ அல்லது திரிபோ ஆகும். இந்த நாட்டில் ஆரியர்கள் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்ட வடமொழிக்கு உயர்வுகொடுக்கப் பலவழிகளிலும் சூழ்ச்சி செய்து, உலக வாழ்க்கையில் ஒரு ஒடிந்துபோன குண்டூசிக்குப் பயன்படாத மொழியாகிய அவ் வடமொழிக்கு எவ்வளவு பணம் செலவழிக்கப் பட்டுவருகின்றது என்பது வெகுநாட்களாகத் தமிழ்மக்கள் கவனித்துவரும் சங்கதியாகும். இப்போது மறைமுகமாய் வடமொழியை ஆதரிக்கவும், ஆரிய நாகரிகம், சமயக் கொள்கை ஆகியவைகளை நிலை நிறுத்தவும், இந்தியை அரசியல் விஷயமாக ஆக்கி, அதைக் கதரைப்போல்—ஏன், கதரைவிட அதிகமாக ஒவ்வொருவருக்குள்ளும் புகுத்தப் பார்ப்பது, எவ்வளவு வஞ்சகமான காரியம் என்பதை நமது 'சோணகிரிகள்' அனேகர் இன்னும் உணரவே இல்லை. தமிழ்ப் பண்டிதர்கள் சாம்பலையும் மண்ணையும் குழைத்துச் சூடுபோட்டது போல் மேலெல்லாம் தீட்டிக்கொண்டு—'சிவ, சிவ, சிவ' என்பதற்கும், 'ராம, ராம' என்பதற்கும் உதவுவார்களே தவிர, மற்றபடி நமது மக்கள்மீது, அனாவசியமான ஒரு மொழி—சூழ்ச்சித் திறத்தால் சுமத்தப்படுகின்றதே என்கின்ற அறிவும் கவலையும் அவர்கட்குச் சிறிதும் கிடையாது என்றே சொல்லவேண்டி யிருக்கின்றது. இன்றையத் தினம் இந்திய மக்களுக்கு அவரவர்கள் சொந்தமொழி தவிர வேறுமொழி தெரியவேண்டு மானால், அது ஆங்கிலமொழி என்றே நான் தைரியமாகச் சொல்லுவேன்.

'உலகமே தங்கள் கிராமந்தான்' என்று எண்ணிக்கொண்டிருந்த காலம் மலையேறி, இப்போது நிலப் பரப்பு, நீர்ப் பரப்பு, முழுவதும் தெரிந்து—200 கோடி உலக மக்களையும் சகோதரர்களாகப் பாவித்து வாழவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும்போது, உலகச் செலாவணி மொழி எதோ, அதை மனிதன் அறியாமல், கபீர்தாஸ் இராமாயணத்தைப் படிக்கவேண்டிய இந்தி மொழி எதற்குப் படிக்கவேண்டும் என்று கேட்கிறோம்.

தமிழ் மக்களுக்குச் சுயமரியாதை என்பது பல துறைகளிலும் வரவேண்டியிருப்பதை இந்தியின் ஆதிக்கம் இனியும் அதிகமாய் வலியுறுத்துகின்றது.

தமிழ் மொழியின் பாண்டித்தியம் என்பது இப்போதே அனேகமாய்ப் பார்ப்பனர் களிடமே இருக்கிறது. தமிழ் மொழியின் சங்கத் தலைவர்கள் பார்ப்பனர்களாய் இருக் கின்றார்கள் என்பதோடு—இந்தப் பார்ப்பனர்கள் தமிழர்களை இந்தி படிக்கக் கட்டாயப் படுத்துகின்றார்கள் என்றால், தமிழ் மொழிக்காரர்களின் சுயமரியாதை எவ்வளவு என்பதைத் தமிழர்களே உணர்வார்களாக!

அரசியல் தத்துவத்தின் பலனாய், தமிழ் நாட்டுப் பார்ப்பனர்கள் பார்ப்பனரல்லாதார் பணத்தில் இந்தி கற்று, இந்தியத் தலைவர்களாகி வடநாட்டுத் தலைவர்களிடமெல்லாம் பார்ப்பனர்களே போய்க் காரியதரிசிகளாய் அமர்ந்து—அவர்களே தென்னாட்டுப் பிரதிநிதி களாகி, அவர்களது ஆதிக்கத்திற்கே இந்திய அரசியலைத் திரும்பப் பயன்படுத்திக்கொண்டு வருகின்றார்கள்.

ஆகவே, அரசியல் துறையிலிருக்கும் பார்ப்பனரல்லாதாருக்கும் அறிவு இருந்தாலும்—அதைப் பார்ப்பனர்களுக்குத் தக்க விலைக்கு விற்றுவிட்டார்கள் என்றாலும்—அரசியலி

www.thamizham.net - Free E book No 3041

லில்லாத பார்ப்பனரல்லாதார்கள் அறிவையாவது தக்க வழியில் உபயோகித்துத் தகுந்த ஏற்பாடு செய்யவேண்டாமா?

['குடி அரசு'—தலையங்கம்—10-5-1931]

இந்தி கட்டாயப் பாடமாக ஆகும்பட்சத்தில் கண்டிப்பாகப் பார்ப்பனரல்லாத பிள்ளைகள் 100-க்கு 90-க்குமேல் தேர்ச்சியில் தவறி விடுவதோடு, பார்ப்பனப் பிள்ளைகள் 100-க்கு 100 தேர்ச்சி பெற உதவியாயிருக்கும். ஆகவே, பார்ப்பனரல்லாத பிள்ளைகளை மேல் படிப்பில்லாமல் அழுத்தத்தான் இந்தி ஒரு நல்ல சாதனமாகுமே தவிர—மனித வாழ்க்கைக்கோ அறிவுக்கோ தமிழர்களுக்கு எந்த விதத்திலும் இந்தி இன்றியமையாததாகாது.

கட்டாயப் படிப்பு என்பது நாட்டின், சமூகத்தின் பொதுக் காரியமாகும். அதற்காகச் செலவு செய்யும் நேரம், பணம், ஊக்கம் ஆகியவைகள்—நாட்டின் பொதுச் சொத்தாகும். அப்படிப்பட்டதைக் கொண்டுபோய்ப் பாழான—பார்ப்பனச் சூழ்ச்சியான—முட்டாள் தனத்துக்கு வித்தான காரியத்துக்குப் பயன்படுத்துவது என்றால் யார்தான் சம்மதிக்கமுடியும்?

'இந்தி படித்தால் துளசிதாஸ் இராமாயணம் படிக்கலாம்' என்கிறார், நமது அக்கிரகார பிரதம மந்திரி. 'இந்தி படித்தால் வடநாட்டில் சுற்றுப்பயணம் செய்யலாம்' என்கிறார் நமது விபீஷணாழ்வாரான கல்வி மந்திரி. துளசிதாஸ் இராமாயணம் நமக்கு எதற்கு? சோற்றுக்கு வழி இல்லாத மக்களுக்கு வடநாட்டுச் சுற்றுப் பிரயாணம் எதற்கு?

கம்ப ராமாயணம் படித்து முட்டாளாகி, துரோகிகளாகி, சுயமரியாதை இழந்து, எதிரிகளின் கால் அலம்பிக் குடித்து வயிறு வளர்க்கும் ஈன மக்கள் போதாது என்று கருதியா—நமது அக்கிரகார மந்திரி துளசிதாஸ் இராமாயணம் படிக்கச் சொல்கிறார் என்று யோசிக்க வேண்டி இருக்கிறது! கம்ப ராமாயணத்தின் கருப்பொருள் கண்டுபிடித்துப் படித்த மக்களில், 100-க்கு 5 பேருக்காவது சுயமரியாதையோ, சமூகப் பற்றோ, தாய்மொழிப் பற்றோ இருக்கிறது என்று யாராவது சொல்ல முடியுமா? ஆரிய இராமாயணத்தை நெருப்பிலிட்டுக் கொளுத்தவேண்டும் என்று ஆதியில் நாம் சொன்ன காலத்தில்—இராமாயணக் கதை ஆபாசமானது, வெறுக்கத் தகுந்தது, கீழ் மக்களின் இயற்கையையும் கெட்ட குணங்களையும் சித்திரிப்பது என்றும்; 'ஆனால், கம்பன் கவித் திறம், தமிழின் கலைத் திறம் முதலியவை, கம்ப ராமாயணத்தில்—மலத்தில் கிடக்கும் முத்துப்போல் பொதிந்து கிடப்பதால் அதை எரிக்கக் கூடாது' என்றும் சொன்ன கம்ப ராமாயணக் கருப்பொருள் பண்டிதர்கள்—இன்று 'பக்கா பட்டரான' ஆச்சாரியார் துளசிதாஸ் இராமாயணம் படிப்பதற்காக இந்தியைக் குழந்தைகளுக்குக் கட்டாயப் பாடமாக்க வேண்டும் என்று சொல்லி, அதற்கு வேண்டிய காரியங்கள் செய்துவரும்போது—மனைவியை மற்றொருவன் சேலையை அவிழ்த்துப் பலாத்காரம் செய்வதைப் பார்த்துக் கொண்டிருந்த வீரர்கள் கதைபோல்—இன்று வாய்திறவாமல் அடிமையாய், துரோகியாய், தமிழ்மாதுக்கு மாதுரு துரோகியாய் வீற்றிருக்கும் காரணம் என்ன?

தமிழ் மொழியில் உள்ள புராணங்களின் ஆபாசங்களையும் சூழ்ச்சிகளையும் மக்கள் சுலபமாய் அறிந்து, ஆரிய மதத்திலிருந்து மக்கள் விலகி அதை இழிவுபடுத்தி வருகிறார்கள் என்பதை உணர்ந்தே தமிழை ஒழிக்கவும், இந்தியைப் பரப்பவும் பார்ப்பனர் ஆட்சி முயலுகின்றது. அதை நம் மக்கள் சிறிதும் உணரவில்லை. ஆரிய புராணங்களை—கடவுளின் தன்மைகளை மனிதன் படித்தால் அவன் மனிதன் என்று சொல்லக்கூடிய நிலையை அடைய முடியுமா? சிறுவயதிலேயே குழந்தைகளின் பகுத்தறிவையும், ஆராய்ச்சி உணர்ச்சியையும் பாழ்படுத்த—அதன் எதிரியை இரத்தத்தில் செலுத்துவதுபோல் அல்லவா இந்தி படிப்பதின் பலன் ஏற்படக்கூடும்? இன்று மனிதனுக்கு அறிவோ தொழில் திறமையோ ஏற்பட வேண்டுமானால் ஆங்கில மொழி மூலந்தான் கற்க வசதி இருக்கிறது. நமது தமிழ்ப் பண்டிதர்கள் இராமாயணத்தில் கருப்பொருள் தேடவும், திருவிளையாடல் புராணத்துக்கு



www.thamizham.net - Free E book No 3041

77-வது உரை எழுதவும், பெரிய புராணத்துக்கு 113-வது உரையும் தத்துவார்த்தமும் எழுதவுந்தான் தகுதியுடையவர்களாகவும்—கவலையுடையவர்களுமாகவே இருக்கின்றார்களே ஒழிய, பகுத்தறிவை அடையத்தக்கதாகவோ, மானத்துடன் பிழைக்க ஒரு தொழில் கற்றுக் கொள்ளத்தக்கதாகவோ இன்று ஒரு புத்தகமும் ஒருவராலும் எழுதப்பட்டதாக இல்லை. சாமி வேதாசலம் என்னும் மறைமலை அடிகள் இந்தக் கருத்தை மனத்தில் கொண்ட 'பாவத்துக்காக' சற்றேறக்குறைய 100-க்கு 75 தமிழ்ப் பண்டிதர்கள் அடிகளைக் காட்டிக் கொடுத்து வயிறு வளர்க்க முற்பட்டார்கள் என்றால்—தமிழ் படிப்பதனாலாவது, தமிழ்த்தாய் பக்தியினாலாவது மனிதனுக்குச் சுயமரியாதை உணர்ச்சியும், பகுத்தறிவு உணர்ச்சியும் வருமா என்று சந்தேகப்பட வேண்டியிருக்கிறது. இன்று தமிழ் நாட்டில் ஒரு ஆரியப் பார்ப்பனர்—நாட்டை மனு ஆட்சிக்குக்கீழ்க் கொண்டுவரும் முயற்சிக்குச் சூழ்ச்சி கர்த்தர்—தமிழ்மொழியை எப்படிப் பரப்புவது, எப்படி மேன்மைப் படுத்துவது என்பதை விட்டுவிட்டு, குழந்தைகளுக்குக் கட்டாயமாக இந்தி கற்பிக்கவேண்டும், துளசிதாஸ் இராமாயணம், மற்ற புராணம் ஆகியவைகள் மூலம் படிக்கவேண்டும் என்று சொல்லுவது என்றால், இந்த நாட்டில் உண்மைத் தமிழ் இரத்தம் ஓடும் மக்கள் ஒருவர் இருவராவது இருக்கிறார்களா?

['குடி அரசு'—தலையங்கம்—22-8-1937]

இந்தி எதிர்ப்பின் மூலம் தமிழ்மக்கள் வெற்றிபெற வேண்டுமானால், அவன் சரீரத்தில் ஓடும் பார்ப்பன மத உணர்ச்சி இரத்தம் அவ்வளவும் வெளியாக்கப்பட்டுப் புதிய—சுதந்திர அறிவு இரத்தம் பாய்ச்சப் பட்டாக வேண்டும்.

ஏனெனில், பார்ப்பனீயம் இன்று இந்தியைக் தமிழ் மக்களுக்குள் கட்டாயமாகப் புகுத்தவேண்டும் என்கின்ற மூர்க்கப் பிடிவாதத்தைக் கொண்டிருப்பதன் உண்மைக் கருத்து என்னவென்றால், அரசியலுக்கு அல்ல; பொருளியலுக்காக அல்ல; அல்லது பார்ப்பனர்களுக்கு வேலை இல்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதற்காக அல்ல. உண்மையான காரணம் என்னவென்றால், இன்று தமிழ் மக்கள் பெரும்பாலோருக்குள் ஏற்பட்ட சுயமரியாதை உணர்ச்சியால் ஆட்டம் கொடுத்திருக்கும் பார்ப்பனீய மத உணர்ச்சியைத் தமிழ் மக்களுக்குள் மறுபடியும் சரியானபடி புகுத்தி—அதைக் கெட்டிப் படுத்தி—பார்ப்பனீயத்துக்குத் தமிழ் மக்களைப் புராணகாலம்போல நிரந்தரமாய் அடிமை யாக்குவதற்காகவேயாகும். அதனால்தான், சோழவந்தான் இந்தி எதிர்ப்பு மாநாட்டில் அதன் தலைவர், 'இந்தியைக் கட்டாயப் பாடமாக ஆக்கப்படுவதை ஒழித்தால் போதாது. இந்தியைக் கட்டாயப் பாடமாக்க வேண்டும் என்பதற்கான உள் காரணங்களை ஒழிக்க வேண்டும்' என்று கூறி இருக்கிறார்.

ஆதலால், 'இந்திப் போர்' தமிழ் மக்களுக்கு ஒரு கிடைத்தற்கரிய 'பாக்கியம்' என்றே ஒவ்வொரு தமிழ் மகனும் கருதவேண்டும். அது போன்ற ஒரு பயனளிக்கத்தக்க போராட்டம் இனி சுலபத்தில் ஏற்படும் என்று எந்தத் தமிழ் மகனும் இலேசில் கருத முடியாது என்பதோடு, இது அவ்வளவு சுலபமானதும், அவ்வளவு பெரிய பயனை அளிக்கக் கூடியதுமான ஒரு அரும் பெரும் போராட்டமாகும்.

['குடி அரசு'—தலையங்கம்—15-5-1938]

நான் இந்தியை 1924, 1925 முதலே எதிர்த்து வருகிறேன். அதற்கு ஆதாரம் 'குடி அரசு' பத்திரிகையில் பார்க்கலாம். இன்றைய இந்தி எதிர்ப்புத் தோழர்களும் மற்றும் அனேகரும் வெகு நாட்களாகவே தமிழ்நாட்டிற்கு இந்தி ஏன் என்று எதிர்த்து வந்திருக் கிறார்கள்.

இந்தி என்றால் பார்ப்பன மொழி என்றுதான் அர்த்தம். 'டிக்ஷனரியை'ப் பாருங்கள்! பார்ப்பன மொழியை, பார்ப்பனரல்லாதாருக்குக் கட்டாயமாகப் புகுத்தினால்

www.thamizham.net - Free E book No 3041

பார்ப்பனரல்லாதாருக்கு வீரமும், அறிவும், மானமும் இருந்தால் ஒப்புக்கொள்ள முடியுமா என்பதை யோசித்துப் பாருங்கள்.

[சென்னையில், 25-6-1938-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 10-7-1938]

## 2. பொதுமொழி இருந்ததா?

தலைவரவர்களே! தோழர்களே!

இந்தி மொழி தமிழ் நாட்டில் எப்போது இருந்தது? பம்பாயில் எப்போது இருந்தது? வங்காளத்தில் எப்போது இருந்தது? இந்தியா 56 தேசமாய் இருந்தபோது 56 மொழிகளின் பேரால்தானே தேசமாய் இருந்தது? அப்போதும் மொத்தத்தில் 56 மொழிகள் இருந்திருக்கும். நாளாக நாளாக ஒரு தேசத்தார் மற்றொரு தேசத்தின்மீது ஆதிக்கம் செலுத்தும் போதுதான் அன்னிய மொழி புகுத்தப்பட்டுவிடுகிறது. அந்த முறையிலேயே இன்று இந்தியைத் தமிழ்நாட்டில் புகுத்தப் பார்ப்பது தமிழனல்லாத அன்னிய வகுப்பான் இன்று தமிழ்நாட்டில் ஆதிக்கம் பெற்றுவிட்டதினாலேயே ஒழிய வேறில்லை.

ஒரு பொது மொழி தேர்ந்தெடுக்க மெஜாரிட்டி பலமே போதுமானதாகுமா? மொழி எதற்காக வேண்டும்? பேசுவதற்கு மாத்திரம்தானா? புதிதாக ஒரு மொழியைத் தேர்ந்தெடுப்பதினால் அந்த மொழி பழையது என்றோ, வெகுபேர் பேசுகிறார்கள் என்றோ காரணம் சொல்லித் தெரிந்தெடுப்பது அறிவுடைமையாகாது. அந்த மொழியால் தேச மக்களுக்கு ஏற்படும் பயன் என்ன என்று பார்க்கவேண்டும். புது அறிவு உண்டாகுமா? ஆராய்ச்சிக்குப் பயன்படுமா? முற்போக்கிற்கும் நாகரிகத்துக்கும் பயன்படுமா? சீர்திருத்தத்திற்கு ஏற்றதா, என்றெல்லாம் பார்க்கவேண்டாமா? இவர்கள் சொல்லும் 'இந்தி' எதற்காகப் பயன்படும்? தோழர் இராஜகோபாலாச்சாரியாரும்—அதாவது இந்தியைப் பொதுமொழி ஆக்கவேண்டும் என்று சொல்கிறவரும் அவரது சகாக்களும், 'இந்தியால் துளசிதாஸ் இராமாயணம் படிக்கலாம், சமஸ்கிருதம் சுலபத்தில் தெரிந்து கொள்ளலாம், இந்துமத சாஸ்திரம் உணரலாம்' என்றெல்லாம் சொல்லுகின்றனர். ஆகவே, இந்தி மூலம் மோட்சத்திற்குப் போவதற்கு அனுகூலமாக—ஆத்மார்த்த விஷயங்கள் என்பதற்கு அனுகூலமாகக் காரணம் சொல்லுகிறார்களே ஒழிய, இந்த உலக வழிக்கான காரணம் எதுவும் இந்தியில் இருப்பதாகச் சொல்லவே இல்லை. இராமாயணத்திலும், பாரதத்திலும், 'ஆகாயன விமானம்' இருக்கிறது; ஆனால், அது மந்திர சக்தியில் ஓடி இருக்கிறது. இங்கிலீஷில் 'ஆகாய விமானம்' இருக்கிறது; அது இயந்திர சக்தியில் ஓடுகிறது. நமக்கு எதுவேண்டும்? மந்திர சக்தியா? இயந்திர சக்தியா?

[ஈரோட்டில், 19-9-1937-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 26-9-1937]

## 3. இந்தி—இந்தியப் பொதுமொழியா?

இம் மாகாணத்திலுள்ள 600 உயர்தரப் பள்ளிக்கூடங்களிலும் இந்தியை இஷ்டப் பாடமாக வைப்பதாக, காங்கிரஸ் சர்க்கார் முடிவு செய்துவிட்டனர். தோழர் காந்தியார் தமது தினசரி வழிபாட்டுக் கூட்டங்களில் இந்தியிலேயே பேசுகிறார்! தோழர் நேரு மந்திரி பதவி ஏற்றவுடன், முதன்முதலில் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் இந்தியிலேயே பேசினாராம்!

இந்தியை இந்தியாவின் பொதுமொழியாக ஆக்குவதற்காகக் காங்கிரஸ் கட்சி முனைந்து நிற்கிறது. இதற்காகத் 'தேசபக்தி' உணர்ச்சியையும், 'மகாத்மா' தன்மையையும் மூலதனமாக வைத்துப் பெருமுயற்சி செய்யப்பட்டு வருகிறது.

மாகாணங்கள் மொழிவாரியாகப் பிரிக்கப்பட்டு, மாகாண சுயாட்சி முறையும் ஏற்படுவது நிச்சயமாயிருக்கும்போது, 'இந்தியாவுக்குப் பொதுமொழி ஒன்று அவசியந்

www.thamizham.net - Free E book No 3041

தான்' என்பதே விவாதத்திற்குரிய விஷயம். தென்னிந்தியாவுக்கு வியாபாரத்திற்கும், வேறு வேலைகளுக்கும் வருகின்ற வடநாட்டார் எவ்வாறு தென்னிந்திய மொழிகளைக் கற்றுக்கொள்கிறார்களோ அதேபோல், வடநாட்டுடன் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டிய திராவிடர்களும், அங்கே வேலைக்குச் செல்ல வேண்டியவர்களும் இந்தியைக் கற்றுக்கொண்டாலே போதும்.

இதைத்தவிர, உலக மொழியாகிய ஆங்கிலத்தை அறவே ஒழிப்பதென்பது முடியவே முடியாது. அப்படி ஒழித்தால், நாம் உலகிலேயே மிகப்பிற்போக்கான மனித சமுதாயமாகி விடுவோம் என்பது முக்காலும் உறுதி.

ஏனெனில், உலகில் சுமார் 26 கோடி மக்கள், அதாவது உலக மக்களில் எட்டில் ஒரு பங்குப் பேர் ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கின்றனர்; உலகிலுள்ள பத்திரிகைகளில் சரிபாதிக்கு மேற்பட்டவை ஆங்கிலத்தில் வெளிவருகின்றன; உலகிலுள்ள ரேடியோ நிலையங்களில் 5-ல் 3 பங்குக்குமேல் ஆங்கிலத்தில் செய்திகள் ஒலிபரப்பப் படுகின்றன. இதைத்தவிர, ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்டிராத பல இலட்சக் கணக்கான மக்கள் அறிவு, ஆராய்ச்சி, இலக்கியம், விஞ்ஞானம் ஆகிய துறைகளில் விரைவில் முன்னேறுவதற்காக ஆங்கிலத்தைப் பயின்றுவருகின்றனர்.

எனவே, ஆங்கிலத்தை அறவே புறக்கணிக்க முடியாதென்பது நிச்சயம். உலக மொழியாகிய ஆங்கிலத்துடன் இந்தியப் பொதுமொழி என்று கூறப்படும் இந்தியையும் கற்றுக்கொண்டு, அவர்கள் தாய்மொழியையும் கற்கவேண்டுமென்றால், மொழிகளைத் தவிர்த்த, இதர கலை நுணுக்கங்களைக் கற்றுத் தேர்ந்து வாழ்க்கைக்குப் பயன்படுத்துவது முடியக்கூடிய காரியமா? யோசித்துப் பாருங்கள்!

அதுமட்டுமல்ல; இந்தி இந்தியாவின் பொது மொழியென்பதை 10 கோடி முஸ்லிம்கள் ஒப்புக்கொள்வதில்லை. உருது மொழி இந் நாட்டில் ஏற்பட்டு 1000-ஆண்டுகள் ஆகி விட்டன. இதை ஒழிப்பதற்காகத் தோழர் காந்தியாரும், பிறரும் புகுத்த முயற்சிக்கும் இந்தி அல்லது இந்துஸ்தானி 19-வது நூற்றாண்டுக்கு முன்பு இந்தியாவில் இருந்ததே இல்லை. கல்கத்தாவிலுள்ள போர்ட் வில்லியம் கல்லூரியைத் தொடங்கியவர்கள்—உருது வுக்கு எதிராக உண்டாக்கிய மொழியே 'இந்தி' ஆகும்.

இந்தியாவின் ஒரு பகுதியில் பேசப்படும் இந்தி—மற்றொரு பகுதியிலுள்ள மக்களுக்குப் புரிவதில்லை. ஐக்கிய மாகாணத்தில் தவிர, வேறெந்த மாகாணத்திலும் பெரும்பான்மை மக்கள் இந்தி பேசுவதேயில்லை. அங்குங்கூட 70 இலட்சம் முஸ்லிம்கள் 'இந்துஸ்தானி' பேசுகிறார்களே தவிர, 'இந்தி' பேசுவதில்லை. 'மேற்கு இந்தி', 'கிழக்கு இந்தி', 'பீகாரி' ஆகிய மொழிகளையெல்லாம் இந்தி என்ற பிரிவில் சேர்த்தால் கூட பீகார், ஒரிஸ்ஸா, டில்லி, ஐக்கிய மாகாணம்—ஆகிய பகுதிகளைத்தவிர இதர மாகாணங்களில் இந்தி பேசுகிறவர்களின் தொகை மிகமிக அற்பமானது என்று ஜனகணித அறிக்கையில் கூறியிருப்பதை இந்துஸ்தானியர்கள் உணரவேண்டும்.

பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், வங்காளம் ஆகிய மாகாணங்களில் ஆயிரத்தில் ஒருவர்கூட இந்தி பேசுவதில்லை. அஸ்ஸாமில் 100-க்கு 3 பேரும், பம்பாயில் 100-க்கு 2 பேரும் மத்திய மாகாணத்தில் 100-க்கு 20 பேருமே இந்தி பேசுகின்றனர். இன்னும் கேளுங்கள். வங்காளத்தில் 92 சதவிகித மக்கள் வங்காள மொழியைப் பேசு கின்றனர்; பஞ்சாப்பில் 100-க்கு 77 பேர்கள் பஞ்சாபி மொழியைத் தாய் மொழியாகப் பேசு கின்றனர். நம் மாகாணத்திலோ 100-க்கு 40 பேர் தமிழையும், 100-க்கு 38 பேர் தெலுங் கையும் தாய் மொழிகளாகப் பேசுகின்றனர். பம்பாய் மாகாணத்தில் 42 சதவிகிதம் மக்கள் மராத்தி பேசுகின்றனர்; 19 சதவிகிதம் குஜராத்தி பேசுகின்றனர்; 13 சதவிகிதம் 'சிந்தி' மொழி பேசுகின்றனர்; 12 சதவிகிதம் கன்னடம் பேசுகின்றனர்.

www.thamizham.net - Free E book No 3041

ஆகவே, இலக்கியத் துறையில் இந்தியையோ, தோழர் காந்தியாரின் புதுப் பெயரைக் கொண்ட 'இந்துஸ்தானியையோ' தாய் மொழியாகக் கொள்ளக் கூடியவர்கள் இந்தியாவில் எத்தனை ஆயிரம் பேர் இருக்க முடியும் என்பதை வாசகர்களே முடிவு செய்து கொள்ள வேண்டுகிறோம்.

இந்த நிலைமையில் வங்காளிகளும், பஞ்சாபியரும், பம்பாய் மாகாணத்தாரும் 'இந்தி'யைப்பற்றிக் கவலைப்படாமல் இருக்கும்போது, இந்த மாகாணத்தில்மட்டும் இந்தியின் மீது தனிக் காதல் பிறக்கக் காரணமென்ன? கவனியுங்கள்!

திராவிடர்களின் ஏமாந்த தனமும், இங்குள்ள காங்கிரஸ்காரரின் வடநாட்டு அடிமைப் புத்தியும் ஒரு காரணம். காங்கிரஸ் இயக்கத்தை இங்கு நடத்திவரும் ஆரியர், 'இந்தி'யை நுழைப்பதன்மூலம், அதன் மூலமொழியாகிய சமஸ்கிருதத்தைப் பிழைக்கவைக்கலாம் (அதாவது தமிழைக் கொல்லலாம்) என்று கொண்டிருக்கும் ஆசை மற்றொரு காரணம்.

ஆகவே, இந்தியின் பெயரால் என்னென்ன பொய்க் கணக்குகள் கூறப்படுகின்றன என்பதையும்; காங்கிரசிலுள்ள திராவிடத் தோழர்கள் தோழர் காந்தியின் ஏமாற்றுப் புள்ளிகளைக் கண்டு மயங்கி விடக்கூடாது என்பதையும் வற்புறுத்துவதற்காகவே இதை எழுதுகிறோம்.

['விடுதலை'-தலையங்கம்—20-9-1946]

## 4. வடவர் மொழி நமக்கு வேண்டாம்

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

முற்காலப் புலவர்களுக்கும், இக்காலப் புலவர்களுக்கும் இடையே கால மாறுதலால் எவ்வளவோ வேற்றுமைகளைக் காண்கிறோம். எங்களைப் பொறுத்தவரை அல்லது எங்களது இயக்கத்தைப் பொறுத்தவரை பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் தமிழ்ப் புலவர்கள் என்ன கருத்தைக் கொண்டிருந்தார்கள் என்பதை நான் கூறத் தேவையில்லை. இங்கு நான் பேசும் இதே சமயத்தில் முற்காலப் புலவர்களா யிருப்பார்களேயானால் நேரடியாக எழுந்து நின்று சபிக்காவிட்டாலும் மனத்துக்குள்ளாகவாவது—'இவன் நாசமாகப் போகமாட்டானா!' என்றுதான் வைவார்கள். அது அவர்கள் குற்றமல்ல. அக்கால நிலையும், அவரவர்கள் மனத்திலும், புத்தியிலும் புகுத்தப்பட்ட பொது அறிவும்தான் காரணம்.

ஆனால், இக்காலத் தமிழ் ஆசிரியர்கள், பெரும்பாலும் இன்றைய அறிவு வளர்ச்சிக்கு ஒத்து நடப்பவர்கள். இன்னும் கூறவேண்டுமானால், இப் புலவர்கள் 100-க்கு 90 பேர்கள் சுயமரியாதை இயக்க உணர்ச்சி கொண்டவர்கள் என்றும் கூறுவேன். அந்த நிலைக்குத் தமிழாசிரியர்களின் தொண்டு மேலும் மேலும் வளர்ந்திருக்கிறது. இனி இவர்கள் ஆங்கிலப் புலவர்கள் ஷேக்ஸ்பியர், பெர்னாட் ஷா ஆகியோர் போல் புத்துலகைச் சிருஷ்டிப்பார்கள் என்பதில் எனக்கு அய்யமில்லை. என் வாழ்நாளில் இதுவும் ஒரு அற்புதமாகும்.

இந்தியால் தமிழ் கெட்டுவிடும் என்றே நான் வருத்தப்படவில்லை. இந்தியால் மட்டுமல்ல; மற்றும் வேறெந்த மொழியாலும் நமது மொழியைப் பொறுத்தவரை கெட்டு விடாது. ஆனால், இந்தியால் நமது கலாச்சாரம் அடியோடு அழிந்துவிடும். இப்போதே, வடமொழி நம்நாட்டில் புகுந்து, நமது கலாச்சாரம் எவ்வளவு கெட்டுவிட்டது! அதற்காகவே, நாம் இந்தியை எதிர்த்துப் போராடவேண்டி ஏற்பட்டது. ஒரு மொழி ஒரு மக்களிடையில் புகுந்தால், கண்டிப்பாய் அதற்கு நல்ல பலனோ, கெட்ட பலனோ உண்டு. தமிழ்ப் புலவர்கள் தமிழைச் சாகாமல் காப்பாற்றும் பணியில் இனி இருப்பதைவிட, தமிழை வளர்க்கும் தொண்டில் ஈடுபடுதல் வேண்டும். தமிழை வளர்ப்பதென்றால், புராணக் கதைகளைப் பிரச்சாரம் செய்வதல்ல; அவற்றை மக்களுக்குப் போதிப்பதல்ல. தமிழ்

www.thamizham.net - Free E book No 3041

மொழியை விஞ்ஞானத் துறையில் புகுத்தி, தமிழ்மொழி கற்பதின் மூலமாகப் புதிய உலகைக் காணும் வழிவகுத்தல் வேண்டும். இன்று உலகில் அவ்விதத் தன்மையுடைய மொழி நமக்கு ஆங்கிலம் ஒன்றைத் தவிர வேறில்லை என்றே கூறுவேன்.

காலையில் நான் இம் மாநாட்டுத் தலைவரை ஆதரித்துப் பேசுகையில், 'தமிழை விட ஆங்கிலத்தைக் கட்டாய பாடமாக்கினால் அதற்கு ஓட்டுக் கொடுப்பேன்' என்று கூறினேன். சிலர் அதைப்பற்றித் தவறாகவும் எண்ணியிருப்பார்கள். குறிப்பாக ம. பொ. சிவஞானம் அவர்கள், 'பெரியார் மந்திரியானால் அவ்விதம் செய்யமாட்டார்; ஏதோ பேச்சுக்கு அவ்வாறு கூறினார்' என்று தனது அதிருப்தியைக் காட்டினார். நான் இன்னும் கூறுகிறேன்; ஆங்கிலத்தை நாம் வெறுக்கும் புத்தியை வளர்ப்போமேயானால் விரைவில் நாம் என்றுமே உண்மை விடுதலையடைய முடியாத அடிமைகளாகவே இருக்க நேரிடும்.

ஆங்கிலம், ஆங்கிலப் பண்பு இல்லாவிட்டால் அரசியல் விடுதலை ஏது? மந்திரிகள் ஏது? இன்றைய விஞ்ஞான வளர்ச்சி, ஞானம், அற்புத அதிசயங்கள், அனுபவங்கள் ஏது? இதை இன்று மந்திரிகள் உணர்ந்து ஆங்கிலத்தைத் திரும்பவும் சேர்த்துக்கொண்டார்கள். சென்னைக்குவந்து திரும்பிச் சென்ற பண்டித நேரு அவர்களும் ஆங்கிலத்தின் அவசியத்தையும் அதனால் பல நன்மைகளை எதிர்காலத்தில் அடைய இருப்பதால் அதை வெறுக்கும் மனப்பான்மை கூடாதென்பதையும் பம்பாய் மந்திரிகளுக்கே உபதேசம் செய்திருக்கிறார். வடநாட்டுக் காங்கிரஸ்காரர்களுக்கு இந்தப் புத்தி. ஆனால் நம் நாட்டுக் காங்கிரஸ்காரர்களுக்கோ எனின்—அதற்கு நேர்மாறான பழைய விரும்பிகளாயிருக்கின்றனர். இது ஒழுங்காகுமா என்று கேட்கிறேன். நாம் நம் நாட்டைவிட்டு வடக்கே போனால் மலைப் பிரதேசம்தான் காணவேண்டும்; காட்டுமிராண்டித்தனம்தான் கற்க வேண்டும். ஆனதால், நாம் கற்றுக்கொள்ள ஏதாவது உண்டு என்றால், அது நமது மேற்கிலும், கிழக்கிலும்தான் உண்டு. ஆங்கில மோகத்தால் நான் அதை ஆதரிக்கவில்லை. அவ்விதமானால், ஆங்கிலத்தையே வேரறுக்கும் வீரர்களான பண்டிதர் போன்றோர் இன்றைய நிலையிலும் ஆங்கிலத்தின் மேன்மையை ஏன் எடுத்துக் கூறவேண்டும்? அதுமட்டுமல்ல, சென்னை அரசியலார்தான் ஆங்கிலத்திற்கு நான்கு பீரியட் (Period) என்று ஏன் ஒதுக்கவேண்டும்? இரண்டு ஆண்டுகளுக்கு முன் ஆங்கிலத்தை வெறுத்த அவிநாசியார் இன்றும் ஏன் அதை ஆலிங்கனம் செய்யவேண்டும்? இது ஆங்கிலத்தின் மேன்மையை உணர்ந்ததாலல்லவா?

ஆங்கிலம் உலகமொழி என்பதை யாவரும் ஒப்புக்கொண்டாகிவிட்டது. 150 மைல் கடற்கரையுள்ள நாட்டினராகிய நாம்—உலக மொழியைக் கற்று ஏற்கவும் தகுதியும், அவசியமும் உடையவர்கள் அல்லவா? எனவே, நான் ஆங்கில மொழியின் அவசியத்தைப் பற்றி வற்புறுத்திக் கூறுவதைப் பழைமை விரும்பிகளான காங்கிரசார் தவறாகக் கருதுவதில் அதிசயமில்லை. அதனால் நான் தமிழ்மொழியை இகழ்வதாகவும் கருதக்கூடாது. ஆங்கிலத்தில் விஞ்ஞான அறிவு அறவே கலந்துவிட்டது; புதிய உலகுக்கான வழிவகைகள் அதில்தான் மலிந்து கிடக்கின்றன. இதை எவரும் மறுக்கமுடியாது. ஆங்கில ஏகாதிபத்திய முறையை நாம் வெறுக்கும் மனப்பான்மை கொண்டிருந்தோமேயன்றி, ஆங்கிலமொழியை வெறுப்பதென்பதல்ல. வடநாட்டு இந்திமொழியைக் கூட நாம் வெறுப்பது—வடநாட்டவர்களின் ஆதிக்கம் மீதுள்ள வெறுப்பால் என்று எவரும் கருதக்கூடாது. அம்மொழியிலிருந்து மக்களின் நல்வாழ்வுக்காகத் தெரிந்துகொள்ளக்கூடிய ஒரு சிறு எடுத்துக்காட்டாகிலும்—தமிழில் இல்லாத எதையாகிலும் இந்தியில் காட்டமுடியுமா? கூறமுடியுமா? நான் ஏன் இதைக் கூறுகிறேன் என்றால், காங்கிரஸ் ஏடுகள்—'இத்தனை காலம் ஆங்கில மொழிக்கு அடிமையாக இருந்து வந்த வீரர்கள், இன்று இந்தியை எதிர்க்கிறார்கள்—வெட்கமற்றவர்கள்' என்று எழுதி என்னைக் கேலி செய்தனர். அதற்காக இதைச் சொல்லுகிறேன். நாம் ஆங்கிலம் கற்காவிட்டால் உலக மக்களோடு கலந்து வாழ முடியுமா? ஏன்? அம்

www.thamizham.net - Free E book No 3041

மொழியின் ஆற்றல் அவ்வளவு! ஆங்கிலம் கற்றதினால்—பல நிபுணர்கள், அறிஞர்கள் புத்துலகச் சிற்பிகள் தோன்றினார்கள். நாம் சரித்திர வாயிலாக இன்றும் நேரடியாகக் காண்கிறோம். ஆனால், இந்தி மொழி கற்றவர்களில் எவர் அறிஞராய்–முற்போக்குடை யோராய்த் திகழ்கின்றனர் என்று கேட்கிறேன். மத வெறி பிடித்த பழைமை விரும்பி களாகத்தான் இருக்கிறார்களேயன்றி வேறில்லை. இன்னும் கூறவேண்டுமானால், அம் மொழி காந்தியாரைக் கொன்ற கோட்ஸேக்களைத்தான் உற்பத்தி செய்திருக்கிறது. நான் ஒரு மொழியை வெறுப்பதோ, வரவேற்பதோ, அந்தந்த நாட்டுக்காரன் என்ற உணர்ச்சி யாலல்ல. அம் மொழியைக் கற்றால் மக்கள் சமுதாயத்திற்கு என்ன பலன் ஏற்படும்; என்ன இலாபம் கிடைக்கும் என்பதையே முக்கியமாகக் கருதுபவன். நான் ஒரு பகுத்தறிவு வாதி; நிபந்தனையற்ற முற்போக்கு வாதி. அந்த நிலையிலிருந்துதான் நான் ஆங்கிலத்தைப் பற்றி என் உள்ளக் கிடக்கையை ஒளிவு மறைவின்றிக் கூறினேன்; நீங்கள் ஏற்கவேண்டு மென்றல்ல; சிந்திக்க வேண்டும் என்பதற்காக. நம் நாட்டைப் பொறுத்த வரை நம் தமிழ் மொழியையும், இனிப் புலவர் பெருமக்கள், ஆங்கிலப் புலவர்கள்போல், முற்போக்குப் படைத்த அறிவுக்கண் கொண்டு வளர்க்கவேண்டும். மதம், சமுதாயம், நாடு என்பவைகள் பற்றிய பழைமையை மறக்கவேண்டும். பழைமையில் சிக்கிக் கிடக்கும் ஒரு சில பண்டிதர் களுக்கும் இதை நினைவூட்டுகிறேன். பழைமைக்காக நாம் வாழவில்லை. பழமையைத் தேடவோ இறுக்கிப் பிடிக்கவோ ஏற்பட்டதல்ல, நம் அறிவு.

நம் நாடு அமெரிக்கா போல், அய்ரோப்பா போல், ரஷ்யா போல், ஜப்பான் போல் ஆக வேண்டும். ஒருவருக்கு 18 மொழிகள் தெரியும் என்ற பெருமையைவிட, நம் நாட்டு மொழியும், உலக மொழியும் தெரிந்திருந்தாலே போதுமானது என்று நான் கூறுவேன். 18 மொழிகள் பயின்ற பெருமையினால் மக்களுக்கு லாபம் என்ன? அஷ்டாவதானம், சதாவதானம் போல்—படித்தவனுக்குப் பெருமையே தவிர, யாருக்கு லாபம்? சமுதா யத்துக்கும் நாட்டுக்கும் இலாபம் என்ன? அதைக் கவனித்தே நாம் மொழி விவகாரங்களில் கவலை செலுத்த வேண்டும். வடநாட்டு மொழியால்தான் இந்நாட்டில் வர்ணம், சாதி, சாதி உயர்வு–தாழ்வு, பெண் அடிமை, திதி, திவசம், கன்னியாதானம், கருமாதி, பூசுரர்– வான்சுரர், மோட்சலோகம்–நரகலோகம் முதலியன உண்டாயின; தமிழினால், ஆங்கிலத் தால் அல்ல. இன்னும் கூறுவேன்: ஆங்கிலத்தில்—வாடி, போடி, வாடா, போடா, டேய்—என்றிருக்கிறதா? நம் தமிழில் மட்டும் ஏன் அவ்வாறு இழித்துக்கூறும் பதங்கள் இருக்கவேண்டும்? ஆங்கிலத்தில் 'தேவடியாள்' என்ற சாதி இருக்கிறதா? பிராமணன்— சூத்திரன் என்ற வார்த்தைகள் இருக்கின்றனவா? 'விபச்சாரி' என்று ஒன்று இருக்கும். ஆனால், தமிழில் தேவடியாள் முதலிய வார்த்தைகள் இருக்கின்றன. இவைகளையெல்லாம் நாளடைவில் ஒழித்து, தமிழை மேலும் வளர்க்கும் வேலையையே புலவர்கள் செய்தல் வேண்டும். தமிழைக் காப்பாற்றும் வேலையிலேயே நாம் இன்னுமா இருப்பது? அதிலுள்ள பழைமைகளையும், புகுந்த இழிவு, பேதம் கற்பிக்கும் மொழிகளையும் நீக்கி வளர்த்தல் வேண்டாமா? இந்தக் காரியத்தைச் செய்வதைவிட, புலவர்களுக்கு வேறு முக்கிய காரியம் இருக்க முடியுமா? புலவர்கள் மக்களுக்கு வழிகாட்டிகளாக—புதிய உலகை உண்டாக்குபவர்களாக—விஞ்ஞானப் பொக்கிஷங்களாக ஆகவேண்டும். இன்றையப் புலவர்களைக் காணும்போது அவர்கள் இந்நாட்டு மாணிக்கங்களாகக் காணப்படுகிறார்கள். சீக்கிரத்தில் நாடு புலவர்களின் கைக்கு வரலாம் என்று தோன்றுகிறது. தமிழர், ஆந்திரர், கன்னடியர், மலையாளி என்று நமக்குள் பிரிந்து நிற்கும் வேலையைச் சிலர் மேற் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் தனிப்பட்ட சுயநலம், பதவிப் பித்து தவிர வேறு எந்த ஆதாரத்தைக்கொண்டு ஆந்திரம், கேரளம், கன்னடத்தைத் தமிழ்நாடு அல்ல என்று கூறு கிறார்கள்? அவ்வாறு கூறுவதற்குச் சிறிதாவது ஆதாரமிருக்கிறதா? மொழித் தத்துவமோ, நாட்டுச் சரித்திரமோ தெரிந்தால்—ஒரு தலையற்ற முண்டம்கூடப் பேதம் காணவோ, கூறவோ முடியாது. இந் நான்கும் தனித் தனியாகப் பிரிந்து நின்றால் தமிழ் நாட்டின் நிலை என்னாகும் என்று சற்றாவது சிந்தித்தார்களா? தெலுங்கு, தமிழ் வெறி - பதவி

www.thamizham.net - Free E book No 3041

வெறியாகுமேயன்றி மக்களின் நன்மைக்காக இதன் மூலம் ஒரு சிறு காரியமும் செய்ய முடியாது. ஆந்திர–கேரள–கர்நாடகத்தை ஆரியம் உட்கொண்டது என்பதை வெளிப் படையாகத் தெரிந்திருந்தும், அதை அவர்களிடமிருந்து மீட்க வகையற்றவர்கள், தமிழர்—தெலுங்கர், கன்னடர், மலையாளிகள் என்ற வேற்றுமையை வளர்ப்பதா என்று கேட்கிறேன். 4 கோடி மக்களுக்கு மேற்பட்டவர்கள் பேசிவந்த தமிழ் மொழி, இன்று 2½ கோடிக்கும் கீழாகப் பேசப்பட்டுவருகிறது. இன்று நமக்குள் இவ்வாறே பிரிந்து, பிரிந்து நின்றால், தமிழ்மொழியைப் பேசும் மக்களின் எண்ணிக்கையும் தமிழ் நாட்டின் நிலப் பரப்பும் எங்குபோய் முடியும் என்பதையாவது சிந்தித்துப் பேசுகின்றனரா?

நாடு, மக்கள் குறைந்தால் கவலை இல்லை என்பதை ஒப்புக்கொள்ளலாம். ஆனால் நம்மைச் சுற்றிலும்—தமிழ்நாட்டைச் சுற்றிலும் நம் எதிரிகளை வைப்பதா? தெற்கும், மேற்கும், வடக்கும் நம் எதிரிகள் நாடு ஆகிவிட்டதா? இதைச் சம்மதிக்கலாமா? எனவே, ஆந்திரமும், கன்னடமும், மலையாளப் பகுதிகளும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவையே யாகும்; மொழிப்படி, சரித்திரப்படிச் சேர்ந்தவையேயாகும். அதாவது, திராவிடநாடு என்றோ, தென்னாடு (தக்ஷிணம்) என்றோ நாம் கூறிவருவதன் கருத்தும் அதுவேயாகும். வடமொழியால் பலவற்றாலும் பிரிந்து அடிமைப்பட்டுள்ள நாம்—தமிழர், தெலுங்கர், கன்னடர், மலையாளி என்ற வேறுபாட்டாலும்—இந்தி மொழி நுழைவாலும் காஷ்மீரப் பார்ப்பனர் ஆட்சிக்கு அடிமைப்படும் இழிந்த தன்மையை அடைதல் கூடாது.

சென்னை யாருடையது என்பதற்கு, பதில்—ஆந்திரம் யாருடையது? கர்நாடகம் யாருடையது? கேரளம் யாருடையது?–என்பதுதான் பதில். வடநாட்டான் ஆதிக்க ஒழிப்பே இந்தி எதிர்ப்புப் போராட்டமாகும். வட நாட்டான் ஆதிக்கத்தில் யார் மந்திரியானாலும், நமக்கும் நம் நாட்டுக்கும் நன்மை ஏற்படாது. சென்னை மந்திரிகள் மீது நமக்கு வெறுப் பில்லை. அம் மந்திரி பதவி மூலம் வட நாட்டுக்கு அடிமைப்பட்டு, நம்மை—நமது நாட்டைச் சீரழிக்கும், காட்டிக் கொடுக்கும் செய்கைமீதே நமக்குள்ள வெறுப்பு. அதுவே இன்றையப் போராட்டம். விளக்கமாகக் கூற வேண்டுமானால்—சென்னை மந்திரி சபையின் அடிமைத் தனத்தை ஒழிக்கவே—வட நாட்டான் நம்மை அடிமைப்படுத்தி வைத்திருப்பதிலிருந்து விடுதலை பெறவே இன்று ஆரம்பித்துள்ள அறப் போரே யன்றி, மந்திரிகளை ஒழிப்ப தென்பதல்ல. வடநாட்டுச் சுரண்டல் ஒழிப்பு என்றும் சொல்லுவேன்.

[சென்னையில், 14-8-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 15-8-1948]

## 5. இந்தி–தேசிய மொழியா?

முதலாவது, இந்தி தேசிய மொழி என்பதைத் திராவிடர் கழகமும் நானும் அல்லாமல் வேறு யாரும் இதுவரை மறுக்கவே இல்லை என்பதைப் பொதுமக்கள் கவனத்திற்குக் கொண்டுவருகின்றேன். நம்முடைய தேசம் (நாடு) எது? நம் தேச மொழி எது? இந்தி எப்படி நமக்குத் தேசிய மொழியாகும்?

எத்தனையோ மூடர்கள், 'இந்தியா' என்பதை நமது தேசம் என்று கருதிக் கொண் டிருக்கிறார்கள் என்பதோடு வாயாலும் சொல்லுகிறார்கள்.

இந்தியா என்பதையும், 'பல தேசங்கள் (நாடுகள்) சேர்ந்த ஒரு கூட்டு'—அதாவது 'பல தேசங்களை உடைய' என்பதாக இல்லாமல் 'பல தேசங்கள் சேர்ந்த' என்று தான் அரசியல் சட்டமும் கூறுகிறது.

அப்படி இருக்க, இந்த சென்னை தேசத்தை (திராவிட தேசத்தை) எந்த முறையில் இந்தியாவுக்கு உடைய தேசம் என்று சொல்ல முடியும்? சென்னை (திராவிட) தேசத்திற்குத் தனி எல்லை, தனி கலாச்சாரம், தனி மொழி, தனித்து இயங்கிய சரித்திரம் முதலியவைகள் இருக்கும் போது—சென்னை இராஜ்யத்திற்கு இந்தி மொழி எப்படித் தேசிய மொழியாக

www.thamizham.net - Free E book No 3041

இருக்கமுடியும்? எதற்காக சென்னை தேசத்தார் இந்தியைத் தேசிய மொழியாகக் கொள்ள வேண்டியதாகும்?

ஆகவே, யூனியன் ஆட்சியானது சென்னை இராஜ்யத்தைத் தனக்கு நிரந்தர அடிமையாக்கி வைத்துக்கொண்டு இருப்பதற்காகவும், இந்த இராஜ்யத்தில் அன்னியனைக் கொண்டு வந்து ஏராளமாகக் குடியேற்றி—தென் ஆப்பிரிக்காவில் வெள்ளையர் குடியேறி சுதேசிகளை அடிமையாக நடத்துவதுபோல் நடத்திப் பயன்பெறுவதற்காகவும், செய்யப்படுகிற சூழ்ச்சியே இது. ஆனதினால், இந்தியை எதிர்த்து ஒழிக்கவேண்டியது, ஓட்ட வேண்டியது—சென்னை தேசத்தாருக்கு அவசியமாகிறது. அதற்காகவே முக்கியமாக ஆகஸ்ட் கிளர்ச்சி துவக்கப்படுகிறது.

['விடுதலை'-தலையங்கம்—23-7-1952]

திராவிட நாட்டில் சுமார் 200 ஆண்டுகளாக ஆங்கிலம் 'அரசியல் மொழியாக' இருந்ததே தவிர, ஆங்கிலம் 'தேசிய மொழியாக' ஒருநாளும் இருக்கவில்லை. ஆங்கிலம் அரசியல் மொழியாக இருந்ததற்குக்கூடக் காரணம் என்னவென்றால், ஆங்கில ஆட்சி அன்னிய ஆட்சியாக இருந்ததலும், ஆங்கிலேயன் திராவிட நாட்டவன் அல்லாதவனாக இருந்தலுமேயாகும். அதாவது, அன்னியன் ஆட்சியில் அன்னியனுக்கு வசதியாக இருக்க வேண்டும் என்பதற்காகவும், மொழிச் சாக்கின் மூலம் தன் இஷ்டப்படி ஆட்களைப் பொறுக்கி எடுத்து, தன் இஷ்டப்படி அடிமையாக்கி, அவர்களைக்கொண்டு அன்னிய ஆட்சி நடத்திக்கொள்ளவும் செய்துகொண்ட காரியமாகும்.

இப்போது அன்னியன் 'ஒழிந்துவிட்டான்' என்று ஆகிவிட்டது. இந்த நிலையில் ஒரு நாட்டானுக்கு—ஒரு இராஜ்யத்தானுக்கு (நாடு என்பதையும் இராஜ்யம் என்பதையும் தான் வடமொழியில் தேசம் என்று சொல்லப்படுகிறதே ஒழிய, நாடு வேறு-தேசம் வேறு என்று சொல்லுவதற்குத் தனித் தனிப் பொருள்—அர்த்தம் இல்லை) திராவிட தேசத்தானுக்கு (திராவிட தேசம் என்ற சொல் இராமாயணம், பாரதம், பாகவதம், மனுநூல் முதலியவைகளில் இன்றும் காணலாம்) எதற்காகக் கட்டாய மொழியாக—தேசிய மொழியாக இந்தி (அன்னிய மொழி) இருக்கவேண்டும்?

தேசிய மொழி என்றால், 'தேச மொழி' என்றுதானே அர்த்தம்? அன்றியும் திராவிட (சென்னை) தேசத்தானுக்கு அன்னிய தேச மொழியாகிய இந்தி எதற்காக அரசியல் மொழியாக இருக்கவேண்டும்? ஒரு நாடு சுதந்திரமடைந்துவிட்டது; பூரண சுயேச்சை அடைந்துவிட்டது என்றால் அந்த நாட்டில் அன்னிய மொழி தேசிய மொழியாகவும், அன்னிய மொழி அரசியல் மொழியாகவும் இருப்பதுதானா என்று சுயேச்சை சென்னை வாசிகளை, சுயேச்சை திராவிட மக்களைக் கேட்கிறேன்? 'எனது நாடு இந்தியா' என்றால், 'எனது நாட்டு மொழி இந்தி' என்றால்—எனது நாடு திராவிடம், எனது மொழி திராவிட மொழி என்பது என்ன ஆயிற்று? என்ன ஆவது? திராவிடன்-சென்னை இராஜ்யத்தான் நாடு, மொழி அற்ற அவ்வளவு மானங்கெட்டவனா? அவ்வளவு இழிமகனா?

திராவிடம் தனி தேசம். 'இந்திய' உபகண்டத்தின் 56 தேசங்களில் ஒரு தேசமாக 2000 ஆண்டுகளுக்கு முந்திய சரித்திரத்திலும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று சொல்லப்படுகிற புராண இதிகாசங்களிலும், மததர்ம நூல்களிலும் சொல்லப்படுவதை இன்றும் காணலாம்.

அது போலவே, இன்றும் மற்றொன்றையும் காணலாம். அது என்னவென்றால், திராவிட மொழி தனிச் செம்மொழி என்பதையும், திராவிட மொழி எந்த மொழியிலும் ஒட்டிச் சார்ந்து இருக்காத ஒரு தனி, தனித்தியங்கும் மொழி என்பதையும் யாரும் மறுக்க முடியாது. அன்றியும், மற்ற தேசத்தார்—ஏன், உலகிலேயே பெரும் பாகத்தார் திராவிட மொழியை ஒட்டவைத்துக் கொண்டு இருக்கிறார்கள் என்பது மாத்திரமல்லாமல் உலகிலுள்ள



www.thamizham.net - Free E book No 3041

எல்லா மொழி ஆராய்ச்சி வல்லுநர்களும் திராவிட மொழி தனித்த மொழி என்றே முடிவு கட்டி இருக்கிறார்கள். 'பரத கண்டம்' என்பதையே எடுத்துக் கொண்டாலும் அதில் வட மொழியும், வடமொழிச் சார்பு மொழியும் ஒன்று; திராவிட (தென்) மொழியும் தென் மொழிச் சார்பு கொண்ட மொழியும் ஒன்று என்பதாக இரண்டே மொழிகள்தாம் இருந்துவருகின்றன.

ஒன்று, இரண்டு, மூன்று என்ற எண்களை எடுத்துக்கொண்டாலும் உலகிலேயே இரண்டு தனிப் பிரிவும் சார்பும்தான் உண்டு. அதாவது, திராவிட மொழி எண் பெயர், வட மொழி எண் பெயர். இப்படியாகத் தனிப் பிரிவினையும், தனி வாழ்வும் தனி மூலத் தத்துவமும் உள்ள திராவிட நாட்டில்—அன்னிய மொழி, ஆதாரமற்ற மொழி–யாருக்குப் பிறந்தது எப்போது பிறந்தது, எதிலிருந்து பிறந்தது, எப்படிப் பிறந்தது என்றுகூடச் சொல்ல முடியாத ஒரு மலைப் பிரதேச மொழியா ஆட்சி புரிவது? அரசியல் மொழி ஆவது? ஒரு லம்பாடி (ஜிப்சி) மொழியா திராவிட தேச (தேசிய) மொழி ஆவது? என்பதைச் சிந்தித்தால், மானமுள்ள, மனிதப் பிறவி என்று தன்னை எண்ணிக்கொண்டு இருக்கிற எவன்தான் ஆகஸ்ட் கிளர்ச்சியை—இந்திப் பெயர் அழிப்பதை அலட்சியமாகக் கருத முடியும்? எவன்தான் குறை சொல்ல முடியும்? எவன்தான் கலந்துகொள்ளாமல் வேடிக்கை பார்க்க முடியும்?

திராவிட நாட்டில் இருக்கும் பார்ப்பனர்கள் அத்தனை பேரும் பித்தலாட்டக்காரர்கள், வஞ்சனைக்காரர்கள்; தமிழுக்கு, தாய்நாட்டு மொழிக்குத் துரோகிகள் என்பதற்கு அவர்கள் 'சுதந்திரம்' வருமுன்பே இந்தியை ஆதரித்ததும், வரவேற்றதும், இந்த நாட்டில் பள்ளிகள் வைத்துப் பரப்பியதும்—அரசியலின் மூலம் இந்திக்கு ஆக்கமும் ஆதரிப்பும் செய்ததான காரியங்களின் மூலமே விளங்கவில்லையா?

ஆச்சாரியார் தன்னைத் தமிழர் 'லிஸ்டில்' சேர்த்துக்கொள்கிறார். அவர் கோஷ்டி பத்திரிகாசிரியர்கள் தங்களைத் தமிழர் கோஷ்டியில் சேர்த்துக்கொள்கிறார்கள். ஒரு காலத்தில், இப்போது அய்க்கோர்ட் ஜட்ஜுகளில் பச்சைப் பார்ப்பனராக இருக்கும் ஜஸ்டிஸ் ஏ. எஸ் பஞ்சாபகேச அய்யர் அவர்கள் என்னைப் பார்த்து, 'நாயக்கரே! நான் ஆரியனா? திராவிடனா? என்னைப் பார்த்துச் சொல்லுங்கள். நீர் என்னையும் ஆரியனில் சேர்த்துக் கொள்ளுகிறீரே!' என்று கேட்டார். காலஞ்சென்ற ஸ்ரீனிவாசய்யங்கார் அவர்களும் அப்படியே கேட்டார். கல்கி கிருஷ்ணமூர்த்தி முதலிய பார்ப்பன ஆசிரியர்களும், 'தமிழ் பேசுபவர்கள் எல்லோரும் தமிழர்கள்' என்று கிளர்ச்சி துவக்கி, தமிழர் மாநாடு கூட்டினார்கள். இந்தக் கூட்டத்தார்தானே இன்று இந்தியைத்.தேசிய (தேச) மொழியாக்கவும், இந்தியை அரசியல் (ஆட்சி) மொழி ஆக்கவும் பாடுபடுகின்றனர்; சூழ்ச்சிகள் பல புரிகின்றனர்; எதிர்ப்புக் கிளர்ச்சியை அடக்க 'அண்டர் கிரவுண்ட்' வேலை செய்கின்றனர்.

கம்யூனிஸ்ட் கட்சியில் பார்ப்பனர் இருந்தாலும், சோஷியலிஸ்ட் கட்சியில் பார்ப்பனர் இருந்தாலும், தமிழ் இலக்கியக் கட்சியில் பார்ப்பனர் இருந்தாலும் இன்னும் எந்தக் கட்சியில்—எந்தக் கூட்டத்தில்—எந்த வேஷத்தில் பார்ப்பனர் இருந்தாலும் எல்லோரும், இந்தியைத் தேசமொழியாக, ஆட்சி மொழியாக இருக்க வரவேற்பார்களே ஒழிய—வரவேற்கிறவர்களாக இருக்கிறார்களே ஒழிய எதிர்ப்பவர்களைக் காண்பது அரிது. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானாலும், பார்ப்பானுக்கு சென்னை இராஜ்யம்—திராவிட தேசம் சொந்த நாடல்ல, தாய் நாடல்ல என்பதோடு—தமிழ் மொழி சொந்த மொழியல்ல, தாய் மொழியும் அல்ல. அது மாத்திரமல்ல; தமிழை 'நீச பாஷை' என்று சொல்லும் 'மகா பாவி'களும் பார்ப்பனர்களில் இன்றும் உண்டு; அதற்கேற்ற ஆதாரங்களும் உண்டு என்று சொல்லவும் கூசமாட்டேன்.

ஆகவே, இந்தி எதிர்ப்பு ஒரு தேசிய (தேச)ப் போராட்டம்; ஒரு தேசமொழி (தமிழர்)ப் போராட்டம் என்பதைச் சுத்த (கலப்படமற்ற) தமிழ் (திராவிட) மக்கள் ஒவ்வொருவரும் உணர்ந்து தனது கடமையைச் செய்வார்களாக!

['விடுதலை'–தலையங்கம்—24-7-1952]

www.thamizham.net - Free E book No 3041

மொழி உணர்ச்சி இல்லாதவர்களுக்கு நாட்டு உணர்ச்சியோ, நாட்டு நினைவோ எப்படி வரும்? நம் பிற்காலச் சந்ததிக்காவது சிறிது நாட்டு உணர்ச்சி ஏற்படும்படி செய்ய வேண்டுமானாலும் மொழி உணர்ச்சி சிறிதாவது இருந்தால்தான் முடியும். அன்றியும், சமுதாய இன உணர்ச்சி சிறிதாவது இருக்கவேண்டுமானாலும் மொழி உணர்ச்சி இருந்தால்தான் முடியும்.

உதாரணமாக, இன்று பார்ப்பனர்களுக்கு அவர்கள் எந்த வகுப்பார்களானாலும், சமுதாயத் துறையில் எவ்வளவு பேதம் கொண்டவர்களானாலும் சமஸ்கிருதம் (வடமொழி) என்கின்ற ஒரு மொழி உணர்ச்சியாலேயே அவர்கள் பிரிக்க முடியாத—கட்டுப்பாடான இன உணர்ச்சி உள்ளவர்களாக இருக்கிறார்கள். உண்மையைச் சொல்ல வேண்டுமானால், ஆரியம் சமயத் துறையில் ஆதிக்கம் பெற்றதாலும் ஆங்கிலம் அரசியல் முதலிய பல துறைகளில் ஆதிக்கம் பெற்றதாலுமே தமிழர்களுக்குள் இன உணர்ச்சி பலப்படவில்லை; குறைந்து வந்துவிட்டது. இப்போது பாக்கி உள்ள துறைகளிலும் இந்தி ஆதிக்கம் பெற்று இந்தி மயமாகிவிட்டால், இந்தியும் ஆட்சிப் பீடம் ஏறிப் பெருமை பெற்றுவிட்டால்—தமிழன் நிலை என்ன ஆகும் என்பதைச் சிந்தியுங்கள்!

['விடுதலை' 25-7-1972]

# 2. இந்தி எதிர்ப்புப் போர்

## 1. இந்தி எதிர்ப்பு ஏன்?

தலைவரவர்களே! தோழர்களே!

இன்று இந்தச் சென்னைக் கடற்கரையில் இவ்வளவு பிரம்மாண்டமான கூட்டத்தில் நான் பேச நேர்ந்ததைப்பற்றி மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

இந்தக் கூட்டமானது எனது நண்பர் கனம் ஆச்சாரியார் அவர்கள், தமிழ் மக்கள் மீது பலாத்காரமாய்ச் சுமத்தும் பார்ப்பனப் பாஷையாகிய இந்தியைத் தடுப்பதற்காகக் கூட்டப்பட்ட இந்தி எதிர்ப்புக் கூட்டமாகும் என்பது நீங்கள் அறிந்ததேயாகும். இது தோழர் ஆச்சாரியார் சென்ற வாரத்தில் இதே கடற்கரையில் இந்தியை ஆதரித்துப் பேசுவதற்காக என்று கூட்டப்பட்ட கூட்டத்தில், அதன் தலைவர் தோழர் முத்துரங்க முதலியார் அவர்கள் கூட்டத்திற்கு வந்திருந்த மக்களை எழுந்து போகும்படி சொன்னதுபோல்—அதாவது 'இக் கூட்டம் இந்தியை ஆதரிக்கின்றவர்களுக்குமட்டுமே அன்றி ஆதரிக்காதவர்களுக்கு இங்கு வேலையில்லை' என்று சொல்லி, போலீஸ் குதிரைப் படையைவிட்டு கூட்டத்தைக் கலைத்தும் போலீஸ் தடியைக்கொண்டு கூட்டத்தை விரட்டியும் அடித்ததுபோல் இக் கூட்டம் ஒரு சாராருக்கு மாத்திரம் ஏற்பட்டதல்ல. இக் கூட்டம் இந்தியை எதிர்ப்பதற்கு உண்டான காரணங்களைச் சொல்லவே கூட்டப்பட்டதானாலும், அன்றையதினம் அந்த (ஆச்சாரியார்) கூட்டத்தில் பேசியவைகளுக்குப் பதில் சொல்லவும், இந்தியை எதிர்ப்பவர்களும், ஆதரிப்பவர்களும் நடுநிலைமைக்காரர்களும் யாவரும் வந்து கேட்கவும், தங்கள் அபிப்பிராயங்களைக் கொடுக்கவும் போடப்பட்ட கூட்டமாகும்.

நாங்கள் இக் கூட்டத்திற்கு உண்மையிலேயே போலீஸ் உதவியையோ, குதிரைப் படை உதவியையோ கோரவில்லை என்றாலும், இது மகா பிரமாண்டமான கூட்டமாயிருப்பதால் போலீசார் தங்கள் கடமையைச் செய்ய ஒரு சிலர் இங்கு நிற்பதைப் பார்க்கிறேன், அதற்காக நான் நன்றி செலுத்துகிறேன் என்றாலும், சென்னை பார்ப்பனப் பத்திரிகைகளும் அவர்களது கூலிப் பத்திரிகைகளும் முதல் மந்திரியார் (ஆச்சாரியார்) கூட்டம் போலீஸ் பந்தோபஸ்தில் நடக்கவேண்டி இருந்ததே என்கின்ற அவமானத்தையும் கேவல நிலைமையையும் போக்கிக்கொள்ள ஒரு நொண்டிச் சாக்கு தேடிக்கொள்வதற்காக நமது

www.thamizham.net - Free E book No 3041

(இந்த) கூட்டமும் 'போலீஸ் பந்தோபஸ்தில் நடந்தது' என்று எழுதுவதற்கு இதைப் பயன்படுத்திக் கொள்ளும் என்பதையும் சொல்லாமல் இருக்க முடியவில்லை. போலீஸ் பந்தோபஸ்து இருப்பதை நான் எப்போதும் குற்றங்கூறுவதில்லை. போலீஸ்காரர்கள் நம் உண்மையான காவல்காரர்கள். நம் பணத்தைக் கொண்டே அவர்கள் ஏற்படுத்தப் பட்டிருக்கிறார்கள். ஆதலால், நாம் வெட்கப்பட வேண்டியதில்லை. ஆனால், கனம் ஆச்சாரி யாரின் வாழ்க்கைக்கு இன்று அவ்வளவு போலீஸ் காவல் தேவை இருப்பதானது, அவரது வாழ்க்கை மிகக் கொடியது என்பதையாவது அல்லது அவர் பொது மக்கள் வெறுப்புக்கும், ஆத்திரத்திற்கும் அதிருப்திக்கும் ஆளாகி வாழ்கிறார் என்பதையாவது காட்டுகிறது.

அன்றியும், தன்னைப் பொதுஜன சேவகன் என்றும் ஜனநாயக முறைப்படிதான் பதவி பெற்றவன் என்றும், தனது எல்லா அக்கிரமும் எதேச்சாதிகாரமும் கொண்ட காரியங் களுக்கு அடிக்கடி சமாதானம் சொல்லி ஏய்க்கப் பார்க்கும் அந்த ஒழுக்கம் கெட்ட காரியத்துக்கு இது ஒரு சரியான புத்தி கற்பிப்பும் ஆகும்.

தோழர்களே! இன்றையதினம் நமது மாகாணத்தில் உள்ள இந்தி எதிர்ப்புக்குக் காரணஸ்தர்களில் நானும், இன்று இக்கூட்டத்திற்குத் தலைமை வகித்திருக்கும் தோழர் கலிபுல்லா சாயபுவும் முக்கியஸ்தர்கள் என்றும், நாங்கள் ஏதோ வேறு காரணம் கொண்டு இந்த எதிர்ப் பிரச்சாரம் செய்கின்றோமென்றும் ஆச்சாரியாரும் அவரது சிஷ்யகோடிகளும் பத்திரிகைகளும் கூப்பாடுபோட்டு, மக்களை ஏய்க்கப் பார்க்கின்றார்கள். நான் இந்தியை 1924, 1925-ஆம் வருஷத்திலேயே எதிர்த்திருக்கிறேன். அதற்கு ஆதாரம் 'குடி அரசு' பத்திரிகையில் பார்க்கலாம். அப்போது ஆச்சாரியார் எனக்கு முக்கிய நண்பராகவும், தலைவராகவும் கூட இருந்தார் என்று சொல்லலாம். தோழர் கலிபுல்லா சாயபு அவர்கள் ஆச்சாரியார் மந்திரி ஆவதற்கு முன்பே, இந்தி கட்டாயம் ஆகும் முன்பே—'இந்தி இஷ்டப் பாடமாகக் கூட இருக்கக் கூடாது' என்று பிரச்சாரம் செய்து, பண்டித ஜவஹர்லாலுடன் வாக்குவாதம் செய்துகொண்டிருந்தவர். இன்றைய இந்தி எதிர்ப்புத் தோழர்களில் மற்றும் அனேகரும் வெகுநாளாகவே 'தமிழ் நாட்டிற்கு இந்தி ஏன்?' என்று கண்டித்து வந்திருக்கின்றார்கள்.

இந்தி பாஷையைப் பற்றியும், அதன் யோக்கியதையைப் பற்றிம், அதனால் தமிழ் மக்களுக்கு ஏற்படும் கெடுதியைப் பற்றியும் ஆச்சாரியார் இதைக் கட்டாயமாய்ப் புகுத்தும் சூழ்ச்சியைப் பற்றியும், இந்தி எதிர்ப்பு மேடைகளில் வண்டிவண்டியாய்ப் பேசப்பட் டிருக்கின்றன. இதற்கு ஆச்சாரியாரோ மற்ற அவரது கூலிகளோ, பத்திரிகைகளோ ஏதாவது சமாதானம் சொன்னார்களா, சொல்லுகிறார்களா என்று யோசித்துப் பாருங்கள். நாம் சொல்லும் காரணங்களைக் கூட சென்னைப் பத்திரிகைகள் பல வெளியிடும் கண்ணிய மான குணமில்லாமல் இழி தன்மையில் நடந்துகொள்கின்றன. ஆகவே, இந்த ஒரு காரணமே இந்தியை அயோக்கியத்தனமாகவும் அக்கிரமமாகவும் வஞ்சகப் புத்தியோடும் நம் குழந்தைகளுக்கு ஒரு கூட்டத்தார் புகுத்தப் பார்க்கிறார்கள் என்பதற்குப் போதாதா என்று கேட்கிறேன்.

தோழர்களே! இந்தி கெட்ட பாஷை, சூழ்ச்சி பாஷை என்பதையும்; இந்தியைப் புகுத்தப் பார்ப்பதும் அக்கிரமமென்றும் நாம் ருஜு செய்துவிட்டோம். அந்த ருஜுவை ஆச்சாரியாரும் ஏற்றுக்கொண்டதோடு இந்தியையும் கைவிட்டுவிட்டார் என்கின்ற அளவில் நாம் வெற்றியும் பெற்றுவிட்டோம். நமது கிளர்ச்சி வெற்றியளித்து விட்டதென்கின்ற நற்செய்தியை இன்று உங்களுக்குத் தெரிவிக்கிறேன். எப்படியென்று கேட்பீர்கள்; கவனமாய்க் கேளுங்கள். ஆச்சாரியார் இந்தியைக் கைவிட்டு ஒரு மாத காலமாகிவிட்டது. அவர் இப்போது எங்கும் இந்தி என்று பேசுவதில்லை; பத்திரிகைகளும் இந்தி என்று எழுதக்கூடாதென்பதாகப் பத்திரிகைகளைக் கேட்டுக்கொண்டார். ஆனால், அதற்கு வேறு பெயர் கொடுத்து – 'இந்துஸ்தானி' என்று பேசுகிறார். அவரை ஆதரிக்கும் பத்திரிகை களும் அப்படியே எழுதுகின்றன.

www.thamizham.net - Free E book No 3041

ஆச்சாரியார் உண்மையில் நம் மக்களை சமஸ்கிருதம் படிப்பிக்கச் செய்யவேண்டும் என்றுதான் முதன்முதல் கருதினார். ஆனால், அதற்குத் தமிழ்நாட்டில் ஏற்கனவே உள்ள எதிர்ப்பைக் கண்டு பயந்து, அதற்கு மறுபெயர் கொடுத்து 'இந்தி' என்றார். அதை எதிர்த்து தமிழ்மக்கள் கிளர்ச்சி செய்தவுடன் அதை விட்டுவிட்டு, இப்போது 'இந்துஸ்தானி' என்கிறார். இதையும் அதே மூச்சில் எதிர்த்தோமானால் இதையும் கைவிட்டு விடுவார் என்பது உறுதி. சூழ்ச்சிக்காரர்களுக்கு மானமும் வீரமும் நேர்மையும் இருக்காது; அவை இருந்தால் சூழ்ச்சி செய்ய அவசியமும் இருக்காது. ஆகையால், நாம் இந்தி போய்விட்டதே என்று எதிர்ப்பைக் கைவிட்டு விடக்கூடாது. இந்துஸ்தானியை ஆச்சாரியார் கைவிட்டு விட்டதாகச் சொன்னாலும் நம்பிவிடக்கூடாது. நமது எதிர்ப்பு தொடர்ந்து இருக்க வேண்டும். நம்மை அறியாமல் நமக்கு எவ்வளவோ கேடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இவையெல்லாம் மக்களுக்குச் சரியாய் விளங்க வேண்டுமானால் ஆச்சாரியார் இன்னும் ஒன்று இரண்டு வருஷத்துக்காவது பதவியில் இருந்து, இந்தியையும் அல்லது இந்துஸ்தானியையும் மாற்றாமல் பிடிவாதமாய் இருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். 'வந்தேமாதர'ப் பாட்டை நிறுத்தி விட்டதுடன் முஸ்லிம்களுக்கு காங்கிரசின் முழு சூழ்ச்சியும் தெரியும்படியான அளவுக்கு நடைபெறவேண்டிய பிரச்சாரம் நின்று விட்டது. முஸ்லிம்களின் கொதிப்பு ஓர் அளவுக்குக் குறைந்து விட்டது. ஆதலால், இந்திச் சூழச்சியை ஆச்சாரியார் நிறுத்தி விட்டால், நம் மக்கள் கிளர்ச்சி அடங்கிவிடுமே என்று உண்மையிலேயே நான் கவலைப்பட வேண்டியவனாக இருக்கிறேன்.

மற்றும், தோழர் ஜெகதீசனின் பட்டினியைப் பற்றிச் சிலர் பேசினார்கள். இம் மாதிரி பட்டினியைப் பற்றிய எனது அபிப்பிராயம் உங்களுக்கு ஏற்கனவே தெரிந்திருக்கும். பட்டினியில் எந்தவிதமான ஆத்மார்த்தம் என்பதோ, தெய்வீகம் என்பதோ ஆன தத்துவம் இருக்கிறது என்பதை நான் என்றும் நம்பினதில்லை.

காந்தியார், தான் பட்டினி இருந்த காலத்தில் அதற்கு அவர் சொல்லிக் கொண்ட காரணங்களும் அதற்காக மற்ற மக்கள் கீழ்ப்படிய வேண்டுமென்று கட்டாயப்படுத்திய செய்கைகளும் உலகம் அறிந்திருந்தும், தோழர் ஸ்டாலின் பட்டினியைப்பற்றி மிக்க விஷமத்தனமாகக் கொடுத்த அபிப்பிராயத்தைக் கண்டிக்காமல் இருக்க முடியவில்லை. இதிலிருந்தாவது பொது ஜனங்களுக்குக் காந்தியாரின் உண்மையான நிலை தெரியச் சந்தர்ப்பம் ஏற்பட்டதே என்பதற்காகவும் இந்தப் பட்டினி வரவேற்கத் தக்கதாகின்றது என்கிறேன்.

மற்றும், உலகில் இறப்பது இயற்கையானாலும் ஒவ்வொரு மனிதனும் கட்டாயம் இறந்தே தீரவேண்டியது முடிவே ஆனாலும், தானாகவே பட்டினி கிடப்பதன் மூலம் சாகத் துணிவது என்பது பொதுமக்கள் கவனத்தை இழுக்க மிக்க பயன்படத்தக்கதாய் இருக்கிறது என்பதை எவரும் மறுக்க முடியாது. இப்படிப்பட்ட நிலைமையில், இக் காரியத்துக்காக மனிதத் தன்மைப்படி பரிதாபப்படாவிட்டாலும், இதைக் குறை கூறுவதும், குற்றம் சொல்வதும் சிறிதும் யோக்கியமான காரியம் ஆகாது என்பதை நான் எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை.

இந்திக் கட்டாயத்திலிருந்து மக்களை மீள்விப்பதற்காக முயற்சித்த பலர் இதுவரை 100 பேர்கள் வரை சிறைப் படுத்தப்பட்டிருக்கிறார்கள். பலர் 3 மாதம், 4 மாதம் கடினகாவல் தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறார்கள்; சிலர் மீது 2 வருஷம், 3 வருஷம் தண்டிக்கக் கூடிய சட்டப்படி குற்றம் சாட்டியிருக்கிறார்கள். இதுதானா இராம ராஜ்யம் அல்லது தர்ம ராஜ்யம் என்று கேட்கிறேன். இந்த அக்கிரமத்தைச் சகிக்காமல் பார்ப்பனர்களிலேயே பலர் வெளிப்படையாய் ஆச்சாரியார் மீதும் அவரது ஆட்சி மீதும் குறைகூற வந்து விட்டார்கள்.

பம்பாய் 'சோஷியல் ரிபார்மர்' பத்திரிகை பார்ப்பனர்களால் மிகவும் விளம்பரப் படுத்தப்பட்ட பத்திரிகையாகும். அதன் பத்திராதிபரும் இந்தியப் பிரதான புருஷர்களில்

www.thamizham.net - Free E book No 3041

ஒருவராய்க் கருதச்செய்யப்பட்டவருமான தோழர் நடராஜ அய்யர் அவர்கள் தனது பத்திரிகையில் 'ஆச்சாரியார் இந்திக் கிளர்ச்சியை நிறுத்த இவ்வளவு பெரிய அடக்கு முறையை ஆரம்பிக்கும்படியான அளவுக்கு ஆத்திரம்கொண்ட ஒரு காரணமே, இந்திக்குச் சரியான எதிர்ப்பு இருக்கிறது என்பதை ருஜுப்படுத்தி விட்டது. இதனால் பார்ப்பனர்–பார்ப்பனரல்லாதார் துவேஷத்தைக் கிளப்புகிறார். ஆதலால், இனி இதைக் கைவிட்டுவிட வேண்டியதுதான்' என்பதாக எழுதி இருக்கிறார்.

நமது மாகாண அய்க்கோர்ட் ஜட்ஜாயிருந்த தோழர் விஸ்வநாத சாஸ்திரியார், இந்திக் கிளர்ச்சியை அடக்க ஆச்சாரியார் கையாண்டமுறை அக்கிரமமானதென்றும், ஒரு காலத்தில் பொதுஜனப் பிரதிநிதிகள் என்கின்ற முறையில் ஆச்சாரியாராலேயே கண்டிக்கப் பட்ட சட்டத்தைத் தாங்கள் பதவிக்கு வந்தவுடன் பொதுஜனங்கள் மீது பிரயோகிப்பது—மாமியார் உடைத்தால் மண்சட்டி மருமகள் உடைத்தால் பொன்சட்டி—என்று கூறுகிற ஆதிக்கத்தைப் போலிருக்கிறது என்றும் கண்டித்து 'மெயில்' பத்திரிகையில் எழுதி இருக்கிறார். மற்றும் ஆச்சாரியார் ஆட்சியில் ஜெயிலில் செய்யப்படுகிற கொடுமை காதில் கேட்கப் பிடிக்கவில்லை.

இவ்வளவோடு இல்லாமல், காங்கிரஸ்காரர்கள் கூலிக்குச் சில ஆட்களைப்பிடித்து அனுப்பி, இந்திக் கிளர்ச்சி பேரால் வேண்டுமென்றே சிறைபிடிக்கச்செய்து, ஜெயிலுக்கு அனுப்பி மன்னிப்பும், நல்ல நடவடிக்கை ஜாமீனும் எழுதிக்கொடுத்துவிட்டு வெளியில் அழைத்து வருவதன் மூலம், அந்த முயற்சியைக் கேவலமானதாகச் செய்யப் பார்க்கிறார்கள். இந்த வேலையில் காங்கிரசின் பேரால் வயிறு வளர்க்கும் ஆட்கள் மிகத் தீவிரமாய் ஈடுபட்டு இருக்கிறார்கள். இதுவரை சிறைசென்ற 100 பேர்களில் காங்கிரஸ்காரர்களால் அனுப்பப் பட்டவர்களும் 10 பேர்களுக்குமேல் இருக்கும் என்று சொல்லப்படுகிறது. மற்ற தொண்டர் களையும் பலவிதமாக நிர்ப்பந்தப்படுத்துவதாகவும் தெரியவருகிறது. எந்தக் காரியம் எப்படி இருந்தாலும், எந்தக் காரணத்தைக் கொண்டும் பலாத்காரம் ஏற்படக்கூடாது என்பதும், செய்யக்கூடாது என்பதும் எனது கொள்கை. இதை இந்தி எதிர்ப்புத் தொண்டர்களுக்கு மிக வற்புறுத்திக் கூறுகிறேன். பலாத்காரம் ஏற்பட்டால் நான் பிரிந்துகொள்வேன் என்பதையும் கூறிவிடுகிறேன்.

ஆச்சாரியார் இந்தியைக் கட்டாய பாடமாகப் புகுத்தி, ஆணவமாகப் பேசிக்கொண்டு வர ஆரம்பித்த பின்பு அவருக்குச் செல்லுமிடங்களில் எல்லாம் பகிஷ்காரம் இருந்து வருகிறதைப் பார்ப்பனப் பத்திரிகைகளிலேயே பார்க்கிறேன். இவற்றிற்குக் காரணம் தன்னுடைய அடாதசெய்கை என்பதை மறைத்துக்கொண்டு 'யாரோ சில துவேஷக்காரர்கள் இப்படிச் செய்கிறார்கள்' என்று சொல்லி மக்களை ஏமாற்றப் பார்ப்பது, அவர் தன்னையே ஏமாற்றிக்கொள்ளத்தான் பயன்படப்போகிறது. சிற்சில இடங்களில் கூட்டங்களில் ஏற்பட்ட கலவரங்களையும், செருப்பு முதலியன வீசி எறியப்பட்டன என்பதையும் நான் பலமாக வெறுக்கிறேன். அது கண்டிக்கப்படவேண்டியதேயாகும். ஆனால், 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பதுபோல், காந்தீயம் மக்களுக்குக் கற்றுக்கொடுத்த பாடமும், காங்கிரஸ்காரர்கள் மற்ற தலைவர்களுக்கும் மந்திரிகளுக்கும் நடத்தின மரியாதையும் இன்று காங்கிரஸ் மந்திரிகள் அடைகிறார்கள். வினையின் பயன் மிக வலிமை உடைய தல்லவா? இது இன்னும் எங்குகொண்டுபோய் விடுமோ என நான் பயப்படாமல் இருக்க முடியவில்லை.

நிற்க, தோழர்களே!

எனக்குப் பிறகு பலர் பேசவேண்டியவர்கள் இருப்பதால், நான் அன்றையக் கடற் கரைக் கூட்டத்தில் தோழர்கள் முத்துரங்க முதலியார், ஆச்சாரியார், சந்தானய்யங்கார் ஆகியவர்கள் பேசிய பேச்சுகளுக்கு மாத்திரம் பதில் சொல்லிவிட்டு நிறுத்திக்கொள்கிறேன்.

www.thamizham.net - Free E book No 3041

1. அன்று, தோழர் முத்துரங்க முதலியார் அக்கூட்டம் இந்தி ஆதரிப்பவர்களுக்கு மாத்திரம் கூட்டப்பட்டது என்று சொன்னார். ஆதரிப்பவர்களுக்கு மாத்திரம் என்றால் அவர்களுக்காக ஒரு கூட்டம் கூட்டுவானேன்? அதைக் கடற்கரையில் கூட்டி அவ்வளவு பந்தோபஸ்து வைப்பானேன்? பத்திரிகைகளில் அக் கூட்டத்தைப்பற்றி விளம்பரம் செய்து திரளான ஜனங்கள் வரும்படி வேண்டுகோள் விடுவானேன்? அவ் வேண்டுகோள் களையும் பதினாயிரக்கணக்கான துண்டுப் பிரசுரங்களிலும், 'ஆதரிப்பவர்கள் மாத்திரம் வரலாம்' என்று ஏன் போடவில்லை? என்பவைகளைக் கவனித்தால், இந்தி எதிர்ப்புக்கு ஆச்சாரியாரிடம் சரியான சமாதானம் இல்லை என்பதும், பொதுஜனங்கள் இஷ்டத்திற்கு விரோதமாய்ச் சுயநலம் கொண்டோ எதேச்சாதிகாரம் கொண்டோ இந்தியைப் புகுத்து கிறார்கள் என்பதும் விளங்கவில்லையா என்று கேட்கின்றேன்.

2. சர். கே. வி. ரெட்டியாரும், சர். கிருஷ்ணன் நாயரும், தோழர் கலிபுல்லாவும் தங்கள் நாட்டில் இந்தி எதிர்ப்புச் செய்யாமல் தமிழ்நாட்டில் செய்கிறதால், அதற்கு ஏதோ உள் காரணம் இருப்பதாகத் தோழர் முதலியார் சொன்னாராம். சர். கே. வி. ரெட்டி நாயுடு பேசுவதும் எழுதுவதும் எல்லா நாட்டுக்கும் சேர்ந்துதானே ஒழிய, ஆந்திரர்களை விலக்க வில்லை. சென்னையே ஆந்திராவில் ஒரு பாகம் கொண்டதே என்பது முதலியாருக்குத் தெரியாதா? இதனால் ஆந்திராவில் இக் கிளர்ச்சி இல்லை என்று முதலியார் சொல்லு கிறாரா? ஆந்திராவுக்கு கனம் ரெட்டி நாயுடு போகவில்லை என்றதால் அவர் இந்தி கூடாது என்கின்றதற்குக் கூறும் காரணங்கள் செல்லுபடி அற்றதாகி விடுமா? இதிலிருந்தே தோழர் முத்துரங்க முதலியாருக்கு இந்தியை ஆதரிக்கத் தகுதியான காரணம் இல்லை என்பது விளங்குகிறது.

மற்றும், சர். கிருஷ்ணன் நாயர் அவர்கள் இந்தியை எதிர்த்து மலையாள நாட்டி லிருந்துதான் அறிக்கை விட்டார். அதை எந்த மலையாளியும் மறுக்கவில்லை. தோழர் கலிபுல்லா சாயபு 'தனது நாட்டுக்குப் போய் ஏன் பிரச்சாரம் செய்யவில்லை?' என்று முதலியார் சொல்லுவதிலிருந்து தோழர் முதலியாருக்கு தோழர் கலிபுல்லா சாயபு எந்த நாட்டுக்காரர்—எந்த நாட்டில் கிளர்ச்சி செய்கிறார் என்பதுகூடத் தெரியவில்லை என்று புலப்படுகிறது.

மறைமலை அடிகளும், தோழர் சோமசுந்தர பாரதியாரும் செய்யும் கிளர்ச்சிக்குக் காரணம் 'ஆரிய துவேஷம்' என்று சொன்னாராம். கனம் ஆச்சாரியாரும் இந்தியை எதிர்ப்பவர்களைப்பற்றி இப்படியே சொல்லுகிறார். தமிழரிடையே ஆரிய பாஷையைப் புகுத்துவதும், அது கூடாதென்றால் 'ஆரிய துவேஷம்' என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளப் பார்ப்பதும் என்றால், இது மிக இழிவான சமாதானம் என்றுதான் சொல்வேன். தோழர் மறைமலை அடிகளும், பாரதியாரும் வெகுகாலமாய் ஆட்சேபித்து வந்திருக் கிறார்கள். இதைக் கண்டித்துப் பல புஸ்தகங்கள் போட்டு இருக்கிறார்கள். அன்றியும், இந்த நாட்டுத் தமிழ் மக்களுக்கு 'ஆரிய துவேஷம்' இருப்பது ஓர் அதிசயமா என்று கேட்கின்றேன். ஆரிய மதப்படி தமிழ் மக்கள் எவ்வளவு இழிவானவர்களாகக் கருதப்படக் கூடியவர்கள் என்பதை நினைத்துப் பாருங்கள். ஒரு சமூகத்தை ஒரு சமூகம் கீழ்ச்சாதி என்றும், அடிமைச் சாதி என்றும் தங்களுக்கு (ஆரியர்களுக்கு) பாடுபட்டுப்போட்டு வாழ வேண்டியவர்கள் என்றும் சொல்லப்படுமானால்—கருதப்படுமானால், சமூகத்துக்குச் சமூகம் துவேஷமில்லாமல் இருக்கமுடியுமா என்று பாருங்கள். தமிழ் மக்களுக்கு ஆரியபாஷை கட்டாயமாய்க் கற்றுக்கொடுத்தால்கூட துவேஷப்படாமல் இருக்கமுடியுமா என்று நீங்களே யோசித்துப் பாருங்கள். வெள்ளைக்காரர்மீது பார்ப்பனர்கள் குறைகூறி அவர்களை ஓட்ட வேண்டுமென்று கூறியது குற்றமில்லை; துவேஷமில்லை என்று கற்றுக்கொடுத்த இவர்கள் கொடுமையைப் பார்த்து—இவர்கள் செய்கையைக் கண்டிப்பது மட்டும் துவேஷமா என்று கேட்கிறேன். இன்று பார்ப்பனர்கள் நடத்தும் ராஜ்யபாரம் வெள்ளைக்காரர் ராஜ்ய பாரத்தைவிட ஆயிரம் மடங்கு கொடுமையானதாகவும் ஏதேச்சாதிகாரமாகவும் இருக்

www.thamizham.net - Free E book No 3041

கிறதே—இதை நாம் சகித்துக்கொண்டிருக்க வேண்டியதுதான் நம் கதியா என்று நான் கேட்கிறேன்.

மற்றும், ஆச்சாரியார், 'இந்தி புகுத்துவதால் தமிழ் கெடாது' என்று மனதறிந்த பித்தலாட்டம் பேசுகிறார். இன்று தமிழ் எங்கே இருக்கிறது? தமிழ்ப் பழக்கவழக்கம், சுதந்திரம், மானம் ஆகியவைகளை உணர்த்தும் தமிழ் வார்த்தைகள் எங்கே? ஒரு தமிழ் மகன் தன் மகளுக்கோ, மகனுக்கோ கலியாணம் செய்யவேண்டுமானால் தமிழ்ச்சொல் எங்கே? தமிழ்க் கருத்தினால்—'வாழ்க்கைத் துணை நலம்' என்பான். ஆனால், ஆரியக் கருத்தில் பேசும்போது 'கல்யாணம்' 'விவாகம்' 'கன்னிகாதானம்' என்கிறான். வார்த்தை வரும்போது கருத்தும் மாறிவிடுகிறது. இதற்குத் தகுந்தபடி புரோகிதம், சடங்கு, செலவு, பார்ப்பான் பிழைக்க வழி ஏற்படுவதல்லாமல்—வாழ்க்கைத்துணை என்பதில் சம உரிமையும், கன்னிகாதானம் என்பதில் ஆண்டான் அடிமைத்தன்மையும் புகுத்தப் பட்டுவிடுகிறது. இம் மாதிரியே ஆரியக் கலப்பால் தமிழின் தன்மை, உரிமை, நேர்மை எல்லாம் கெட்டு, ஆரியருக்குத் தமிழன் அடிமை என்பதுதான் மிஞ்சிவிடுகிறது. அப்படி இருக்கும்போது இனியும் ஆரியப் பாஷையைக் கட்டாயமாக்கினால் என்ன ஆகும்? ஆகையால், இந்தியை ஆச்சாரியார் புகுத்துவது மத உணர்ச்சியால் அல்ல என்பதை நீங்கள் உணரவேண்டும்.

[சென்னை கடற்கரையில், 26-6-1938-ல் சொற்பொழிவு—'விடுதலை' 30-6-1938]

இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை ஒடுக்குவதற்காகவேண்டி 'நமது' சுயராஜ்ய சர்க்கார் இதுவரை 120 பேர்களை அரஸ்ட் (கைது) செய்து, சுமார் 40 பேர்கள்வரை கிரிமினல் அமெண்ட்மெண்ட் ஆக்ட் 7-3-ஏ படி, 4 மாதம், 6 மாதம் கடினகாவல் சிட்சை கொடுத்துத் தண்டித்து—கேப்பைக் கூழும், களியும் போட்டு, மொட்டை அடித்து, ஜெயில் உடை கொடுத்து, குல்லாய்ப் போட்டு வேலை வாங்கி வருகிறார்கள்.

மற்றும் தோழர்கள் சி. டி. நாயகம் (மாஜி டிப்டி–ரிஜிஸ்ட்ரார்), ஈழத்து சிவானந்த அடிகள் பி. ஏ. (ஒரு சந்நியாசி), கே. எம். பாலசுப்பிரமணியம் பி. ஏ. பி.எல்., ஷண்முகா நந்த சுவாமி (ஒரு சந்நியாசி), சி. என். அண்ணாதுரை எம். ஏ. ('ரிவோல்ட்' பத்திராதிபர்), சுவாமி அருணகிரிநாதர் (ஒரு மடாதிபதி) முதலாகிய முக்கியஸ்தர்களை 3-வருஷம் வரை தண்டிக்கும்படியான இண்டியன் பினல்கோட் சட்டம் 117 பிரிவுப்படி கைது செய்து சிறைப் படுத்தி வைத்திருக்கிறார்கள். சிலர் ஜாமீனில் இருக்கிறார்கள் என்றாலும் இனியும் இந்த சட்டப்படியும் தினமும் 3 பேர், 4 பேர் வீதம் கைதுசெய்யப்பட்டுக்கொண்டும், தினமும் 10 பேர், 5 பேர் வீதம் தண்டிக்கப்பட்டுக்கொண்டும் வருகிறார்கள். 'இந்த சுயராஜ்ய சர்க்கார் இந்தக் காரியங்கள் மாத்திரம்தான் செய்துவருகிறார்கள். இதற்குமேல் என்ன செய்துவிடுவார்கள்?' என்று மக்கள் கருதி—மேலும் மேலும் கைதியாக ஆயிரக்கணக்கான பேர்கள் முன்வந்துவிடுவார்கள்போலிருக்கிறதே என்று கருதி, 'நமது' தோழர் சத்திய மூர்த்தியார் அவர்கள் தமது அருப்புக்கோட்டை அரசியல் மாநாடு தலைமைப் பிரசங்கத்தில், 'இந்தியை எதிர்த்துக் கிளர்ச்சிசெய்பவர்கள் பெரிய இராஜத் துரோகிகளாவார்கள்' என்றும், 'அவர்கள் மீது ஆயுள்பரியந்தம் அல்லது தூக்குப் போடும்படியான குற்றப்படி நடவடிக்கை எடுக்க வேண்டும்' என்றும் மிகத் 'தயாள' குணத்தோடு 'இளகிய' மனம் கொண்டு பேசியிருக்கிறார். இதை 'மெயில்' பத்திரிகை மாத்திரமே கண்டித்துத் தலையங்கம் எழுதி இருக்கிறது.

அதாவது, 'தோழர் சத்தியமூர்த்தியாரே! நீர், இந்தியை எதிர்க்கிறவர்களுடைய தலைகளையெல்லாம் வெட்டவேண்டும் என்று சொல்லுகிறீர்களே, அப்படியானால்—சென்னைக் கடற்கரையில் தோழர் ஈ. வெ. ராமசாமி பேசும்போது 50,000 (அம்பதாயிரம்) ஜனங்கள் கேட்டுக்கொண்டிருந்ததோடு, தோழர் திருச்சி கே. ஏ. பி. விசுவநாதம் அவர்கள்

www.thamizham.net - Free E book No 3041

சர்க்காரைக் கண்டித்துத் தீர்மானம் பிரேரேபித்ததற்கு அந்த 50,000 பேர்களும் ஏகமனதாய் ஓட்டுக் கொடுத்திருக்கிறார்களே! ஆதலால் இந்த 50,000 பேர்களுடைய தலைகளையும்தானே வெட்டவேண்டும்! இதுதானா உமது சுயராஜ்யம்? இதுதானா காந்தியார் கூறும், அன்பினால் ஆளப்படும் இராஜ்யபாரம்?' என்று கேட்டிருக்கிறதே தவிர —மற்ற எந்தப் பார்ப்பனப் பத்திரிகையும்—எந்தக் காங்கிரஸ் பத்திரிகையும் அதைப் பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை என்பது மாத்திரமல்லாமல், அதைப் பற்றி இதுவரை எந்தக் காங்கிரஸ் தலைவர் என்பவர்களும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை என்றால்—இன்றைய சுயராஜ்யத்தில் தமிழ் மக்களின் தலை—உயிர் எவ்வளவு அற்பமாய் மதிக்கப் படுகின்றது என்பதற்கு வேறு அத்தாட்சி வேண்டுமா என்று கேட்கின்றோம்.

உண்மையில் தோழர் சத்தியமூர்த்திக்கும், கனம் ஆச்சாரியாருக்கும் ஒருவருக் கொருவர் தனிமையில் கண்டால் வெட்டிக்கொள்ளும்படியான ஆத்திரமும் குரோதமும் இருந்து வருவது யாவரும் அறிந்ததாகும். அதாவது, சத்தியமூர்த்தியாருக்குக் கிடைக்க வேண்டிய மந்திரிப் பதவியை, தோழர் ஆச்சாரியார் திடீரென்று திருச்சி டாக்டர் இராஜனுக்குக் கொடுத்துவிட்டதால் அன்று முதல் இன்றுவரை ஆச்சாரியாரை வைத வண்ண மாகவும், அவர்மீது எதிர்ப்புப் பிரச்சாரம் செய்தவண்ணமாகவும் இருந்துவருகிறார். அப்படிப்பட்டவர், 'ஆச்சாரியாரின் இந்திக் கட்டாயநுழைப்பும் எதிர்ப்பும், பார்ப்பனர்—பார்ப்பனர் அல்லாதார் என்ற விஷயமாக இருந்துவருகிறது' என்று தெரிந்தவுடன்—இந்தியை எதிர்ப்பவர்களை 6 மாதமும், 3 வருஷமும் தண்டித்தால் போதும் என்று ஆச்சாரியார் சொன்னால், தோழர் சத்தியமூர்த்தியார், 'இந்தியை எதிர்ப்பவர்களை ஆயுள்பரியந்தம் தண்டிக்க வேண்டும், அல்லது தலையை வெட்டவேண்டும் (தூக்கில் போடவேண்டும்)' என்று பகிரங்கமாக ஒரு பொதுமேடையில் பேசி, ஆச்சாரியாருக்கு உதவி செய்கிறார்.

100-க்கு 3 பேராய் உள்ள பார்ப்பனர்கள் மற்ற 100-க்கு 97 பேர்களாக உள்ள மக்களை எப்படி அடக்கி ஒடுக்கி அடிமைப்படுத்தி ஆதிக்கம் செலுத்துகிறார்கள் என்பதற்கு இந்த ஒரு உதாரணம் போதாதா என்று கேட்கிறோம். பார்ப்பனர்கள் தங்கள் சமூக நலனுக்காக என்றாலும்—தங்கள் சமூக நலனுக்குக் குறைவு வருகிறது என்றாலும் உடனே கன்னியாகுமரி முதல் இமயமலை வரை உள்ள சகல மாதிரியான பார்ப்பனரும் ஒன்று சேர்ந்து ஒரே அபிப்பிராயம் கொண்டு விடுகிறார்கள். அவர்களில் யார் எவ்வளவு கொடுமையும், குற்றமும் செய்தாலும் ஒருவரையொருவர் சிறிதும் விட்டுக்கொடுக்காமல் ஆதரிக்கிறார்கள்; எதிரிகள் மீது ஒரே மூச்சில் விஷமப் பிரச்சாரம் செய்து ஒழிக்க எக் கருமத்தையும் கையாளுகிறார்கள். ஆனால்–பார்ப்பனரல்லாதாராகிய, குறிப்பாகத் தமிழ் நாட்டுத் தமிழ் மக்களோ—இப்படிப்பட்ட சமயத்தில்தான் விபீஷணர்களாக மாறுகிறார்கள் என்பதற்கு—இப்படிப்பட்ட கட்டுப்பாடாக–வன்மனமாகத் தமிழ் மக்களை அடக்கி ஆதிக்கம் பெறுவதற்கென்றே ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட பார்ப்பன ஆட்சிக்கு, நமது தோழர் இராமநாதன் அவர்கள் மாட்டு வண்டி ஓட்டப்படவும், எதிரிகளை நல்லவர்களாகவும் நம் மக்களை அயோக்கியர்களாகவும் விளம்பரம் செய்யும் கேவலத் தொழிலுக்கு ஆளாகவும் துணிந்துவிட்டார் என்றால்—தமிழ் மக்கள் நிலைக்கு வேறு உதாரணம் வேண்டுமா என்று கேட்கின்றோம்.

இவைகளைப்பற்றியெல்லாம் உண்மையிலேயே நாம் சிறிதும் கவலைப்படவில்லை; மிக்க உற்சாகமே கொண்டிருக்கின்றோம். எப்படியெனில், 'வெந்ததைத் தின்று, வாயில் வந்ததைப் பேசிவிட்டு, வீணே முதுமைக்கும் நோய்க்கும் ஆளாகி நமக்கு இஷ்ட மில்லாமல் சாவதை விட—இப்படிப்பட்ட ஏதாவது ஒரு சிறு காரியத்திற்காகவாவது அல்லது இம் மாதிரியான ஒரு சிறிய நன்மை உடைய காரியத்துக்காகவாவது வாழ்ந்து மறைவது அறிவுடைய காரியம் என்பதாகக் கருதி இருப்பதால், அதை 'நாம் வெகு நாளாக எதிர்



www.thamizham.net - Free E book No 3041

பார்த்த காரியம் கைகூடிற்று' என்ற மகிழ்ச்சியிலேயே இருக்கிறோம். அவ்வளவு மாத்திரந்தானா? அல்ல, அல்ல! இந்நாட்டு உண்மைத் தமிழ் மக்களுக்கு அவர்களுடைய வீரத்தையும் தன்மானத்தையும் காட்டுவதற்கும், அவர்களது வாழ்வும் செல்வமும் உயிரும் நற்கருமத்துக்குப் பயன்படுத்துவதற்குமான ஒரு கிடைத்தற்கரிய அரும் சமயம் கிடைத்திருக்கிறதென்றும் மகிழ்ச்சி அடைகிறோம்.

தமிழர்களே! நீங்கள் எத்தனை மேதாவிகளானாலும், அறிவாளிகளானாலும், செல்வவான்களானாலும்—மற்றும் யாராய் இருந்தாலும் நீங்கள் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு நாளில் முடிவெய்தப் போவது திண்ணம். ஆனால் இந்த அறிவையும், மேதாவித் தன்மையையும், செல்வத்தையும் மற்றதையும் இப்பொழுது எதற்குச் செலவழிக்கிறீர்கள்? பொய்ப் புகழ் தேடுவதிலும், பின்னால் என்ன ஆகப் போகிறதோ என்றுகூட அறியமுடியாத காரியத்திற்காகப் பொருளைத் தேடிப் பெருக்கிவைப்பதிலும் பயன்படுத்துகிறீர்கள். இம்முயற்சியில் நீங்கள் எவ்வளவு ஏமாற்றம் அடைகிறீர்கள்? எவ்வளவு சங்கடம், கவலை, மனவேதனை, சரீரப் பிரயாசை அடைகிறீர்கள்? இவை மாத்திரமா? இந்தக் காரியங்களுக்கு நீங்களே உங்கள் வாழ்வில் மனமார எவ்வளவு பொய், வஞ்சகம், பித்தலாட்டம், பழிவாங்கும் உணர்ச்சி ஆகிய காரியங்களில் ஈடுபட வேண்டியவர்களாக ஆகின்றீர்கள் என்பவற்றையும் நினைத்துப் பாருங்கள்! ஆகவே, மானம், வீரம், அறிவு பெற்ற மனிதன்—தன் வகுப்பை, மற்றொரு வஞ்சக அறிவு பெற்ற வகுப்பு சூறையாட அனுமதித்துக்கொண்டிருந்து விட்டு மறைவது அறிவுடைமையா என்பதை யோசித்துப் பாருங்கள்!

தமிழ் மக்களுக்கு ஏற்பட்டுள்ள இக் கொடிய நிலை இன்று நேற்று ஏற்பட்டதல்ல. இதை ஒழிக்க, அழிக்கத் தமிழ்மக்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகளும் இன்று நேற்று ஆரம்பிக்கப்பட்டவையல்ல—ஆயிரக்கணக்கான வருஷங்களாக இருக்கலாம் என்று சொல்லலாம். ஆனாலும், இன்றுதான் எதிரிகளின் கொடுமைகள் பாமர மக்களுக்கும் விளங்கும்படி வெளிச்சம் ஏற்பட்டு வருகிறது. மனிதன் மானத்துக்கும் அறிவுக்கும் வாழவேண்டியவன் என்பது இன்றுதான் மக்களுக்கு விளக்கிவைக்க முடிகிறது. ஆதலால், இச் சமயம் செய்யப்படும் எவ்வித முயற்சியும் பயன்படக்கூடியதாகும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இன்று, இக் கொடுமையில் இருந்து தப்புவதற்குத் தமிழ் மக்களுக்கு வேண்டியது—முதலாவது ஒற்றுமையாகும். நிலை குலைந்த தமிழ் மக்கள் முதலில் நிலைபெறவேண்டும்; ஒன்றுசேரவேண்டும்; சில்லரை அபிப்பிராய பேதங்களை, அசூயை, பொறாமையை விட்டு உடன் பிறப்பு (சகோதர) உணர்ச்சி கொள்ளவேண்டும். தங்கள் தங்கள் வாழ்க்கையில் எந்தப் பாகத்தை இந்த அருமையான—முக்கியமான காரியத்துக்கு உதவலாம் என்று கவலைகொள்ள வேண்டும். தங்களிடம் சவுகரியமாக உள்ள செல்வத்தில் சிக்கன உணர்ச்சி இல்லாமல் எவ்வளவு அளிக்கலாம் என்பதைத் தாராளத் தன்மையோடு யோசித்து உதவ முன் வரவேண்டும். எதிரிகள் கொடுங்கோன்மையை ஒழிக்க—தங்கள் தங்களைப் பொறுத்த வரை எவ்வளவு தூரம் தியாகத்தைச் செய்யலாம் என்று நன்றாய் யோசித்து முடிவுக்கு வந்து வெளியில் புறப்பட்டுவிட வேண்டும். இத்தியாதி காரியங்கள் செய்யாவிட்டால், இந்த 50 அல்லது 100 ஆண்டுகளுக்குள் தமிழ் மக்கள் அடைந்துள்ள சுதந்திரம், மானம், சமத்துவம் எல்லாம் நாசமாகி பழைய (வருணாசிரம தர்ம) நிலைக்குப் போய்ச் சேர்ந்து விடுவோம் என்பதை நன்றாக உணருங்கள்.

இது எவர்மீதும் கொண்ட விரோதமல்ல, குரோதமல்ல, ஹிம்சையல்ல, பலாத்காரமல்ல. நமது உரிமையை நாம் பெற—காப்பாற்றிக்கொள்ள முயற்சிக்கின்றோம். இம்முயற்சியிலும் யாரிடமும் துவேஷமும் காட்டுவதில்லை; யாரிடமும் பலாத்காரச் செய்கைக்கோ ஹிம்சையைத் தரும் செய்கைக்கோ நாம் செல்வதில்லை—செல்லும்படியாகவும் யாரையும் தூண்டவும் வரவில்லை. அன்றியும், அப்படிப்பட்ட காரியம் செய்யக்கூடாதென்றும் வன்மையாகக் கூறுகிறோம்.

www.thamizham.net - Free E book No 3041

தமிழர்களே! இப்போது இந்த முயற்சிக்கு அவசரமாக அவசியமாக வேண்டியது பணம்-பணம்-பணமேயாகும். பணம் இல்லாவிட்டால் இம்முயற்சி உடனே செத்து மடிந்து நசுக்கப்பட்டு மறைந்தே போகும். பிறகு என்ன ஆகும் என்பதைச் சொல்லவேண்டிய தில்லை. ஓர் இலட்ச ரூபாய் இருந்தால்தான் நாம் உண்மையில் ஓரளவு இக்கொடுமையில் இருந்து மீளலாம். கொடுமை என்றால் விளையாட்டுக் கொடுமையா? தமிழ்நாட்டில் உள்ள தமிழ் வீரர்கள், செல்வர்கள், மேதாவிகள் எல்லோரும் அடங்கி ஒடுங்கி நடைப் பிணங்களாக நடந்து திரியும்படி செய்யப்பட்டுவிட்ட கொடுமையாகும்.

உதாரணம் காட்டுகிறோம், பாருங்கள்! தென் கோடியில் இருந்து எடுத்துக் கொள்ளுங்கள். திருநெல்வேலி ஜில்லாவில் தோழர்கள் மேடை தளவாய் குடும்பம், ஈஸ்வரம் பிள்ளை குடும்பம், சிவசின்னக்கண்ணு பிள்ளை குடும்பம் முதலிய 20, 30, 50 இலட்சம் செல்வமும், பாரிஸ்டர் பி.ஏ.பி.எல். முதலிய கல்வியும், பரம்பரைப் பெருமையும், மிட்டாவும் உள்ள குடும்பத்தார்கள் இன்று எவ்வளவு அடிமை நிலையில்—அஞ்ஞாதவாசமாய் (தங்களைக் காட்டிக்கொள்ள முடியாத நிலையில்) இருக்கிறார்கள்? இராமநாதபுரம் ஜில்லாவில் இராமநாதபுரம் இராஜா எங்கே? சிவகங்கை ஜமீன் எங்கே? சேத்தூர் எங்கே? எட்டயபுரம் எங்கே? கோடீஸ்வரர்களான செட்டி மக்கள் எங்கே? பல இலட்சாதிகார வியாபாரிகளான நாடார்குலப் பெரியார்கள் எங்கே? இவர்கள் நிலை இன்று எவ்வளவு அடிமைத்தனமாகவும், பரிதாபகரமானதாகவும் இருக்கிறது, பாருங்கள். மற்றும் மதுரை ஜில்லாவில் உத்தமபாளையம் குடும்பம் எங்கே? போடி ஜமீன் எங்கே? பெரியகுளம் எங்கே? சுப்பஞ் செட்டியார் குடும்பம் எங்கே? மற்றும் பல மிராசுதார்களும் வியாபாரிகளும், பி.ஏ. பி.எல்., எம்.ஏ.க்களும் எங்கே? விலாசம்கூட அறியக்கூடாத அளவு மறைந்து கிடக் கிறார்கள்! அதுபோல், திருச்சி ஜில்லாவில் காட்டுப்புத்தூர், மீனாம்பள்ளி, உறையூர் ஜமீன்கள், கடவூர் சமஸ்தானங்கள் எங்கே? மற்ற பிரபல மிராசுகள் எங்கே? பத்து இலட்சக்கணக்கான செல்வம் படைத்த சவுகார்கள் எங்கே? தஞ்சை ஜில்லாவில் உடையார் எங்கே? வடபாதி மங்கலம் எங்கே? சீர்காழியார் எங்கே? இவர்கள் போன்ற மற்ற மேதாவி களும் எங்கே?

அதுபோலவே, மற்ற சகல தமிழ் ஜில்லாக்களிலும் மற்றும் ஆந்திர, மலையாள ஜில்லாக்களில் உள்ள மேதாவிகளும் செல்வவான்களும், ஜமீன்களும், இராஜதந்திர நிபுணர்களும் அடக்கப்பட்டுவிட்டனரே! இவை எதனால்? இந்த நாடு ஏதாவது பொது வுடைமை—அல்லது சமதர்ம நாடாக ஆகிவிட்டதா? சர்வாதிகாரக் கொடுங்கோன்மை நாடாகத் திகழ்கின்றதா?

அதாவது—'இந்தி படிக்கமாட்டேன்' என்றால், ஒருவர் 6-மாதம் கடின காவல் போடச் சொல்லுகிறார்; ஒருவர் 3-வருடம் போடச் சொல்லுகிறார்; ஒருவர் தலையை வெட்டு என்கிறார். தொழிலாளிகள் தெருவில் திண்டாடிச் சோற்றிற்கு இல்லாமல் சொத்துப் பொத்தென்று மடிந்து விழுகிறார்களே! 'பசிக்குதே' என்றால்—ஒருவர் ஜெயில் என்கிறார். தட்டிக் கேட்டால்—மற்றவர், சுடு என்கிறார். நாட்டு முன்னேற்றமோ—ஆகாயக் கப்பலில் இருந்து கட்டை வண்டிக்கு வந்துவிட்டது; 'பார்ச்மெண்ட் பேப்பரில்' இருந்து பனை ஓலைக்கு வந்துவிட்டது; சல்லா வேட்டியிலிருந்து கோணி ரெட்டுக்கு வந்துவிட்டது.

சாதி வித்தியாசமோ—கூட இருந்து சாப்பிட்டதற்குக் கட்டி வைத்து உதைத்து மொட்டை அடித்துச் சாணிப் பால் உற்சவம் நடந்ததாகக் கூப்பாடுகள் வானத்தைப் பிளக் கின்றன. உத்தியோகமும் அதிகாரமும்—ஒரு தனிச் சாதிக்குத்தான் உண்டே ஒழிய, மற்றவர்கள் நினைக்கவே தகுதியற்றவர்களாக ஆக்கப்பட்டுவிட்டார்கள்.

சமத்துவமோ,—'சர்வ குண்டித் தீர்த்தம்போல் வழங்கும் காப்பிக் கடையில்'கூடச் சமத்துவம் கிடையாது. அங்கும் 'பிராமணன்'-'சூத்திரன்' பலகை தொங்கிக்கொண்டு,

www.thamizham.net - Free E book No 3041

'பஞ்சமனும் பெரு வியாதிக்காரனும் நாயும் உள்ளே பிரவேசிக்கக் கூடாது' என்கின்ற அறிவிப்புப் பலகை வெளியில் வைக்கப்பட்டும் இருக்கிறது.

மற்றும், பணக்கார இராஜ்யம் ஒழிந்து ஏழைகள் இராஜ்யமாக ஆக்கப்பட்டு விட்டதோ என்று சொல்லப்படுமானால்—அப்படியும் இல்லாமல், காலிகள், குண்டர்கள், இழி குண, இழிபிறப்பு மக்கள் என்று 'கல்லுப்போல் ருஜு செய்ய'க்கூடிய மக்கள் பலரைச் சேர்த்துக்கொண்டு—அவர்களது ஆதரவில் யோக்கியர்கள், தகுதியுடைய மேதாவிகள், கண்ணியமுள்ள நாணயஸ்தர்கள் துரத்தியடிக்கப்பட்டு விட்டார்கள். இவைகளை ஏன் சொல்லுகிறோமென்றால்—இந்த நாட்டில் செல்வவான்கள், மேதாவிகள், அறிவாளிகள் ஒடுக்கப்பட்டார்கள், ஒழிக்கப்பட்டார்கள் என்று சொல்லுவதால் சிலர் 'சமதர்மம் ஏற்பட்டுவிட்டது' என்று சொல்லி ஏமாற்ற வருவார்களோ என்னவோ என்று கருதி, அந்த யோக்கியதையையும் மக்கள் உணரட்டும் என்பதற்கு எடுத்துக் காட்டுகிறோம்.

'இந்தக் காரியங்களைப்பற்றி எவ்வளவுதான் உணர்ந்தாலும்—நம் நாட்டுச் செல்வவான்களில் பலருக்குச் சுலபத்தில் மான உணர்ச்சி வராது என்பது நமக்குத் தெரியும். ஏன் என்றால், இவ்வளவு இழிநிலை தங்களுக்கு ஏற்பட்டும், இன்னமும் பல செல்வவான்கள் எதிரிகளின் காலை 'மோட்சத்திற்காகவும்', பதவி வாழ்க்கைக்காகவும் நக்கிக்கொண்டு திரிகிறார்கள் ; நக்கத் தூது அனுப்புகிறார்கள்.

தமிழ் வக்கீல்களோ—அவர்கள் பலருடைய அகராதியில் மானம் மனிதத்தனம் என்கின்ற வார்த்தைகளே கிடையாது என்று சொல்லலாம்.

ஆதலால், சாதாரண நடுநிலையிலுள்ள தமிழ் மக்களே, தங்கள் சமூகத்துக்கு நேர்ந்த இந்த ஆபத்திலிருந்து தப்புவிக்க உதவிசெய்ய வேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

இந்நாட்டுத் தமிழ் வாலிபர்களே, அடக்குமுறை ஆயுதத்தை மழுங்கச்செய்ய வேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

இந்நாட்டுத் தமிழ்ப் பெண்மணிகளே, இவ்விரு கூட்டத்திற்கும் உற்சாகமூட்டக் கூடியவர்களாக இருக்கிறார்கள்.

வெளிநாட்டில் உள்ள 'இந்து', முஸ்லிம் தமிழ் மக்களே, இம் முயற்சிக்கு உதவி அளித்து—இந்நாட்டுப் பணக்காரர்களுக்குப் புத்தியும் மானமும் ஏற்படுத்தித் தாராளமாய் உதவச் செய்யவேண்டியவர்களாய் இருக்கிறார்கள்.

ஆதலால், மேற்கூறிய ஒவ்வொரு தமிழ் மகனும், தமிழ் மக்களும் இதுசமயம் தைரியமாய் வெளிவந்து, தன் தன் கடமையைச் செய்து, தமிழ்நாட்டை—உலகத்தில் இல்லா விட்டாலும், பூகோளப் படத்திலாவது உருவிருக்கச் செய்வார்களாக !

['குடி அரசு'-தலையங்கம்—3-7-1938]

## 2. இந்தி எதிர்ப்புப் படை

தோழர்களே !

இன்றையக் கூட்டம் இந்தி எதிர்ப்புப் பிரச்சாரத்துக்காகச் செல்லும் படையை வழியனுப்புவதற்காக என்றே கூட்டப்பட்டது என்று அழைப்பு விளம்பரத்தில் இருக்கிறது. இப்படிப்பட்ட கூட்டத்தில் வந்து சிலர் குழப்பம் நினைத்தது சுத்த முட்டாள்தனமாகும். இந்தக் கூட்டத்தில் இரண்டொருவர் 'காந்திக்கு ஜே' போடுவதும் 'இந்தி வாழ்க' என்று கத்துவதும் மண்ணை வாரி இறைத்து, வேஷ்டியை வீசி, மக்களை எழுந்துபோகும்படிக் காலித்தனம் செய்வதும் மிகவும் கண்டிக்கத்தக்கதாகும். கூட்டத்தை கலிபுல்லா சாயபு மிக்க வலுவுடன் அடக்கி இராவிட்டால் இன்று பலர் உதைபட்டுத் துன்பப்பட்டு இருப்பார்கள். போலீசும் இல்லாத இந்தச் சமயத்தில் காலிகளுக்கு இக் கூட்டத்தார் புத்தி

www.thamizham.net - Free E book No 3041

கற்பிக்க ஆரம்பித்து இருந்தால் என்ன நிலை ஏற்பட்டு இருக்கும்? கூட்டத்தில் இந்தியை ஆதரிக்கின்றவர்கள் எவ்வளவு பேர் என்று தோழர் கலிபுல்லா சாயபு கேட்டபோது கை தூக்கிய எண்ணிக்கையிலிருந்தே, இத் தொல்லைக்காரர்களின் யோக்கியதை நன்றாய் விளங்கி இருக்கும்; அவர்களும் பெரிதும் பார்ப்பனர்களாகத்தான் இருந்திருப்பதாய்த் தெரிகிறது. இம் மாதிரிக் காலித்தனத்தால் இன்னும் எவ்வளவு நாட்களுக்கு இப் பார்ப்பனர் வெற்றிபெற முடியும்?

நாங்கள் உண்மையிலேயே இந்தியை எதிர்ப்பவர்கள். 'இந்தியைப் பார்ப்பன ஆதிக்கத்துக்காகப் புகுத்தப்படுகிறது' என்பதை இக் கூட்டத்தில் உள்ள பார்ப்பனர்களே மெய்யாக்கி விட்டார்கள். தமிழ் மக்கள் வயிறு எரிந்து மனம் நொந்துகிடக்கும் காலத்தில்—அதுவும் பிரிந்து ஆதரவற்றுக் கிடக்கும் இந்நாளில் ஏதோ சில கூலிகள் தங்கள் வசத்தில் இருப்பதாகக் கருதி, எங்கள் முயற்சிகளை இப்படி அடக்கப் பார்ப்பது தர்மமா என்று கேட்கிறேன்.

எங்களுடைய சேதிகளைப் பொதுப் பத்திரிகை எனச் சொல்லும் பார்ப்பனப் பத்திரிகைகள் கேலி செய்து, கிண்டல் செய்து மறைத்துத் திரித்துக் கூறுகின்றன; சில அடியோடு அடக்கிவிடுகின்றன. எங்கள் ஒற்றுமையைக் கலைக்கச் சூழ்ச்சி செய்கின்றன. மக்கள் அநீதியாகச் சிறைப் பிடித்துக் கொடுமைப் படுத்தப்படுகிறார்கள்.

எங்களுக்குள்ளாகவே துரோகிகள் கற்பிக்கப்படுகிறார்கள்; கீழ்மக்களைச் சுவாதீனம் செய்து, அவர்கள் மூலமாக நம் இயக்கத்தை ஒழிக்க முயற்சி செய்யப்படுகின்றது. இந்தி எதிர்ப்பு-ஜஸ்டிஸ் கட்சியின் மற்றொரு அவதாரம் என்றும் பழி சுமத்தப்படுகிறது.

ஜஸ்டிஸ் கட்சிக்குச் சட்டசபையில் உள்ள இரண்டு தலைவர்களும் பார்ப்பனத் தாசர்களாய் இருக்கும்போது, இது எப்படி ஜஸ்டிஸ் கட்சிக் காரியமாக இருக்கமுடியும்? 'இந்தி எதிர்ப்பு-பார்ப்பன துவேஷத்துக்கு ஒரு கருவி' என்று சொல்லப்படுகிறது. தோழர்கள் டி. ஆர். வெங்கட்டராம சாஸ்திரி, கே. நடராஜன், வி. எஸ். சீனிவாச சாஸ்திரி, சி. வி. விஸ்வநாத சாஸ்திரி, உ. வே. சாமிநாதய்யர், பரவஸ்து ஆச்சாரியார், கே. பாஷ்யம் அய்யங்கார், வி. பாஷ்யம் அய்யங்கார், வி. வி. சீனிவாசய்யங்கார், குன்ஸ்ரு, டில்லி நிர்வாக சபை வர்த்தக மெம்பர் சர். மகமத் யாகூப் இவர்கள் எல்லோரும் ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களா?

'செண்டினல்', 'அமிர்த பஜார்', 'மாடர்ன் ரிவ்யூ', 'சோஷியல் ரிபார்மர்', 'லீடர்', 'சர்வெண்ட் ஆப் இந்தியா' முதலாகிய பத்திரிகைகள் ஜஸ்டிஸ் பத்திரிகைகளா? அல்லது பம்பாயிலும் சென்னையிலும் உள்ள பிரஜா உரிமைச் சங்கங்கள் ஜஸ்டிஸ் கிளைச் சங்கங்களா? அடக்குமுறையை ஒன்று இரண்டுதடவையாவது கண்டித்து எழுதிய 'சுதேச மித்திரன்' ஜஸ்டிஸ் பத்திரிகையா? இப்படி எல்லாம் இருக்க, தமிழ்மக்கள் கண்களில் மண்ணைப் போட்டு அவர்களை அடிமைகொள்ளச் செய்யும் இம் மாதிரியான சூழ்ச்சியும் கொடுமையும் நியாயமா? என்று உங்களைக் கேட்கிறேன்.

நாங்கள் சொல்லுவதும் செய்வதும் தப்பானால் நாளை இங்குக் கூட்டம் போட்டுப் பாருங்கள்; உங்கள் பத்திரிகையில் எழுதுங்கள். மற்றபடி பொய்யாகவாவது கூட்டத்தில் கலகமும் குழப்பமும் ஏற்பட்டது என்று எழுதுவதற்காகவே—இங்கு விஜயம் செய்திருக்கும் சில அயோக்கிய நிருபர்களுக்குச் சேதி கொடுக்கவேண்டுமென்று கருதி, சில்லரை சேஷ்டைகள் செய்வது நியாயமா என்று கேட்கிறேன்.

இன்றைய ஆட்சியில் தங்கள் அபிப்பிராயம் சொல்லக்கூடவா இடமில்லை? இந்தக் கூட்டத்தில் 'காந்திக்கு ஜே' சத்தம் ஏன் போடவேண்டும்? இவர்கள் காந்தியை யோக்கியர் என்று எண்ணிக்கொண்டிருப்பவர்களா? அல்லது தங்களையாவது காந்தி சிஷ்யர்கள் என்று எண்ணிக்கொண்டிருப்பவர்களா? நான் பார்த்தேன். ஒருவன் மண்ணை வாரி இறைத்துக்கொண்டு 'காந்திக்கு ஜே' போட்டான்; முதுகில் இரண்டு அப்பளம்

www.thamizham.net - Free E book No 3041

விழுந்தவுடன் அறுத்துவிட்ட கழுதைகள்போல் பலர் ஓட்டமெடுத்தார்கள். இந்தச் சமயம் நான் பயந்துவிட்டேன்; போலீசும் தென்படவில்லை. நமக்கோ, நம் ஆட்களுக்கோ பந்தோபஸ்தில்லை என்று நான் கவலைப்படவில்லை. ஆத்திரத்தோடு கை கலக்க ஏற்பட்டால் எதிரிகள் கதி என்னவாகும்? அப்புறம் 'இந்தி எதிர்ப்புக்காரர்கள் பலாத்காரம் செய்கிறார்கள்' என்று சொல்லுவதா? எவ்வளவு கஷ்டப்பட்டுப் பலாத்காரம் ஏற்பட இருந்ததை இப்போது அடக்கவேண்டியதாயிற்று! போலீசார், கூட்டத்திற்குக் காவல் அளிக்கவேண்டியதில்லை என்றாலும் காலிகளுக்காவது காவல் அளிக்கவேண்டாமா? இன்று இவ்வூர்ப் போலீசும் தண்டோரா அடிக்கக்கூட அனுமதி கொடுக்கவில்லை; நோட்டீசு அச்சடிக்க அச்சாபீசுகள் பயப்படுகின்றன.

இந்தக் கிளர்ச்சிக்குப் பணம் வசூல் செய்வதைத் தடுக்கப் பல போக்கிரித்தனமான—அற்பத்தனமான பிரச்சாரங்கள் செய்யப்படுகின்றன. இந்த நிலையில் நாங்கள் என்ன செய்வது?

தொண்டர்களைச் சிறை பிடிப்பதையும், தண்டிப்பதையும் அவர்களை நடத்துவதையும் சற்றுப் பாருங்கள்! 150 பேர்களைச் சிறைபிடித்துத் தண்டித்துவிட்டு, இப்போது அந்தக் காரியத்திற்குச் சிறைபிடிப்பது நிறுத்தப்பட்டுப் போய்விட்டது என்றால், இதுவரை பிடித்தது ஒழுங்கா, நியாயமா? நீங்களே யோசித்துப் பாருங்கள்.

இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியைப் பற்றி காங்கிரஸ் காரிய கமிட்டி, 'தப்பு அபிப்பிராயத்தின்மீது அக் கிளர்ச்சி நடப்பதால் அதை விலக்க காங்கிரஸ் தலைவருக்கு அதிகாரமளித்திருக்கிறது' என்று தீர்மானித்திருக்கிறது.

அப்படியானால், அபிப்பிராய பேதத்தினால் நடத்தும் காரியத்துக்கு ஆறுமாதம் ஒரு வருஷம், இரண்டு வருஷம் கடின காவலா என்று கேட்கிறேன். இதுதான் ஜனநாயகமா? இதுதான் அபிப்பிராய சுதந்திரமுள்ள பிரஜா உரிமை ஆட்சியா? நீங்களே யோசித்துப் பாருங்கள்.

இந்த அரசாங்கம், இந்தி எதிர்ப்புக் கமிட்டியைச் சட்டம் மீறுவதற்கும், ஆயிரக் கணக்கான மக்களைச் சட்டம்மீறித் தீரவேண்டுமென்றா கட்டாயப்படுத்தவும் தூண்டச் செய்கிறது? இதில் சர்க்காருக்கு என்ன லாபம் கிடைக்கப்போகிறது என்று கேட்கிறேன். அரசாங்கத்திற்கும், சட்டத்திற்கும் பணிந்துபோவது அவமானம் என்று மக்கள் கருதும்படி செய்கின்றது.

நாம் என்ன செய்வது? கிளர்ச்சிகூடச் செய்யக்கூடாதா? தோழர் சத்தியமூர்த்தியார் 'இந்தக் கிளர்ச்சிக்காரரை, ராஜத் துரோகச் சட்டப்படி வழக்குத்தொடுத்துத் தூக்கில் போடும்படி' சர்க்காருக்கு யோசனை கூறுகிறார். இப்போது நடத்தும் சட்டமே கொடுங்கோலாட்சி என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

ஆகவே, காங்கிரஸ் ஆட்சியின் யோக்கியதையும், அதைக் கையாளும் பார்ப்பனர்கள் யோக்கியதையும் நீங்களே முடிவுசெய்து கொள்ளுங்கள் என்பதாகக் கூறிவிட்டு, படைத் தொண்டர்களுக்கு ஈ. வெ. ரா. செய்த உபதேசமாவது:

இப் படையை நடத்துகிறவர்கள் பொறுப்புள்ள பெரியார்கள். இவர்கள் நடத்தையில் படை வெற்றிகரமாய் முடிவுபெறும் என்றே கருதுகிறேன். ஒற்றுமை, சிக்கனம், சமரச எண்ணம் ஆகியவை படைத் தலைவர்களுக்கு வேண்டும். தொண்டர்களுக்குப் பொறுமை, சகிப்புத்தன்மை, கிடைத்ததைக்கொண்டு திருப்தி அடையும் தன்மை ஆகியவை வேண்டும்.

எதிரிகள் பல சூழ்ச்சி செய்வார்கள்; சிறியதைப் பெரியதாக்கிப் பழிகூறப் பல எதிரிகள் இருக்கிறார்கள். எதிரியிடம் கூலி வாங்கிக்கொண்டு நம்மைக் காட்டிக்கொடுத்துப் பிழைக்கும் பல ஈனர்கள் நமக்குள்ளாகவே இருந்து குடிகெடுத்து வருகிறார்கள். இந் நிலையில் இயக்கத்துக்குக் கேடுவராமல் பார்த்துக்கொள்ள வேண்டியது மிகவும் முக்கிய

www.thamizham.net - Free E book No 3041

மாகும். எவ்வளவு பழிசுமத்தினாலும், எவ்வளவு இழிவுபடுத்தினாலும் இவற்றை எவ்வளவு பேர் நம்பினாலும்—நான் மாத்திரம் களைத்துப் பின்வாங்குகிறவனல்ல. எனக்கு எனது லட்சியம்தவிர வேறு ஒன்றுமே இல்லை. அதற்காகவே உயிர் உள்ள அளவும் பாடு பட்டுத்தான் சாவேன். யார் என்ன சொன்னாலும் வெட்கப்படப்போவதில்லை. யார் என்ன மோசம் செய்தாலும்சரி, துரோகம் செய்தாலும்சரி—வாழ்நாள் முடிகிறவரை கிடைத்த ஆயுதத்தைக்கொண்டு காரியம் செய்கிறதென்ற முடிவில்தான் இருக்கின்றேன்.

ஆகவே, தோழர்களே! இம் மாபெரும் லட்சியத்திற்குத் தொண்டாற்றும் வேலையை யாவரும் தங்கள் வாழ்வுக்குப் பயன்படுத்திக்கொண்டு, காரியத்தைக் கெடுக்காமல், லட்சியத் துக்குக் கூடுமானவரை தொண்டாற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[திருச்சி டவுன்ஹாலில், 1-8-1938-ல் இந்தி எதிர்ப்புப் படை வழி அனுப்புவிழாக் கூட்டத்தில், சொற்பொழிவு—'விடுதலை' 2-8-1938]

## 3. கட்டாய இந்தி ஒழிந்தது!

'இந்தி கட்டாயப் போதிப்பு உத்தரவு' மாற்றப்பட்ட சர்க்கார் அறிக்கையைப் பார்த்தேன்.

இவ்வளவு நாள் பொறுத்தாவது, நமது கவர்னர், இந்தி எதிர்ப்பானது இந் நாட்டுப் பெரும் பகுதியான மக்களின் ஆத்திரத்துடன் கூடிய எதிர்ப்பு என்பதை உணர்ந்து கொண்டதற்கும், இப்போது போதித்துவரும் கட்டாய இந்திப்போதனைமுறை பயனற்றதும் கூடாததும் என்றுணர்ந்து, அந்த முறையையும் கட்டாயப் போதிப்பையும் ரத்து செய்த தற்கும் மகிழ்ச்சியடைகிறேன்.

ஆனால், அந்த அறிக்கையின்படி இந்தி இனி இஷ்டபாடமாக வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டாலும், அதற்காகப் பொது மக்களின் வரிப் பணம் செலவழிக்கப்படுவதை நான் வீண்—அனாவசியமான செலவு என்று வருத்தத்துடன் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

இம் மாதிரிச் செலவுக்கு சர்க்கார் அறிக்கை சொல்லும் காரணம், 'மெயில்' பத்திரிகை சொல்லுகிற பிரகாரம், பொருத்தமற்றதும்—நியாயமற்றது மாகும் என்பதுதான் எனது அபிப்பிராயமுமாகும். ஏனெனில், இந்தியா என்கின்ற பெயருள்ள பூபாகத்தில் பல பாஷைகள் பேசும் பல மாகாணங்கள் இருக்கும்போது, 'தென்னிந்தியர் இந்தி படிப்பது, இந்தி பேசும் மாகாண மக்களுடன் பழகுவதற்கு அனுகூலமாயிருக்கும்' என்று சொல்லுவது அசட்டுத்தனமேயாகும். ஒரே ஒரு பாஷை பேசும் மக்களுடன் பழகுவதற்கு மாத்திரம் அனு கூலமாயிருக்கும் மற்றொரு பாஷைக்கு—பொது மக்களின் வரிப் பணமும், பொதுப் பள்ளிக் கூட முயற்சியும் ஏன் செலவழிக்கப்படவேண்டும்? மற்றபாஷை மாகாணங்களுடன் தென்னிந்தியர் பழக வேண்டுமானால் அதற்கு என்ன செய்வது? மற்றும், இப்போதைய சர்க்கார் அறிக்கை முறைப்படி, ஒரு தமிழ் மாணவன் இந்தியை இஷ்டபாடமாக எடுக்க வேண்டுமானாலும் அவன் தனது தாய் மொழியை விட்டு விட்டுத்தான் இதையெடுக்க வேண்டியவனாக ஆவான்.

ஆகையால், இந்தப் பாகம் மாத்திரம், ஒன்று—யோசனை இல்லாமல் செய்த காரியமாய் இருக்க வேண்டும்; அல்லது மாஜி கனம் ஆச்சாரியாரைத் திருப்திப்படுத்த கவர்னர் பிரபு எடுத்துக்கொண்ட கோணல்வழி முயற்சியாய் இருக்கவேண்டும். எப்படியிருந்த போதிலும், தமிழர் விருப்பப்படி இந்தி கட்டாயப் போதிப்பு ஒழிந்ததற்கு மகிழ்ச்சியடைகிறேன்.

நமது பிறவி எதிரிகளான பார்ப்பனர்களும், அவர்களது கூலிகளும், பர்ப்பனப் பத்திரிகைகளும் நமது விஷயத்தை மறைத்தும், குறைத்தும், திரித்தும், விஷமத்தனமாகக்

www.thamizham.net - Free E book No 3041

கூறியும், வெளியிட்டும், நம்மை எதிர்த்தும், நம் முயற்சியைக் கெடுத்து வந்தும் நாம் வெற்றி பெற்றோம். இதற்குத் தமிழர்களின் ஒற்றுமையும் தன்மான உணர்ச்சியுமே காரணமாகும்.

ஆரம்ப முதல் கட்டாய இந்திப் போதிப்பை எடுத்துவிடக் கிளர்ச்சி செய்யப் பெரிய தொரு ஊக்கமும் உற்சாகமும் ஏற்படும்படி உதவி செய்து வந்த 'மெயில்' பத்திரிகைக்கு நான் தனியான நன்றி செலுத்துவதுடன், நம்முடன் ஒத்துழைத்துப் பல வகையில் ஆதர வளித்தவர்களுக்கும், பல கஷ்ட நஷ்டங்களை ஏற்றுத் தீவிரக் கிளர்ச்சியில் பங்கெடுத்துக் கொண்டவர்களுக்கும், பொருளுதவி செய்தவர்களுக்கும் எனது மனப் பூர்த்தியான நன்றி யறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இனி, அடுத்துத் தொடங்கப்போகும் கிளர்ச்சிகளிலும் தமிழர்கள் இதுபோலவே ஒத்துழைக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

['குடி அரசு'—அறிக்கை—25-2-1940]

## 4. சோதனைக் காலம்

'விடுதலை' தினசரிப் பத்திரிகைக்கு சுயராஜ்ய சர்க்கார் என்னும் பார்ப்பன ஆதிக்க ஆட்சியால் 2000 ரூபாய் ஜாமீன் கட்டவேண்டுமென்று கட்டளை பிறப்பிக்கப்பட்டுவிட்டது. அக் கட்டளையின் தன்மையையும், அதன் காரணத்தையும் நான் படித்துப் பார்த்த வரையில், 'விடுதலை'ப் பத்திரிகையை எப்படியாவது அடக்கி, ஒடுக்கி நடைபெறாமல் செய்துவிட வேண்டும் என்கின்ற முடிவுக்கு வந்து, அதற்காகச் செய்யவேண்டிய முறையையே கிரமப்படிச் செய்து வருகிறது என்கின்ற முடிவுக்குத்தான் வரவேண்டியவ னாக இருக்கிறேன்.

இந்த ஜாமீன் கட்ட வேண்டும் என்கிற கட்டளையானது பத்திரிகைக்குத்தான் ஜாமீன் கேட்கப் பிறப்பிக்கப்படுகிறது என்பதாகக் காணப்பட்டாலும், ஜாமீன் கேட்கப் படுவதற்குச் சர்க்காரால் காட்டப்பட்டு இருக்கும் காரணங்கள்,—திராவிடர் கழகத்தை ஒழித்து, அதற்காக எனது பிரசாரத்தைத் தடுத்து, திராவிட மக்களுக்கு—மதம், சமுதாயம், அரசியல் முதலிய துறைகளில் இருந்துவரும் குறைபாடுகளையும், இழிவுகளையும் இனியும் செய்யப்பட்டு வரும் வஞ்சகங்களையும் முன்னேற்றத் தடைகளையும் எவரும் எந்த விதத் திலும் எடுத்துச் சொல்லாமல் இருக்கும்படி செய்யப் போகிறார்கள் என்பதைக் காட்டுவ தாகவும் இருக்கின்றன. இந்த நிலை நமக்கு (திராவிட மக்களுக்கு) ஒரு சோதனைக் காலமாகும். அதாவது, திராவிட மக்கள் திராவிட நாட்டில் மனிதர்களாக வாழ்வதா, அல்லது 'சூத்திரர்'களாக, பார்ப்பனர்களின் அடிமைகளாக என்றென்றும் மனு தர்மப் படியான ஒடுக்கப்பட்ட மக்களாக—இந்துவாக இருப்பதா என்கின்ற சோதனை.

நான் எனது வாழ்நாளின் முக்கிய காலத்தையும், எனது தொண்டின் முக்கியத் தையும், முடிவான இலட்சியத்தையும், திராவிட மக்கள், சமுதாயம், மதம், சமூகம், அரசியல் ஆகிய துறைகளில் கீழ்மைப் படுத்தப்பட்டு—தடைப் படுத்தப்பட்டு இருந்து வருவதை மாற்றியாக வேண்டும் என்பதற்கே பெரிதும் பயன்படுத்தி வருகிறேன். இனியும் இதற்கே பயன்படுத்துவது என்கின்ற முடிவிலேயே இருக்கிறேன். அதோடு, எந்தக் காரணத்தாலோ இன்றைய நிலை நமக்குச் சிறிது நம்பிக்கை கொடுப்பதாக இருக்கிறது. இந்த நம்பிக்கை வளர்ச்சியடைவதாகவும் இருக்கிறது. எனது முடிவும், தொண்டும்—இந்த நம்பிக்கைக்கும், வளர்ச்சிக்கும் இடம் ஏற்பட்டுவிட்டதான நிலையும்தான் பார்ப்பன ஆதிக்க ஆட்சியை இப்படிப்பட்ட அடக்குமுறைப் பாணங்களை எய்யச் செய்திருக்கின்றன.

பலாத்காரம், கலவரம், குழப்பம் முதலியவை சிறிதுகூட ஏற்படுவதற்கு இடமில் லாமல்—எந்தச் சங்கதியையும் சிறிதுகூட அதிகப்படுத்திப் பேசாமல், உண்மைகளையே

www.thamizham.net - Free E book No 3041

அமைதியான தன்மையில் குறிப்பிட்டு, எந்த மனிதனைப்பற்றியும் தனித்த குறை கூறாமல், இலட்சிய வெற்றியையே கவலையாய்க் கொண்டு செய்துவருகிற பிரசாரத்தை இந்தப்படித் தவறான முறையில் தடுத்துத் தொல்லை கொடுப்பது என்று முடிவு செய்தால், இனி நாம் என்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றிச் சிந்தித்து, ஏதாவது ஒரு முடிவுக்கு வரவேண்டியது அவசரமான அவசியமாகிவிட்டது.

மதத்தில் திராவிடன் கீழ்சாதி; சமுதாயத்தில் கீழ்த்தர வேலை உழைப்பாளி; பொருளாதாரத்தில் ஏழை; கல்வியில் 100-க்கு 85 கை நாட்டுப் பேர்வழி; அரசியலில் பெரிதும் கீழ்த்தரச் சிப்பந்தி. இந்த நிலையில் இருப்பதோடு பெருவாரியான வரியும் கொடுத்துவருகிறவனாக இருக்கிறான். இப்படிப்பட்டவன் தனது குறைகளை எடுத்துச் சொல்லவும் தனது உரிமைகளைக் கேட்கவும் செய்வது தவறு என்று, இந்த ஜாமீன் உத்தரவால் ஆகிவிட்டது.

திராவிட நாட்டில் திராவிட மக்கள்—திராவிட மொழிக் கல்வியில் 100-க்கு 85 பேர் எழுத்து வாசனை அற்றவர்களாக இருக்கும்போது, ஆரிய நாட்டு ஆரிய மொழியைப் பள்ளியில் புகுத்தி இருப்பதோடு, அரசியல்—நிர்வாகம் முதலிய பதவிகளுக்கு, உத்தியோகங்களுக்கு ஆரிய மொழி (இந்தி) கட்டாயமாக்கப்பட்டு இருக்கிறது. சட்டம், நீதி, வைத்தியம், இஞ்சினியரிங் முதலிய நிர்வாகத் துறைகள்—ஆங்கிலத்தில் நடத்தப்பட்டுக் கற்பிக்கப்பட்டு வருகின்றன; இவைகள் கற்கப்பட ஆங்கிலப் புத்தகங்களையே பெரிதும் படிக்க வேண்டியிருக்கிறது. பொதுவாக எப்படிப்பட்ட தாய்மொழிப் பேச்சாளராக இருந்தாலும் இரு மொழிக்காரர் பேசுவதாயிருந்தால்—தங்கள் இரு தாய் மொழிகளையும் விட்டுவிட்டு ஆங்கிலத்தில் பேசிக்கொள்ள வேண்டியிருக்கிறது. சர்க்கார் ஆதாரங்கள், நடப்புகள்—உள் நாட்டிலும், வெளிநாட்டிலும் ஆங்கிலத்திலும், மாகாணத்துக்கு மாகாணம் ஆங்கிலத்திலும், வெளிநாடுகள் சம்பந்தம் ஆங்கிலத்திலும் இருந்து வருகிறபோது—பள்ளியில் கல்வி பயிலும் குழந்தைகளுக்கு 10, 12 வயதுவரை அதாவது (First Form) 6-வது வகுப்பு வரை ஆங்கிலம் கற்பிக்கக்கூடாது என்று சர்க்கார் இன்று ஏற்பாடு செய்திருப்பதானது—சிறிதாவது அறிவுடைமை என்றோ, அதனால் திராவிட மக்களுக்குக் கேடில்லையென்றோ, யாராவது சொல்லமுடியுமா? நாம் ஒரு பையனைப் படிக்க வைக்க—அவனது 6-வது ஆண்டிலே துவக்குகிறோம். அவன் 'செகன்ட் பாரம்' என்னும் 2-வது பாரத்திற்கு வர குறைந்தது ஆறுவருஷம்; சிலருக்கு 7 வருஷம் படிக்கவேண்டியிருக்கிறது. 12, 13-வது வயதில் ஆங்கிலம் துவக்கினால் மேற்கண்ட சட்டம், வைத்தியம், இஞ்சினியரிங் முதலியவைகளை ஆங்கிலத்தில் படித்துத் தேறமுடியுமா? படிப்புக்கு உருப்போட்டு ஒப்புவிப்பதையே—பரீட்சைத் தேர்வுக்கும், கெட்டிக்காரத்தனத்துக்கும், தகுதிக்கும், யோக்யதா பட்சமாக வைத்திருக்கும்போது இதில் திராவிடப்பிள்ளை படித்துத்தேறி அதிக மார்க்கு வாங்கி மேல் வகுப்பில் சேருவதற்கும், உத்தியோகத்திற்கும் தகுதியாக முடியுமா? 'எந்த மாணவனும் தனக்குப் படிப்பில்—உத்தியோகத்தில் இருந்துவரும் தடைகளை, வசதிக் குறைவுகளைச் சொல்லிச் சலுகை அல்லது பரிகாரம் கேட்கக்கூடாது' என்று சட்டமும் செய்திருக்கும்போது—திராவிட மக்கள் கதி என்ன ஆவது? இந்த நிலையில் இதுவரை இருந்துவந்த வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ உரிமை (கம்யூனல் ஜீ. ஒ.) என்று இருந்து வந்ததையும் எடுத்துவிட்டதாக, மேலிடத்தில் இருந்து அறிக்கை வந்துவிட்டதென்றால்—உத்தியோகத்தில் திராவிடமக்கள் நிலை என்ன ஆவது?

இப்படிப்பட்ட நிலையில் உள்ள மக்களின் ஒரே ஒரு சார்பு ஆயுதமான 'விடுதலை'யில் இவைகளை எழுதுவதும், எடுத்துச் சொல்வதும் குற்றம் என்று ஆகிவிட்டால் திராவிடமக்களுக்கு இனிப் பரிகாரம்தான் எப்படிக் கிடைக்கமுடியும்? ஆகவேதான் சர்க்கார், 'விடுதலை'மீது எடுத்துக்கொண்டிருக்கும் நடவடிக்கைகள் பற்றி—நாம், இனிச் சிறிதும் அலட்சியமாக இருக்கமுடியாது; உடனே முக்கியமாய்க் கவனித்து ஒரு முடிவுக்கு வரவேண்டியதற்கேதுவான காரியமாகும் இது.

['விடுதலை'—தலையங்கம்—16-6-1948]



www.thamizham.net - Free E book No 3041

# 6. 'வாழ்ந்தால் மானத்தோடு வாழ்வோம்'

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

இன்றைய நிலையில் திராவிட மக்கள் நாதியற்றவர்களாக ஆக்கப் படுகின்றனர்; நமது உரிமைகள் பறிக்கப்படுகின்றன. அரசாங்கத்தார் நமது குறைபாடுகளுக்குப் பரிகாரம் செய்யக் கவலை கொள்ளாமல், மேலும் மேலும் தொல்லை கொடுப்பதிலேயே கவனம் செலுத்தி வருகின்றனர். எப்படியாவது நமது கழகத்தை ஒழித்துக்கட்ட வேண்டும் என்பதாகத்தான் எண்ணுவதாகத் தெரிகிறது.

நாம் அரசாங்கத்திற்கு ஒரு கெடுதியும் செய்யாதபோது—நமது தோழர்களுக்கும்—'அமைதியாய் இருங்கள்—கட்டுப்பாடாய் நடவுங்கள், வீண் கிளர்ச்சிகள் செய்து நமது அரசாங்கத்தோடு மோதிக்கொள்ளாதீர்கள்; அவர்களும் திராவிடர்—நாமும் திராவிடர்; நம் தொண்டு அவர்களுக்கும் சேர்ந்ததுதான்; நீங்கள் அமைதியைக் கைக் கொள்ளுங்கள்; சர்க்காருக்குத் தொல்லை கொடுப்பதல்ல நம் வேலை; நம் மக்களுக்கு இருந்துவரும் இழிவைப் போக்க நாம் வாதாடுகிறோம்; நாம் சூத்திரராய் இருப்பதை வெறுக்கிறோம்; அதை ஒழிக்க முயலுகிறோம்; இன்றுள்ள அரசாங்கத்தாரைக் கொண்டே அதை ஒழிக்க நாம் முயற்சிப்போம்' என்று, இவ்வாறாக நாம் எடுத்துக்கூறி வந்தும், இன்றைய சர்க்கார் பார்ப்பனர்களின் பேச்சைக் கேட்டு நமக்குத் தொல்லைகளையும், கஷ்டங்களையும் கொடுக்க முன்வந்து விட்டார்கள். நாம் எவ்வளவோ இதுவரை அடக்கமாய் இருந்தும் அவர்களே நம்மை வம்புச் சண்டைக்கு இழுக்கிறார்கள்.

கடைசியாக, நமது கலாசாரத்திற்கும் மொழிக்கும் இடையூறு விளைவிக்க முன்வந்து விட்டார்கள். 10 ஆண்டுகளுக்கு முன்னே நம்மால் வெறுத்து முறியடிக்கப்பட்ட இந்தி மொழி இன்று நமது இளைஞர்கள், குழந்தைகள் தலையில் கட்டாயமாக்கப்பட்டு விட்டது. முதலில், ஒரு கூட்டத்தார் இஷ்டப்படாததால் இந்தி கட்டாயமில்லை என்று சொன்ன கல்வி மந்திரியார், பார்ப்பனர்களின் கண்டனத்திற்குப் பயந்து, அவர்கள் மூக்கு சொறிந்ததற்குப் பயந்து—'இந்தி கட்டாயப் பாடம்' என்று இடம் கொடுத்து, இன்று நமது மக்களுக்கு இந்தியைக் கட்டாயமாக்கி விட்டார்கள். இதுவரை அவர்கள் செய்துவந்த எல்லையில்லா அக்கிரமங்களுக்கு எல்லாம் பொறுத்துவந்த நாம், இனி ஏதாவது ஒரு முடிவுக்கு வரவேண்டியவர்களாகி விட்டோம்.

மக்கள் சர்க்கார் என்று சொல்லிக்கொண்டு பதவிக்கு வந்தவர்கள், மக்களின் குறைபாடுகளுக்குக் காது கொடுக்காதவர்களாகி, பார்ப்பனரின் வாக்குக்கு மதிப்புக்கொடுத்து பார்ப்பன அடிமை சர்க்காராக ஆகிவிட்டனர். பேச்சுச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம் என்றெல்லாம் மக்களை ஏய்த்து ஓட்டுப்பெற்று, இன்று பதவியில் அமர்ந்ததும்—பேச்சுச் சுதந்திரம் எழுத்துச் சுதந்திரம் எல்லாம் பறிக்கப்படுகின்றன. திராவிடர்களின் நன்மைக்காக உழைக்கும் ஒரே தினசரியாகிய 'விடுதலை'க்கு, இன்று ரூ. 2000/– ஜாமீன் கேட்கப் பட்டிருக்கிறது. இது ஒரு பொதுஜன சர்க்காராகுமா? நீங்களே யோசித்துப் பாருங்கள்! நம்மவர்களைக் கொண்டே நம் கண்களைக் குத்தும் வேலையில் பார்ப்பனர்கள் இறங்கி விட்டார்கள். கேள்வி கேட்பாரற்றுப் போய்விட்டது.

எங்கு பார்த்தாலும் கொலை, கொள்ளை, லஞ்சம், பித்தலாட்டம், கள்ள மார்க்கட் முதலியவைகள் தாண்டவமாடுகின்றன. நீதி என்பது இல்லை. நம் கடமைகளைத் தடுப்பதும், கொடிகளைப் பறிப்பதுமாக—முரட்டுத்தனமாக சர்க்கார் நடக்கிறது. காலிகளின் தொல்லைகளை அடக்குவதில்லை.

ஏகாதிபத்திய சர்க்கார் என்று சொல்லி வெள்ளையரைக் குறைகூறி வந்த இந்த மகானுபாவர்கள் எந்த விதத்தில் அவர்களைவிடச் சிறந்தவர்களாவார்கள்? வெள்ளையர் ஆட்சியில் காணாத குறைபாடுகளும், பட்டினி, கொலை, கொள்ளைகளும், யுத்தங்களும் இன்று மலிந்துவிட்டனவே? ஆகவே, நாம் ஒரு முடிவுக்கு வந்துவிட்டோம். 24-6-1948-ல்

www.thamizham.net - Free E book No 3041

திருச்சியில் கூடிய நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில், இன்றைய சர்க்காரின் அடக்குமுறைக் கொடுமையை ஒழிக்கக் கிளர்ச்சி செய்யவேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு விட்டது. நிலைமையை உணர்ந்து இதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யப் பூரண அதிகாரத்தையும்—தலைவர் என்ற முறையில் என்னிடம் அளித்திருக்கிறார்கள். அதைக் கொண்டு தான் நான் ஜில்லாதோறும் சென்று நம் இயக்கத் தோழர்களை, இளைஞர்களை, பணியாளர்களைக் கண்டு, அவர்கள் நிலை எவ்வாறிருக்கிறது, ஆதரவு எப்படி இருக்கும் என்பதை அறியவேண்டும் என்பதற்காக ஒவ்வொரு ஜில்லாவாகப் போகப்போகிறேன்.

அதாவது போராட்டம் நடக்குமானால், அல்லது நம்மீது அடக்குமுறைப் பாய்ச்சல் பாய்வார்களானால் நம்மவர்கள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்றும், அப் போராட்டத்தின்போது இன்றைய சர்க்கார் எப்படி எப்படி நடந்துகொள்ளும் என்பதைப் பற்றியும் எடுத்துக்கூறிப் பின்தான் உங்கள் உதவியை நாடுவேன். சென்ற போராட்டத்தின் போது, அன்றிருந்த சர்க்கார் காங்கிரஸ் சர்க்காராயிருந்தாலும் வெள்ளையனிடத்தில் மேல் அதிகாரம் இருந்துவந்ததினால் அவர்கள் காட்டுராஜா ஆட்சி நடத்த முடியவில்லை. இன்றைய சர்க்கார் ஒரு அநாகரிக சர்க்கார், காட்டுமிராண்டி சர்க்கார். காலித்தனத்தினாலும், கட்டுப்பாடான பித்தலாட்டத்தினாலும் மக்களை ஏய்த்து அரசாங்கத்தைக் கைப் பற்றினவர்களின் சர்க்கார். அதனால், அக் காரியத்தை இனி அனுமதிக்கமாட்டார்கள். ஆகவே, இப்போதும் முன்போலவே இவர்கள் நமக்கு மிகுந்த தொல்லைகள் கொடுப் பார்கள். கண்ணீர்ப் புகைவிட்டு மக்கள் கூட்டத்தைக் கலைக்க முன்வருவார்கள். முட்டிக்கு முட்டி அடிப்பார்கள்; சுடுவார்கள். நம் வீட்டுக்குள் புகுந்து நம் பெண்டு பிள்ளைகளை வதைப்பார்கள். தொழிலாளத் தோழர்களுக்குச் செய்த துன்பத்திற்குமேல் செய்வார்கள். எப்படியாவது நமது கிளர்ச்சியை அடக்க முன்வருவார்கள்.

பிரிட்டிஷார் நடந்துகொண்ட நாகரிக சர்க்கார்போல் இது நடக்காது. நம்மைச் சிறைப்பிடித்து 'ஏ' கிளாஸ், 'பி' கிளாஸ் கொடுத்துப் பச்சரிசிச் சோறும், தனியாகப் பாலில் உறைக்கு ஊற்றிய தயிரும், வெண்ணெய் உருக்கின நெய்யும், உருளைக் கிழங்கும், பருப்பும், பழங்களும், மாமிசம் முட்டையும், பத்திரிகைகளும் கொடுத்து நம்மை உபசரிப் பார்கள் என்று கருதாதீர்கள்! இவைகளெல்லாம் இன்றைய சுயராஜ்யம் தேடிய தேசபக்தர் களுக்கு—வெள்ளையன் ஆட்சிக் காலத்தில்—அந்த சர்க்காரால் சிறைப்படுத்தப்பட்டபோது மாமியார் வீட்டுக்குப்போன புது மருமகன் போலக் கொடுக்கப்பட்டன. அந்தச் சுகத்தை அனுபவித்து, 'தியாகிகள்' பட்டம் பெற்றவர்கள்—இன்று பதவி மோகத்தில் மூழ்கி நாற்காலிச் சண்டை போட்டுக்கொண்டு இருப்பவர்கள். இவர்களால் நமக்கு இப்படிப் பட்டவைகளெல்லாம் கிடைக்கும் என்று நினைத்து யாரும் ஏமாறவேண்டாம். அப்படி அவர்கள் நடந்தால் ஒழிந்துபோக வேண்டியதுதான். இவை எல்லாம் ஏன் சொல்கிறேன் என்றால், நாளைக்குப் போராட்டத்தில் இறங்கியபின், 'இப்படியெல்லாம் வரும் என்று தெரியாது!' என்று சொல்லி மனத் தளர்ச்சியடையக்கூடாது என்பதற்காகத்தான். இவர் களால் என்னென்ன தொல்லை கொடுக்கமுடியுமோ அவ்வளவையும் கொடுத்தபின்தான் திருப்தியடைவார்கள். இவைகள் எல்லாம் தெரிந்த பின்னர்தான் நீங்கள் கிளர்ச்சியில் இறங்கவேண்டும்; இறங்கியபின் உறுதியாகக் கடைசிவரை இருக்கவேண்டும். நம் பின் சந்ததிக்காவது மனிதத் தன்மையும், மானமும் தேடிவைத்துவிட்டு நாம் மறைவோம்; இதில் கண்டிப்பாக நாம் பல நூற்றுக்கணக்கில் மாளவேண்டிவரும். சரித்திரத்தில் பொறிக்கப்படவேண்டிய நிகழ்ச்சியாக இருக்கும் இது. தமிழரின் பெருமை, திராவிட மக்களின் வீரம், அவர்களது அடிமை நீக்க உணர்ச்சி இவைகளுக்குக் காலம் வந்துவிட்டது. ஒன்று, 'வாழ்ந்தால் மானத்தோடு—வீரத்தோடு வாழ்வோம்! அல்லது மடிவோம்!' என்ற உறுதியுடன் ஒவ்வொருவரும் இறங்கவேண்டும். இதில் வருகிறவர்களுக்கு ஒரு இலாபமும் கிடைக்காது. இது பணக்காரன் இயக்கம் அல்ல. அல்லது, சிலர் கூடிப் பித்தலாட்டக் கூட்டமாகி, பதவி வேட்டைக்காக வியாபாரம் நடத்தும் அரசியல் தந்திர இயக்கமல்ல.

www.thamizham.net - Free E book No 3041

இதில் வருகிறவர்கள் தங்கள் கைப்பொருள்களை இழக்கவேண்டும்; உயிரைத் துறக்க வேண்டும். கஷ்டநஷ்டங்கள் அனுபவிக்கத் தங்கள் வாழ்வைப் பாழாக்கவேண்டும்.

எத்தனையோ ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாய் இருந்துவந்த இழிவுகளை ஒழிக்கப் போகிறவர்கள் நாம். அதற்கேற்ற இந்த விலைகளைக் கொடுத்தால்தான் முடியும். எந்த இயக்கத்திற்கும் இது உண்டு. கஷ்டப்படாமல் சுகம் அனுபவித்த 'அரசியல் இயக்கம்' இதுவரையில் நாட்டில் ஏற்பட்டதில்லை. கடைசி மூச்சு இதுதான். துணிவு கொள்ளுங்கள்! துணிந்து காரியத்தில் இறங்குங்கள்! எனக்கு வெகு கூப்பாடுபோடும் 1000 வேஷக்காரர்கள் இருப்பதைவிட, உறுதியான மனம்படைத்த 100 பேர்கள் இருந்தாலே வெற்றிபெறுவேன். இந்தப் போராட்டத்தில் நாம் தோல்வி அடைந்தாலும் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால், பரிகசிக்கத்தக்க முறையில் இழிவான தோல்வி இருக்கக்கூடாது என்பதுதான். நீங்கள் உரம் பெற்று உண்மையாய்த் துணிந்து காரியத்தில் இறங்க வேண்டுமென்பதுதான் எனது ஆசை. ஒன்று சொல்கிறேன்; இதுவரை என்னால் ஆரம்பிக்கப்பட்ட ஒரு கிளர்ச்சியும் தோல்வியடைந்ததில்லை. எனக்கு நம்பிக்கை உண்டு, இதிலும் வெற்றிபெறுவோம் என்று. தோழர்களே! உங்களுக்குச் சொல்லவேண்டியவைகளை எல்லாம் சொல்லிவிட்டேன். அரசாங்கம் எப்படி நடந்துகொள்ளும் என்பதையும் முன் கூட்டியே சொல்லிவிட்டேன். உதாரணம் ஒன்று சொல்லுகிறேன்.

சென்ற சில மாதங்களுக்கு முன் சென்னையில் நடந்த 'பக்கிங்ஹாம் மில்' தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் (Strike) சர்க்கார் எப்படி நடந்துகொண்டது—அப்படித்தான் நம்மிடமும் நடக்கும். பெண்களென்றும், குழந்தைகள் என்றும், தாய்மார்கள் என்றும், கிழவிகள் என்றும் பார்க்க மாட்டார்கள். பெண்கள் கண்களிலும் கண்ணீர்ப் புகை விடுவார்கள். போலீசாரைக் கொண்டு சுடவைப்பார்கள்; அடிப்பார்கள். மேலும் சொல்லுகிறேன்: நம் நாட்டுப் போலீசாரைக்கூட சுடச்சொல்ல மாட்டார்கள்; ஏன்? அவர்கள்மீது நம்பிக்கை இல்லை; அவர்களுக்கும் திராவிட உணர்ச்சி வளர்ந்துவருவதைத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அதனால், மலபார் போலீசோ வடநாட்டுப் போலீசோ கொண்டுதான் நம்மைச் சுடச் செய்வார்கள். இதற்கெல்லாம் துணிந்து மார்பைக் காட்டக்கூடிய தொண்டர்கள் தாம் எனக்குத் தேவை. திராவிடரின் மரபு மார்பைக் காட்டுவது என்பது தவிர, புறமுதுகு தருவதில்லை. இதை மறக்காமல் வைத்து—வைரம் பதித்த உள்ளம் படைத்த மக்கள்தாம் தேவை. நீங்கள் சிந்தித்து, எத்தனை பேர்கள் வருவீர்கள் என்பதை எனக்குத் தெரிவிக்கவேண்டும். அப்படி வருகிறவர் எவ்வித பலாத்காரத்திற்கும், சமாதான பங்கத்திற்கும், குழப்பத்திற்கும் இடம் இன்றி அமைதியாக நடந்துகொள்ள வேண்டும்.

உங்களுக்குத் தலைவர்களாக வருகிறவர்கள் யாராயிருந்தாலும் அவர்கள் சர்வாதிகாரிகளாகத்தான் இருப்பார்கள். அவர்கள் சொல்லுகிற வார்த்தைகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டும். ஒருவரும் தங்கள் இஷ்டம் போல் நடக்கக்கூடாது. நமக்குக் கட்டுப்பாடு தான் மிகவும் அவசியம். தலைவர்கள் சொல்லை மீறி நடக்கும் மனப்பான்மை கொண்டவர்கள் போராட்டத்தில் இறங்கக் கூடாது. மேலும், 'நம்மவர்களால்தான் இந்தத் தொல்லை ஏற்பட்டது; நாம்தான் தவறு செய்தோம்' என்று மக்கள் பழி கூறும்படியாக நாம் நடந்து கொள்ளக் கூடாது. நம் நடத்தையைப் பார்த்துப் பொது மக்கள் பரிதாபப் படக்கூடிய விதத்தில் நாம் நடந்துகொள்ள வேண்டும். அரசாங்கத்தார் செய்யும் கொடுமைகள் அக்கிரமங்கள் தாம் பொது மக்கள் கண்களுக்குத் தெரியவேண்டும். அவ்வளவு கட்டுப்பாட்டுடனும், அமைதியுடனும் நாம் நடந்துகொண்டு, மக்கள் ஆதரவைப் பெறவேண்டும். வெளியில் ஒதுங்கி இருப்பவர்கள்கூட நமக்கு உதவி செய்ய முன்வருவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

[சென்னையில், 2-7-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 14-7-1948]

www.thamizham.net - Free E book No 3041

தோழர்களே!

இந்தி நம் நாட்டுச் சீதோஷ்ணத்திற்குப் பொருத்தமற்றது; நம் நாக்குக்கு ஏற்க முடியாதது; நமக்குத் தேவையற்றது. 'இந்தி, மனிதர்களை மந்திகளாக்கும்' என்று அன்பர் திரு. வி. க. அவர்கள் கூறினார்கள். அது உண்மையிலும் உண்மை. உண்மையிலேயே இந்தி இராமாயணத்தில்தான்—அதாவது வடமொழி இராமாயணத்தில்தான் நாம் முதலாவதாகக் குரங்குகளாக ஆக்கப்பட்டிருக்கிறோம். அதைப் புகுத்துவதுதான் இந்தியின் தத்துவம். எனவேதான், அதை இவ்வளவு கடுமையாக எதிர்த்து நிற்க வேண்டியிருக்கிறது.

மந்திரியார் நம்மவர் ஆயிற்றே என்று எவ்வளவு காலம் நாம் சகித்துக்கொண்டிருக்க முடியும்? அதிலும் கல்வி இலாக்கா முடிவுகள் வரவர மிகமிகக் கேவலமாக ஆகிக்கொண்டு வருகின்றன. தோழர் சர். இலட்சுமணசாமி முதலியார் போன்ற அறிஞர்கள் எவ்வளவு எடுத்துக்கூறியும் கல்வி மந்திரியார் அறிஞர்களைக் கொண்டு எதுவும் தீர்மானம் செய்வதில்லை. சில சமயம் தன் இலாக்கா அதிகாரிகளுக்குக்கூடத் தெரியாமல் எதேச்சையாக—ஜில்லா கல்வி அதிகாரிகளுக்கும், சில சமயம் கலாசாலை அதிகாரிகளுக்கும், மற்றும் கலாசாலை உபாத்தியாயர்களுக்கும்கூடக் கடிதம் எழுதிவிடுகிறாராம். இதன் பயனாய் ஊழல்கள் மிக மலிந்துவிட்டனவாம். ஆகவேதான், வாரத்துக்கொரு முறை 'பல்டி' அடிக்கவேண்டி இருக்கிறதாம்.

இந்த இந்தி போதனை விஷயத்தில், முதலில் நியமிக்கப்பட்ட கல்விமுறை நிர்மாணக் கமிட்டியார்—'தமிழ் நாட்டில், இந்தி விருப்பப் பாடமாக இருக்கட்டும்' என்று சிபாரிசு செய்தார்களாம். அதன்படிதான் முதல் உத்தரவு பிறப்பிக்கப்பட்டதாம். பிறகு சிலரின் தூண்டுதலின் பேரில் அதே கமிட்டியில் இந்தி கட்டாயப் பாடமாக்கப்பட வேண்டுமென்பதற்கு ஆதரவாயிருந்த ஒரு சிலரை மட்டும் கொண்டு, மறுபடியும் தந்திரமாக ஒரு கிளைக் கமிட்டியை ஏற்படுத்தி, இந்தியைக் கட்டாயப் பாடமாக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டதாம். அதுவும், முன்னையக் கமிட்டியார்—எந்த ஒரு மாணவனோ, மாணவியோ இந்தியைப் படிக்க இஷ்டப்படாவிட்டால் அவர்கள்மீது ஆசிரியரோ, பெற்றோரோகூட வற்புறுத்தக்கூடாது என்று தெரிவித்திருந்தார்களாம். இரண்டாவதாக நியமிக்கப்பட்ட சப்-கமிட்டியாரால் அவ்வளவும் உதாசீனம் செய்யப்பட்டு விட்டது.

ஆகவே தோழர்களே! நாம் இவ்வளவு கேடு செய்யத் துணிந்தவர்களோடு ஒரு போராட்டம் நடத்துவதென்றால் அது வெறும் விளையாட்டுப் போராட்டமாக இருக்காது. பிறகு தீர்மானங்கள் வரும். முறைப்படி நிறைவேற்றப்படும். தீர்மானங்களை நிறைவேற்றுவது பெரிதல்ல. அவற்றை முறைப்படி நடத்திக் காட்டுவதுதான் பெரிது.

முன் இந்தி நம் மாகாணத்தில் நுழைக்கப் பட்டபோது ஆட்சிப் பீடத்தில் அமர்ந்திருந்தவர்கள் வெள்ளையர்கள். அவர்கள் ஒரு நாகரிகப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள்; மனிதத் தன்மையை அறிந்தவர்கள்; மேலும், உலக வாக்குக்குப் பயந்தவர்கள். ஆனால், இன்று ஆட்சிப் பீடத்தில் அமர்ந்திருப்பவர்களோ நாகரிகம் தெரியாதவர்கள் மட்டுமல்லர்; தாமே நாகரிகத்தின் பிரதிபிம்பங்கள் என்றுகூடத் தம்பட்டம் அடித்துக் கொள்பவர்கள்.

காடுகளில் ஆடு மாடுகளைக் கொன்று தின்று வாழ்ந்துவந்த ஆரிய காட்டுமிராண்டிப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள், இன்று நம்மை ஆட்சி புரிபவர்கள்; தன்மான மற்றவர்கள். தந்திரத்தால்—கட்டுப்பாடான பலாத்காரத்தால் ஆட்சியைக் கைப்பற்றியவர்கள். ஆகவே, வெள்ளையன், 'ஆள் கீழே விழுகிறவரை அடியுங்கள்' என்று போலீசுக்கு உத்தரவு கொடுத்தால்—இவர்கள் 'செத்துப் பிணமாகும்வரை அடியுங்கள்' என்று உத்தரவிடுவார்கள். அவன், 'இவர், அவர் என்று பாரபட்சம் பாராமல் அடியுங்கள்' என்றால் – இவர்கள், 'இன்னார், இன்னாரைப் பார்த்துப் பார்த்து அடியுங்கள்' என்று உத்தரவு போடுவார்கள். அவன், 'கண்ணீர்ப் புகை மட்டும் உபயோகியுங்கள்' என்று கூறுவானானால், இவர்கள் 'கண்ணீர்ப் புகை ஏன் – விஷப் புகை விட்டே கொல்லுங்கள்' என்று உத்தரவு பிறப்பிப்

www.thamizham.net - Free E book No 3041

பார்கள். அந்தமாதிரிக் காட்டுமிராண்டிச் செயலால்தான் மக்களை அடக்கமுடியும் என்பதில் நம்பிக்கை உடையவர்கள் இவர்கள். ஆகவே, எத்தகைய எதிர்ப்புக்கும் நாம் தயாராய் இருக்கவேண்டும். இங்குள்ள திராவிடப் போலீஸ்காரர்களைக்கூட நம்ப மாட்டார்கள். மலையாளத்திலிருந்தோ, கூர்ஜரத்திலிருந்தோ, பட்டாளத்தைத் தருவித்து வந்து நம்மீது ஏவிவிடுவார்கள். ஏற்கனவேகூட 2000 பேரை சென்னைக்குத் தருவித்து வைத்திருப்பதாகத் தெரிகிறது. இந்தப் பயங்கர நிலையில்தான் இந்தி எதிர்ப்பு நடைபெற வேண்டும்.

சென்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் இரண்டு பேர் ஜெயிலில் இறந்தார்கள் என்றால், இன்றையப் போராட்டத்தில் 200 பேருக்கு மேலாக வெளியிலேயே இறக்க நேரிடக்கூடும். இதை நீங்கள் நம்பவேண்டும். சற்றேனும் மனிதத் தன்மையோடு நீங்கள் வாழவேண்டுமென்று நினைப்பீர்களானால், இந்தியை ஒழிக்க நீங்கள் கட்டாயம் கங்கணம் கட்டிக்கொள்ள வேண்டும். தாய்மார்களும் போராட்டத்திற்குத் தயாராக வேண்டும். என்ன விலை கொடுத்தேனும் நாம் போராட்டத்தில் வெற்றிபெற வேண்டும். இது கடைசிப் போராட்டம்—வெற்றி அல்லது தோல்வி, இரண்டிலொன்று பார்த்துவிடத்தான் வேண்டும். பண்டைப் பெருமை பேசிப் பயனில்லை. அழகான மேடைப் பேச்சினாலோ, பண்டைச் சரித்திரப் பெருமையினாலோ பயனில்லை. தோழர் அண்ணாதுரை, ‘நானும் வந்து விட்டேன், போராட்டத்தில் முன் நிற்க’ என்று சற்றுமுன் கூறியதுபோல்—நீங்கள் எல்லோரும், இத் திராவிட நாட்டிலுள்ள ஒவ்வொரு ஆணும் பெண்ணும், சிறுவனும் சிறுமியும் முன்வர வேண்டும். நான் ஒன்றும் உங்களுக்குப் பூச்சிகாட்டவில்லை. உண்மையைத் தான் கூறுகிறேன். நினைத்தால் இன்று இரவேகூட உத்தரவை மாற்றிவிடலாம் என்கிற நிலையில் இல்லை அது; அந்த உரிமை இவர்கள் கையிலில்லை. அவ்வுரிமை இவர்களின் சூத்திரதாரிகளான பார்ப்பனர்களிடம் இருக்கிறது. அவர்களுக்கு ஆதரவோ, வடநாட்டாரிடம் இருக்கிறது. அந்த இருவரும் சேர்ந்து நம் மந்திரிகளை ஒழிக்கும்வரை தூங்க மாட்டார்கள். ஆகவே, வடநாட்டவர்களின் ஆதிக்கம், பிணைப்பு நம் மாகாணத்தை விட்டு ஒழிந்தால்தான் இந்தியும் நம் மாகாணத்தை விட்டு ஒழியும் என்பதை மனத்தில் பதிய வைத்துக்கொள்ளுங்கள். பிறகு தெரியும் இந்தி ஒழிவதில் உள்ள சிரமம். நமது குழந்தைகளுக்கு 1-வது வகுப்பு, 2-வது வகுப்புப் படிக்கக்கூடப் பள்ளியில் இடமில்லை என்று நகர்ப்புறங்களில் கூறப்படுகிறது. அதாவது, போதிய பள்ளிக்கூடங்கள் இல்லை; வாத்தியார்கள் இல்லை. என்றாலும் ஒவ்வொரு பாடசாலைக்கும் ஒரு இந்தி வகுப்பும், இந்தி வாத்தியாரும் வைத்துக்கொள்ள வேண்டுமாம். யார் அப்பன் வீட்டுப் பணம் கொள்ளை போவது இதற்கெல்லாம்? ஏற்கனவே பஞ்சத்தில் அடிபட்டுப் பஞ்சைகளாகக் கிடக்கிறோம். மேற்கொண்டு பள்ளிக்கூடப் பிள்ளைகள் சம்பள உயர்வு வேறு. ரூ. 2-12-0 கொடுத்தவர்கள் ரூ. 5-4-0 கொடுக்கவேண்டும். ரூ. 5-4-0 கொடுத்தவர்கள், ரூ. 7-8-0 கொடுக்கவேண்டும். முன்பு 8 மாதச் சம்பளம் கொடுத்தவர்கள் இப்போது இந்த உயர்ந்த தொகையை 10 மாதம் கொடுக்கவேண்டும். இந்தி நுழைவு கல்வித்துறையில் பெருத்த சங்கடமென்றால் கலைத் துறையிலும் அதைவிடச் சங்கடந்தான்.

இந்தியில் மெச்சத் தகுந்த கலைகளே கிடையாது. அதிலுள்ள கலைகள் யாவும் துளசிதாஸ் இராமாயணமும், கபீர்தாஸ் சரித்திரமுந்தாம்; மனுதர்மமும், பாகவதமும்தாம். போதுமா இவை? இவற்றின் தன்மைதான் தெரியுமே உங்களுக்கு? இந்தி மொழி தலை சிறந்த அறிஞர்களைப் பெற்றெடுக்கவில்லை என்று திரு. வி. க. அவர்கள் குறிப்பிட்டார். இந்தி உற்பத்திசெய்த அறிவாளிகள் யார் என்றால் நேரகாமல் பதவிக்கு வந்த நேருவையும், அவருடைய அய்யாவையுந்தான் குறிப்பிடவேண்டும். அவர்களது தியாகம்—இன்று அந்தக் கூட்டம் குடும்பத்தோடு கொள்ளையடிப்பது (உங்களுக்குத் தெரிந்ததுதான்); வேறு ஆட்களைக் குறிப்பிட முடியாது. தமிழ் மொழியோ எண்ணற்ற கலைகளையும், கலைஞர்களையும் அறிஞர்களையும் சித்தர்களையும் முத்தர்களையும் தோற்றுவித்திருக்கிறது.

www.thamizham.net - Free E book No 3041

இந்தியில் கலை இல்லை; காவியம் இல்லை; நீதிநூல் இல்லை. அம்மொழி மூலம் அறியக் கிடக்கும் விஞ்ஞானத் தத்துவங்களும் இல்லை. ஆகவே 100-க்கு 97 பேர் விரும்பாத அம்மொழி–ஏன் இங்குப் புகுத்தப்படவேண்டும்? காரணம் தெரியுமா? இங்குள்ள பார்ப்பன கோஷ்டியார் இத் திராவிட நாட்டின் கலைகளையும் கலாசாரத்தையும் அடியோடு அழித்து இந்நாட்டை வடநாட்டுக்கு வால்நாடாக்கப் பார்க்கிறார்கள். அதுதான் மர்மமே ஒழிய 'இந்தி தேசிய மொழி; ஆகவே, எல்லோரும் படிக்கவேண்டும்' என்று கூறுவதெல்லாம் பித்தலாட்ட வார்த்தைகள். இந்தி தேசிய மொழியாயின் எல்லோரும் கட்டாயமாக இந்தியைப் படித்துத்தான் ஆகவேண்டும் என்று வெளிப்படையாகக் கண்டிப்பாகக் கூறிவிடட்டுமே! இந்தி அல்லது சமஸ்கிருதம் படியுங்கள் என்கிறார்களே, அது ஏன்? இந்தி தேசியமொழியா? அல்லது சமஸ்கிருதம் தேசிய மொழியா? நீங்கள் சற்று அருள்கூர்ந்து சிந்தித்துப் பாருங்கள்!

தேசியம் என்பது பித்தலாட்டம்; வடமொழியை நுழைத்து, அதன்மூலம் வருணாசிரமத்தை நுழைத்து, பெருமை மிக்க திராவிடமக்களைச் சூத்திரர்களாக்கி என்றென்றும் அடிமைகளாக ஆக்கிவைத்துக் கொள்ளப் பார்ப்பனக் 'கூட்டம் செய்யும் பச்சைப் பித்தலாட்டம்தான் இது. நமது தாய்மார்களைச் சூத்திரச்சிகளாக—நமது ஆடவர்களைச் சூத்திரர்களாக—நமது பழங்குடி மக்களைப் பஞ்சமர்களாக, சண்டாளர்களாகவும்; நமது கிறிஸ்தவத் தோழர்களையும், முஸ்லிம் தோழர்களையும் மிலேச்சர்களாக வைத்திருக்கச் செய்யப்படும் சூழ்ச்சிதான் இது. இந்தச் சூழ்ச்சிகளுக்கு நமது அமைச்சர்கள் விபீஷணர்களாகிவிட்டார்களே என்பதுதான் வருத்தமாக இருக்கிறது. இந்தி நுழைவால் உண்மைத் தமிழ்மக்களுக்கு எவ்வித பயனும் ஏற்படாது. கடுகளவு பயன்கூட ஏற்படாது. அதற்கு மாறாக எவ்வளவோ கேடுகள் வந்து சூழும். பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக நாம் போற்றிக் காப்பாற்றிவந்து, கடைசி காலத்தில் கைவிட்டுத் தற்போது வெகு கஷ்டப்பட்டுப் பெற்று வளர்த்துவரும் தமிழ்ப் பண்பு—அடியோடு கெட்டுப் போகும்.

கன்னிகாதானம் என்பதை வாழ்க்கைத் துணை ஒப்பந்தம் என்று மாற்ற எவ்வளவு சிரமப்பட இருந்தது? மாங்கல்ய தாரணம் என்பதை ஒழிக்க எவ்வளவு இம்சைப்படவேண்டி இருந்தது? மற்றும், தேவை இல்லாத சடங்குகளை, புராண இதிகாசக் குப்பைகளின் மீதும், வெறும் கற் கடவுள், செம்புக் கடவுள் இவற்றின்மீதும் இருந்த மூடநம்பிக்கையையும், மூட பக்தியையும் மாற்ற எவ்வளவு காலம் ஆகியது? இவ்வளவு முற்போக்கும் மறுபடியும் அழிந்து போகவேண்டும் என்று நீங்கள் ஆசைப்படுவீர்களா?

சூத்திரன் என்ற வார்த்தையைக் கைவிட்டு 'திராவிடன்' என்று பெருமிதத்தோடு கூறிக்கொள்ளும் நீங்கள், மறுபடி சூத்திரனாக மாற விருப்பம் கொள்வீர்களா? இந்த முற்போக்கைக் கண்டு அஞ்சும் பார்ப்பனக் கூட்டம் வடநாட்டாரின் கூலிகளாகி, அவர்களுக்கு வால்பிடித்து நம்மவர் சிலரை விபீஷணர்களாக்கிக் கொண்டு, தேசியமொழி என்ற பேரால் நம்மீது வடமொழியைச் சுமத்துகிறது என்றால்—நம்மை, நம் நாட்டை வடநாட்டாருக்குக் காட்டிக்கொடுக்கிறதென்றால் நாம் அதற்கு இடங் கொடுக்கலாமா?

தோழர்களே! தாய்மார்களே! இந்தியோடு, வடநாட்டாரையும் சேர்த்து ஒழிக்க வேண்டியதுதான்; அதற்கான அவசியம் ஏற்பட்டுவிட்டது. திராவிடர்–ஆரியர் போராட்டம் —அதுவும் பல ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக இடையறாது இருந்துவரும் இப் போராட்டம், இன்று ஒரு முடிவான கட்டத்திற்கு வந்துவிட்டது. இதை முடித்து வைப்பது நமக்குப் பெருமையுங்கூட. நமது பின் சந்ததியார் போற்றிப் புகழக்கூடிய ஒரு அரிய சந்தர்ப்பத்தில் நாம் இன்று இருக்கிறோம். இந்தச் சந்தர்ப்பத்தைச் சரியாகப் பயன்படுத்திக்கொள்ளாவிட்டால் நாம் எதிர்காலத்தில் பின்சந்ததியாரால் எள்ளி நகையாடப்படுவோம் என்பதோடு, அவர்களின் துன்பத்திற்கும் அடிமைத்தனத்திற்கும் நாமே காரணபூதர்களாகவும் ஆடுவிடுவோம்.

www.thamizham.net - Free E book No 3041

போராட்டத்தைத் துவக்குவோம்; மானமுள்ள மக்களாகப் போராடுவோம்; மானத்தோடு போராடி மடிந்தாலும் தவறில்லை. பின்சந்ததியார் மேலும் வீரத்தோடு போராடி நாம் விட்டுச்செல்லும் பணியைப் பூர்த்திக்குக் கொண்டுவருவார்கள். திராவிடர்கள் மானத்திற்கும், வீரத்திற்கும் பேர் பெற்றவர்கள். ஆகவே, இவற்றைக் கைவிடாதீர்கள். குண்டுபட்டு இறந்தீர்கள் என்றாலும், குண்டு மார்பில் பாய்ந்திருக்கட்டும்! முதுகில் பாயும்படி நடந்துகொள்ளாதீர்கள்! என்றாயினும் ஒருநாள் சாகப்போகிறவர்கள்தான் நாம். ஆகவே, நல்ல காரியத்திற்காக நம் உயிரை நல்ல முறையில் அர்ப்பணித்துச் சாவோம். மந்திரிகள் நம்மவராயிற்றே என்ற நினைப்பை மறந்துவிடுங்கள். நம்மவர்கள் மந்திரிப் பதவியை இழக்க நேரிடுமே என்ற பயத்தையும் விட்டொழியுங்கள். ஒரு ஓமாந்தூராரின் இடமோ, ஒரு அவிநாசியாரின் இடமோ காலியானால் அந்த இடத்தைப் பார்ப்பனர்களைக்கொண்டு அடைக்க முடியும் என்று நினைக்காதீர்கள். தமிழ்நாடு இன்றுள்ள நிலையில் அது சுலபத்தில் சாத்தியமானதல்ல. ஆகவே, இந்தியை ஒழித்துக் கட்டுவதில் நாம் யாவரும் ஒன்றுபடவேண்டும்.

இதில் நம் இளைஞர்களுக்கும், பெற்றோர்களுக்கும் பேத உணர்ச்சி ஏற்படக் கூடாது. இந்தி படித்தல் தம் மக்களுக்குக் கேடு என்பதை ஒவ்வொரு பெற்றோரும் உணர்ந்து அதை ஒழிக்க முன்வரவேண்டும். நம்மிடையே உள்ள பேத உணர்ச்சிகளை விட்டொழிக்க வேண்டும். சின்னஞ்சிறு குற்றங்களை மறந்து நேரடியாகப் போராட்டத்தில் வந்து ஒவ்வொருவரும் கலந்துகொள்ள வேண்டும். இப்போது நடக்கப்போவதுதான் உண்மையான ஆரிய–திராவிடப் போராட்டம்; நம் மானத்தைப் பணயம் வைத்து நடத்தும் போராட்டம். இதில் ஏமாந்துபோனால் பிறகு திராவிடர்களாக இந்நாட்டில் வாழமுடியாது; கண்டிப்பாக, சூத்திரனாகத்தான் வாழவேண்டிய நிலை ஏற்பட்டுவிடும்.

சர்க்காருக்கு நல்ல வீம்பு வந்திருக்கிறது. ஆகவே, எளிதில் நமக்கு விட்டுக்கொடுக்க மாட்டார்கள். ஆகவேதான், திரும்பத் திரும்பப் போராட்டத்தினிடையே அனுபவிக்க வேண்டியிருக்கக்கூடிய கஷ்டநஷ்டங்களைப்பற்றிக் கூறவேண்டி இருக்கிறது. நம்மை அடிப்பார்கள்; நம்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்வார்கள்; நமது தாய்மார்களை மான பங்கப் படுத்துவார்கள்; வடநாட்டுப் பட்டாளத்தைக் கொண்டுவந்து நமது பெண்கள்மீது ஏவி விடுவார்கள்; வீடு புகுந்து கொள்ளையடிக்கச் செய்வார்கள். அப்படிப்பட்ட நிலை கட்டாயம் வரும். அந் நிலையை எப்படியும் ஆட்சியாளர்கள் வரவழைத்துக் கொள்வார்கள். நமது நாட்டுச் சுதந்திரமும், தனிமையும் இந்தப் போராட்டத்தின் வெற்றியைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

நமது பிரிவினை உணர்ச்சியை அழிக்கத்தான் அவசர அவசரமாக இந்தியைக் கொண்டுவந்து புகுத்துகிறார்கள். இது எல்லோரும் ஒன்றுசேரக் கூடிய நல்வாய்ப்பாக இருக்கிறது. மற்ற காரியங்களில் நாமெல்லாம் சுலபத்தில் ஒன்றுசேர முடியாது. இது மொழிப் போராட்டம் மட்டும் இல்லை; கலைப் போராட்டம்; கலாசாரப் போராட்டம் என்று கூடச் சொல்வேன். இது உரிமை வேட்கைப் போராட்டம் ஆகும். இப் போராட்டத்தின் போது எந்த ஒரு திராவிடனாலும்–எந்த ஒரு உண்மைத் தமிழ் மகனாலும் தூங்கிக்கொண்டிருக்க முடியாது. இதை எல்லோரும் அறிந்துகொள்ள வேண்டும். சில நாட்களுக்கு—மாணவர்களுக்குப் படிப்பில்லாவிட்டாலும் பரவாயில்லை என்று, நம் பிள்ளைகளைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பாமல் இருக்கவேண்டியதுதான். மாணவர்களானால் மட்டுமென்ன? அவர்களுக்கும் மனிதத் தன்மை வேண்டாமா? தன்மானம் வேண்டாமா? ஏழை மக்களிடம் இருந்து வரிப் பணம் வாங்கி அதை இந்திச் சனியனுக்கா அழவேண்டும்? இந்த அமைச்சர்களுக்கு எந்த அளவுக்கு மூளை இருக்கிறதென்று பாருங்கள்! ஒரு குழந்தையை 6 வயதில் அல்லது 7 வயதில் பள்ளியில் சேர்க்கிறோம். 12 வயதில் 5 வகுப்பு முடிக்கிறது. 19 வயதில் 6-ம் பாரம் முடிகிறது. அப்புறம் கல்லூரிப் படிப்பு 4 வருடம்; ஆக, 23 அல்லது 24 வயதில்தான் அவன் பி.ஏ. பட்டம் பெற முடிகிறது. இதற்குள்ளாக

www.thamizham.net - Free E book No 3041

திராவிடத் தந்தை

பெரியார் ஈ. வெ. ரா. அவர்களுக்கு

முதுபெரும் தமிழ்ப் புரவலர்,

நாவலர் ச. சோ. பாரதியார் அவர்கள்

அனுப்பிய உறுதிமொழி.


Pasumalai
28-6-48

பெரியார் ஈ. வெ. ரா.
திராவிட கழகத் தலைவர் அவர்களுக்கு.

பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின் தலைமையில் 'இந்தி'யை எதிர்த்துப் போரிடுவதாக
நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் உறுதி கூறி எழுதிய கடிதம்

www.thamizham.net - Free E book No 3041

எவ்வளவு பணம் வீணாக்கப்படுவது? இந்தப் படிப்பால் பெறக்கூடிய பயன்தான் என்ன? இவ்வளவு காலச் செலவையும் பொருட் செலவையும் குறைக்க மந்திரியார் ஏதாவது திட்டம் தீட்டினாரா? அதிகப்படியான ஆரம்பப் பாடசாலைகள் ஏற்படுத்துதல், ஏழை எளியவர்கள் படிப்பதற்கான இலவசப் பள்ளிகள் ஏற்படுத்துதல், கிராமந்தோறும் பாடசாலை இருக்கும்படிச் செய்தல் ஆகியவற்றில் கவனம் செலுத்துவதை விட்டு – ஒன்றுக்கும் உருப்படாத இந்த இந்தி மொழியை ஏன் கட்டியழத் துணிந்துவிட்டார்? காரணம் இதுதான்! பிரிவினை உணர்ச்சி தலை தூக்குமுன் அதை அடியோடு ஒழித்துக் கட்டவேண்டும். மக்களுக்கு ஏற்பட்டுள்ள தன்மான உணர்ச்சி தலை தூக்குமுன் அதை அடியோடு ஒழித்துக் கட்டவேண்டும்; அவர்களை அடிமைகளாக்க வேண்டும் என்ற வடநாட்டாரின் திட்டத்திற்கு அடிபணிந்துவிட்டதுதான்.

ஆகவே, நாமாக வம்புக்குப் போகவில்லை; வம்பை வரவழைத்துக்கொள்பவர் அரசியலார்தாம். மறுபடியும் கூறுகிறேன்: இது அரசியல் போராட்டமல்ல; இனப் போராட்டம்; மனிதத் தன்மைப் பாதுகாப்புப் போராட்டம் என்று. தென்னாட்டவரின் மனிதத் தன்மையை அழித்து இதையும் ஆரிய வர்க்கத்தோடு சேர்த்துக்கொள்ளச் செய்யப் படும் சூழ்ச்சியின் முதல்படிதான்—கட்டாய இந்தி நுழைப்பு. ஆகவே, நாம் இதை எதிர்த்துத்தான் ஆகவேண்டும். ஒருவேளை ஆந்திரர்கள் ஆரிய வர்க்கத்தில் சேர்ந்துவிடுவார்களோ என்றுகூட நினைக்கவேண்டியிருக்கிறது. எவ்வகையாயினும் இதை எதிர்த்துப் போராடியே தீருவோம். இப் போராட்டம், தென்னாட்டுச் சரித்திரத்தில், திராவிடநாட்டுச் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களில் பொறிக்கப்பட வேண்டிய மகோன்னதப் போராட்டமாக அமையும். இப் போராட்டத்தில் வெற்றியின்றேல் தமிழ்நாடு போம்; தமிழ்க்கொடி போம்; தமிழன் சிறப்பெல்லாம் தகர்ந்து போம். நியாயம் நமது பக்கத்தில்தான் இருக்கிறது. தமிழ் காக்க வாரீர்! எங்களுக்கும் வயதாகி விட்டது! நாங்களும் வெற்றி காண ஆசைப்படுகிறோம். ஆகவே, தன்மானத் திராவிடர்காள்! தமிழர்காள்! வெற்றி காணப் போராட்டத்தில் ஈடுபட முன்வாருங்கள். யார் எந்தக் கட்சியில் இருந்தாலும் தன்மானமிருந்தால், தமிழ் காக்க முன்வாருங்கள். 'சாவேன் அல்லது வெற்றியோடு மீள்வேன்' என்ற உறுதியோடு முன் வாருங்கள்! போராட்டத்தில் வெற்றிக்காக ஒழிந்துபடவும் தயாராக முடிவு செய்துகொண்டு முன் வாருங்கள். அப்போதுதான் வெற்றி நிச்சயம் கிடைக்கும்.

[சென்னை செயின்ட் மேரீஸ் ஹாலில், 17-7-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 20-7-1948]

# 3. இரண்டாம் போர்

## 1. நமது போர் முறை

இந்தி எதிர்ப்பு என்பது ஒரு மாபெரும் போராட்டமாகும். அதுவும் சர்வ வல்லமையும், சர்வ வசதியும் உள்ள (அதாவது, ஒரு மாபெரும் கட்டுப்பாடான சுயநல பதவிப் பித்துக் கோஷ்டி) சர்க்காருடன் நிர்க்கதியான—மதம், சமுதாயம், சுதந்திரம், சுயராஜ்யம் என்னும் பேரால் ஏமாற்றப்பட்டு மான உணர்ச்சியையும், மனிதத் தன்மையையும் அடியோடு அற்றுப் போகும்படி செய்யப்பட்டு, தன் இனத்தைக் காட்டிக்கொடுத்து, எதிரிக்குத் தஞ்சமாவதின் மூலம்தான் மனிதனாக வாழமுடியுமே தவிர, மற்ற வழிகளில் வாழமுடியாத மாதிரி ஆக்கப்பட்டு, பலப்பல விபீஷணர்களைக் கொண்ட ஒரு நிர்க்கதியான மக்கள் நடத்தும் போராட்டமாகும்.

இதில் நாம் துன்பப்படுவது, நசுக்கப்படுவது, நட்டப்படுவது, உடல்-பொருள்-ஆவி இழக்கப்படுவது என்பதல்லாமல் 'எதிரி'க்குச் சிறிதும், 'சரீரக் கஷ்டம், தொந்தரவு



www.thamizham.net - Free E book No 3041

தொல்லை' கொடுக்காத போர் ஆகும். மற்ற யுத்தங்களுக்குச் செல்பவர்களும் தங்கள் உயிரைக் கொடுக்கத் துணிந்துதான் செல்லுகிறார்கள் என்றாலும், அவர்களுக்கு எதிரியைக் கொல்லுவது என்கின்ற எண்ணமும், அதுவே, முக்கிய இலட்சியமும் ஆகும். ஆனால், நமது போராட்டம் அப்படியல்ல. 'எதிரி'க்குச் சிறிதும் தொந்தரவு கொடுக்காமல் நமது உயிரைக் கொடுக்கவே நாம் யுத்தத்திற்குச் செல்கிறோம். அதனால், இந்த யுத்தத்தில் ஈடுபடும் மக்கள் ஒரு நல்ல யுத்தவீரன் எப்படித் தன் உயிருக்குத் துணிந்து உற்சாகமாக இறங்குகிறானோ அதுபோலவும், யுத்தவீரன் எப்படி எதிரியைக் கொல்லலாம் என்று கருது கிறானோ அந்தப்படிச் சிறிதுகூடக் கருதாமலும் நாம் உயிர் விடுவதன்மூலமே எதிரியை வெற்றிகொள்ளலாம் என்ற கருத்துடன் வரவேண்டும். அதாவது, எல்லாத் தொண்டர்களும் திருப்பூர் குமரனைப்போல்—சர்க்காரால், போலீஸாரால் அடிபட்டுச் செத்தான் என்று ஆகவேண்டுமேயொழிய, ஆகஸ்ட் தனத்தாலோ—ஆகஸ்ட் தனத்தில் வெற்றிபெற்ற காசி ராஜன் – ராஜகோபாலன்கள் போலவோ ஆகக்கூடாது; கண்டிப்பாக ஆகக்கூடாது.

காங்கிரஸ்காரர்கள் செய்த போராட்டம் கொள்ளை அடிக்க, கொடுங்கோல்—ஒழுக்க மற்ற ஆட்சி நடத்தச் செய்யப்பட்டதாய் முடிந்தது; நாம் போராடுவது மனிதத் தன்மை பெற, மானம் பெற, நம் பல்லாயிரக்கணக்கான மக்களின் இழிவை நீக்கிக்கொள்ளவே ஆகும். காங்கிரஸ் போராட்டம், தனிப்பட்ட மனிதனின் பித்தலாட்ட வாழ்வுக்கு; ஆனால், நமது போராட்டம்—பல கோடி மக்களின் மனிதத்தன்மை வாழ்வுக்கு ஆகும். இதைத் தொண்டர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்தப் போராட்டத்தில் ஒரு காரியத்தில்கூட, (ஆரியர்கள்) காங்கிரஸ்காரர்கள் நடத்திய தன்மையை எண்ணத்தில், மனத்தில் கொள்ளக்கூடாது. திராவிடர் கழகம் இந்தப் பத்து ஆண்டுகளாக நடந்து வந்த தன்மையை, போதித்து வந்த நடத்தையை மனத்தில், பேச்சில், செயலில் கொண்டு நடந்து கொள்ள வேண்டும். காங்கிரஸ்காரன் அல்லது காங்கிரஸ் சர்க்கார் அல்லது காங்கிரஸ் சர்க்கார் சிப்பந்தி நம்மைக் கொடுமைப்படுத்துவது தனது வாழ்வுக்கு அல்லது வயிற்றுப் பிழைப்புக்கு ஆதலால்—அவர்களுக்குப் பல அட்டூழியம் செய்ய உரிமை உண்டு; நாம், அட்டூழியத்தால்—யோக்கியக் குறைவால் வாழவேண்டுமென்று கருதினால் அந்தக் கோஷ்டியில் சேர்ந்து அவர்களைவிட உயர்ந்த அல்லது அவர்களைப்போன்ற வாழ்வு வாழலாம். ஆனால், நாம் உலகுக்கு உண்மை ஒழுக்கத்தை—ஒழுக்கப் போராட்டத்தின் மூலம் ஒரு மனிதன் வாழமுடியும், வெற்றிபெற முடியும் என்பதை எடுத்துக்காட்டப் போராட்டம் நடத்துகிறோம்; நாம் வெற்றி பெற்றே தீருவோம். 'காங்கிரஸ் தனம்' அல்லது 'ஆகஸ்ட் தனம்' என்பது தோல்வியடைந்தே தீரும்; அடைந்தே வருகிறது. எனக்குத் 'தெய்வீகம்' என்பதில் நம்பிக்கை கிடையாது; ஞானத்தில், அறிவில், சத்தி யத்தில் நம்பிக்கை உண்டு. இது மூட நம்பிக்கை இல்லை; அல்லது நம்பித்தான் தீர வேண்டும் என்பதன்பாற்பட்டதல்ல. பிரத்யட்ச அனுபவத்தில் அனுபவித்து வருபவன்; பிறத்தியாருக்கும் மெய்ப்பித்துக் காட்டுகிறவன். ஆதலால், நான் மூடநம்பிக்கையில்—மகாத்மா தன்மையில் இதைப் பேசவில்லை; சத்திய நீதியில் பேசுகிறேன். எப்படி என்றால், இது நம்நாடு; இங்கு வடநாட்டான் ஆதிக்கம் செலுத்துகிறான்; சுரண்டுகிறான். நாம் இந்நாட்டு மக்கள்; நாம் இந் நாட்டு மன்னர் சந்ததிகள்; நம்மீது ஆரியன் ஆதிக்கங் கொண்டான். பிச்சைக்குப் புகுந்த ஆரியனுக்குப் பிறவியடிமையாயிருக்கிறோம், நாம். தமிழ், நம்நாட்டு மொழி; இன மொழி; இந் நாட்டுக் கலாசாரத்துக்கு ஏற்றமொழி. வட மொழி—அன்னிய மொழியின் ஆதிக்கத்தில் நம் மனிதத் தன்மானம், உரிமை பாழாக்கப் பட்டிருக்கின்றன. இதற்கு நம் உடன் பிறந்தவர்கள் விபீஷணர்களானது உண்மையில் மகா மகா இழிவு என்பது சத்தியம். இவைகள்தாம் சத்தியமும், நீதியும் ஆகும் என்கிறேன்.

இவை தோல்வியுறாது! தோல்வியுறாது! தோல்வியுற்றால்தான் நட்டம் என்ன? அந்தத் தோல்வியை நாம் கண்டிப்பாய் அனுபவிக்கமாட்டோம். நம்மைத் தோற்கடித்தவர்

www.thamizham.net - Free E book No 3041

களும், தோல்வியைக் கண்டு சும்மா இருப்பவர்களும், தோல்வியைச் சகித்துக்கொண்டு உயிர்வாழ்பவர்களுமேயாவார்கள். அதைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. ஆதலால், தொண்டர்களே! போராட்டத்தில் சிறிதும் நிலை தவறி விடாதீர்கள்.

['விடுதலை'-அறிக்கை—8-8-1948]

## 2. வாழ்வு அல்லது சாவு

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

திராவிடர் கழகத்தைப் போன்ற அபூர்வமான இயக்கம் வேறெங்கும் இருக்க முடியாது.

அதாவது, பதவிக்கு வரவேண்டுமென்ற எண்ணமோ, தேர்தலுக்கு நிற்கவேண்டிய அவசியமோ, அதற்கான திட்டமோ சிறிதுமின்றி—யார், எந்த எதிர்க்கட்சி ஆட்சி புரிந்தாலும் அவர்களை நாணயமாகவும், மக்களின் நலனுக்காகவுமான வகையில் தொண்டாற்றச் செய்வதும்; அவர்களிடத்தில் நிபந்தனைப்படுத்தி அவ் வேலைகளை வாங்குவதும் திராவிடர் கழகத்தின் முக்கிய தொண்டாகும்.

எனவேதான், நாங்கள் கூட்டம் போடுவதோ அன்றிக் கிளர்ச்சி செய்வதோ, ஓட்டுப் பெறுவதற்காக அல்லது அதிகாரபீடத்தில் அமருவதற்காகச் செய்யப்படும் அரசியல் முன்னேற்பாடுகள் என்று எவரும் கருதக்கூடாது. இன்னும் கூறுவேன்—நாங்கள் எந்தக் குறிப்பிட்ட சாதியினருக்கோ, கட்சியினருக்கோ, விரோதிகளல்லர். 'எல்லோரையும்விட நாங்கள்தாம் உயர் பிறவி' என்னும் பார்ப்பனர்களுக்கும்கூட நாங்கள் எதிரிகளல்லர்; அவர்கள் பாடுபடாமல் உயர் வாழ்வு வாழ்கிறார்கள் என்று அவர்களைப் பழிவாங்க வேண்டுமென்பதும் எங்கள் கொள்கையல்ல; அல்லது அவர்களுக்கு மேலாக நாம் உயர்ந்து விடவேண்டும்—அவர்களை நமக்குக் கீழானவர்களாக ஆக்கிவிடவேண்டும் என்பதற் காகவும் நாம், நமது கழகம் எண்ணுவதில்லை.

ஆனால், பார்ப்பனர்கள் நமக்கு மேலானவர்கள் என்ற எண்ணம் நாட்டிலும், நடைமுறையிலும் இருத்தல் கூடாது; எல்லோரும் சரிநிகர் சமானமாயிருத்தல் வேண்டும் என்பதுதான் நமது சமுதாயத் தொண்டு. அதேபோல்தான், வடநாட்டவர்களும் நமக்கு எதிரி என்று எண்ணுவதில்லை. அவர்கள் நம் நாட்டைச் சுரண்டிக்கொண்டு போதல் கூடாது; நாமும் அவர்கள் நாட்டைச் சுரண்டிக்கொண்டுவர வேண்டுமென்று எண்ணப் போவதில்லை. அதுபோலவே, வடநாட்டான் இந்தியாவை ஆளக்கூடாது என்பது நம் கருத்தல்ல; வடநாட்டான் திராவிட நாட்டை ஆளக்கூடாது-எந்த நாட்டவருக்கும், இனத்த வருக்கும் நாம் அடிமையல்ல; நம்மை நாமே ஆள வேண்டும்; நம் செல்வம் நம்மிடமே இருக்கவேண்டும் என்பதைத் தவிர யாருக்கும் எவ்விதத்திலும் நாம் எதிரிகளல்லர் என்ப தோடு, அவர்களும் அதற்கேற்ப நடக்க வேண்டுமென்பதே நமது இயக்கக் கொள்கையாகும். இதையறிந்து கொள்ளச் சக்தியற்ற சிலரும், ஏன் ஆட்சியாளர்கள்கூட நம்மை வகுப்பு வாதிகள், பார்ப்பன-பனியா எதிரிகள் என்று கூறுகின்றனர்.

பார்ப்பனனுக்கும், பனியாவுக்கும் தனிப்பட்ட விரோதத்திற்காக நமது இயக்கம் நடத்தப்படுகிறதென்று இன்னும் எண்ணிக் கொண்டிருப்பவர்களைப் பைத்தியக்காரர்கள் என்றே கூறுவேன். ஆனால், பார்ப்பனீயமும், 'பனியாயிஸமும்' திராவிடத்தை எவ்விதத் திலும் தாழ்த்துவதை, வீழ்த்துவதை இனி ஒரு விநாடியும் அனுமதிக்க முடியாது. இவ் விரண்டு பிற்போக்குச் சக்திகளுக்கு அரசியலாரின் பாதுகாப்பு என்னதான் பலமாயிருந் தாலும், அதற்காக நானோ, நமது இயக்கமோ அஞ்சப் போவதில்லை.

நம் மாகாணத்தைப் பொறுத்தவரை கூற வேண்டுமானால், ஆட்சியாளருக்குத் திறமையே கிடையாது. அதற்காக நாமோ, நமது இயக்கமோ, அவர்களுக்குத் தொந்தரவு

www.thamizham.net - Free E book No.3041

கொடுத்தலும் கிடையாது. அவர்கள் தேர்தலுக்கு நின்றபோது நாம் போட்டியிடவில்லை. நம்மை ஜெயித்து விட்டு ஓட்டுப் பெற்றார்களென்றோ, அல்லது அவர்களை எதிர்த்து நாம் தோல்வியடைந்தோம் என்றோ கூறுவதற்கில்லாமல்—அவர்களுக்கு நமது இயக்கத்தால் சிறு தொல்லைகூட ஏற்படக் கூடாதென்று கருதியே நாம் தேர்தலில் தலைகாட்டவில்லை. அதற் கேற்றதைப் போல் அவர்கள் ஒழுங்காகக் காரியங்களைச் செய்ய வேண்டுவது முக்கிய கடமையல்லவா? அவ்விதம் செய்யாத போது அதை எடுத்துக் காட்டவும்—எடுத்துக் காட்டியும் அவர்கள் கேட்காவிடில் எதிர்க்கவும் இந் நாட்டுக்குரிய மக்களுக்கு—அவர்கள் ஓட்டர்களாயில்லாவிட்டாலும்–இவர்களுக்கு ஓட்டுப் போடாதவர்களானாலும் உரிமையுண்டு; இவர்களைக் கவிழ்ப்பது நோக்கமல்ல. எனவே, திராவிடர் கழகத்தார் அரசியலாரைத் தட்டிக் கேட்கிறார்களென்றால் ஆட்சிப் பீடத்தைக் கவிழ்ப்பதற்கோ, எதிர்த்துத் தொல்லை கொடுப்பதற்கோ அல்ல. அவர்கள் வரி கொடுப்பவர்கள்; இந்நாட்டுக் குடிகள் ஆனதால் ஆட்சியாளரைத் தவறுகளிலிருந்து திருத்த உரிமையுடையவர்கள் என்று மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறேன்.

கடந்த 10 நாட்களாக சென்னையில் இந்தி எதிர்ப்பு மறியல் நடைபெற்று வருகிறது. இதுவரை யாரும் கைது செய்யப்படவில்லையென்றாலும் இந்நிலை இன்னும் நீடிக்காது; நாளையோ, அதற்கடுத்த நாளோ சிலர் கைது செய்யப்படலாம். கனம் ஆச்சாரியார் நம் நாட்டில் பவனிவரப் போகிறார்; அவரின் வருகையை நாம் மனமார எதிர்க்கிறோம்; எதிர்க்க வேண்டியது நம் கடமை என்று கொண்டிருக்கிறோம் என்பதை 23-ம் தேதியன்று எடுத்துக் காட்ட முடிவு செய்துவிட்டோம். இதன் மூலம் கவர்னர்–ஜெனரலான கனம் ஆச்சாரியாரை வெறுப்பதென்பதல்ல. ஆனால், இன்று அவர் எந்தக் கோலத்துடன் நம் மாகாணத்தில் நுழை கிறாரோ, அதை அறவே வெறுக்கிறோம் என்பதை நிரூபிக்கவே ஆகும். திராவிடத்தை—தென்னாட்டைப் பல வகையாலும் அடிமைப் படுத்திவரும் வடநாட்டு ஏகாதிபத்திய சர்வாதிகார கோஷ்டியின் கண்காணியாய் ஆச்சாரியார் வருகிறார்; அதை நாம் எதிர்க்கா விடில் என்றைக்கு ஓய்வு எடுப்பது என்று கேட்கிறேன். இந்தியை எதிர்க்கும் இதுசமயம் அரசியலார் அய்தராபாத் சண்டையைக் காட்டித் தப்பித்துக் கொள்ளப்பார்க்கின்றனர்!

காஷ்மீர் போரில் $4\frac{1}{2}$ கோடி ரூபாய் செலவு; அய்தராபாத்துக்கு 20 கோடி ரூபாய் செலவு. இது யார் வீட்டுப் பணம்? இந்தச் சண்டைக்கும், நம் மாகாணத்துக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? நம்மிடம் அய்தராபாத்துக்கோ, அல்லது காஷ்மீருக்கோ என்ன தகராறு இருக்கிறது? இந்த வடநாட்டான் ஆதிக்கத்தில் தென்னாட்டை முடிபோட்டு இழுத்துச்செல்வதால்தானே அவனுக்கு வரும் இழிவுக்கெல்லாம் நாம் மாரடித்துக் கொண்டிருப்பதுடன்—நம் மாகாணப் பணமும் பாழாக்கப்படுகிறது? இவைகளையெல்லாம் காங்கிரஸ் திராவிடர்களே! நீங்கள் எப்போதுதான் எண்ணி உண்மையை உணரப் போகிறீர்கள்?

1938–40-ல்—60, 70 வயது சென்ற தாய்மார்கள் முதல் சிறு குழந்தைகள் வரை ஆயிரக்கணக்கான மக்கள் சிறைசென்று ஒழித்த இந்தி—மீண்டுமா நம் நாட்டில் நுழைவது? அப்போது இந்தியைக் கொண்டு வந்து தொல்லை கொடுத்த ஆச்சாரியார் வைசிராய் பதவி அல்ல—அதற்கு மேலான பதவி பார்த்தாலும் இந்தச் சமயத்தில் சென்னைக்கு வரலாமா? வர மனத்தில் எண்ணலாமா? இதைக் கண்டு நாம் வெட்கப்படவேண்டாமா என்று கேட்கிறேன். வடநாட்டு ஆதிக்கத்துக்கு இவ்வளவு ஆணவமிருந்தால் இந்தச் சமயத்தில் ஆச்சாரியார் நம் மாகாணத்துக்கு வர முற்படுவார் என்பதை, திராவிடர்களே சற்று எண்ணிப் பாருங்கள்! எனவேதான், ஆச்சாரியாரின் வருகையை நாம் எதிர்ப்பதென்பது—வடநாட்டு ஆதிக்கத்துக்கும், ஹிட்லரிச, பாசிச வெறித் தன்மைக்கும்—தென்னாட்டை அடிமைப்படுத்தும் அரசியல் அநீதிக்கும் புத்தி புகட்டுவதாகும்.

வெள்ளைக்காரன் ஒழிந்தான் என்றால், அவன் மறைந்தவுடன் இந்த வடநாட்டுக் காரன் காலடியில் நாமும், நமது நாடும் வீழ்ந்துகிடக்க வேண்டுமா? இந்தச் சுதந்திரத்திற்

www.thamizham.net - Free E book No 3041

காகவா காங்கிரஸ் திராவிடர்களே—நீங்கள் பாடுபட்டீர்கள்? நாங்களும் அக் காலத்தில் பாடு பட்டது இதற்காகவா?

நான் காங்கிரஸ் தலைவனாயிருக்கும்போது தோழர் காமராஜர் அரசியலில் புகுந்து கூட இருக்க மாட்டாரே! நாங்களெல்லாம் அந்நாளில் உழைத்தது பதவி வகிக்கவா, பட்டம் பெறவா? ஆட்சியாளர்களாக நம்மவர்கள் வரவேண்டுமென்பதுடன், அவ்வாட்சி ஏழை எளிய மக்கள் இன்ப வாழ்வு காணக்கூடிய வகையில் இருக்க வேண்டுமென்பதற்குத் தானே? இன்று அவ்வித ஆட்சி இருக்கிறதென்று எவராவது கூற முடியுமா என்று கேட்கிறேன். மக்கள் வரிப் பணத்திலிருந்து $10\frac{1}{2}$ கோடி ரூபாய் கல்விக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறதே, அதன் மூலம் சில பணக்காரப் பிள்ளைகள் படித்து ஆக்கம் பெறும் வகையில் கல்வி முறையும், கல்லூரிகளும் இருக்கின்றனவேயன்றி—வரி கொடுக்கும் கிராமங்களிலுள்ள வரி கொடுப்போரின் பிள்ளைகளும், பாட்டாளி மக்களின் பிள்ளைகளும் கல்வி பயிலும் தன்மையில் இருக்கிறதா? பகுதி கிராமங்களுக்காவது பள்ளிகள் இருக்கின்றனவா? இந்த இலட்சணத்தில் இந்தி வேறு ஒரு கேடா?

இவைகளையெல்லாம் நாங்கள்தான் கேட்கிறோம். மற்றவர்கள்—அதாவது காங்கிரசார் கேட்காவிட்டாலும், எங்களுக்கு ஆதரவாவது தர வேண்டாமா? 10 வயது குழந்தைக்கு மூன்று பாஷையா புகுத்துவது? இதுவரை, உத்தியோகங்களுக்கு என்றால்—சம்பந்தப்பட்ட எந்த மொழி அவசியமோ, அதை உத்தியோகம் ஏற்றுக் கொள்கிறவர்களுக்கு மட்டும் ஓராண்டுப் பாடமாக அரசியலார் வைப்பார்கள். இந்த இந்தித் திட்டத்தினால், 10-வது பையனுக்கல்லவோ மூன்று மொழிகள்! இந்நிலை இருந்தால் அவர்கள் நல்ல முறையில் கல்வி பயில முடியுமா?

இந்தி நுழைவு என்பது வடமொழி ஆதிக்கம் மட்டுமல்லாமல், சிறு பையன்களின் தூய மனத்தில்—பச்சை மரத்தில் ஆணி அடிப்பது போல, ஆரிய வருணாசிரமக் கலாசாரத்தைப் புகுத்துவதும் அநீதியேயாகும். எனவே நாம், மொழிப் பிரச்சினையோடு மாத்திரமின்றி நம் நாட்டுக் கலாசாரம், பண்பாடு ஆகியவைகளிலும் வடநாட்டு ஆதிக்கம் கை வைத்து அழிக்கும் சூழ்ச்சியென்பதை மறக்கக்கூடாது. நமது எதிர்ப்பு 'புஸ்' என்று போய்விடுமாம்! அதனால்தான் நம்மைக் கைது செய்யவில்லையாம்! இது எவ்வளவு பைத்தியக்காரத்தனமான எண்ணம்?

நாங்கள் சிறைக்குச் சென்று வீரப் பிரதாபப் பட்டமோ, தேச பக்தர்கள் என்ற பட்டமோ பெறுவதற்காகவா அறப் போர் துவங்கி இருக்கிறோம்? இதைக்கூட இந்த ஆட்சியாளர் உணரும் அறிவு பெறவில்லையென்றால், நாம் என்னதான் இவர்களைப் பற்றி நினைப்பதென்பதே புரியவில்லை. அப்படி வலியச் சிறை சென்று அதன் மூலம் நமக்கோ—நம் இயக்கத்துக்கோ பெருமை தேடிக்கொள்ள வேண்டுமென்ற நிலையும் இல்லை.

அந்த எண்ணம், இன்று மட்டுமல்ல—இதுவரை எந்தெந்தக் காரியங்களில் போராடி வெற்றி பெற்று வந்தேனோ அக் காலங்களிலும் கிடையாது. சிறை சென்றுதான் ஒரு இயக்கத்திற்குப் பலம் திரட்டமுடியும் என்று கருதுவதே பைத்தியக்காரத்தனமாகும்; இன்னும் கூறுவேன்—அது ஏமாற்றுத்தனமுமாகும். ஆகவே, நாம் துவக்கியுள்ள அறப் போரில் ஆட்சியாளர் நம்மைக் கைது செய்யவில்லையென்பதால், நமதுஇயக்கம் நசித்து விடும்என்று ஆட்சியாளர் நினைத்தால் அவர்கள் அந்தப் பிரச்சினையில் விரைவில் தோல்வியுற்றே தீருவார்கள். எத்தனை நாளைக்கு எங்களை இப்படியே விட்டுவைக்க முடியும்?

எங்களை சர்க்கார் இலட்சியம் செய்யவில்லையென்றால், மறியல் செய்யுமிடத்தில் அங்கிருந்து தொண்டர்கள் புறப்பட்டாலும், போலீஸ் கமிஷனர் முதல் மற்ற உத்தியோகஸ்தர்களும், படையும், பட்டாளமும் வருவதேன்? பேசாமல் இவர்கள் வீட்டிலேயே இருக்கலாமல்லவா? இப்போது நடைபெறுவதைப்போல் இன்னும் இரண்டு ஆண்டுகள் நடைபெற்றாலும் அதற்கான வசதியும் நமக்கிருக்கிறது. அந்த வசதிகளெல்லாம் ஏழை

www.thamizham.net - Free E book No 3041

மக்களாகிய நீங்கள் அளித்ததன்றி வேறில்லை. ஒரு பள்ளிக்கூடத்திற்கே, போலீஸ் பட்டாளத்திற்கு இவ்வளவு அவசியம் என்றால் இன்னும் 5, 6 இடங்களில் துவக்கிவிட்டால் ஊரில் திருட்டு முதலிய வழக்குகளைக் கண்டுபிடிக்கவே போலீஸ்படை இருக்கமுடியுமா? திருட்டு இருக்கட்டும்; மந்திரி ஆபீஸ்களிலே எவனாவது கொள்ளையடித்தால்கூட அதை அடக்கப் போலீஸ் இருக்க முடியாதே! இதையெல்லாம் தெரிந்துகொள்ளாமல் நமது போராட்டம் 'புஸ்' என்று போய்விடுமென்று கூறுவது அறிவுக்கும், அனுபவத்திற்கும் பொருந்துமா? வேண்டுமானால் இவ்விதப் பேச்சுக்களை அரசியல் கெட்டிக்காரர்கள் பேசலாம்! ஆனால், மந்திரிகளே கூட்டங்களில் பேசுகிறார்களென்றால் இதிலிருந்து நமது மந்திரிகளின் பேச்சுக்கு எவ்வளவு மதிப்பிருக்க முடியும் என்பதை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள்!

மறியல் செய்யும் தொண்டர்களுக்குச் சலிப்பு இருக்கலாம்; அதுகூட எதற்காக? தங்களை இன்னும் கைதுசெய்யாமல் இருக்கின்றனரே என்று. அவ்விதச் சந்தர்ப்பங்களில் மற்றொரு தொண்டர் படையை மாற்றி, முன்னவர்களுக்குச் சற்று ஓய்வு கொடுக்கிறோம். இதற்காகவா நாம் ஓய்ந்துவிடுவோம்? அருமை நண்பர்களே! இப்படியே இன்னும் ஒரு மாதம் நடக்கட்டும். பிற்பாடு நீங்கள் காணப்போகிறீர்கள்—இந்த அரசியலார் சலிப்படையப்போகிறார்களா, நாம் சலித்துவிடுவோமா என்பதை.

நான் முதலில் குறிப்பிட்டது போல், 1938–40 போராட்டத்தைவிட இம்முறை மறியல் செய்வதற்காக ஆள் ஒன்றுக்கு தாங்களாகவே 25 ரூபாய் வீதம் கொடுத்து, போராட்டத்திற்கு வருகிறோம் என்று, துடிதுடிப்பவர்கள் எவ்வளவு பேர்? இந்த அரசாங்கத்திற்குக் கண் இருந்தாலல்லவோ இதெல்லாம் தெரியப்போகிறது! உத்தியோகஸ்தர்–ஆசிரியர்–மாணவர்–தொழிலாளர்–தாய்மார்கள் வரை தவறாமல் எங்களைத் தொந்தரவு செய்துவருகின்றனர். எல்லோருக்கும் 22-ந் தேதி கூடும் நிர்வாகக் கமிட்டியின் முடிவுப்படி வேண்டியன செய்வதாகச் சமாதானம் கூறி அடக்கிவருகின்றேன். இவ்வாறிருக்க, நாம் ஓய்ந்துவிடுவோமெனத் தப்புக் கணக்குப்போடும் சர்க்கார், விரைவில் இந்தி நுழைவு விஷயத்தில் தோல்வியுறப் போவது நிச்சயம் என்று கூறுவேன். நமது போராட்டம் தொடர்ந்து நடைபெறவேண்டுமென்பதே எனது ஆசையாகும். அதற்குள்ளாகத் தேர்தல் வரத்தான் போகிறது.

தேர்தலுக்கு நாம் நிற்கப் போவதில்லையென்றாலும் நம் போராட்டக் காலத்தில் இவர்கள் ஓட்டுப்பிச்சை கேட்க எந்த முகத்தைக் கொண்டுசெல்ல முடியும்? எனவே, நம்மைக் கைதுசெய்யாவிட்டாலும், அல்லது இலட்சியப் படுத்தாவிட்டாலும் அதனால் நமக்கு யாதொரு நஷ்டமுமில்லை; அரசியலாருக்குத்தான் அதனால் பெருந் தொல்லை ஏற்படும். அதுமட்டுமில்லை;

இதுவரை நானோ, சுயமரியாதை இயக்கமோ, திராவிடர் கழகமோ துவக்கிய எந்தப் போராட்டத்திலும் அல்லது கொள்கையிலும் தோல்வியுற்றதே கிடையாது என்பதைப் பல முறைகள் எடுத்துக்காட்டி இருக்கிறேன். கோவில் நுழைவு முதல், பொதுக் கிணறுகளில் தண்ணீர் எடுக்கும் உரிமைவரையிலும்; இரயில்வே சிற்றுண்டிவிடுதிகள் முதல் சாதாரண ஓட்டல்களிலும்—சாதி வித்தியாசம், உயர்வு தாழ்வு கூடாதென்பதிலும்; தாய்மார்களை ஆண்டவன் பேரால் பொட்டுக் கட்டும் அநாகரிகம் ஒழியவேண்டுமென்பது வரை—நாங்கள் கிளர்ச்சிசெய்து சிறைசென்று பல தொல்லைகளுக்கு உட்பட்டு வெற்றிபெற்று அது நடைமுறையிலும் இன்று இருந்துவருகிறதேயல்லாது, ஒன்றிலும் தோல்வி கிடையாது. இன்னும் விரைவில் கூறப்போகிறேன்—கோயிலில் தாழ்த்தப்பட்ட மக்களை விட்டதுமட்டும் போதாது; அவர்களே பூசை செய்யவேண்டும்; தட்சணைக் காசுகளை அவர்களே அடைய வேண்டும்; அப்படி அனுமதிக்காத சாமிகளை உடைத்து ரோட்டுக்கு ஜல்லி போடவேண்டுமென்று கிளர்ச்சி செய்யத்தான் போகிறேன்.

[சென்னை வண்ணையம்பதியில் சொற்பொழிவு—'விடுதலை' 22-8-1948]

www.thamizham.net - Free E book No 3041

# 3. இந்தி கட்டாயமா?

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

இந்தி வேண்டவே வேண்டாம் என்பதல்ல எங்கள் கொள்கை; அதைக் கட்டாயப் படுத்தக்கூடாது என்று நாங்கள் சொல்லுகிறோம். எந்த மொழியையும் யார் வேண்டு மானாலும் கற்றுக் கொள்ளட்டும். ஆனால், எந்த மொழியையும் யார் மீதும் கட்டாயமாகத் திணிக்காதீர்கள் என்றுதான் நாம் கூறுகிறோம். சில காரியத்திற்காக இந்தியைக் கட்டாய மாக்க வேண்டுமானாலும் கட்டாயமாக்குங்கள்; ஆனால், குழந்தைகளுக்கு வேண்டாம்; பெரியவர்களுக்கு—கல்லூரி மாணவர்களுக்கு வேண்டுமானால் இருக்கட்டும் என்றுதான் நாங்கள் கூறுகிறோம். 12 வயது பையன்களுக்கு மூன்று மொழிகளைப் படித்தால் கஷ்டமா யிருக்கும். மூன்றையும் படித்துச் சரிவர 'மார்க்' வாங்கித் தேறுவது கஷ்டமாயிருக்கும். அதனால் அவர்கள் படிப்புக்கு—அறிவு வளர்ச்சிக்குக் குந்தகம் ஏற்படும்; திராவிட ஏழை மக்களில் ஒரு சிலராவது 10-வது வரை சரிவரப் படித்து வருவதும் தடைபட்டுப் போகும் என்றுதான் நாம் கூறிவருகிறோம்.

இன்று நம் பிரதம மந்திரியாரிடம் நான் தெரிவித்தபோது, 'உங்களுக்குத் தெரியாது நம் பிள்ளைகளின் புத்திசாலித்தனம்! இவர்கள் 3 அல்ல-4 பாஷைகள்கூடக் கற்பார்கள்' என்று தெரிவித்து விட்டார். தாம் ஒருவர் மந்திரியாக வந்து விட்டதால் எல்லோருமே புத்தி சாலிகளாகிவிடமுடியும் என்றும் நினைத்து விட்டார் போலும்! 2 வருடங்களுக்குமுன் கல்வி அமைச்சர் இங்கிலீஷை 3-வது பாரத்திலிருந்துதான் சொல்லிக் கொடுக்க முடியும் என்று தெரிவித்தார். நாங்கள் சற்றுச் சஞ்சலப்பட்டோம். 'இந்தக் காலத்தில் ரிக்ஷாக்காரனுக்குக் கூட ஒன்றிரண்டு வார்த்தை இங்கிலீஷ் தெரிந்திருக்க வேண்டியிருக்கிறதே! 'சார், ஹவ் மச்—Sir How much?' என்று கேட்கவாவது தெரிந்திருக்க வேண்டியிருக்கிறதே! அப்படி யிருக்கும்போது, இங்கிலீஷை 3-வது பாரத்திலிருந்து சொல்லிக்கொடுப்பது நியாயமில்லை; முதல் பாரத்தில் இருந்தாவது சொல்லிக் கொடுத்தல் அவசியம்' என்று கூறினோம்.

'அதெல்லாம் முடியாது; இப்படியெல்லாம் எதிர்த்துப் பேசுவதாயிருந்தால் இங்கிலீஷையே இந் நாட்டைவிட்டு ஓட்டி விடுவேன்' என்று பயமுறுத்தினார். எப்படியோ நாசமாய்ப் போகட்டும் என்று பேசாமல் இருந்தோம். கல்வி அமைச்சருக்கு இப்போது புத்தி தெளிவடைந்தது. ஆகவே, முதல் பாரத்திலிருந்து இங்கிலீஷைக் கட்டாயப் பாடமாக்கி யிருக்கிறார். அதுவரை மகிழ்ச்சிதான்.

மற்ற வடநாட்டினரைக் காட்டிலும் எங்களுக்கு இங்கிலீஷ் மிக அவசியமானதுதான். எங்களுக்கு 1,500 மைல் நீளம் கடற்கரை உண்டு. எனவே, எங்கள் சம்பந்தம் முக்கால் பாகம் வெளிநாடுகளோடுதான் இருக்கும். வெளிநாடுகளோடு தொடர்பு வைத்துக்கொள்ள இங்கிலீஷ்தான் அவசியமான மொழி. ஆகவே, எங்களால் இங்கிலீஷை எப்போதும் கைவிடமுடியாது. தமிழைப்பற்றி இப்போது தகராறில்லை. அதில்தான் எல்லாப் பாடங் களும் கற்பிக்கப்படப் போகின்றன. இங்கிலீஷைப்பற்றியும் தகராறில்லை; அதுவும் 3-வது மொழியாகக் கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது கட்டாய மொழியாக வைக்கப் பட்டிருக்கும் இந்தியைப் பற்றித்தான் இப்போது தகராறு. இந்தி வேண்டுமா வேண்டாமா என்பதுகூட இப்போது பிரச்சினையல்ல. இந்தியைக் கட்டாயமாகப் படிக்கவேண்டுமா, இஷ்டமிருந்தால் மட்டுமே படிக்க வேண்டுமா என்பதுதான் இப்போதையப் பிரச்சினை.

இந்தியைக் கட்டாயமாகப் படிக்க வேண்டியதில்லை என்று சர்க்கார் என்னிடத்தில் மட்டுமல்ல, சட்டசபை மெம்பர்களிடத்தில்கூடக் கூறியிருக்கிறார்கள். 'இந்தி கட்டாயமா, இஷ்ட பாடமா?' என்று சட்டசபையில் கேள்வி எழும்போது சர்க்கார், 'இந்தியைக் கட்டாய மாக்கி இருக்கவில்லை; இஷ்ட பாடமாகத்தான் வைத்திருக்கிறோம்' என்று தெளிவுபடக் கூறியிருக்கின்றனர். நாம் சொல்கிறோம்: 'மந்திரியார் கட்டாயமில்லை என்று வாயளவில் கூறுவது உண்மைதான்; ஆனால், நடைமுறையில் இந்தி கட்டாயமாக்கப்படுகிறதே'

www.thamizham.net - Free E book No 3041

என்று. மந்திரியார் சொல்லளவில் கட்டாயமில்லை என்கிறார். நாம் செயலளவில் கட்டாய மாக்கப்பட்டிருக்கிறது என்கிறோம். இதுதான் இன்றையப் பிரச்சினை.

இதற்கு முடிவு காண்பது எப்படி? நாலைந்து கல்வி அதிகாரிகள் அடங்கிய ஒரு கமிட்டியை நியமியுங்கள். அந்தக் கமிட்டியின் முன் சர்க்காரும் இந்தி கட்டாயமில்லை என்பதற்கு ஆதாரம் கொடுக்கட்டும்; நாமும் கட்டாயம்தான் என்பதற்கு ஆதாரம் காட்டு கிறோம். இரண்டையும் சீர்தூக்கிப் பார்த்து அவர்களே முடிவு சொல்லட்டுமே! இந்தி நடைமுறையில் கட்டாயமாக்கப்பட்டிருக்கிறதா, இல்லையா என்று நாம் சற்று ஆராய்ந்து பார்ப்போம். 1946ஆம் ஆண்டு கடைசியில் கல்விமுறையை மாற்றி அமைப்பதற்கான யோசனை கூற நமது மாகாணத்தில் ஒரு கல்வி புனர்நிர்மாணக் கமிட்டி நியமிக்கப்பட்டது. இந்தியை நம் மாகாணக் கல்விமுறையில் எப்படிப் புகுத்துவது என்பதும் அக்கமிட்டியாரால் பரிசீலனை செய்யப்பட்டது. அக் கமிட்டியார் 'இந்தி இம் மாகாணத்தில் இஷ்டபாடமாக வேண்டுமானால் இருக்கலாமே ஒழிய, கட்டாயப் பாடமாக இருக்கக்கூடாது; எந்த ஒரு ஆசிரியரும் எந்த ஒரு மாணவரையும் இந்தி படிக்குமாறு வற்புறுத்தக்கூடாது; குழந்தை களுக்கு எல்லாப் பாடங்களும் தாய்மொழியிலேயே போதிக்கப்படவேண்டும்' என்று ஆலோசனை கூறினர். அவ்வாலோசனையைக் கல்வி அமைச்சர் ஏற்றுக்கொள்ளவில்லை; ஏற்காதது மட்டுமல்ல—அந்த ரிப்போர்ட்டை வெளியிடவுமில்லை; அப்படியே அதை மறைத்துவிட்டார். பிறகு தம் இஷ்டம்போல் வேறொரு கமிட்டியை நியமித்தார். அக் கமிட்டி யாரும் குழந்தைகளுக்கு இந்தியைக் கட்டாயமாக்க விரும்பவில்லை. சென்ற 10 ஆண்டு களுக்கு முன்பு ஒரு பெரிய கிளர்ச்சி இந்தத் தமிழ்நாட்டில் நடந்திருப்பதை ஒட்டி, என்ன செய்வதென்றே தெரியாமல் காலங்கடத்திக் கொண்டு வந்து கடைசியில் ஒரு தந்திரம் செய்தனர்.

இந்தியைத் தமிழ்நாட்டில் மட்டும் இஷ்டபாடமாகவும் மற்ற ஆந்திர, கேரள, கன்னட பிரதேசங்களில் கட்டாயப் பாடமாகவும் ஆக்கி—1948ஆம் வருடம் ஜூன் மாதம் 20-ந்தேதி 1643-ம் நம்பர் ஜீ. ஓ. படி ஒரு உத்தரவு பிறப்பித்தனர். மேற்படி உத்தரவு விளம்பரப் படுத்தப்பட்டதும், சில பார்ப்பனர்கள் இலேசாக அங்கும் இங்கும் குசும்பினர். பம்பாய் இங்கிலீஷ் பத்திரிகை ஒன்று, திராவிடர் கழகத்திற்குப் பயந்து இம் மாதிரி செய்வதுகூடா தென்று எழுதிற்று. பார்ப்பனர் அமைச்சர் மூக்கைச் சொறிந்தனர்! ஒன்றிரண்டு பார்ப் பனர்கள் 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' என்ற பகுதியில் சர்க்காரின் உத்தரவைக் கண்டித்து எழுதித் தம் அதிருப்தியைக் காட்டிக்கொண்டனர்.

இடையில் பிரதம மந்திரியார் கோயம்புத்தூர் சென்றபோது, அங்கு இந்திப் பிரச்சினை பற்றிப் பேச நேர்ந்தது. அவருடைய பேச்சு 24-6-1946 'சுதேசமித்திரனில்' வெளியாகியிருக்கிறது. அதில், அவர், 'இந்துஸ்தானி சென்னை மாகாணத்தில் தமிழ்நாடு தவிர்த்த மற்ற ஆந்திர, கேரள, கன்னட நாடுகளில் கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது; இது வேண்டுமென்றே யோசித்துத்தான் செய்யப்பட்டது. இதுவரை இதற்கு இரண்டொரு இடத்தைத் தவிர்த்து வேறு ஆட்சேபணையே வரவில்லை' என்று குறிப்பிட்டார். உடனே மறுநாள் பத்திரிகையில் 'சுதேசமித்திரன்', 'இதோ நான் ஆட்சேபிக்கிறேன்' என்று, 'கட்டாய இந்தியே தேவை' என்று தலையங்கம் தீட்டிற்று. 'மற்ற மூன்று பிரதேசங் களிலும் இந்தியைக் கட்டாயமாக்கிவிட்டு, தமிழ்நாட்டில் மட்டும் இந்தியை இஷ்டப் பாடமாக ஆக்கி இருப்பது நியாயமா?' என்று கேட்டுவிட்டு, 'இந்தியை எதிர்க்கும் கும்பல் ஒன்று இந்நாட்டில் இருப்பதால்தான் கட்டாயப் பாடமாக ஆக்க முடியவில்லை என்று மந்திரியாரால் கூறப்படும் வெறும் சமாதானம் ஏற்கக்கூடாதது. வெறும் பேச்சுக்காரர் களுக்குப் பயந்து சர்க்கார் இம் மாதிரியெல்லாம் விட்டுக்கொடுப்பதாயிருந்தால் நாட்டில் எந்த நல்ல காரியம் செய்வதும் கஷ்டமாகிவிடும். இந்தி கட்டாயமாக்கப்படுவதையே பெரும்பாலான தமிழ் மக்கள் விரும்புகிறார்கள்' என்று எழுதி, கல்வி மந்திரியார் மூக்கைச் சொறிந்து விட்டது. பார்ப்பான் அடிமையான கல்வி மந்திரியாரும் உடனே துணிந்து

www.thamizham.net - Free E book No 3041

அந்தப்படியே தமிழ் நாட்டிலும் இந்தி கட்டாயந்தான் என்று உத்தரவு பிறப்பித்து விட்டார்.

இந்தி கட்டாயமில்லை என்று அவர்கள் கூறுவதற்கு ஆதாரமாகக் காட்டுவது இந்தியோடு வேறு சில மொழிகளையும் சேர்த்து, அவற்றில் ஏதாவதொன்றைப் படிப்பது என்று உத்தரவு போட்டிருப்பதுதான். இதிலுள்ள பித்தலாட்டத்தைப் பாருங்கள்! ஏதாவதொரு மொழியைப் படிக்கலாம் என்று உத்தரவு போட்டுவிட்டு, ஒவ்வொரு பள்ளியிலும் இந்தி மட்டுமே கற்பிக்க ஆசிரியர் இருக்க வேண்டியது அவசியம் என்றும், அப்படி இந்தி ஆசிரியரை வைத்துக் கொண்டிராத பள்ளிகளுக்கு சர்க்கார் 'கிராண்ட்' வழங்காதென்றும் உடன் உத்தரவு பிறப்பிப்பதன் அர்த்தமென்ன? ஒவ்வொரு பள்ளியிலும் இந்தியைக் கட்டாயமாக்கத்தானே இந்தச் சூழ்ச்சி? இல்லையென்றால், மற்ற மொழிகளுக்கும் ஆசிரியர் வைத்துக்கொள்வது கட்டாயப்படுத்த வேண்டாமா? இது ஒரு பக்கம் இருக்கட்டும்.

கனம் மந்திரியார் அவர்களே, 'சென்னைச் செய்தி' என்ற சர்க்கார் வெளியீட்டில் தம் பொம்மையோடு வெளியிட்டிருக்கும் கருத்தைப் படித்துப் பாருங்கள். 'இம் மாகாண மக்கள் ஒவ்வொருவருக்கும் இந்தி தெரிந்திருக்க வேண்டியது அவசியம் என்று இங்கு வற்புறுத்திக்கூறுவது அனாவசியம் என்று கருதுகிறேன். இதற்காகத்தான் எல்லாப் பள்ளிகளிலும் இந்தி கட்டாயமாகப் போதிக்கப்பட வேண்டும் என்று நம் சர்க்கார் உத்தர விட்டிருக்கிறது' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதுவும் நாம் திருச்சியில் கூடி, கட்டாய இந்தியை எதிர்த்து நேரடி நடவடிக்கை எடுக்கப்போவதாகத் தீர்மானம் செய்த பிறகு வெளியான பத்திரிகையில் வெளியிடப்பட்டுள்ள சேதியாகும் இது. எனவே அதில், 'கட்டாயமாகப் போதிக்கப்படவேண்டும்' என்று வரும் வார்த்தைகளுக்கு அர்த்தம் இல்லையென்று யாராகிலும் கருதிக்கொள்ள முடியாது. அவர் மேலும் குறிப்பிட்டிருக்கிறார்: 'இந்தி படிப்பதால் அறிவு ஒன்றும் அதிகமாகிவிடப்போவதில்லை; அதனால் அறிவு வளர்ச்சிக்குக் குந்தகமே விளையும்' என்று. அறிவில்லாத—வேறு எதற்காகவோ, அதைப் படிக்கவேண்டுமாம்? என்ன புத்தி தீட்சண்யம்? சிரிக்காதீர்கள்! சந்தேகமிருந்தால் நீங்களே வாங்கிப் படியுங்கள். இனி நீங்கள்தான் இந்தி கட்டாயமா, இல்லையா என்று முடிவு செய்யவேண்டும்.

இதையெல்லாம், நான் பிரதம மந்திரியாரைச் சந்திக்க நேர்ந்தபோது தெரிவித்து, இந்தியை எதிர்த்துப் பிரச்சாரம் செய்யப்போவதாகவும் மறியல் செய்யப்போவதாகவும் தெரிவித்தேன். அய்தராபாத் பிரச்சினை காத்திருக்கும்போது இம் மாதிரி தொல்லை கொடுக்கலாமா என்று கேட்டார். அய்தராபாத்தில் போராட்டம் துவக்கப்பட்டால் உடனே எனது போராட்டத்தையும் நிறுத்திக்கொள்வேன் என்றும், சென்னை மாகாணத்தைக் காப்பாற்றுவதில் எனக்கும் கவலையும், பொறுப்பும் உண்டென்றும் தெரிவித்தேன். அப்படியானால், 'கலவரம் ஏதுமின்றி மறியல் செய்துகொள்ளுங்கள்; நான் அதைப் பாதுகாத்துக் கொள்கிறேன்' என்று உறுதி தந்த உடனேயே போலீஸ் கமிஷனரையும் கூப்பிட்டு அந்தப்படியே ஏற்பாடு செய்தார். மறியலும் மறுநாள் துவக்கப்பட்டு யாதொரு கலவரமும் இன்றிச் சில நாட்கள் நடைபெற்றது. நாளுக்கு நாள் இந்தி எதிர்ப்புக்கு ஆதரவு பெருகி வருவதைக் கண்ட பார்ப்பனர்கள், 'இந்த மாதிரி மறியலைப் பாதுகாத்துக் கோட்டையை விட்டு விட்டார்களே' என்று மந்திரியாரிடம் தெரிவித்தனர். மந்திரியாருக்கும் என்ன செய்வதென்று புரியவில்லை. ஆகவே, போலீஸ் புலிகளை இஷ்டம் போல் வேட்டையாடும்படி விட்டுவிட்டார். அவர்கள் இந்தி எதிர்ப்பாளர்களை லாரியில் ஏற்றிச் சென்று கண்காணாக் காட்டில் 31 மைலுக்கப்பால் விட்டுவிட்டு வந்துவிட்டனர். அங்கு ஒரு போலீஸ்காரனையும் காவல் வைத்து—எந்த வண்டிக்காரனும் தொண்டர்களை ஏற்றிக் கொள்ளக்கூடாது என்று தடுத்தனர். மாலையில் நமது வண்டி சென்றுதான் அவர்களை அழைத்து வர நேரிட்டது. இந்தி எதிர்ப்புத் தொண்டரில் ஒருவர் அம்மையார்; அவர் எட்டு மாதக் கர்ப்பிணி. இருந்தும் அவரைக்கூட விடவில்லை. எல்லோரையும் 'மிலிடெரி



www.thamizham.net - Free E book No 3041

லாரி'யில் ஏற்றிச் சென்றனர். சென்ற வழியில் லாரி ஆட்டம் அதிகமாய் இருந்ததின் காரணமாக, அந்த அம்மையாருக்குக் கர்ப்பக் கோளாறு ஏற்பட்டுக் கடைசியில் பிழைப்பதே கடினமாகி விட்டது. அவர் போராட்டத்திற்கு வரவேண்டாமென்றாலும் கேட்கவில்லை. அவர் புருஷனும்—நல்ல காரியத்திற்காக ஒருத்தியைக் கொடுத்தால்தான் என்ன முழுகிப் போகும் என்று கூறிவிட்டார். நல்ல வாய்ப்பாக அவர் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு உடல்நலம் பெற்றார்கள்.

அடுத்த நாள் வேறொரு பக்கம் தொண்டர்களை அழைத்துச் சென்றார்கள்; மறுநாள் இன்னொரு பக்கம்! இப்படி சடுகுடு விளையாடினர் போலீஸ்காரர்கள். 'ஏனய்யா இப்படி அக்கிரமம் செய்கிறீர்கள்?' என்று கண்டிக்க முற்பட்ட பிறகு—சர்க்காரின் இந்தப் போக்கு சந்து பொந்து தோறும் குறை கூறப்பட்ட பிறகு, ஜெயிலில் பிடித்துப் போட்டனர். ஒரு வாரம், இரண்டு வாரம், மூன்று வாரம் என்று கடுங்காவல் தண்டனை கொடுத்தனர்; நன்னடத்தை ஜாமீன் கேட்டனர். இவ்வளவுக்கும் தொண்டர்கள் விட்டுக்கொடுக்காமல் இருக்கவே, தடிகொண்டு தாக்க ஆரம்பித்தனர். ஒரு பையனை ஒரு சப்-இன்ஸ்பெக்டர், காலின்கீழ் மிதித்துக் கழுத்தை நெறிக்கவும் முற்பட்டார்—வாயிலிருந்து இரத்தம் கக்கும் அளவுக்கு; அவர் பேரையும் பத்திரிகையில் வெளியிட்ட உடனே, தானல்ல அதற்குக் காரணம்; வேறு யாரோதான் அப்படிச் செய்திருக்க வேண்டும் என்று எனக்குக் கடிதம் எழுதிவிட்டார்.

போலீஸ் மந்திரியாருக்கு என்ன உத்தரவிடுவதென்றே தெரியவில்லை. அங்கொரு மந்திரியும் இங்கு ஒரு மந்திரியுமாக, சர்க்காரின் அடக்குமுறைப் பேயாட்டம் நடக்கிறது. இவர்களைப் பிடித்தாலும் தொல்லை, பிடிக்காவிட்டாலும் தொல்லை! என் செய்வதென்று விழிக்கிறாராம் பிரதம மந்திரியார்! இந்தச் சந்தர்ப்பத்தில் நான் ஆபீஸில் உட்கார்ந்து எழுதிக்கொண்டிருக்கும்போது 'அஸோஸியேடட் பிரஸ்' செய்தி வந்தது—அம்தராபாத்தில் இந்தியத் துருப்புகள் நுழைந்துவிட்டன என்று. இந்த ஊர் பிடிக்கப்பட்டது—இந்தப் பாலம் பிடிக்கப்பட்டுவிட்டது என்று சேதி வந்துகொண்டே இருந்தது. உடனே இந்தி எதிர்ப்பு மறியலைத் தற்காலிகமாக, நிர்வாகக் கமிட்டியின் உறுதியை எதிர்பார்த்து நிறுத்தி விட்டேன் என்றும், ஏற்கனவே தீர்மானிக்கப்பட்ட அடையாள மறியல் மட்டும் ஆங்காங்கு நடத்தப்படலாம் என்றும், ஆனால் போலீஸ் உத்தரவிடுவதுபோல் கண்டிப்பாக நடந்து கொள்ள வேண்டுமென்றும், பத்திரிகையில் போட்டுவிட்டு, நிர்வாகக் கமிட்டித் தலைவர் தோழர் வேதாசலம் அவர்களுக்கும் தந்தி கொடுத்துவிட்டேன். போராட்டம் நிறுத்தப் பட்டது சிலருக்குப் பிடிக்கவில்லை யென்றாலும், அது முறைப்படி நிறுத்தப்பட்டது.

எல்லா இடங்களிலும் அமைதியாகவே நடைபெற்றது என்றாலும்—7, 8 இடங்களில் போலீஸ் ஆடிய வேட்டைக்குக் கணக்கே இல்லை. கேள்வி கேட்பாரற்ற முறையில் ஏராஜகம் சில இடங்களில் நடைபெற்றது. சில இடங்களில் வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது; சில இடங்களில் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது; சில இடங்களில் கைது செய்யவே இல்லை, சில இடங்களில் சில மணி நேரம் பூட்டி வைத்து வெளியே அனுப்பிவிட்டனர்; சில இடங்களில் அடித்து மிரட்டி உதைத்திருக்கின்றனர். சில இடங்களில் மிக மிகக் கொடுமைப்படுத்தி இருக்கின்றனர்.

இப்போது 'விடுதலை'ப் பத்திரிகை ஜாமீன் பறிமுதல் செய்யப்பட்டு வருகிறதாம்! அடுத்து நாலாயிரம் கேட்கப்படலாம் ஜாமீன் தொகையாக! அதற்கும் நீங்கள்தான் மனமுவந்தளித்திருக்கிறீர்களே—ரூ. 15 ஆயிரத்திற்கும் மேலாக! அது தீர்ந்து போகும் வரை கொடுத்துக்கொண்டே போவோமே! கொடுத்தால் எங்கே போய்விடும்? அதே இடத்திற்கு நாங்களே வரும்போது வட்டியோடு சேர்த்து எடுத்துக்கொள்ளமாட்டோமா?

இராஜகோபாலாச்சாரியாரை ஏழை பங்காளர் என்று விளம்பரப்படுத்த—அவர் துணி துவைப்பதையும், இலை எடுப்பதையும்கூடப் படமாகப் போட்டுக் காட்டவில்லையா?

www.thamizham.net - Free E book No 3041

இன்று அதே இராஜகோபாலாச்சாரியார் மாதம் 20,000 சம்பளம் பெற்றுவரவில்லையா? 'ஏனய்யா, இவ்வளவு சம்பளம்?' என்றால், 'அவர்தம் அந்தஸ்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டாமா? அவர் வக்கீல் தொழிலை விடாமல் இருந்திருப்பாரானால் அல்லாடியைக்கூட மிஞ்சிவிட்டிருப்பாரே!' என்று சமாதானம் கூறப்படவில்லையா இன்று? இது ஒரு பக்கம் கிடக்கட்டும்.

மறியலைப் பாதுகாத்துத் தருவதாகவும் நேர்மையான பிரச்சாரத்திற்குத் தடையில்லாமல் பார்த்துக்கொள்வதாகவும் உறுதிதந்த மந்திரியார் ஆட்சியில், எங்கு பார்த்தாலும், எங்கள் கூட்டத்திற்குத் தடை உத்தரவு பிறப்பிக்கப்படுகிறது; ஊர்வலத்திற்கும் தடை விதிக்கப்படுகிறது.

வெள்ளையன் காலத்திலாவது எல்லா ஊரிலும் ஒரேமாதியான அடக்குமுறை கையாளப்படும்; எல்லா ஊருக்கும் ஒரே மாதிரியான உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கும். ஆனால், இன்றைய ஆட்சி முறையிலோ ஊருக்கு ஒரு மாதிரி அடக்குமுறை 'தர்பார்' நடத்தப்படுகிறது. காரணமே தெரியவில்லை. நல்ல வாய்ப்பாக இந்த ஊரில் இவ்வளவு அமைதியாகக் கூட்டம் நடக்கிறது. நேற்று கடலூரில் கூட்டத் தலைவருக்குக் கல்லடி; சப்-இன்ஸ்பெக்டருக்குக் காயம். எங்கு பார்த்தாலும் காங்கிரஸ் தலைவர்களின் தலையீடு பொறுக்கமுடியவில்லை. என்ன செய்வது? இப்படியான பல தொல்லைகளால் நாட்டின் முன்னேற்றமே வெகுவாகத் தடைப்பட்டு நிற்கின்றது.

வெள்ளைக்காரன் காலத்தில் அகிம்சையின் பேரால் பட்டாளத்திற்கு ஆள் சேர்த்துக் கொடுக்க மறுத்த அகிம்சா மூர்த்தியின் அடிச் சுவட்டைப் பின்பற்றும் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் இன்று நாட்டின் பாதுகாப்புக்காக மட்டும் 130 கோடி ரூபாய் ஒதுக்கிவைத்துள்ளார்கள், துப்பாக்கியும், வெடிமருந்தும் வாங்குவதற்காக. துப்பாக்கியும் வெடிமருந்தும் எதற்காக? கொஞ்சவா, குலாவவா, அல்லது கட்டியணைத்து முத்தமிடவா? மாற்றாரை மாய்க்கத்தானே! அகிம்சைவாதிகள்—பிறரை மாய்க்க நினைக்கலாமா? காஷ்மீரில் 6 மாதத்திற்குள் மட்டும் 35 கோடி ரூபாய் செலவாகியிருக்கிறதே; மக்களைக் கொன்று குவிக்கத்தானே! அகதிகளுக்கு மட்டும், தினம் 12 இலட்ச ரூபாய் செலவிடப்படுகிறதே! அகிம்சாவாதிகளான இவர்கள் ஏன் தேர்ச்சி பெற்ற சோல்ஜர்களையும், மேஜர்களையும் கூவி அழைக்கிறார்கள்?

ஏழை பங்காளர்களான இவர்கள், ஏன் இன்று 8 ஆயிரமும், 10 ஆயிரமும் சம்பளம் வாங்கிவருகிறார்கள்? விஜயலட்சுமி அம்மையாருக்கு மாதம் 8000 ரூபாய்; அந்த அம்மாளுடைய கட்டிலுக்கும், கம்பளம், மேஜை வகையறாக்களுக்கும் செலவு 2½ இலட்ச ரூபாய்; அந்த அம்மையார் அமெரிக்காவில் விருந்தொன்று கொடுக்கச் செலவு செய்தது இலட்சக்கணக்கான ரூபாய்கள். இங்கிலாந்திலுள்ள ஸ்தானீகருக்கு மட்டும் 9 மோட்டார் கார்கள். அதில் ஒரு காரின் விலை 26,000 ரூபாய்! வெளி நாட்டிலாகும் செலவு மட்டும் 1 கோடி, 2 கோடி என்று ஏறி வருகிறது என்றாலும் இவர்கள் எல்லோரும் தரித்திர நாராயணனின் சிஷ்யர்களாம். என்னே விந்தை!

அகிம்சை என்பதும் ஏழ்மை என்பதும் வெறும் விளம்பரப் பேச்சுதானே? ஏழை மக்களின் வரிப் பணம் தானே, இப்படிச் சூறையாடப்படுகிறது? இவ்வளவு செலவாகியும் மக்களுக்கு ஏதாகிலும் சவுகரியமோ, பாதுகாப்போ உண்டா? வெள்ளையன் காலத்திலாவது நம் வீட்டில் திருட்டுப்போகும். இப்போதைய சுயராஜ்ய காலத்தில் போலீஸ்காரன் வீட்டிலேயே திருட்டுப் போகிறது! மந்திரிகளுக்குச் சம்பளம் போதவில்லையென்றால், ஏற்கனவே இருந்த சம்பளத்தோடு ஒரு 'சைபர்' சேர்த்துக் கொள்கிறார்கள். ஏனென்றால் தம் அந்தஸ்தை காப்பாற்றிக்கொள்ள என்பார்கள். போலீஸ்காரனுக்குத் தன் குழந்தையைப் பள்ளிக்கு அனுப்பக்கூடக் காசு கிடைப்பதில்லை; அவன் சம்பளம் போதவில்லையென்றால்,

www.thamizham.net - Free E book No 3041

அது ராஜ துரோகமாகிவிடுகிறது; பேசாமல்—தெருவில் மலஜலம் கழிப்பவனைப் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான் என்கிற நிலையில் அவன் இருக்கிறான். அவனுடைய அந்தஸ்தைக் காப்பாற்றுவது பற்றிச் சர்க்காருக்குக் கவலையில்லை. சாதாரணமாகக் கல்லுடைப்பவன்கூட நாளொன்றுக்கு ரூ. 3 கூலி வாங்குகிறான்; அதுவும் 6 மணி நேரம் வேலை செய்துவிட்டு. ஆனால் நம் போலீஸ் தோழனுக்கோ, நாள்முழுதும் உழைத்தாக வேண்டுமென்றாலும் 30 ரூபாய்தான் சம்பளம். போலீஸ்காரர் நிலையே இப்படியென்றால் மற்ற கீழ்த்தர சிப்பந்திகளைப் பற்றிக் கேட்கவேண்டியதே இல்லை. கீழ்த்தர சிப்பந்திகள் யாவரும் திராவிடர்கள். ஆதலால் அவர்களுடைய அந்தஸ்தைப்பற்றிச் சர்க்கார் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை.

ஜமீன்தார்கள்—முக்கால்வாசிப்பேர் திராவிடர்கள். ஆதலால் அவர்கள் உடனடியாக ஒழிக்கப்பட வேண்டுமாம்! ஜமீன்தாரர்கள் சிலர் ஜஸ்டிஸ் கட்சிக்கு ஆதரவாக இருந்து வந்தார்கள் என்பதற்காக, 'நாங்கள் பதவிக்கு வந்தால் உங்கள் கையில் முதலில் ஒடு கொடுப்போம்' என்று இராஜகோபாலாச்சாரியார் அன்று சவால் விட்டதன் காரணமாக—அவரது ஆட்சியின்போது துவக்கப்பட்டதுதான், இந்த ஜமீன் ஒழிப்புப் படலம். ஜமீன்கள் ஒழிக்கப்படட்டும், நமக்குக் கவலை இல்லை. அவர்களிடமிருந்து அன்னக்காவடிப் பார்ப்பனர்கள் இனாமாகப் பெற்ற இனாம் சொத்துக்களும் அதோடு ஒழிக்கப்பட வேண்டாமா என்று கேட்டால்—'இனாம் கொடுத்ததற்குப் பதிலாக அப்போதே அவர்களுக்கு மோட்சத்தில் இடம் பிடித்துக் கொடுத்தாகிவிட்டது' என்றால் அது நியாயமா? திராவிடர்களுக்கொரு நீதி, பார்ப்பனருக்கொரு நீதியுமாக நடந்து கொள்வது என்றால் பொதுமக்கள் நியாயத்திற்காகக் கிளர்ச்சி செய்ய வேண்டாமா? இன்றைய சர்க்காரோடு போட்டி போட வேறு கட்சியே இல்லையே!

முஸ்லிம் லீக் இம் மாகாணத்தைப் பொறுத்தவரை மறைந்துவிட்டது. கம்யூனிஸ்ட் தலைவர்களை ஜெயிலில் அடைத்தாகிவிட்டது. நாங்களோ சட்டசபையின் எல்லைக்குள் காலெடுத்துவைப்பதில்லை. ஆகவே, காங்கிரஸ்காரர்கள் தங்கள் இஷ்டம்போல் என்ன வேண்டுமானாலும் செய்யவேண்டியதுதானா? தெரிந்தெடுக்கப்பட்ட சட்டசபை மெம்பர்களாயிருக்கும் அந்தக் காங்கிரஸ்காரர்களின் யோக்கியதையோ சொல்லத்தரமில்லை. இந்நாட்டில் 100-ல் 10 பேருக்குத்தான் ஓட்டுரிமை உண்டு; அதாவது படித்தவர்களுக்கும் சொத்துரிமை உடையவர்களுக்குந்தான் ஓட்டு. பார்ப்பனர்கள் அத்தனை பேரும் படித்தவர்கள்; எனவே, அத்தனை பேருக்கும் ஓட்டு உண்டு. அவர்கள் 100-க்கு 3 பேர்; மீதியுள்ள 7 பேரில் 5 பேர் பணக்காரர்களாவும், 2 பேர்—படித்த பார்ப்பனர் தயவால் உத்தியோகம் பார்த்துவரும் ஏழைத் திராவிடர்களாகவும் இருப்பார்கள். இந்தப் பத்துப் பேர்களுக்குந்தான் சட்டசபை மெம்பர்களைத் தெரிந்தெடுத்து அனுப்பும் உரிமை உண்டு. தேர்தல் என்றால் 10 ஆயிரம், 20 ஆயிரம் செலவாகும். எனவே, ஏழைமகன் எவனும் தேர்தலுக்கு நிற்கமுடியாது. நிற்பதாயிருந்தால், அவன் யாராவது ஒரு பணக்காரனுடைய அடிமையாகத்தான் நிற்கவேண்டியிருக்கும். எனவே, பார்ப்பன அடிமைகளும் பணக்காரர்களும்தான் இன்றைய சட்டசபை மெம்பர்கள்; அவர்கள்தான் நம்முடைய பிரதிநிதிகள். இப்படிப்பட்ட பிரதிநிதிகளிடமிருந்து ஏழைகளுக்குச் சாதகமான சட்டதிட்டங்கள் எவற்றை யாவது எதிர்பார்க்க முடியுமா? இவர்களுடைய யோக்கியதைதான் இப்படியென்றால், மத்திய சட்டசபை அங்கத்தினர்களின் யோக்கியதை இதைவிடக் கேவலமானது.

இந்த மாகாணத்திலிருந்து மத்திய சட்டசபைக்கு 45 பேர் அனுப்பப் படவேண்டு மென்று ஏற்பாடுசெய்தனர். அந்த 45 பேரில் ஒருவர்கூட இந்தச் சட்டசபை மெம்பர்களால் சுயமாகத் தெரிந்தெடுக்கப்படவில்லை. மத்திய பார்லிமெண்டரி போர்டு யாரைத் தெரிந்தெடுத்து அனுப்பவேண்டுமென்று மாகாண சட்டசபைக் கட்சித் தலைவருக்கு எழுதி அனுப்பினார்களோ—அதே ஆட்களை, இந்த மெம்பர்கள் தேர்ந்தெடுத்தனுப்பினர். சண்முகஞ் செட்டியாரைத் தேர்ந்தெடுத்தனுப்புங்கள் என்றால்—சண்முகஞ் செட்டியார்;

அல்லாடி அய்யரைத் தேர்ந்தெடுத்தனுப்புங்கள் என்றால்—அல்லாடி அய்யர்; இந்தப்படியே 45 பேரும் மத்திய பார்லிமெண்டிரி போர்டாரால் நாமினேஷன் செய்யப்பட்டு, இங்குள்ள அடிமைச் சட்டசபை அங்கத்தினர்களால் அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட்டனர். இந்தப் படியாக ஜனநாயகத்திற்கு எவ்விதத்திலும் சம்பந்தமில்லாத முறையில் தெரிந்தெடுத் தனுப்பிக்கப்பட்டுள்ள அடிமை வீரர்கள்தாம் நமது விதியை நிர்ணயிக்கும் வேலையில் டில்லியில் ஈடுபட்டுள்ளனர். இப்படிப்பட்ட இராஜ்யத்தை 'ஹம்பக் ராஜ்யம்' என்று கூறுவதா? சுயராஜ்யம் என்று கூறுவதா? ஒரு சட்டசபை மெம்பருக்குக்கூடச் சுயமாக ஓட்டுக்கொடுக்க உரிமை தரப்படாமல் இன்னாருக்குத்தான் ஓட்டுச் செய்ய வேண்டு மென்று ஒரு சீட்டில் எழுதித் தரப்பட்டதென்றால்—இவர்கள் அடங்கிய சர்க்காரை சுயராஜ்ய சர்க்கார் என்று கூறமுடியுமா?

வெள்ளையனாவது அன்னியன்; அவனுக்கு மக்களிடத்தில் பொறுப்பில்லை; நாட்டைப்பற்றியும் கவலையில்லை. 'ஜனநாயகம்' என்று மேடை மேடையாகக் கூறித் திரியும் காங்கிரஸ்காரர்களுக்காவது, கொஞ்சமேனும் ஜனநாயக முறையில் நடந்து கொள்ள வேண்டுமென்ற அக்கறை வேண்டாமா? ஜனநாயகத்தில் கடுகளவேனும் காங்கிரஸ்காரர் களுக்குப் பற்றிருந்தால் இந் நாட்டிற்கு ஒரு இராஜகோபாலாச்சாரியார் கவர்னர் ஜெனர லாகி இருக்கமுடியுமா? இராஜகோபாலாச்சாரியாரைப்பற்றி சர்தார் பட்டேல், 'அவருக் கென்ன தெரியும்? கதைகூறி மக்களை ஏமாற்றத்தான் தெரியும்' என்று கூறியது இன்னமும் கவனத்திலிருக்குமே? ஒரு இராஜேந்திரப் பிரசாத்தும் ஒரு நேருவும் அவரைத் தூற்றியதற்கு அளவு காட்டமுடியாதே! இங்கு அவரால் நாலணா மெம்பராகக்கூட ஆக முடியவில்லையே! அவர்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு, சென்ற இடமெல்லாம் கல்லடியும் தாரடியும் கிடைத்ததே! போலீஸ் வளையத்திலேயே திரும்பிச் செல்ல வேண்டியிருக்கிறதே! கல்கத்தா போய் ஆஜாத் தயவால்தானே மெம்பராக முடிந்தது? மறுபடியும் ஒரு அசப்அலி தயவால்தானே கமிட்டி மெம்பராக முடிந்தது? இம் மாகாணத்து மக்களால் இவ்வளவு வெறுத்து ஒதுக்கப்பட்ட ஒருவருக்கு, சுயராஜ்யம் வந்ததும் கவர்னர் ஜெனரல் வேலை கொடுக்கப்பட்டது என்றால்—இம் மாகாண மக்களின் ஜனநாயக உணர்ச்சிக்குச் சாவு மணி அடிக்கும் வேலைதானே? அவரை அங்குக் கவர்னர் ஜெனரல் ஆக்கிவிட்டு, அங்கிருந்து ஒரு மகாராஜாவை இம் மாகாணத்துக்கு கவர்னராக அனுப்பிவைக்கிறார்கள் என்றால்—இம் மாகாண மக்களின் சுதந்திர உணர்ச்சியை நையாண்டி செய்கிறார்கள் என்பதுதானே அர்த்தம்? வெள்ளையன் எப்படி இம் மாகாண மக்களின் விருப்பத்தைப்பற்றிக் கவலைப்படாது இங்கிலாந்திலிருந்து கவர்னரை அனுப்பி வந்தானோ அப்படித்தானே—இன்றும் வடநாட்டிலிருந்து ஒரு மார்வாரி மகாராஜா கவர்னராக அனுப்பப்படுகிறார்?

எவ்விதத்திலும் மாறுதலைக் காண முடியவில்லையே? எங்கே பேச்சுரிமை, எழுத் துரிமைக் கூச்சல்கள்? வெள்ளையனை ஓட்டிவிடுகிறோம் என்று நம்மிடமிருந்து ஓட்டு வாங்கிச் சென்று, இன்னும் வெள்ளையனையே நமக்கு இராஜாவாக வைத்துக்கொண்டு, அவனோடு ஏதோ ஒப்பந்தம் செய்துகொண்டதன்மூலம் பெறப்பட்ட குடியேற்ற நாட்டு அந்தஸ்தை சுயராஜ்யம் என்று விளம்பரப்படுத்திப் பித்தலாட்டம் செய்து ஆட்சி நடத்துவ தென்றால், அதை நாம் அப்படியே ஒப்புக்கொள்ளுவதா? பூரண சுதந்திரம் வாங்கித் தருவோம் என்று சவாலிட்டு ஓட்டு வாங்கிச் சென்ற தோழர்கள்—குடியேற்ற நாட்டு அந்தஸ்து கிடைக்கும் போல் இருக்கிறதென்றால்—மறுபடியும் பொது ஜனங்களின் அபிப் பிராயத்தைக் கேட்டிருக்கவேண்டாமா? கேட்டார்களா இவர்கள்? வெறும் கைதூக்கத்தானா இவர்கள் நம்மிடம் ஓட்டுப்பெற்றுச் சென்றனர்? சர்க்கார் கொண்டுவரும் சட்டத்தின் பேரில் காங்கிரஸ் சட்டசபை மெம்பர்கள் யாரும் திருத்தம் கொண்டுவரக்கூடாது என்று ஒரு தீர்மானம் செய்திருக்கிறார்களாமே! இது நியாயமா? பேச்சுரிமை, எழுத்துரிமை என்று கூறியதெல்லாம் இன்று எங்கேயோ மறைந்து விட்டனவே! சர்க்காரின் குற்றங் குறைகளை

www.thamizham.net - Free E book No 3041

எடுத்துக்கூறி வருபவர்கள் ஒன்று ஜெயிலில் அடைக்கப்படுகிறார்கள் அல்லது சுயராஜ்ய விரோதிகள் என்று தூற்றப்படுகிறார்கள்.

தோழர்களே! உங்களுக்கு எனது கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்கு முகத்தான் எந்த எந்த விதமாகவோ பேசி இருப்பேன். தவறுதலாக—ஏதாவது கடுமையான வார்த்தைகள் என்னையறியாமலே வெளியாகி இருந்தால் அதற்காக மன்னித்துக் கொள்ளுங்கள். இம் மாதக் கடைசியில் மறுபடியும் இந்தி எதிர்ப்பு மறியல் துவங்கும். சர்க்கார் அதை எப்படி ஒடுக்க முயற்சிப்பார்களோ தெரியாது. அவர்கள் தடியையே நம்பி இருக்கிறார்களோ அல்லது துப்பாக்கியையும், வெடிமருந்தையும் நம்பி இருக்கிறார்களோ அல்லது ஜெயிலைத் தான் நம்பியிருக்கிறார்களோ எனக்குத் தெரியாது. நாங்கள் வேண்டுவது இதுதான்: 11-வது வகுப்புக்கு மேல் (Sixth Form) கல்லூரி வகுப்புக்களில் இந்தியை எப்படி வேண்டுமானாலும் போதிக்கட்டும்; நாம் அதற்காகக் கவலைப்படப் போவதில்லை; ஆனால் உயர்தரப்பள்ளிகளில் மட்டும் இந்தி எந்த வகையிலும் தலைகாட்டக் கூடாது; அவ்வளவு தான் நாம் வேண்டுவது.

கடைசியாக, காங்கிரஸ் திராவிடத் தோழர்களே! ரேஷன் பெர்மிட்டுக்கோ, கள்ள மார்க்கெட் லைசென்ஸுக்கோ, மற்ற தரகுக்கோ, சர்க்கார் அதிகாரிகளை மிரட்டிப் பெறும் இலஞ்சக் காசுக்கோ, சர்க்கார் தயவை எதிர்பார்த்துத் திரியும் சுயநலமிகள் அல்லாத மற்ற காங்கிரஸ் திராவிடத் தோழர்களே! நாங்கள் உங்களுடைய உண்மைத் தொண்டர்கள். பொது வாழ்க்கையில் உங்களைப்போல் எவ்வித சுய நலத்தையும் கருதாது பணியாற்ற வேண்டுமென்று உண்மையிலேயே விருப்பப்படுபவர்கள். நீங்கள் செய்ய நினைக்கும் எந்த நல்ல காரியத்திற்கும் உங்களுக்குத் தோள் கொடுத்து உதவத் தயங்காதவர்கள். உத்தியோகத்திலிருப்பவர்களின் அக்கிரமச் செயல்களையும், வியாபாரிகளின் கொள்ளைகளையும், பார்ப்பனர்களின் புரட்டல்களையும் மக்களிடம் எடுத்துக்கூறி, அவர்களைச் சிந்திக்கச் செய்பவர்கள் நாங்கள். நாங்கள் யாருக்கும் விரோதிகளல்லர். எதையும் பகுத்தறிவு கொண்டு சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்பதில்தான் எங்கள் கவலை பூராவும் அடங்கிக் கிடக்கிறது. நாட்டிலுள்ள வேறு எந்தக் கட்சியைக் காட்டிலும் மிக மிக முன்னேற்றமான கொள்கையுடையது எங்கள் கழகந்தான். இந்த மாதிரி நல்ல ஸ்தாபனம் கிடைத்தலரிது. இதை நானே சொல்லிக் கொள்வது கேவலம் என்றாலும்—உணராதவர்களுக்கு எடுத்துக் கூறத்தான் வேண்டியிருக்கிறது. எனவே, கூடுமானவரைக்கும் எங்களோடு ஒத்துழையுங்கள்; உண்மை வழி நிற்கும் எங்களுக்கு உதவி புரியுங்கள்.

மாணவத் தோழர்களே! எங்கள் அழைப்பு என்றைக்கு வருகிறதோ அன்று—பள்ளிகளை விட்டு, கல்லூரிகளை விட்டு வெளியேறிவரத் தயாராகுங்கள்! படிப்புக்கூட பிறகு பார்த்துக் கொள்ளலாம்; அல்லது ஜெயிலிலே பள்ளி நடத்தலாம், ஆசிரியர்களையும் உடன் சேர்த்து வாருங்கள்.

வாலிபத் தோழர்களே! தோழியர்களே! நீங்களும் தயாராய் இருங்கள். கலியாணம் செய்துகொள்வதும், பிள்ளைகள் உற்பத்தி பண்ணத் துவக்குவதும் அப்புறம் ஆகட்டும். தாய்மார்களே! உங்களுடைய இழிவைப் போக்குவதற்குத்தான், சட்டத்தாலும் சாஸ்திரத்தாலும் கடவுள் பேராலும் உங்களுக்கு இருந்துவரும் முன்னேற்றத் தடைகளைத் தகர்த்தொழிக்கத்தான் எங்கள் கழகம் ஆரம்ப முதற்கொண்டு தொண்டாற்றி வருகிறது. நீங்கள் சமூகத்தில் மிகமிகத் தாழ்ந்த ஜந்துக்களாக ஆக்கப்பட்டு, ஆண்களுக்கு நிரந்தர அடிமைகளாக—கட்டிலறைப் போகப் பொருள்களாக இருந்துவருகிறீர்கள். இன்று உங்களில் ஒரு சிலருக்காவது சற்று சுதந்திரத்தோடு வாழ முடிகிறதென்றால், அதுவும் எங்கள் கழகம் செய்த தொண்டின் பயனால்தான் என்பதை உணர்ந்து எங்கள் கழகத்தை ஆதரித்து உதவுங்கள்.

[சிதம்பரத்தில், 29-9-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 7-10-1948]

www.thamizham.net - Free E book No 3041

# 4. இந்தித் திணிப்பு

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

இந்தி கட்டாயப்படுத்தப் படுவதற்குத்தான் நாம் எதிரிகளே ஒழிய, தனிப்பட்டவர்கள் செய்யும் இந்திப் பிரச்சாரத்திற்கு நாம் விரோதிகளல்லர். இந்திப் பிரச்சார சபைகளையே அழித்தொழிக்க வேண்டுமென்பதும் நம் நோக்கமல்ல. இதைப் பொதுமக்கள் நன்றாக உணர்ந்துகொள்ள வேண்டும்.

ஆட்சியாளர்களும் வெறும் பேருக்குத்தான் கட்டாயமில்லை என்பதை ஒப்புக் கொள்கிறார்கள். இந்தியைக் கட்டாயப்படுத்தவேண்டும் என்பதுதான் தங்கள் ஆசை யென்றும், இந்தியை எல்லோரும் கற்கவேண்டுமென்றே தாங்கள் விரும்புவதாகவும்—இந்தி இந் நாட்டின் தேசிய மொழியாதலால் அதை எல்லோரும் கற்கவேண்டுவது அவசியமே என்றும் கூறிவருகிறார்கள்.

இந்தி இந் நாட்டின் தேசிய மொழி என்பதையே நாம் மறுக்கிறோம். இந் நாடு திராவிட நாடு. இந் நாட்டு மக்கள் திராவிடர்கள். இந் நாட்டு மொழி திராவிட மொழி. இந் நாட்டிற்குத் திராவிட மொழிதான் தேசிய மொழியாக இருக்க முடியுமே ஒழிய, இந்தி போன்ற வேறுநாட்டு மொழி ஒருக்காலும் இந் நாட்டிற்குத் தேசிய மொழியாக இருக்க முடியாது.

இந் நாட்டிற்குத் திராவிடத் தேசியம்தான் தேவையே ஒழிய, டெல்லித் தேசியமோ, அய்க்கிய மாகாணத் தேசியமோ, மற்ற வடநாட்டுத் தேசியமோ தேவையில்லை.

நாம் நிரந்தரமாக வடநாட்டுக்கு அடிமைப்பட்டுக்கிடக்கப் போகிறோமா? நாம் வடநாட்டான் ஆதிக்கத்திலிருந்து என்றைக்குமே விடுதலை அடையப்போவதில்லையா என்பதை நம் தேசியத் திராவிடத் தமிழர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். வந்த சுயராஜ்யத்தில் நமக்குப் பங்கில்லையா? அல்லது சுயராஜ்யம் நம்மை அடிமைகொள்ள வந்திருக்கிறதா என்பதையும் நம் தேசியத் திராவிடத் தோழர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். வெள்ளையர் நாட்டில் ஜப்பான் மொழி தேசிய மொழி ஆடுவிடுமா? ஜெர்மன் நாட்டில் ரஷ்ய மொழி தேசிய மொழி ஆடுவிடுமா? அந்த சர்க்காரால் ஒப்புக்கொள்ளப் படுமா என்பதைச் சிந்தித்துப் பார்த்து, அதேபோல்—திராவிட நாட்டிலும் ஆரியத் தேசியம், ஆரிய மொழித் தேசியம் செல்லுபடியாகாது; ஒப்புக்கொள்ள முடியாது என்பதை உணர்ந்துகொள்ள வேண்டும்.

வெள்ளையர்கள் வடவரிடம் இலஞ்சம் வாங்கிக்கொண்டு நம்மை அக்கிரமமாக விற்று விட்டார்கள். அதனால்தான், அவர்கள் நம்நாட்டில் ஆரியமொழித் தேசியத்தை—மார்வாரி பொருளியல் தேசியத்தை—குஜராத்தி அரசியல் தேசியத்தைப் புகுத்துகிறார்கள். இது நீதியு மல்ல, நேர்மையுமல்ல என்பதைத் தேசியத் தோழர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். இந்தியை நம் நாட்டில் புகுத்துவது நம்மை நிரந்தரமான அடிமைகளாக ஆக்கிக்கொள்ளச் செய்யப்படும் சூழ்ச்சிதான். ஆரியர்கள் எப்படி நம்மை கீழ்சாதிக்காரர்களாக ஆக்கி அடிமைப்படுத்தினார்களோ—அதுபோல, இன்றைய வடநாட்டு ஆட்சியும் நம்மை அன்னக் காவடிப் 'பாப்பர்'களாக்கி அடிமைகொள்ளப் பார்க்கிறார்கள்.

ஆரியர்கள் நம்மை முதலில் எப்படி அடிமைகொண்டார்கள்? படை பலத்தில் யுத்தம் நடத்தி வெற்றிபெற்றதன் மூலம் அல்லவே! தந்திரமாக—தமது புராண இதிகாசங்களைக் கலைகளாக்கி, அவற்றை நம் மக்களிடையே புகுத்தினார்கள். அவற்றின் தத்துவத்தை—அத் தத்துவக் கடவுள், அவற்றின் தர்மங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக ஒப்புக்கொள்ளும் படி செய்தனர். அதில் அவர்கள் வெற்றிபெற்று, அதற்கேற்ப மனுநீதிச் சட்டம் வகுத்து, நம்மைக் கீழ்மக்கள்—ஈனப் பிறவி ஆக்கினர். அதாவது, மதத்தை முதலில் நம்மை ஒப்புக் கொள்ளச் செய்த பிறகு நம்மைக் கீழ்மக்கள் என்று கூறும் சட்டம் செய்துகொண்டனர்.

www.thamizham.net - Free E book No 3041

இதை உணர்ந்து மதத்தைக் கண்டிக்க நாம் ஆரம்பித்ததும், வேறுவழியில்—அதாவது, தேசியத்தின் பேரால் இந்தியைப் புகுத்தி—அதன்மூலம் ஆரியர் கருத்துக்களைப்புகுத்தி—அதன் வழி நாம் அறிவைப் பாழாக்க நினைக்கின்றனர். நமது பிரச்சாரத்தின்மூலம் மக்கள் ஒரு அளவுக்கு ஆரிய கலாச்சாரத்திலிருந்து விடுதலை பெறவும், அதை வெறுக்கவும் முற்பட்டிருக்கிறார்கள்.

ஆதலால், குழந்தைப் பருவத்திலேயே ஆரியக் கலாச்சாரத்தைப் புகுத்தவேண்டி இந்தியை ஆரம்பப் படிப்பிலேயே புகுத்த முயற்சிக்கிறார்கள். மதத்தினால் புகுத்த முடியாமல்போன பித்தலாட்டக் கருத்துக்களை மொழியின் மூலம் புகுத்தச் சூழ்ச்சி செய்யப் படுகிறது. இந்திக்கும் சமஸ்கிருதத்திற்கும் அதிக பேதமில்லை என்பதை இந்தி ஆதரவாளர்களே ஒப்புக்கொள்கிறார்கள். மதம் செல்வாக்குடன் இருந்த சமயத்தில் நாம் சமஸ்கிருதம் படிக்கக்கூடாதென்றும் கூறிவந்தார்கள். திருப்பதி, இராமேஸ்வரம் முதலிய இடங்களிலுள்ள சமஸ்கிருதக் கல்லூரிகளில், அதுவும் சர்க்கார் மானியத்தைக்கொண்டு நடைபெற்று வரும் இக் கல்லூரிகளில்கூட சமீபகாலம் வரை நம் மக்களுக்கு சமஸ்கிருதம் படிக்க வசதியளிக்கவில்லை.

நம் மக்களைக் கல்லூரிகளில் சேர்த்துக்கொள்வதேயில்லை. சர்க்கார் மானியம் அளிப்பதை நிறுத்திவிடுவதாகப் பயமுறுத்திய பிறகுதான் நம் பிள்ளைகளையும் அக் கல்லூரிகளில் சேர்க்க முற்பட்டார்கள். எல்லோருக்கும் சம உரிமை இருக்க வேண்டும் என்பதற்காக நாம் போராடினோமே ஒழிய, சமஸ்கிருதம் படிப்பதால் அறிவு விசாலம் அடையும் என்பதற்காக நாம் போராடவில்லை. நாம் இன்று சமஸ்கிருதம் ஆரிய மொழி என்றும், அது நம் திராவிட கலாச்சாரத்தை அடியோடு பாழ்படுத்தி நிற்கும் மொழி என்றும், அதைப் படிப்பதால் மூட நம்பிக்கைக் கருத்துக்கள்தாம் வளர்ச்சியடையுமேயொழிய—ஆபாச அறிவுதான் வளர்ச்சியடையுமேயொழிய—பகுத்தறிவு வளராது என்றும் பிரச்சாரம் செய்வதன் பயனாக, சமஸ்கிருதத்தைக் கட்டாயப்படுத்தும் வாய்ப்பற்றவர்களாய்ப் போய் விட்டார்கள். மேலும், அது பேசும் பழக்கத்தில்—உரையாடும் பழக்கத்தில் இல்லாது போய்விட்டதால் அதைக் கற்கும்படி வற்புறுத்த இயலாமல் போய்விட்டது.

எனவே, சமஸ்கிருதத்தின் மூலம் புகுத்த முடியாமற்போன பித்தலாட்டக் கருத்துக்களை அதன் வழிமொழியான இந்தியின் மூலம் புகுத்த முற்பட்டிருக்கிறார்கள். அரசியல் ஆதிக்கத்தின் உதவியால் இந்தியைப் புகுத்துவதில் வெற்றி காணலாம் என்று நினைத்திருக்கிறார்கள்.

இனி சர்க்கார் இந்தியால்தான் நடைப்பெறப்போகிறதாம். கோர்ட்டுகளும், சட்டசபைகளும் இந்தியிலே நடைபெறலாம். தொழிற்படிப்பான வைத்தியப் படிப்பு, 'என்ஜினீயரிங்' முதலிய படிப்புகள் யாவுமே இந்தியில் நடைபெறலாம். இன்னும் 10 ஆண்டுத் தவணையில் இன்று ஆங்கிலத்தில் நடைபெற்று வரும் சகலமும் இந்தியில் நடைபெற வேண்டுமென்று மத்திய சட்டசபையில் தீர்மானம் செய்திருக்கிறார்கள்.

[சென்னையில், 10-1-1950-ல் சொற்பொழிவு—'விடுதலை' 16-1-1950]

## 5. அரசியல் கிளர்ச்சி அல்ல

இந்தி எதிர்ப்புக்கு ஆதரவளிப்பதை அரசியல் பணியாகவே யாரும் கருதக்கூடாது என்றும் இதை மொழிப் பாதுகாப்புப் பணியாக ஒவ்வொரு தமிழரும் கருதவேண்டும் என்றும் தலை குனிந்து வேண்டிக்கொள்கிறேன்.

1948 ஆம் ஆண்டில் இந்தி எதிர்ப்பு துவங்கிய காலத்தில்—அதாவது இரண்டாவது எதிர்ப்புக் கிளர்ச்சி காலத்தில் தோழர் ஓமாந்தூர் இராமசாமி ரெட்டியார் அவர்கள் முதல் மந்திரியாக இருந்தார். நான் எதிர்ப்புக்குத் தேதி குறிப்பிட்டவுடன், 2 நாட்களுக்கு முந்தி

www.thamizham.net - Free E book No 3041

என்னை நேரில் அழைத்தார். நான் நேரில் சென்றேன். அன்பாய் வரவேற்று துவக்க வாக்கியமாகக் கலக்கத்துடன், 'நீ இருக்கவேண்டிய இடத்தில் நான் இருக்கிறேன்' என்றார். 'இந்த இடத்தில் நான் இருக்க நினைத்தால் இந்த இடம் எனக்கும் கிடைக்காது; உங்களுக்கும் கிடைத்திருக்காது' என்றேன்.

'என்ன இருந்தாலும் நீ காங்கிரசை விட்டுப்போனது தவறு' என்றார்.

'நான் காங்கிரசில் இருந்திருந்தால் இன்று நீங்கள் செய்கிற அளவு காரியம் கூட எனக்குச் செய்ய வாய்ப்புக் கிடைக்காது; அடிமையாகவேதான் இருந்திருக்க வேண்டும்' என்றேன்.

பிறகு சில வார்த்தைகள் பேசிய பின், 'என்ன இப்படி ஆரம்பித்து எனக்கு நீ வேறே தொல்லை கொடுக்கப் போகிறாயே?' என்றார்.

'என் நாட்டின் சுதந்திரத்தை முன்னிட்டுச் செய்கிறேன்' என்றேன்.

அதன் மீது அதுபற்றிச் சிறு விவாதம் நடந்தது. முடிவாக 'நான் எப்படியோ மாற்றிக்கொள்ள முடியாத நிலையில் இப்போது இருக்கிறேன். என்னைப்பற்றித் தவறாய்க் கருதக்கூடாது' என்றேன். அதையே அவரும் சொல்லிப் பேச்சு வார்த்தையை முடித்துக் கொண்டு என்னை வழியனுப்பினார்.

கிளர்ச்சி தொடங்கியதும் அவரும் அவரது கடமையைச் செய்தார்; எப்படியோ முடிந்தது. அதனால் எங்களுக்குள் ஒரு மனத்தாங்கலும் ஏற்படவில்லை என்பதோடு, பல காரியங்களில் அவர் ஆட்சியை நான் ஆதரித்தும் வந்திருக்கிறேன்.

['விடுதலை'—தலையங்கம்—25-7-1952]

## 6. இந்தி எதிர்ப்பின் பயன்கள்

இந்தி எதிர்ப்புக்கு இது (ஆகஸ்ட் கிளர்ச்சி) மூன்றாவது போராட்டமாகும். முதல் போராட்டம் 1938-ல் நடந்தது. அப் போராட்டம் 1500 பேர்களைச் சிறைக்கு அனுப்பி, 2 பேர்களின் உயிர்களை வாங்கி, பல குடும்பங்கள் பல இன்னலடைய நேரச்செய்து, முடிவில் கட்டாயம் (கம்பல்சரி) என்கின்ற சொல் மாத்திரம் நீக்கப்பட்டது. என்றாலும், கூரை வீட்டில் தீப்பற்றியதுபோல், அதுமுதல் பள்ளிகளில் எல்லாம் இந்தி வாழ்ந்தும், வளர்ந்துமே வந்தது. நாட்டிலும் வடவர்கள் பொருளுதவியாலும், பார்ப்பனர்கள் முயற்சியாலும், காங்கிரசினுடைய ஆதரவாலும் இந்தி நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்க்கப்பட்டே வந்தது—வருகிறது.

இந்தி வளர்ச்சியின் தன்மை அந்தப்படியாக இருந்தபோதிலும், அந்த 1938 ஆம் வருஷத்திய ஆட்சியில் நுழைக்கப்பட்ட கட்டாய இந்தி பற்றிய கிளர்ச்சியானது, தமிழ் நாட்டிற்கே (திராவிடத்திற்கே) தமிழர்களுக்கே ஒரு திருப்பு முனையாகிப் (Turning Point) பெருவாரியான பாமரர்களுக்குப் பார்ப்பனர்களின் உண்மைத் தத்துவத்தை அறியச் செய்யவும், தமிழ் இளைஞர்களுக்கும் மாணவர்களுக்கும், தமிழ் அறிஞர்களுக்கும் தமிழைப்பற்றிய கவலை ஏற்படவும், தமிழனின் தன்மை, தமிழனின்—தமிழ் நாட்டின் (திராவிடத்தின்) சரித்திரம் மக்கள் கவனத்திற்கு வரவும், தமிழ்நாடு சுதந்திரமாகத் தனித் தியங்க வேண்டும் என்கின்ற கொள்கையைக் காங்கிரசிலுள்ள தமிழர்கள் தவிர மற்ற பொதுமக்கள் உட்பட யாவரும் ஆதரிக்கவுமான ஒரு நிலை ஏற்பட்டது. நம் வாழ்நாளில் அதுவரை தமிழ் பற்றி, பார்ப்பனர்பற்றி ஏற்பட்டிராத ஒரு கிளர்ச்சி அச் சமயத்தில் ஏற்பட்டு, இலகுவில் மறைந்துவிட முடியாததான ஒரு உணர்ச்சியை நிலை நிறுத்தியது என்று சொல்லலாம்.



www.thamizham.net - Free E book No 3041

மற்றும், அக் கிளர்ச்சியானது தமிழர்களின் அரசியல், உத்தியோக இயல், மத இயல், கடவுள் இயல், கலை இயல் முதலிய பல முக்கிய இயல்களிலும் ஒரு நல்ல உணர்ச்சியும் மாற்றமும் ஏற்படப் பெரும் காரணமாக இருந்தது என்றும் கூறலாம்.

சுருக்கமாகக் கூறவேண்டுமானால், அக் கிளர்ச்சிக்கு அப்புறமே திராவிட அதிகாரிகள், சிப்பந்திகள் முதலியவர்களும், மாணவர்கள் ஆசிரியர்கள் முதலியவர்களும்— ஏன், மந்திரிகள் முதலியவர்களுங்கூட தகுந்த அளவுக்கு ஆரியர்–திராவிடர் என்ற பேதமும், ஆரியக் கலை–திராவிடக் கலை என்ற பேதமும் உணர நேர்ந்ததோடு காரியத்திலும் நடைபெறச் சிறிது வாய்ப்பும் ஏற்பட முடிந்தது எனலாம்.

இவை மாத்திரமல்லாமல், அக் கிளர்ச்சிக்கு அப்புறமே பார்ப்பனர்களும் தங்கள் போக்கைச் சிறிதாவது மாற்றிக்கொள்ளவேண்டிய நிலை ஏற்பட்டது என்பதை யாரும் மறைக்கமுடியாது. பார்ப்பனர்கள் தேவார, திருவாசக, பிரபந்த மாநாட்டைத் திறப்பது, பார்ப்பன குரு சங்கராச்சாரியார், திராவிட குரு பண்டார சந்நதி வீட்டிற்குச் சென்று கூட்டு முயற்சிக்கு ஒப்பந்தம் பேசுவதும் ஆன காரியங்களே பார்ப்பனர்களின் போக்கு மாற்றத்திற்கு நல்ல எடுத்துக்காட்டுகளாகும்.

மற்றும் சரிபகுதி பார்ப்பனர்கள் இருந்துவந்த மந்திரி சபையானது 13, 15-க்கு 2 பேர், 3 பேர் என்ற அளவிற்குச் சுருங்க நேரிட்டதும் 1938ஆம் ஆண்டு இந்தி கிளர்ச்சிக்குப் பின்புதான். எனவே, 1938ஆம் ஆண்டைய முதலாவது இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி–கட்டாய இந்தியை எடுக்கச்செய்தது மாத்திரமல்லாமல், மேற்கண்ட மற்ற காரியங்களையும் செய்ய உதவியிருக்கிறது.

அடுத்த இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியானது, 1938-க்கு அப்புறம் காங்கிரஸ் இரண்டாம் தடவையாக மந்திரி சபைப் பீடம்ஏறி ஆட்சிசெலுத்திய காலமாகிய 1948 ஆம் ஆண்டில் ஆகும். அந்தச் சமயத்திலும் இந்தி கட்டாயமாக்கப்பட்ட ஒரு சாக்குக் கிடைத்தது. அதன் மீது ஓர் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி துவக்கப்பட்டது. அந்தக் கிளர்ச்சியும் பெருத்த ஆடம்பரமாய் மக்கள் கவனத்தைக் கவரும்படியாய் நடக்காவிட்டாலும்—அப்படி நடைபெறாததற்குக் காரணம் நாமல்ல; சர்க்காரேயாகும். ஏனென்றால், கிளர்ச்சிக்காரரை, மறியல் செய்தவர்களை மற்றும் யாரையும் சிறை பிடிக்கவில்லை; நல்ல அடக்குமுறை எடுக்கவில்லை. அதனால், மக்களுக்கு உணர்ச்சியும் உற்சாகமும் ஏற்படவில்லை. ஆனால், கிளர்ச்சி துவக்கமானது மாபெரும் அஸ்திவாரத்தின்மீதே துவக்கப்பட்டது.

அதாவது, 1948ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்பு மாநாடானது சென்னையில் (சென்ட் மேரீஸ் ஹாலில்) மறைமலை அடிகள் தலைமையில், தெருக்கள் எல்லாம் அடைபடும்படி 25000 மக்கள் முன்னிலையில், அந்த ஹாலும் அந்தத் தெருவும் அதுவரை கண்டிராத அளவு கூட்டத்தில் மகா உற்சாகத்துடன் கூடியது.

அதில் மறைமலை அடிகள், தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் முதல் தோழர்கள் கதர் பிரதிநிதி நாரண துரைக்கண்ணனார், காங்கிரஸ் பிரதிநிதி ம. பொ. சி., கிறிஸ்தவ பிரதிநிதி ரெவரெண்ட் அருள் தங்கையா, முஸ்லிம் லீக் பிரதிநிதி அப்துல் மஜீத், டாக்டர். ஏ. கிருஷ்ணசாமி, வி. வி. இராமசாமி, மாஜி மேயர் இராதாகிருஷ்ண பிள்ளை, கே. ஏ. பி. விஸ்வநாதன் முதலிய திராவிட கழகத்தினர் அல்லாதவர்களும், அதன் எதிரிகளும் ஏராளமாக வந்திருந்தார்கள். இம் மாநாடு தவிர மற்றும் பல மாநாடுகள்–புலவர் மாநாடு, மாணவர் மாநாடு, பெண்கள் மாநாடு முதலிய பல மாநாடுகள் கூடி இந்தியை எதிர்த்துத் தீர்மானங்கள் செய்ததோடு, நேரடிக் கிளர்ச்சியில் கலந்துகொள்ள ஏராளமான மக்கள் முன் வந்தார்கள். அடக்குமுறை இல்லாததால் கிளர்ச்சி சிலருக்குச் சப்பிட்டுப் போனாலும் அக் கிளர்ச்சியும் வெற்றிபெற்றது.

அதாவது, முன்னையக் கிளர்ச்சி வெற்றிபோலவே இதன் பயனாகவும் சர்க்கார் கொள்கையில் இந்தி கட்டாயம் இல்லை என்று சொல்லப்பட்டு, அந்தப்படியே கட்டாயம்

www.thamizham.net - Free E book No 3041

எடுக்கப்பட்டதாக மந்திரிகளாலேயே அறிவிக்கவும்பட்டது. இதனாலும் தமிழருக்குள்—தூண்டிவிடப்பட்ட விளக்குபோல் ஒரு அளவுக்கு விழிப்பு ஏற்பட்டது.

எனவே, இதற்கு முன் 1938-லும் 1948-லும் நடந்த இரண்டு கிளர்ச்சிகளும் அந்தக் காரியக் கொள்கையில் வெற்றி பெற்றன என்றாலும் அந்தக் காரியத்தில் முழு வெற்றி என்று சொல்ல முடியாது என்பதை நான் ஒப்புக்கொள்ளத் தயங்கவில்லை. ஆனால், வேறு பல காரியங்கள் அதுவும் சுலபத்தில் நீண்டநாள் முயற்சியாலும் பிரச்சாரத்தாலும் கூட நடைபெறச் செய்ய முடியாத காரியங்கள் நடந்திருப்பதை நான் பெருமையோடு, அகக் களிப்போடு சொல்லிக்கொள்கிறேன்.

இது, அதாவது, ஆகஸ்ட் ஒன்றாந்தேதி நடப்பது 3-வது இந்திக் கிளர்ச்சி என்பதோடு, அதுவும் காங்கிரசின் 3-வது மந்திரிசபை ஆட்சியின்போது நடைபெறுகிற 3-வது கிளர்ச்சி ஆகும்.

இக் கிளர்ச்சியானது முன்னையக் கிளர்ச்சிகள் போன்றதல்ல. அவை கட்டாய இந்தி கூடாது என்பதற்காக நடத்தப்பட்டவை. அவற்றில் பார்ப்பானது வேஷமே முக்கியமாய் இருந்தது. என்னைப் பொறுத்தவரை அக் குறிக்கோள் வைத்தும் அவை நடத்தப்பட்டவையாகும்.

ஆனால், இது அப்படியல்ல. கட்டாய இந்தி கூடாது என்பது மாத்திரமல்ல; அப்படியானால் குள்ளநரிக் கூட்டமெல்லாம் இதில் புகுந்து துரோகம் செய்துவிட முடியும். இதற்கு யாரும் 'நானும் கூடத்தான்' என்று சொல்லிவிட முடியும். ஆதலால், இந்தக் கிளர்ச்சி கட்டாய முறைக்கு மாத்திரமல்லாமல் அரசியலிலும், சமுதாய இயலிலும், கல்வி இயலிலும், அரசாங்க ஆதரவில், அரசாங்க நடப்பில் திராவிட நாட்டில் (தமிழ் நாட்டில்) இந்தி தலை காட்டக் கூடாது என்பதற்கு ஆகும். ஏன் இப்படிச் சொல்கிறேன் என்றால், இரயில் பலகைகளில் 'போஸ்ட் ஆபீஸ்'களில், கார்டு கவர்களில், 'போஸ்ட்' முத்திரைகளில் 'கட்டாயமாகவா' இந்தியை சர்க்கார் புகுத்துகிறார்கள்? அவர்கள் ஆட்சி முறையில்—குழாயில் தண்ணீர் வருவதுபோல் வந்து, இந்தி புகுந்துகொண்டு இருக்கிறது. இதை எப்படிக் கட்டாயமாகப் புகுத்துதல் என்று சொல்ல முடியும்?

முன்பு ஆங்கிலேயன் ஆட்சியினால்தான் சர்வம் ஆங்கில மயமாக்கப்பட்டது. இதில் கட்டாயம் எதுவும் இல்லையே! இந் நாட்டிலுள்ள எல்லாப் பார்ப்பனரும் ஆங்கிலத்தை வரவேற்றார்கள்; அதற்காக ஆங்கிலேயனுக்கு நன்றி செலுத்தினார்கள்; ஓடி, ஓடி, முக்கி முக்கிப் படித்தார்கள். அதைப்பற்றித் திராவிடன் கவலைப்படவே இல்லை. நல்ல திராவிடன், செல்வத் திராவிடன், 'நமக்கு எதற்கு ஆங்கிலம்?' என்று சொல்லிவிட்டான். ஆங்கிலத்தால் பதவி, உத்தியோகம், வருவாய் கிடைக்கின்றன என்று கண்டதும் சிறிது படிக்க ஆரம்பித்தான். அதற்கும் பார்ப்பான் முட்டுக்கட்டை போட்டு ஆங்கிலத்தைத் தனக்கே ஆக்கிக்கொண்டான்.

பிறகு திராவிடன் கிளர்ச்சி செய்தான். அக் கிளர்ச்சியைப் பார்ப்பானால் அடக்க முடியவில்லை. எப்படியோ, ஆங்கிலேயன் போய்விட்டான். அந்த இடத்தில் பார்ப்பான் உட்கார்ந்தான். அவன் உட்கார்ந்து, ஆங்கிலத்திற்குப் பதிலாக, அந்த இடத்தில் இந்தியை வைத்தான். இந்தியாவில் பதவி மாத்திரமல்லாமல் ஆட்சியையே தனக்கு நிரந்தரமாகத் தன்னுடையதாக ஆக்கிக்கொள்ளத் திட்டமிட்டுக்கொண்டான். இப்போது நாம் இந்தியை மொழி காரணமாகவே வெறுக்கவில்லை. இந்திமூலம் ஆட்சியையும், பதவியையும் நிரந்தரமாகத் தன்னுடையதாக ஆக்கிக்கொள்ளும் முயற்சியை எதிர்க்கிறோம். கொஞ்சம் கொஞ்சமாகச் சுருக்கை நகர்த்தி நம் கழுத்தை அறுக்கும் கொலை பாதகத்தை எதிர்க்கிறோம். இதற்குத் தமிழர்களை—திராவிடர்களைத் தவிர வேறு யாரும் சம்மதிக்கமாட்டார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

இந்தியக் காங்கிரஸ், இந்திய சோஷியலிஸ்ட், இந்தியக் கம்யூனிஸ்ட், இந்திய வெங்காய' இஸ்டு 'யாரும்—இந்திய என்கின்ற பெயரைத் தலையில் கொண்ட எந்தக் கட்சியாரும், பார்ப்பனக் கூலிகள்; வடநாட்டான் கூலிகள்; இவர்களது மறுபதிப்புகள்—திராவிடர் உழைப்பில் உண்டுகளிக்க இருக்கும் காதக எதிரிகள். ஆதலால், இவர்கள் எல்லோருடையவும் ஆதிக்கத்தையும் சுரண்டலையும் சேர்த்து எதிர்க்கும் எதிர்ப்பே இந்த இந்தி எதிர்ப்பு ஆகும்.

உதாரணம் வேண்டுமானால், இவர்கள் எல்லோரும், 'கட்டாய இந்தியை நாங்களும் தான் எதிர்க்கிறோம்' என்பார்கள். 'கற்பு அழிப்பு' என்றால் பலாத்காரமாகச் செய்தல் என்பது மாத்திரம்தானா? மற்றவகைகளில் நெருக்கடி, தடுக்கமுடியாத தன்மை, திருட்டுத் தனமாக மயக்குதல், சிறிது சிறிதாக இணங்கவைக்கச் சந்தர்ப்பங்களை உண்டாக்குதல் முதலிய காரியங்களால் நடத்தினால் அது 'கற்பு அழிப்பு' ஆகாதா என்று கேட்கிறேன்.

ஆதலால், இந்த நாட்டில் இந்தி எதிர்ப்புக்கு இந்த நாட்டு ஸ்தாபனங்களும்—அதுவும் தமிழினத் திராவிடனைத் தவிர வேறு எந்த இனத்தானும், சாதியானும் அறவே கலந்தில்லாத ஸ்தாபனங்களும், வடநாட்டார் சம்பந்தமே இல்லாத ஸ்தாபனமும், அதுவும் அதில் கலந்துள்ள தமிழர் (திராவிடர்)களும்தான் சேரமுடியும், தொண்டாற்ற முடியும். மற்றவர்கள் இதை ஒழிக்க, எதிர்க்க, சூழ்ச்சிகளைத்தான் செய்வார்கள். அதுவும், 'சோறு இல்லை, துணி இல்லை, கூலி இல்லை, வரி அதிகம், ரோட்டில் புழுதி; இவைகளையெல்லாம் விட்டுவிட்டு—இதற்கு என்னடா அவசியம்?' என்று 'மொடா' வயிற்றில் அடித்துக்கொண்டு 'ரோலர்' கல்போல் 'ரோட்டில்' புரளுவார்கள். இப்படிப்பட்டவர்களைப் பார்த்து, 'இவைகள் எல்லாம் ஏன் இல்லாமல் போயின? யாரால், எதனால் இல்லாமல் போயின?' என்று ஒரு கேள்விகேட்டால், 'இது பிற்போக்கு சக்தி' என்று சொல்லிவிட்டு 'அண்டர் கிரவுண்ட்' ஆகிவிடுவார்கள்.

ஆனாலும், இப்போது நமக்கு வேறு ஒரு நல்ல வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. யூனியன் ஆட்சியில் டெல்லிதவிர, அதிலுள்ள பார்ப்பன ஆதிக்கக்காரர்களும், சில யூனியன்களும்—அவர்கள் கூலிகளும் தவிர, மற்ற இராஜ்யக்காரர்கள் அனேகமாக எல்லோருமே இந்தியை எதிர்க்கிறார்கள்; எல்லா நாட்டிலும் எதிர்ப்பு உணர்ச்சி தோன்றிவிட்டது. இதையெல்லாம்விட நம் நாட்டுப் பார்ப்பனர்கள் பலரும் இந்தியை வெறுத்தவர்கள்போல், இந்தி புகுத்துவதை இஷ்டப்படாதவர்கள்போல் காட்டிக்கொள்கிறார்கள். போராட்டம் நீடித்து நடக்க நல்ல ஆதரவுகளும் வளர்கின்றன; நல்ல அறிகுறியும் கொண்ட நல்ல சமயமாக இருக்கிறது.

['விடுதலை'-தலையங்கம்—27-7-1952]

## 7. நம் போராட்ட நேர்மை

ஒரு நண்பர் என்னிடம் வந்து, 'என்ன இப்படி எழுதியிருக்கிறாயே? இந்தி எழுத்துப் பெயரை அழிக்கவேண்டும் என்கின்ற எண்ணம் உனக்கு இல்லைபோல் தெரிகிறதே! அழிக்கப் போகிறவரின் பெயர் விலாசம் கொடுத்தால், கொடுத்தவர்களை வீட்டில் இருக்கும்போதே, போலீசார் வந்து பிடித்துக்கொண்டு போய்விடுவார்களே; அப்புறம் யார் இந்தியை அழிப்பது? இது என்ன போராட்டம்?' என்று கேட்டார்.

அதற்கு நான் என்ன பதில் சொன்னேன் என்றால், 'நமது போராட்டம் காங்கிரஸ் காரர்களின் 'ஆகஸ்டுப் போராட்டம்' போன்ற நாசவேலைப் போராட்டம் அல்ல; திருட்டு வேலைப் போராட்டமும் அல்ல. இது ஆண்மைப் போராட்டம்; உண்மைப் போராட்டம்; அதுவும் நமது வெறுப்பையும், வேண்டாமையையும் காட்டும் வீரப் போராட்டம்; இதில் பயன் ஏற்படவில்லையென்றால் நான் விலகிக்கொள்கிறேன். மற்றதில் நம்பிக்கையுள்ள மற்றவர்கள் அவரவர் ஆசைப்படி நடந்துகொள்ளட்டும்' என்று சொன்னதோடு—

www.thamizham.net - Free E book No 3041

'எனது 30 வருஷ பொதுத் தொண்டில் ஒரு செயல்கூட, ஒரு போராட்டம்கூட நான் மறைவாய் நடத்தினது கிடையாது; நடத்த அனுமதித்ததும் கிடையாது.

என்மீது பொதுவாழ்வில் சுமார் 20 வழக்குகள் நடந்திருக்கும். என் சொந்த வாழ்விலும் சில வழக்குகள் நடந்திருக்கும். ஒன்றுக்குக்கூட நான் எதிர் வழக்காடி இருக்க மாட்டேன்; ஒப்புக்கொள்ளவும் தயங்கி இருக்கமாட்டேன்' என்று சொன்னேன்.

ஒரு சிறு எடுத்துக்காட்டு:—

1903-ல்—அப்போது எனக்கு சுமார் 24 வயது இருக்கும். அப்போதே வியாபாரத்தில் எனக்கு விளம்பரம் உண்டு; என் தகப்பனார் பெயரில் பெற்று இருந்த ஒரு ஆயிரம் ரூபாய் டிக்கிரியை திருச்சியில் நிறைவேற்ற 'டிக்கிரி' நகலை எடுத்துக்கொண்டுபோய் வக்கீலிடம் கொடுத்து, வக்காலத்து பாரத்தில் என் தகப்பனார் கையெழுத்தை நானே போட்டுக் கொடுத்து, அவசரப் படி கட்டி, ஆளைப்பிடித்துச் சேவகன் கையில் விட்டு உடனே ஈரோட்டிற்கு வந்துவிட்டேன்.

பிரதிவாதி டிக்கிரி பணத்தை வக்கீலிடம் கட்டி, வக்கீலை ரசீது கேட்டார்; அதோடு செலவைத் தள்ளிவிடுங்கள் என்றார். அதற்கு வக்கீல், 'இப்பொழுதுதானே வாதி ஊருக்குப் புறப்பட்டார்; சற்றுமுன் வந்திருந்தால் வாதி இடமே ரூபாயைக் கட்டி ரசீது வாங்கி இருக்கலாமே; அவர் ஏதாவது தொகையில் தள்ளிக்கொடுப்பாரே' என்றார். அந்தச் சந்தர்ப்பத்தில் பிரதிவாதி வக்கீலிடம், 'வந்திருந்தவர் வாதி அல்ல; வாதியின் மகன்; இவர் பெயர் இராமசாமி நாயக்கர்' என்றார். உடனே வக்கீல் ஆத்திரப்பட்டு 'அப்படியா?' என்று கேட்டு ரசீது கொடுத்து பிரதிவாதியை அனுப்பிவிட்டு, மறுநாள் முனுசீப் கோர்ட்டில் ஒரு விண்ணப்பம் தாக்கல் செய்து பணத்தைக் கட்டிவிட்டார். அந்த விண்ணப்பத்தில் நான் ஆள் மாறாட்டம் செய்துவிட்டேன் என்றும், 'போர்ஜரி'—கள்ளக் கையெழுத்துச் செய்து தன்னை மோசம் செய்துவிட்டேன் என்றும் எழுதி இருந்தார்.

முனுசீப் எனக்கு நோட்டீஸ் அனுப்பிவிட்டார். அந்த நோட்டீஸில் 'உன்மீது (கேஸ்) வழக்கு நடத்த ஏன் சாங்கிஷன் கொடுக்கக்கூடாது?' என்று கண்டிருந்தது.

இந்த நோட்டீஸ் எனக்கு வந்ததும், தென் இந்திய வியாபார உலகமே ஆடிவிட்டது. காரணம், அப்போது என் தகப்பனாருக்கும், எனக்கும் வியாபார உலகில் இருந்த பிரபலப் பெயராகும்.

என் தகப்பனார் இந்த நோட்டீசை எடுத்துக்கொண்டு பி. டி. சுப்பிரமணிய அய்யர், C. விஜயராகவாச்சாரியார் என்ற இரண்டு பிரபல சேலம் வக்கீல்களிடம் சென்றார். அவர்கள் இருவரும் ஒரேமாதிரிச் சொன்னார்கள்; அதாவது, உங்கள் மகன், 'இந்தக் கையெழுத்து நான் போடவில்லை' என்று சொல்லிவிடவேண்டும் என்று சொன்னார்கள். என் தகப்பனார் நான் ஜெயிலுக்குப்போகாமல் இருப்பதற்கு எதுவும் செய்யத் துணிவு கொண்டவர்; ஆதலால், அவர் அதற்குச் சம்மதித்துக்கொண்டு வந்துவிட்டார். ஈரோட்டுக்கு வந்து என்னைக் கேட்டார். நான் அதற்கு இணங்கவில்லை. 'இதற்காக 2 பெரும் பொய்களைச் சொல்லவேண்டிய அவசியம் இல்லை; வருவது வரட்டும்' என்று சொல்லிவிட்டேன்.

என் மைத்துனன் நோட்டீசை எடுத்துக்கொண்டு நார்ட்டன் துரையிடம் சென்றார். அவரும், 'இதில் கையெழுத்து நான் போடவில்லை என்பது தவிர வேறு 'டிபன்ஸ்' இல்லை; இதற்காக எனக்கு ஏன் 2000, 3000 கொடுக்கவேண்டும்?' என்று சொல்லி, தனக்கு வர விருப்பமில்லை என்பதைக் காட்டிக்கொண்டார்.

கடைசியாக டி. டி. ரெங்காச்சாரியார் என்ற ஒரு முனுசீப்பை சிபார்சு பிடித்து டி. தேசிகாச்சாரியை வக்கீல் வைத்து முனுசீபிடம் என் தகப்பனார் எவ்வளவு கெஞ்சியும் அவர் 'சாங்கிஷன்' கொடுத்துவிட்டார். உடனே நான் காப்பு, கொலுசு, கடுக்கன் எல்லா வற்றையும் கழற்றி எறிந்துவிட்டு, தாடி வளர்த்துக்கொண்டு—கேப்பைக் களி (கேழ்வரகுக்

www.thamizham.net - Free E book No 3041

களி) சாப்பிட்டுப் பழகிக்கொண்டு—தலையணை இல்லாமல் பாயில் படுத்துப் பழக ஆரம்பித்துவிட்டேன். என் தாயாருக்கு அன்று முதல் ஒரே வேளை சாப்பாடு; பல கோயில்களுக்கு அர்ச்சனை செய்கிற வேலை. ஆனால் நான் மாத்திரம், 'நாம் ஜெயிலுக்குப் போவது என்னமோ உறுதி; 'கேஸ்' நடந்து தண்டனை கிடைக்கிறவரை அனுபவிக்காததை எல்லாம் அனுபவித்துவிடுவோம்' என்று நல்ல மைனர்போல் திரிந்துகொண்டு இருந்தேன். சாப்பாடு—களி; படுக்கை—பாயில்; அவ்வளவுதான்; மற்றவையெல்லாம் 'ஜமீன் மைனர்'தான்!

2 மாதம் பொறுத்து திருச்சியில் அசிஸ்டெண்ட் கலெக்டர் மெக்பர்லெண்டு (என்று ஞாபகம்) என்பவரிடம் கேஸ் வந்தது. கோர்ட்டுக்குப் போனோம்; அன்று 500 பேர்கள்—பெரிய வர்த்தகர்கள் உட்பட கோர்ட்டில் வேடிக்கை பார்க்க வந்த கூட்டம்.

கலெக்டர் ஆசனத்தில் அமர்ந்து 5, 6 வழக்குகளைக் கூப்பிட்டு விசாரித்து முடிவு சொல்லிவிட்டார். எல்லா 'கேஸ்'களையும் தண்டித்துவிட்டார். அவர் சிறு வயது—28 அல்லது 30 வயதுதான் இருக்கும். என் பெயரைக் கூப்பிட்டார்.

எனக்கு, வக்கீல் கணபதி அய்யர்—அப்போது அவர் பப்ளிக் பிராசிகியூட்டர். எனக்காக பெரிய கலெக்டரிடம் அனுமதிபெற்று, 'எதிரிக்கு' ஆஜராகிறார். அவரும் நானும் ஒன்றாய்க் கோர்ட்டுக்குள் போனோம். அவர் என் தோள்மேல் கையைப் போட்டுக்கொண்டு கோர்ட்டுக்குள் வந்து, என்னைக் கூண்டிற்குப் பக்கத்தில் விட்டுவிட்டு, அவர் தனது இடத்திற்குச் சென்று அமர்ந்தார். கலெக்டர் இதைப் பார்த்துவிட்டு அவரிடம், 'எங்கு வந்தீர்கள்? உங்களுக்கு இன்று இங்குக் கேஸ் இருக்கிறதா?' என்றார். கணபதி அய்யர், 'ஆம்! போர்ஜரி கேஸ் இருக்கிறது' என்று கேஸ் நம்பரைச் சொன்னார். அதற்கு, 'சர்க்கார் தரப்பில் உம்மை அழைக்கவில்லை போலிருக்கிறதே' என்றார், கலெக்டர். 'நான் எதிரிக்காக ஆஜராகிறேன்' என்றார் வக்கீல். 'சர்க்கார் வக்கீல், சர்க்கார் வழக்கில் எதிரிக்கு ஆஜராகலாமா? இதென்ன புது வழக்கமாக இருக்கிறதே!' என்றார். 'கலெக்டர் அனுமதிமீது ஆஜராகிறேன்' என்றார் வக்கீல். 'ஏன் அப்படி?' என்றார் கலெக்டர். 'கேஸ், சர்க்காருக்கு உபயோகமற்ற—பலமற்ற கேஸ். அதோடு இது 'சென்சேஷனல்' கேஸ் ஆனதால், அனுமதி கேட்டேன்; கொடுத்தார்' என்றார் வக்கீல்.

என்னைப் பார்த்துக்கொண்டே, 'சரி, சாட்சியைக் கூப்பிடு' என்றார் கலெக்டர். முதல் சாட்சி வக்கீல் ஐம்புநாதய்யர். அவர் கொஞ்சம் சரக்குச் சேர்த்து, 'இந்த ஆளை, நீ தான் வாதியா என்றேன், உன் பெயர் என்ன என்றேன். ஆம்; வெங்கிட்ட நாய்க்கர் என்றான்' என்றார். 'ஏன் அப்படிக் கேட்டீர்?' என்றார் கலெக்டர். 'யார் வந்தாலும் நான் அப்படித்தான் கேட்பது' என்றார் வக்கீல். வக்காலத்து பாரம் ரிஜிஸ்டர் செய்த கிராம முனுசீப் ஒரு சாயபு; அவர் கிழவனார். அவருக்குக் கண் பார்வை சரியாகத் தெரியாது. 'அவர் ஒரு வாலிபமான ஆள்—காப்பு, கொலுசு, கடுக்கன் போட்டுக்கொண்டு வந்து என் எதிரில் நான்தான் வெங்கிட்ட நாய்க்கன் என்று சொல்லிக் கையெழுத்துப் போட்டார். அந்த ஆள் இதோ காப்பு கொலுசு போட்டுக்கொண்டு நிற்கிறாரே இவர் தான்' என்று கையை நீட்டி என்னைக் காட்டினார். எல்லோரும் சிரித்தார்கள்.

கலெக்டர் என்னைப் பார்த்து ஆங்கிலத்தில், 'நீ என்ன சொல்லுகிறாய்?' என்று கேட்டார். என் வக்கீல் அதை மொழிபெயர்த்து என்னைக் கேட்டார். நான் தயங்கித் தத்தளித்துப் பேசுகிற தன்மையில், 'நான்தான் கையெழுத்துப் போட்டேன்' என்றேன். 'ஏன் போட்டாய்?' என்றார். 'அப்படித்தான் கோர்ட்டு, ரயில் நடவடிக்கைகளில் எப்போதும் நான் போடுவது வழக்கம்' என்றேன். 'ஏன் அந்த வழக்கம்?' என்றார். 'எங்கள் அப்பா கிழவனார்; நான்தான் வேலை பார்ப்பது; அந்த வியாபாரமும் பணமும் என்னுடையது. அவர் பெயர் பிரபலம்; ஆனதால் அந்தப் பெயர் வைத்து நான் வியாபாரம் செய்கிறேன்' என்றேன்.

www.thamizham.net - Free E book No 3041

'சரி; வெங்கிட நாயக்கரை கூப்பிடு!' என்றார் கலெக்டர். வெங்கிட நாயக்கர் அழுது கொண்டே பெட்டிமேலேறி, வக்கீல் கேட்டதற்கு நான் சொன்னதை ஆதரித்தே பதில் சொன்னார். ஐம்புநாதய்யரைப் பார்த்து, கலெக்டர், 'எனிதிங்?' என்றார். எல்லோரும் சிரித்தார்கள். ஐம்புநாதய்யர் ஒன்றும் பேசவில்லை.

உடனே கலெக்டர் 4 வரி எழுதிப் படித்துவிட்டு அடுத்த கேஸ் கூப்பிட்டார். அவர் படித்தது விளங்கவில்லை. மேஜிஸ்ட்ரேட் கிளார்க்கு ஒரு நாயுடு. அவர், 'கேஸ் தள்ளப் பட்டுவிட்டது; நீ போகலாம்' என்றார். என் தகப்பனார் என்னைக் கட்டிக்கொண்டு அழுதுவிட்டு, கணபதி அய்யர் காலில் விழப்போனார்; அவர் எட்டிப்போய்விட்டார். தீர்ப்பு என்னவென்றால், 'இந்த நடவடிக்கை இந்த செக்ஷனின் கருத்துக்குப் பொருந்தாது. எதிரி யாரையும் மோசம் செய்ய இந்தக் காரியம் செய்யவில்லை. வழக்குத் தள்ளப்பட்டது' என்று இருந்தது.

இப்படி இன்னும் சில உண்டு. இந்த எனது நடத்தை கடவுளுக்காக—மோட்சத் திற்காக—சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டது அல்ல. நேர்மையை அடிப்படையாகக் கொண்டது என்பதுடன், நம்மை நாமே எண்ணிக் கொள்ளுவதில் ஒரு பெருமை, ஒரு அகம்பாவம், எங்கும் எப்போதும் யாரிடமும் பேசும்போது ஒரு துணிச்சல், தோல்வியிலும் ஒரு திருப்தி, மற்றவர்களுக்கும் நேர்மை ஒழுக்கம் பற்றிய வழிகாட்டி-பிரச்சாரம். ஆதலால் 'மறைவாக ஒன்றும் செய்யவேண்டாம்; எதையும் மறைக்காதே' என்றேன். மற்றும் பல எடுத்துக்காட்டுகள் காட்டலாம்; அது தற்பெருமையாக முடியும். சுருக்கமாகச் சொல்லுவேன். நேர்மையாக நடப்பது சுயநலமும்கூட ஆகும்.

எனது பலக் குறைவினால் எத்தனையோ தவறுகள் ஏற்பட்டும்—பொதுவாழ்வில் இந்த நாட்டில் நான் சாகாமல் இருப்பதற்கு இந்த நேர்மையில் நான் வைத்திருக்கும் ஜாக்கிரதைதான் காரணமாகும்.

['விடுதலை'—தலையங்கம்—26-7-1952]

## 3. இந்தி அழிப்புக் கிளர்ச்சி

ஆண்டுதோறும் ஆகஸ்ட் 1-ந் தேதியில் நடந்துவரும் இரயில்வே நிலையப் பெயர்ப் பலகைகளிலுள்ள இந்திப் பெயர்களை அழிக்கும் கிளர்ச்சியை இவ்வாண்டு ஆகஸ்ட் மாதம் 8-ந் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று வைத்துக்கொள்வது நலமென்று கருதுகிறேன். ஏனெனில், ஆகஸ்ட் 1-ந் தேதியன்று குடியாத்தத்தில் அசெம்பிளி உபதேர்தல் நடைபெறப் போகிறது. அதுமிகவும் முக்கியமானதும் நமது சில நலன்களுக்கு ஆதரவு அளிக்க வேண்டியதுமான தேர்தலாயிருப்பதால் இவ்வாண்டு 1-ந்தேதி இந்தி அழிப்பின் காரணமாக ஏதாவது காரியங்கள் அல்லது குழப்பங்கள் நடப்புக்கு விரோதமாக ஏற்பட நேருமேயானால் அது ஒருசமயம் தேர்தலை பாதித்துவிடுமோ என்கிற எண்ணத்தாலும் எதிரிகள் தேர்தல் பாதிக்கும்படியான அளவுக்குக் கலவரம் செய்யவேண்டுமென்று கருதி ஏதாவது தொல்லை விளைவிப்பார்களோ என்பதாகவும் கருதி எல்லாவற்றுக்கும் தயாராய் இருப்பதற்கான ஏற்ற நாளாக இருக்க ஆகஸ்ட்மாதம் 8-ந் தேதி ஞாயிற்றுக்கிழமையை 1954-ம் ஆண்டின் இந்தி அழிப்பு நாளாக ஏற்பாடு செய்திருக்கிறேன்.

ஆதலால், கழகத் தோழர்களும், மற்றும் இந்தி எதிர்ப்பில் கவலையுள்ள மற்ற தோழர் களும் இந்தி அழிப்பை ஆகஸ்ட் 8-ந் தேதியன்று வழக்கம்போல் அமைதியாகவும், வெற்றிகரமாகவும் நடத்தவேண்டுமென்று வேண்டிக் கொள்கிறேன்.

இந்தி அழிப்புச் சுற்றுப் பிரயாணமாக ஆகஸ்ட் 4 அல்லது 5-ந் தேதியிலிருந்து தமிழ் நாடு முழுவதும் இரயில்வே பிரயாணமாக நானும் சில தோழர்களும் புறப்பட்டு ஒவ்வொரு ஸ்டேஷனிலும் வழக்கம்போல் நண்பர்களைக் காண இருக்கிறேன்.

www.thamizham.net - Free E book No 3041

ஆகையால், இப்பொழுதிருந்தே இதற்கேற்ற கமிட்டி வகையறா ஏற்பாடுகளைச் செய்து பெயர் முதலியவற்றைத் தெரிவிக்க வேண்டிக்கொள்ளுகிறேன்.

['விடுதலை'-அறிக்கை—17-7-1954]

ஆகஸ்ட் கிளர்ச்சியில் உன் பங்கு என்ன ?

ஏறக்குறைய தமிழ்நாட்டில் 500 இரயில்வே ஸ்டேஷன்கள் இருக்கின்றன.

இவற்றுள் நீ எந்த ஸ்டேஷனில் உள்ள இந்திப் பெயரை அழிக்கத் தெரிந்தெடுத்து இருக்கிறாய் ?

நீ திராவிடன் அல்லது சென்னை ராஜ்யத்தான் அல்லது தமிழ்நாட்டான் என்பதை சந்தேகமற உணருகிறாயா ?

உன் நாட்டு (தேச) மொழி தமிழ் என்பதையும் நீ தமிழன் என்பதையும் உணருகிறாயா ?

அப்படியானால் உன் கடமை என்ன ? இந்தி மெள்ள மெள்ள உன் நாட்டில் உன் படுக்கை அறையில் புகுந்துகொண்டது.

'இந்தி படிக்காதவனுக்கு பாஸ் இல்லை.'

'இந்தி படிக்காதவனுக்கு உத்தியோகம் இல்லை.'

'இந்தி தெரியாதவனுக்கு பார்லிமெண்டில் இடம் இல்லை., தெரியாவிட்டால் வெளியே போ' என்கிற நிலைமை வந்துவிட்டது

இந்த நிலையில் உன் கடமை என்ன ?

உன் நாட்டிற்கு, உன் மொழிக்குத் துரோகம் செய்து வடவனுக்குக் காட்டிக்கொடுத்து வயிறு வளர்ப்பது திராவிடன் பண்பா ?

ஆகஸ்ட் 8-ந் தேதி 'ஆம்' அல்லது 'இல்லை' என்று பதில் சொல்லு.

'ஆம்' என்றால் 'ஜே இந்தி' என்று சொல்லு.

இல்லாவிட்டால் 'இந்தி ஒழிக' என்று தாரில் புருசை நனைத்து இந்திப் பெயரை அழி—அழி—அழி.

['விடுதலை'-அறிக்கை—5-8-1954]

ஆகஸ்ட் கிளர்ச்சியில் ஈடுபடுகின்ற தோழர்கள் கைது செய்யப்பட்டு நீதி மன்றத்தின் முன்பு நிறுத்தப்பட்டால் கீழ்க்கண்ட அறிக்கையைமட்டும் எழுத்துமூலமோ வாக்குமூலமோ தெரிவித்துவிட்டால் போதும் என்று அறிவித்துக்கொள்கிறோம்.

'நான் குற்றவாளியல்ல; திராவிடநாட்டில் இந்தியை அரசியல் மொழியாகவோ, தேசிய மொழியாகவோ, உத்தியோக மொழியாகவோ, யூனியன் சர்க்கார் புகுத்துவதையும் நடைமுறையில் கொண்டுவருவதையும் திராவிட (தமிழ்) மக்களாகிய நாங்கள் விரும்பவில்லை என்பதையும், எங்கள் விருப்பத்துக்கு விரோதமாக சர்க்கார் தங்கள் ஆதிக்கத்தின் மூலம் இந்தியைப் புகுத்துகிறார்கள் என்பதையும், இந்தச் செய்கையை வெறுக்கிறோம் என்பதையும் சர்க்காருக்கும், வெளி ராஜ்யக்காரர்களுக்கும் தெரிவிப்பதற்கு அறிகுறியாகவே அமைதியான முறையில் சட்டவரம்புக்குட்பட்டு இந்தக் காரியத்தைச் செய்தேன்; நான் குற்றவாளியல்ல.'

['விடுதலை'-அறிக்கை—6-8-1954]

www.thamizham.net - Free E book No 3041

தலைவரவர்களே! தாய்மார்களே! தோழர்களே!

கடந்த இரண்டு ஆண்டுகளாக நாம் ரயில் நிலையங்களில் உள்ள இந்தி எழுத்துக்களை அழித்து வந்ததற்கேற்ப இந்த ஆண்டும் இந்தி அழிப்புச் செயலைச் செய்திருக்கின்றோம். இந்த நிகழ்ச்சி ஆகஸ்ட் 1-ந் தேதியே நடந்திருக்க வேண்டியது. ஆனால் ஆகஸ்ட் 1-ந்தேதி குடியாத்தம் உபதேர்தல் நடக்கிற நாளானபடியால் இந்த நிகழ்ச்சியில் ஏதாவது ஏற்பட்டு அதன் காரணமாக தேர்தல் பாதிக்கப்படுமோ என்கிற காரணத்தினால் 8-ந்தேதிக்கு மாற்றிவைத்தோம்.

தோழர்களே! இந்த நம்முடைய இந்தி எதிர்ப்பு இன்று நேற்று நாம் செய்துவருகிற காரியமல்ல. பிரச்சார முறையில் 20, 25 ஆண்டு காலமாகவே நாம் இந்தியை எதிர்த்து வந்திருக்கிறோம்.

நான் காங்கிரசிலே இருந்த காலத்தில் காங்கிரசின் கொள்கைக்கேற்ப இந்தியை ஆதரித்துவந்தேன். மோதிலால் நேருவைக்கொண்டு ஈரோட்டில் ஒரு இந்திப் பிரச்சாரப் பள்ளியை என்னுடைய சொந்த இடத்தில் சொந்த செலவில் திறந்து 20, 30 மாணவர்களுக்கு இலவசமாகச் சாப்பாடு போட்டு, இந்தியைக் கற்றுக்கொடுக்கும்படியாக ஏற்பாடு செய்தேன்.

நான் காங்கிரஸ் ஸ்தாபனமானது பார்ப்பன ஆதிக்கத்துக்காகவே—பார்ப்பன நலத்துக்காகவே நடைபெற்றுவருகிற ஒரு ஸ்தாபனம் ஆகும் என்று கண்டு, அந்த ஸ்தாபனத்தில் இருக்கிற பெரும்பாலோர் சுயநலத்துக்காகவும் தங்கள் காரியானுகூலத்துக்காகவும் இருக்கிறார்கள்; இன்னும் சிலர் காங்கிரஸ் உள்ளபடியே சுயராஜ்யத்துக்காகப் பாடுபடுகிறது என்கிற கருத்துக்கொண்டு காங்கிரசை உண்மையிலேயே தேச ஸ்தாபனம் என்பதாக முட்டாள்தனமாகக் கருதிக்கொண்டு இருக்கிறார்கள் என்பதாகக் கண்டு, இத்தனை நாளாக அப்படிப்பட்ட ஒரு முட்டாளாக நாம் இருந்த தன்மைக்காக வருந்தி, நம்முடைய நாட்டுக்கு, நம்முடைய மக்கள் சமுதாயத்துக்கு என்று நாம் ஏதாவது பணிபுரியவேண்டும் என்கிற கருத்தில் காங்கிரசைவிட்டு வெளியேறிய காலம் முதற்கொண்டு, இந்த இந்தி எதிர்ப்பு என்பதை சுயமரியாதை இயக்கத்தின் ஒரு கொள்கையாகக் கொண்டு, பணியாற்றி வருகிறேன். அதுவும் இந்த இந்திமொழி என்பதன் மூலம் பார்ப்பனர்கள் நம்மை நிரந்தர அடிமைகளாக—பச்சைச் சூத்திரர்களாக ஆக்கவே கொண்டுவருகிறார்கள்; இந்திமொழியை இந்த நாட்டில் செயல்படுத்துகிறார்கள் என்று நன்றாக உணர்ந்து எதிர்த்து வந்திருக்கிறேன். எதற்குச் சொல்கிறேன் என்றால், காங்கிரஸ் ஆட்சியில் இருப்பதின் காரணமாக அத்தகைய ஆட்சிக்கு விரோதமாக இன்று திடீரென்று நினைத்துக் கொண்டு செய்கிற காரியம் அல்ல; 20, 25 ஆண்டு காலமாகவே பிரச்சார முறையில் செய்து வந்த காரியத்தையே இன்று செயல்முறையில் செய்கிறோம் என்பதை எடுத்துக்காட்டுவதற்காகத்தான். அதுவும் காங்கிரஸ்காரர்கள் சுயராஜ்யம் வரும் என்பதாகக் கனாக்கூடக் காணாத காலத்திலிருந்தே எதிர்த்தேன்.

1942-ம் வருட ஆகஸ்டுக்குப் பின்னர்தான் காங்கிரஸ்காரர்களுக்குச் சுயராஜ்யம் வரவேண்டும் என்கிற நினைப்புத் தோன்றியது; அதற்கு முன்பு அந்த நினைப்பே இல்லை. ஆகஸ்டு கிளர்ச்சிக்குக் கொஞ்ச நாள் முந்திகூட காந்தியார் கூறினார்: 'சுயராஜ்யத்தின் நிழலைத்தான் நாங்கள் கேட்கிறோம். அதாவது குடியேற்றநாட்டு அந்தஸ்தைத்தான் கேட்கிறோம்' என்பதாகச் சொன்னார். அதற்கு முன் காங்கிரஸ் எப்படி இருந்தது என்றால் ஏதோ வெள்ளைக்காரர்களுக்குக் கொடுக்கிற உத்தியோகம் எங்களுக்கும் கொடுக்க வேண்டும் என்று உத்தியோகம் கேட்பதாகத்தான் இருந்தது. இன்னும் சொல்லப் போனால், அப்பொழுது காங்கிரசு மாநாட்டில் முதலாவதாக ராஜவிசுவாசத் தீர்மானம்தான் போடுவார்கள்; பிரிட்டிஷ் சக்கரவர்த்தி நன்றாக இருக்கவேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திக்கும் தீர்மானமும் போடுவார்கள்; அத்தோடு, என்றென்றைக்கும் நிரந்தரமாக பிரிட்டிஷ் ராஜாவே எங்களுக்கு ராஜாவாக இருக்கவேண்டும் என்பதாகக் கடவுளை

1686—229

www.thamizham.net - Free E book No 3041

வேண்டித் தீர்மானங்கள் போடுவார்கள்; இவ்வளவு தீர்மானங்களையும் போட்டுவிட்டு உத்தியோகத்தில் எங்களுக்கும் இடம்கொடுங்கள் என்று கேட்பார்கள்; இந்தப்படிதான் காங்கிரஸ் முன்னெல்லாம் நடைபெற்று வந்திருக்கிறது. அப்புறந்தான் படிப்படியாக வந்து, 42-லே காந்தியார் 'Quit India' என்று சொன்னார். நாம் இந்த இந்தியை 42-க்கு முன்பிருந்தே – 1926 முதற்கொண்டே எதிர்த்து வந்திருக்கிறோம். சென்றமுறை தோழர் ஆச்சாரியார் அவர்கள் பதவியில் இருந்தபோது இந்தியைக் கட்டாயப் பாடமாகக் கொண்டு வந்தபோது நாங்கள் அதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தோம். அதற்காகப் பலபேர் சிறைக்குச் சென்றார்கள். எனக்கும் 2 வருடக் கடுங்காவல் தண்டனையும் 2000 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டு, என்னுடைய காரை ஏலத்தில் விட்டும் ஆன காரியங்கள் எல்லாம் நடந்தும் கடைசியில் கட்டாய இந்தி ஒழிந்தது.

தோழர்களே! இன்று இந்தி எந்த அளவுக்கு இந்த நாட்டில் வந்துவிட்டது என்றால் தபால் முத்திரைகளில் இங்கிலீஷில் ஒரு முத்திரையும் இந்தியில் ஒரு முத்திரையுமாகப் போடப்படுகிறது. இங்கிலீஷ் முத்திரை இருப்பதால் இப்போது ஏதோ ஊர் பெயரை நாம் தெரிந்துகொள்ள முடிகிறது. இன்னும் கொஞ்சநாளில் இங்கிலீஷில் அடிப்பதை நிறுத்தி விட்டு இந்தியில் மாத்திரமே போட்டுவிடுவார்கள். அப்புறம் நம்முடைய நிலைமை என்ன ஆவது என்று யோசித்துப் பாருங்கள். இன்னும் இந்தி தெரிந்தால்தான் உத்தியோகம் என்கிறார்கள். வேலைக்குப் பொறுக்கும் பேட்டியின்போது கேள்வியோடு கேள்வியாக 'உனக்கு இந்தி தெரியுமா?' என்று கேட்கிறார்கள். இந்தி தெரியாது என்றால் வெளிப் படையாக இந்தி தெரியாததால் வேலைக்கு எடுத்துக்கொள்ள முடியாது என்று சொல்லாமல் இதை உள்காரணமாய் வைத்துக்கொண்டு, வேறு ஏதாவது காரணங்காட்டித் தள்ளிவிடு கிறார்கள்.

மற்றும், சமீபத்தில் கல்வி மந்திரி சுப்பிரமணியம் அவர்கள் பரீட்சைக்கும் இந்தி பாடமாக இருக்கும் என்பதாக ஒரு உத்திரவு கொண்டுவந்தார். நாம் சத்தம் போட்டவுடன் இல்லை இல்லை என்று சொல்லிவிட்டார்கள். காமராஜர் எலக்ஷனைக் கருதி இந்தப்படி மாற்றிக்கொண்டார்களோ என்னவோ தெரியவில்லை. இந்திக்கு இந்த நாட்டில் இப்போது ஆதிக்கம் வரவர அதிகமாக வளர்ந்துகொண்டே வருகிறது. இன்னும் கொஞ்சநாளில் இந்தி தெரியாவிட்டால் உத்தியோகம் இல்லை என்கின்ற நிலைமை வந்துதான் தீரும் என்பதோடு நாளைக்கு வியாபாரிகள் எல்லாம் இந்தியிலேயே கணக்கு வைத்துக்கொள்ளவேண்டும் என்று சொன்னாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. எனவேதான், நம்மைப் பேராபத்துக்கு ஆளாக்குகிற—நம் பின் சந்ததிகளை வாழாவெட்டிகளாக ஆக்குகிற இந்த இந்தியை நாம் இந்த நாட்டிலிருந்து ஒழித்துக்கட்டியாக வேண்டும் என்கிறோம். இந்தக் கருத்தில் மூன்றாவது முறையாக நாம் இந்தி எழுத்துக்களை அழித்திருக்கிறோம். இரண்டு வருஷ காலமாக ஆச்சாரியார் அவர்கள் ஆட்சியில் இருந்தபோதும் அவர் விட்டுவிட்டார். தோழர் காமராஜர் அவர்களும் ஒன்றும் நடவடிக்கை எடுக்கவில்லை. இதற்குச் சம்பந்தப்பட்ட மத்திய சர்க்கார் அமைச்சர், ரயில்வே துணைமந்திரி அளகேசன் அவர்களும் 'இதனால் ஒன்றும் கஷ்டம் இல்லை; அவர்கள் அழித்தால் திரும்பி நாங்கள் எழுதிவிடுகிறோம்' என்பதாகச் சொல்லி இருக்கிறார். இப்படியே நாம் அழிப்பதும் திருப்பி அவர்கள் எழுதுவதுமாக விளையாட்டுப்போல நடந்துகொண்டிருக்க நாமும் விட்டுக்கொண்டிருக்க முடியாது. இந்தத் தடவையும் திருப்பி எழுதுவார்களேயானால் அடுத்த ஆண்டு நாம் வேறு ஏதாவது மாதிரியாக, அதாவது இன்னும் கொஞ்சம் முன்னாலே போவதான தன்மையிலே கிளர்ச்சியை நடத்தவேண்டி இருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

[தஞ்சாவூரில், 8-3-1954-ல் சொற்பொழிவு—'விடுதலை' 11-8-1954]

www.thamizham.net - Free E book No 3041

# 9. இந்தியும்–நானும்

தலைவரவர்களே ! தோழர்களே ! தாய்மார்களே !

இந்தி விளைவிக்கும் கேட்டை முன்னரே அறிந்து சொல்லியுள்ளேன். நான் காங்கிரசை விட்டு விலகிய 1925ஆம் ஆண்டிலேயே தமிழ்நாட்டில் தமிழர்களின் இலட்சியங்களைப் பற்றிப் பிரச்சாரம் செய்தேன். அப்பொழுதிலிருந்தே இந்தி நமக்குக் கேட்டை விளைவிக்கும்பொருட்டே புகுத்தப்படுகிறது என்பதாகக் 'குடி அரசில்' எழுதி வந்திருக்கிறேன். அப்போது, இப்போது உள்ளதைப்போன்று சுயராஜ்ய அரசாங்கமில்லை. வெள்ளைக்கார அரசாங்கம் இருந்த அப்பொழுதே, இந்தியைக் காங்கிரஸ் திட்டத்தில் ஒன்றாகப் பிரச்சாரம் செய்தனர். அப்போது அதற்குப் பெயர் 'தேசிய மொழி' என்று சொல்லிவந்தனர்.

ஏனெனில், அப்பொழுது வடமொழியின்மீது பொது மக்களுக்கு வெறுப்புண்டாகும் நிலை ஏற்பட்டதேயாகும். ஜஸ்டிஸ் கட்சியினால் பார்ப்பன ஆதிக்கம் குன்றி வந்த காலம் அது. சமுதாயத் துறையில் பார்ப்பனர்களிடம் நம் மக்களுக்கு வெறுப்பு ஏற்பட்டு எப்படியும் பார்ப்பனர்களின் ஆதிக்கத்தை அடக்க வேண்டும் என்று முயசித்த ஜஸ்டிஸ் கட்சி ஆட்சிக் காலம் அது. சமஸ்கிருதத்தினிடம் மக்களுக்கு மனக் கசப்பு ஏற்பட்டு, அது 'பார்ப்பன மொழி', 'வடநாட்டவரின் மொழி' என்றெல்லாம் உணர்ச்சியோடு கூடி வெறுத்தனர். இதனால் பார்ப்பனர்கள் சமஸ்கிருதத்தைத் தங்களின் சூழ்ச்சியின்படி புகுத்துவதற்கு இல்லாமற் போய் விட்டது.

என்றாலும், அவர்கள் ஒரே கல்லில் இரண்டு பட்சிகளை அடித்ததுபோன்று, மக்களுக்கு சமஸ்கிருதத்தின் மீதுள்ள வெறுப்பு உணர்ச்சியை உணர்ந்து கொண்டு வெகு தந்திரமாக இந்தியைப் புகுத்த முற்பட்டனர். இந்தி, இந்தியாவில் பெரும்பான்மையோரால் பேசப்படும் மொழி என்றும்; எனவே இதையே மற்ற சிறுபான்மை மக்கள் கற்றுணர்ந்து கொள்வது சுலபமாகும் என்றெல்லாம் காரணம் கூறினர். இதனால் நம் பிள்ளைகளைக் கல்வியில் தேறாமல் செய்வதும் சுலபமாகும் என்று பார்ப்பனர் நினைத்துச் செய்தனர்.

இதற்குக் காந்தியாரும் உடன்பட வேண்டியதாயிற்று. அவர் எவ்வளவு பெரிய மனிதரானாலும், அறிவாளியானாலும், பொதுநலத் தொண்டரானாலும்–அவர் வடநாட்டவர் என்பது மட்டும் உறுதி. அவருக்குத் தன்னாட்டைத் தவிர, தென்னாட்டின் நிலைமையை எப்படி உணரமுடியும் ? அப்படித் தென்னாட்டின் நிலைமையை உணர வேண்டுமானால் ஆச்சாரியார், சத்தியமூர்த்தி போன்றவர்களால்தான் தெரிந்துகொள்ள வேண்டும். இல்லையேல் 'இந்து', 'சுதேசமித்திரன்', 'தினமணி', 'எக்ஸ்பிரஸ்' போன்ற பார்ப்பனரின், வடநாட்டவர்களின் பத்திரிகைகள் மூலம்தான் தெரிந்து கொள்ள வேண்டும். இவர்கள் மூலமும் இப் பத்திரிகைகள் மூலமும் நம்முடைய கருத்துக்கள் வெளியாவதற்கில்லை என்பது தெரிந்ததே. எனவே, காந்தியாரும் தென்னாட்டவர்களின் கருத்தை உணர முடியாது போய்விட்டார்.

மேலும், பார்ப்பனர்கள் காந்தியாரைப் பிடித்ததற்குக் காரணமே தமிழர்களையும், தமிழ்நாட்டையும் பார்ப்பனர்களின் ஆட்சிக்கு உட்படுத்தவேண்டும் என்பதற்கேயாம்.

இது அவர்களின் இரகசியத் திட்டம் என்றாலும் எனக்குத் தெரியவேண்டிய காரணம் என்னவென்று கேட்கலாம். நான் அப்பொழுது பார்ப்பனர்களுக்கு நல்ல பிள்ளையாக இருந்தேன். அவர்களின் அந்தரங்க விஷயங்கள் அத்தனையும் தெரிந்துகொள்ளும்படியான முக்கியஸ்தனாகவும், காங்கிரஸில் தலைவனாகவும் இருந்தவன். காங்கிரஸின் அடிப்படைத் தந்திரங்கள் அனைத்தும் எனக்குத் தெரியாமல் இருக்க முடியாது. காங்கிரஸின் திட்டங்களை என்னால் நிறைவேற்றும்படியாகவும் இருந்தது. அத் திட்டங்களில் ஒன்றாக இந்தியைப் பரவச் செய்யும் விஷயத்தில் மிகவும் அக்கறையோடு முயற்சி எடுத்தவன் நான். அப்போது தனிப்பட்டவர்களால் பொருள் சேர்க்கப்பட்டு, அதன் மூலம் இந்திப் பிரச்சார

www.thamizham.net - Free E book No 3041

ஸ்தாபனங்களை உண்டாக்கி, இந்தி கற்றுக்கொடுக்கப்பட்டது. ஆனால், காங்கிரஸின் பேரால், காங்கிரஸின் செலவில் முதன் முதலில் இந்தியை இங்குக் கற்றுக்கொடுக்கும்படி செய்தவன் நான். மேலும், என்னுடைய சொந்தச் செலவில் இந்தியைப் பரவச் செய்தேன்.

1922-ஆம் ஆண்டு பிற்பகுதியில் எங்கள் ஊருக்கு வடநாட்டில் இருந்து டாக்டர் அன்சாரி, விட்டல்பாய் பட்டேல், பண்டித மோதிலால் நேரு முதலிய காங்கிரஸ் பிரமுகர்கள் விஜயம் செய்தார்கள். அப்போது இங்கிருந்த காங்கிரஸ்காரர்களுக்குள்ளேயே சட்டசபை செல்ல விரும்புவோர்கள் என்றும் சட்டசபை செல்ல விரும்பாதவர்கள் என்றும் இரு பிரிவுகள் இருந்தன. இவற்றை ஒருவழிப்படுத்த வேண்டும் என்பதற்காக ஒரு கமிட்டி ஏற்படுத்தி, அதன் சம்பந்தமாக முடிவு செய்யும்பொருட்டு, மேற்கண்ட வடநாட்டவர்கள் இங்கு வந்தார்கள். அவர்கள் எங்கள் இல்லத்தில்தான் வந்து தங்கினர். நான் அதுசமயம் அவர்கள் என் வீட்டிற்கு வந்து சென்ற ஞாபகார்த்தமாக ஏதாவது புதிய காரியம் ஒன்றை ஆரம்பித்து வைக்கலாம் என்று ஆசைப்பட்டேன்.

அப்போது எனக்கு எல்லாவற்றையும்விட இந்தி சம்பந்தமாகத்தான் ஆவல் ஏற்பட்டு 'இந்தியை இன்று முதல் சில பிள்ளைகளுக்கு நம் செலவிலேயே கற்றுக்கொடுக்கலாம்' என்று தீர்மானித்தேன்.

அன்றுமுதல் 30 பேர்கள் கொண்ட ஒரு பள்ளி ஆரம்பிக்கப்பட்டது. ஆசிரியருக்கும் 15 பிள்ளைகளுக்கும் காங்கிரஸின் செலவும்; 15 பிள்ளைகளுக்கு, உணவு, தங்கும் வசதிகளெல்லாம் என்னுடைய செலவும் ஆகும். என் தகப்பனாரின் சமாதிக்குப் பக்கத்தில் உள்ள கட்டிடத்திலேயே அப் பள்ளி நிறுவப்பட்டதுடன், அந்தச் சமாதி டிரஸ்ட் செலவிலேயே 15 பேருக்குச் சாப்பாடு போட்டு வந்தேன். இப்படி 2 வருடங்கள்வரை அதை நடத்தினேன். இது மட்டுமின்றி போகிற இடங்கள்தோறும் இந்தியைப்பற்றிப் பெருமையாக ஏதேதோ பேசுவதுண்டு. இப்படி இந்தியைப்பற்றிக் கவலைகொண்டு அதை நம் நாட்டில் கொண்டு வந்து பரவச் செய்தவர்களில் நானும் ஒருவன்.

எனவேதான், நான் வெள்ளையன் இந்நாட்டை விட்டுப் போகுமுன்னமேயே—இந் நாட்டிற்குச் சுதந்திரம் கிடைக்கும் என்ற எண்ணம் கனவிலும் தோன்றாத காலத்திலேயே நான் இந்தியை ஒழிக்கவேண்டும் என்று கூறினேன்.

என் எண்ணத்திற்கு மாறாகவே, இந்தியை வட நாட்டார் இங்கு புகுத்தி, அவர்களின் நாகரிகங்களைப் புகுத்த முயற்சித்தனர். இந்தியை அரசியல் மொழியாகவும் கொண்டுவரச் சட்டமியற்றினர்.

[காஞ்சியில், 30-7-1955-ல் சொற்பொழிவு—'விடுதலை' 1-8-1955]

தோழர்களே!

இந்தி படித்தால் உத்தியோகம் என்றும், தொழில் துறைகளில் எல்லாம் இந்தியிலேயே சொல்லிக்கொடுப்பதுமாகச் செய்கின்றனர். இந்தியை இஷ்டமில்லாதவர்களிடம் புகுத்துவதில்லை என்றும் கூறிக்கொண்டே, செயலில் தங்கள் சூழ்ச்சியான காரியத்தைக் காட்டிக் கொண்டு வருகின்றனர்.

ஆச்சாரியார் முதன்மந்திரியாகி—ஒரு சர்வாதிகாரத் தலைவனுக்குள்ள வசதிகளை எல்லாம் அடைந்து—தன்னுடைய சுண்டுவிரல் ஆட்டத்திற்கு ஏற்றபடி ஆடும் அங்கத்தினர்களைக் கொண்ட சட்டசபையை அமைத்துக்கொண்டு, அதன் பிறகு துணிவாக யாரும், எதுவும் கூற, மறுக்க முடியாது என்ற அதிகார ஆணவத்தால் அவருடைய வாக்கிலிருந்து, 'இந்தி கட்டாயப் பாடமாக்கப்பட வேண்டும்' என்று கூறினார்.

அப்போது நாங்கள் செய்த கிளர்ச்சியில் 1700 பேர்கள் வரை சிறை சென்றோம். இரண்டு நண்பர்கள் தாளமுத்து-நடராசன் என்பவர்கள் சிறையிலேயே உயிரும் விட்டனர்.

www.thamizham.net - Free E book No 3041

எனக்குக் கடுமையான தண்டனையும் விதித்தார். குற்றத்தை இரண்டு செக்ஷன்களாகப் பிரித்து, ஒவ்வொரு செக்ஷனுக்கும் 1000 ரூபாய் அபராதத்துடன் ஒரு வருடம் கடின காவல்; ஆக இரண்டு செக்ஷன்களுக்கும் மூன்று வருடங்கள் சிறையிலிருக்க வேண்டும் என்பதாகத் தீர்ப்பளிக்கப்பட்டது.

என்னைப் பல்லாரியின் கடும் வெயில் உடைய உஷ்ணமான இடமாகப் பார்த்து அங்கே சிறை வைத்தார். அதை விட்டுப் பல இடங்களுக்கும் என்னைப் பந்தாடுவதுபோல் மாற்றி வைத்து, இறுதியில் எனக்கேற்பட்ட வயிற்றுக் கோளாறைக் கண்டு, காலராவோ என்று பயந்து வெளியில் விட்டு விட்டனர்.

அடுத்து நண்பர் ஓமாந்தூர் இராமசாமி ரெட்டியார் ஆட்சி வரவும், அவர் எனக்கு உற்ற நண்பர் என்ற முறையில் என்னிடம் நேரிலேயே, 'இந்தக் கலவரம் எல்லாம் நமக்குள்ளேயே எதற்காக? இந்திதான் கட்டாயப் படுத்துவதாக இல்லையே' என்றெல்லாம் சமாதானம் சொன்னார்.

அப்போது அரசாங்கம் நடத்திய பத்திரிகை ஒன்றில், கல்வி மந்திரியாக இருந்த அவினாசிலிங்கம் செட்டியார், இந்தியைப்பற்றி எழுதியதில் அது கட்டாயப் பாடமாக்கப் படும் என்பதாக எழுதி இருந்த பத்திரிகையைக் கையில் எடுத்துக் காட்டினேன்: உடனே ரெட்டியார் அவர்கள், 'இதென்ன? இந்தச் செட்டியார் தொல்லை பெரும் வம்பாக இருக்கிறதே' என்று பேசிவிட்டு, என்னிடம், 'நீ இருக்கவேண்டிய இடத்தில் நான் இருக்கிறேன்; எனக்காகவாவது நீ பேசாதிருக்கக் கூடாதா? பிறகு ஏதாவது ஒரு முடிவுக்கு வருவோம்' என்றார்.

நான் அதற்கு, 'நானும் இப்படி இல்லாவிட்டால், உங்களைப் பார்ப்பான் இந்த இடத்திற்கு வரும் சந்தர்ப்பத்தையே ஒழித்திருப்பான்; நானும் இந்த இடத்திற்கு வரமுடியாது. எனவே, இப்போதே ஏதாவது ஒரு முடிவுக்கு வரவேண்டும்' என்றேன். 'இப்போது முடியாது' என்றார். நானும், 'இதைப்பற்றிச் சும்மா இருக்க முடியுமா? ஜனங்களுக்கு ஏதாவது சமாதானம் செய்யாவிட்டால் சும்மா இருக்கமாட்டார்கள்' என்றேன். 'அப்படியானால் சட்டப்படி கடமையைச் செய்வேன்; அதற்காகக் கவலை கொள்ளக் கூடாது' என்றார். நான் அதற்கு, 'எனக்குக் கவலை இல்லை; நான் என் கடமையைச் செய்வதில் தாங்கள் கவலை கொள்ளாதிருந்தால் போதும்' என்று கூறி வந்துவிட்டேன்.

அப்போது நடத்திய கிளர்ச்சியின்பொழுது ஜெயிலில் இடமில்லாமல் இருந்தது. எங்களைச் சிறையிலடைக்க முடியாமற் போகவே கிளர்ச்சி செய்த நம் தோழர்களையும், தாய்மார்களையும்—கர்ப்பவதிகள் முதற் கொண்டு, லாரிகளில் ஏற்றி 20–30 மைல்களுக் கப்பால் கொண்டுபோய் விட்டுவந்தனர்.

இப்படியெல்லாம் நடத்தி, ஆச்சாரியார் காலத்தில் புகை வண்டி நிலையங்களின் பெயர்ப் பலகையிலுள்ள இந்தி எழுத்துக்களை அழித்தோம். இதைப்பற்றி இருவரும் நடவடிக்கை ஒன்றும் எடுக்கவில்லை. ஏனெனில், டில்லி சட்டசபையில் இதற்குக் காரணங் கூறிய இரயில்வே மந்திரி, 'இதனால் உண்டாகும் செலவு 2200 ரூபாய்தான், மண்ணெண்ணெய் வாங்குவதற்குச் செலவாகிறது; நடவடிக்கை எடுத்தால் அதிகம் செலவாகும்' என்று கூறினாராம்.

எனவே, சென்ற ஆண்டிலேயே தஞ்சையில் இக் கிளர்ச்சியை நடத்தியவுடன் கூட்டப் பட்ட பொதுக் கூட்டத்தில், இனி வேறு முறையில் இக் கிளர்ச்சியைச் செய்யவேண்டு மென்று தீர்மானித்துக் கூறினேன்.

[காஞ்சியில், 30-7-1955-ல் சொற்பொழிவு—'விடுதலை' 2-8-1955]

www.thamizham.net - Free E book No 3041

# 4. பிற கிளர்ச்சிகள்

## 1. கணபதி உருவப் பொம்மை உடைப்பு

27–5–1953 புதன்கிழமை மாலை 6–30 மணிக்கு கணபதி உருவப் பொம்மையைத் தூள் தூளாக்கி மண்ணோடு மண்ணாய்க் கலக்கிவிடுங்கள்!

திராவிடத் தோழர்களே! இந்தியாவில் 'வெள்ளைக்காரச் சக்கரவர்த்தி' ஆட்சி ஒழிந்து, பார்ப்பன ஆதிக்க 'ஜனநாயக ஆட்சி' ஏற்பட்டதிலிருந்து—இன்று, இந்த நேரம் வரை ஒவ்வொரு மாத்திரை நேரமும் வருணாசிரம தர்ம ஆட்சி வளர்ந்து, வளம்பெற்று வருகிறது.

வருணாசிரம தர்மத்தைப் புகுத்த—பார்ப்பன ஆதிக்க ஏகபோக 'ஜனநாயக' ஆட்சியானது ஆட்சிமூலம் பல துறைகளில் பல கொடுமையான முறைகளைக் கையாண்டு வந்தாலும், திராவிடநாட்டில்–தமிழ்நாட்டில்–தென் இந்தியாவில்–சென்னை இராஜ்யத்தில் 'வெள்ளைச் சக்கரவர்த்தி' காலத்தில் ஒரு அளவுக்கு முன்னேற்றமடைந்திருக்கிற திராவிடர்களை மனுகாலச் சூத்திரர் ஆக்கத் திட்டம் கொண்டு உத்தியோகத் துறையிலும், கல்வித் துறையிலும் திட்டம் வகுத்துச் செயலில் இறங்கிவிட்டது.

1. 'சூத்திரர்களுக்கு அரசாங்க உத்தியோகத்தில் இருந்த 'சூத்திரர்' வகுப்பு உரிமை அரசியல் சட்டத்தின் மூலம் உறுதியாகி அமுலுக்கு வந்துவிட்டது. இதிலிருந்து 'சூத்திரர்கள்' (தமிழர்கள்) உத்தியோக உரிமை அற்றவர்களாக ஆக்கப்பட்டுவிட்டார்கள்.

2. சூத்திரர்களுக்குக் கல்வித் துறையில் ஒரு அளவுக்கு பெரிய கிளர்ச்சி மீது சிறிய உரிமை இருந்தது; அதுவும் ஆச்சாரியார் ஆட்சியில் அழிக்கப்பட்டுவிட்டது.

3. கல்வித் துறையில், மேல் வகுப்பு—அதாவது உத்தியோகத்திற்குத் தகுதியாகும் படிப்புதான் 'சூத்திரர்'களுக்கு உரிமையில்லாமல் இருக்கும்படி செய்யப்பட்டுவிட்டது என்றாலும், பொதுக் கல்வி என்பதுகூடச் சரிவரப் பெறுவதற்கில்லாமல், அடிப்படைக் கல்வி என்னும் பேரால் தகப்பன் தொழிலை—பரம்பரைத் தொழிலைப் படிக்க வேண்டும் என்கின்ற நிர்ப்பந்தம் ஏற்படுத்தப்பட்டுவிட்டது.

இதை நான் ஏன் குறிப்பிடுகிறேன் என்றால், எந்த நாட்டிலும் இல்லாத இந்த அதிசய முறையானது, நாட்டு நலனுக்காகவோ, கல்வி நலனுக்காகவோ, ஆட்சி நலனுக்காகவோ அல்லது மக்கள் ஒழுக்க நலனுக்காகவோ அல்லாமல் பார்ப்பன நலனுக்கும், சர்வ ஆதிக்க நலனுக்கும் ஆகவுமே ஏற்படுத்தப்பட்டு, இருந்துவருகிற வருணாசிரம தர்ம புதுப்பிப்புக்காகவே (Reviving-க்காகவே) இந்த 'ஜனநாயக ஆட்சி' என்பதில் செய்யப்பட்டு வருகிறது என்பதைக் காட்டுவதற்கு ஆகவேயாகும்.

இன்று இந்தத் திராவிட (தமிழ்) நாட்டுத் திராவிட மக்கள் இன்று தங்கள் நாட்டிலேயே, தாங்கள் 100-க்கு 90-க்கு மேற்பட்டு ஓட்டுரிமை பெற்றிருந்தும், ஜனநாயக ஆட்சியிலேயே இந்த இழிநிலை; அதாவது சூத்திர, பஞ்சமநிலை அடைந்திருப்பதை ஒழித்துக் கொள்ள வேண்டுமானால், இதை மாற்றி—இந்து வருணாசிரம முறையை அழித்து ஒழித்தாலொழிய வேறு எந்தக் காரணத்தாலும், யாராலும் முடியாது என்று நான் மனப்பூர்வமாக—சித்த சுத்தியாக நம்புவதால், வருணாசிரம முறையை அழிக்க முற்படும் முறையில் முன்னுரையாக இதைக் கூறுகிறேன்.

சமீப காலமாகவே பொதுமக்கள் உணரலாம்: என்னவெனில், ஆட்சியின் வேலையும் அதிகாரிகளின் வேலையும், சவுண்டிப் பார்ப்பனர் முதல் சங்கராச்சாரியார் பார்ப்பனர் வரை சர்வ பார்ப்பனர்களும் வருணாசிரம வேத சாஸ்திர புராண இதிகாசங்களைப் பிரச்சாரம் செய்வதும், இந்தியப் பிரசிடெண்டு, இந்தியப் பிரதமர், மற்றும் இராஜ்ய

www.thamizham.net - Free E book No 3041

கவர்னர்கள், இராஜ்யப் பிரதமர்கள் முதல் யாரும் பார்ப்பனர்களாகவே ஆகிக்கொண்டு, மேற்கண்ட வேத, சாஸ்திர, புராண முதலிய பிரச்சாரங்களும் செய்துவருவது என்றால், இதில் ஏதாவது சூழ்ச்சி, உட்கருத்து இல்லாமல் இருக்க முடியுமா?

மற்றும் இவை மாத்திரமல்லாமல் நமது சூத்திர மக்களில் செல்வவான், கல்விமான், அரசியல் விளம்பரம், பதவி பெற்ற உலக விளம்பர சீமான்கள் முதல் எச்சிக்கலைச் செல்வவான்கள் வரையில்—100-க்கு ஒருவருக்குக்கூட கவலையோ, மான உணர்ச்சியோ இல்லையே என்று நாம் காணும்போது—75 ஆண்டுகள் வாழ்ந்து அண்மையில் சாகப் போகிற நான், 35 ஆண்டுகளாக வீடு, வாசல், செல்வம், தொழில், மனைவி, மக்களைத் துறந்து சந்நியாசியாக நம் திராவிட மக்களுக்கு இந்தச் சூத்திரப் பட்டம் ஒழிய வேண்டுமென்றே பாடுபட்டு வந்த—வருகிற நான், ஆண்டு ஒன்றுக்கு 30 ஆயிரம், 40 ஆயிரம், ஏன்—50 ஆயிரம் ரூபாய் கூட வரும்படி உள்ளதான எனது எஸ்டேட்டைப் பாழடைய விட்டுவிட்டு, பரதேசியாய்ப் பிரயாணங்களுக்கும், பிரச்சாரத்திற்கும் பொதுமக்களிடம் செலவு பெற்று வாழ்ந்துவரும் நான்—இதற்கு, இந்த வருணாசிரம தர்மமுறை ஒழிப்புக்கு ஏதாவதொரு காரியம் செய்யாமல் என் உயிர் போக, எப்படி என்னால் விட்டுக் கொண்டிருக்க முடியும்?

ஆச்சாரியார் முதல்மந்திரி பதவிக்கு வந்தது குறித்து உண்மையில் மகிழ்ச்சி அடைந்தவன் நான். காரணம், பிரகாசம்—கம்யூனிஸ்ட்—பொறுப்பற்ற 'உதிரிகள்' என்பவர்கள் ஆட்சியைவிட, நமக்கு நன்றாகக் கண்டித்து, எதிர்த்துப் போர் துவக்க வசதி இருக்கக்கூடிய ஒரு ஆட்சி, அதுவும் சொந்த வாழ்வில் கண்ணியமும் உலக அனுபவ அறிவும் உள்ளவர் ஆட்சிக்கு வருவது மேல் என்று கருதி ஆதரித்தேன்.

இதற்குக் காரணம், தனிப்பட்டவர்கள் சொந்த முறையில் நடந்து கொண்டிருக்கிற முறை பற்றிய அனுபவம் எனக்குச் சிறிது இருந்ததேயாகும். ஆச்சாரியாரும் அதுபோலவே ஆட்சிக்கு—கவர்மெண்டுக்குக் கவுரவம் இருக்கிற மாதிரியிலேயே பெரிதும் நடந்துவருகிறார் என்றாலும்,

தனது வகுப்புக்கு ஒரு வகுப்பின் உத்தமபுத்திரன் எப்படி நடந்து கொள்வானோ அதுபோல்—'தேவர்களுக்கு இராமன் நடந்துகொண்டது' போல்தான் நடந்துகொண்டிருக்கிறார்.

நம்மில் துரோகிகள், அனுமார்கள், விபீஷணர்கள் இருந்தால் அதற்கு நான் என்ன செய்யமுடியும்?

ஆனதால், நான் என் சொந்தப் பொறுப்பில் முன்பு பலதடவைகள் கூறி இருப்பது போல, வருணாசிரம வியாதியை ஒழிக்கக் கடைசிச் சிகிச்சையாக,

நாளது மாதம் 27-ந்தேதி புதன்கிழமை தமிழ்நாடெங்கும் புத்தர் விழா கொண்டாடி, மாலை 6 மணிக்குப் பொதுக்கூட்டத்தில் வருணாசிரம வாதிகள் பெரும்பாலோருக்கும் 'மூல தேவன்-தெய்வம்' என்று கருதப்படுகிறதற்கு என்று உருவாக்கி இருக்கும் 'செயற்கை உருவ கணபதி அறிகுறியை' மக்கள் உள்ளத்தில் அழித்துவிட வேண்டும் என்பதாகப் பொது மக்களை—அதாவது, மனு வருணாசிரம தர்மத்தை வெறுக்கிற பொது மக்களையும்—திராவிடர் கழகத் தோழர்களை, சிறப்பாக இளைஞர்களையும் வேண்டிக்கொள்கிறேன்.

அன்று 'பிள்ளையார் அல்லது கணபதி உருவம்' என்பதை—மண்ணால் செய்த பொம்மை உருவத்தையே கொள்ளுங்கள். சர்க்கார் 144 போட்டால் உருவத்தை அழிப்பதை நிறுத்திவிடுங்கள். அவரவர்கள் கழகக் காரியாலயத்தில் அல்லது அவரவர்கள் வீட்டில் உடைத்து மகிழ்ச்சி கொண்டாடுங்கள்! நரகாசூரனைக் கொன்றதாகப் பார்ப்பனர்களும், பார்ப்பன அடிமைகளும் எப்படிக் கொண்டாடுகிறார்களோ அதுபோல், உருவத்தை உடைத்துக் கொண்டாடுங்கள்!

www.thamizham.net - Free E book No 3041

புத்தர் பிரான், வருணாசிரம தர்மத்தையோ இந்த வருணாசிரம தேவர்களையோ ஏற்றுக்கொண்டவர் அல்லர்; அவற்றை ஒழிப்பதே புத்தர் மதத்தின் உட்கருத்து; முதல் கருத்து!

இந்தத் தேவர்களை, தெய்வங்களை நாம் வணங்குவது–ஏற்பது–மிகுதியும் முட்டாள் தனமும் மானமற்ற தன்மையுமாகும்.

நமக்குக் கடவுள் என்பதெல்லாம், நம் நடத்தையில்—சத்தியம், நாணயம், தயவு, உபகாரஞ்செய்தல், துரோகம் செய்யாமலிருத்தல் ஆகியவைகளாகும்.

['விடுதலை'–தலையங்கம்— 7-5-1953]

## 2. ஆச்சாரியார் கல்வித் திட்ட எதிர்ப்பு

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

ஆச்சாரியார் கல்வித்திட்ட எதிர்ப்பு மாநாடு என்பதாக இரண்டாவது நாள் (24-1-'54) மாநாடு கூட்டினோம்.

அம் மாநாட்டின் தீர்மானமாக ஒரே ஒரு தீர்மானம் மட்டுமே நிறைவேற்றியிருக்கிறோம். அதாவது,

'ஆச்சாரியார் கல்வித் திட்டமாகிய, புதிய 3 மணி நேரக் கல்வித் திட்டத்தை மாற்றி பழையபடியே செய்ய வேண்டும் என்று சென்னை அரசாங்க மந்திரி சபைக்கு 3 மாத வாய்தா கண்டு ஒரு வேண்டுகோள் விடுவது என்றும்; 3 மாத வாக்கில் அரசாங்கம் இதற்குத் தயவுகாட்டிக் கல்வித் திட்டத்தை மாற்றி அமைக்காதபட்சத்தில் ஒரு 'ஸ்பெஷல் மாநாடு' கூட்டி அதில் தீவிர நேரிடை எதிர்ப்பு நடவடிக்கை எடுத்து மந்திரி சபையைப் பணியச் செய்ய வேண்டும் என்றும் இம் மாநாடு தீர்மானிக்கிறது'—என்று.

தோழர்களே! இந்தக் கல்வித் திட்டம் எவ்வளவு யோக்கியமற்றது! இந்தப் பார்ப்பனர்கள் நம்மை எவ்வளவு தூரம் கொடுமைப்படுத்துகிறார்கள்; அடக்கி மிதித்து நசுக்குகிறார்கள் என்பதற்கு இந்தக் கல்வித் திட்டமே போதுமானது என்பது விளங்கும்; எவ்வளவு தைரியம்! இந்தக் காலத்தில் இவ்வளவு தைரியமாக நம்மைக் கொடுமைப்படுத்து கிறார்களே!

பண்ணாத கொடுமைகளை, அக்கிரமங்களையெல்லாம் செய்கிறார்கள். இவ்வளவும் போதாதென்று நமது மக்களின் கண்ணையும் சேர்த்துக் குத்துகிறதா? ஏன் இந்த அக்கிரமம்?' என்றால், 'பொறு, பொறு! இந்தத் திட்டத்தை 'டவுனு'க்கும் கொண்டு வருகிறேன்' என்று சொல்லுகிறார்கள்! இந்த நாட்டில் உழைக்கிறவர்கள் யார்? நம்மவர்கள்தானே! பாடுபட்டு, கஷ்டப்பட்டு எல்லாவற்றையும் செய்கிறோம்; உடலால் பாடு படுகிற வேலைகள் அத்தனையும் செய்கிறவர்கள் திராவிட மக்கள்தானே! இன்னும் சர்க்காருக்கு வரி கொடுப்பது நம் மக்கள்—கிராமத்து மக்கள்தானே கொடுக்கிறார்கள்? இப்படியிருக்கும்போது 'உழைக்கிற நமது மக்கள் படிக்கக்கூடாது; பாடுபடாத சோம்பேறிக் கூட்டம்தான் படிக்க வேண்டும்; உத்தியோகம் பார்க்கவேண்டும்' என்று திட்டம் கொண்டுவருவது என்றால் என்ன நியாயம்? இதை எப்படிச் சகித்துக்கொண்டிருப்பது? இவர்களைச் சும்மா விட்டுவைத்திருப்பதால்தானே, இப்படியெல்லாம் தைரியமாகச் செய் கிறார்கள்? என்ன அநியாயம்! 'சாஸ்திரத்திலே, புராணத்திலே, இன்னும் மத, கடவுள் ஆதாரங்கள் எல்லாவற்றிலும் அக்கிரமமான முறையில் எங்களை அடக்கி ஒழிப்பதையே இலட்சியமாகக் கொண்டு வைத்து இருப்பது போதாமல் இன்று நடப்பிலும் அந்தப்படியே செய்யப்பட்டு வருகிறதே!

www.thamizham.net - Free E book No 3041

எங்கள் நாட்டிலே வந்து உட்கார்ந்து கொண்டு எப்படி எப்படியோ தந்திரமாய் அதிகாரத்தை—ஆதிக்கத்தைக் கைப்பற்றிக்கொண்டு தகுதியில்லாதவனுக்கு எல்லாம், அயோக்கியர்களுக்கெல்லாம், அவர்கள் பார்ப்பன அடிமைகள்—கூலிகள்—பிரச்சாரத்தால் பிழைக்க வேண்டிய கூலிகள் என்பதற்காகவும், அவர்களுக்குப் பதவியும், செல்வாக்கும், பெருமையும் கொடுத்துவருவது என்றால் என்ன நியாயம்? உள்ளபடி யோக்கியன்—திறமைசாலிகள்—நல்லவர்கள் வெளியே தலைகாட்ட முடியவில்லையே! நாம் கேட்டால்—'நீ சட்ட சபைக்கு வாயேன், வந்து உன் காரியத்தைச் செய்து கொள்ளேன்!' என்றா சொல்வது?

அந்தச் சட்டசபை யோக்கியதைதான் என்ன? சென்ற தடவை நடைபெற்ற தேர்தலிலே காங்கிரசின் கதி என்னவாயிற்று? காங்கிரஸ் தோற்றுப்போய் எதிர்க் கட்சிகள் தானே மெஜாரிட்டியாய் இருந்தன? உண்மையிலேயே யோக்கியமான ஆட்சியாய் இருந்தால், ஜனநாயகத்தை உள்ளபடியே கருதுபவர்களாக இருந்தால் என்ன செய்திருக்க வேண்டும்? மெஜாரிட்டியாய் இருந்த காங்கிரஸ்-எதிர்ப்பாளர்களைக் கூப்பிட்டல்லவா மந்திரிசபை அமைத்திருக்க வேண்டும்? அதை விட்டு, தேர்தலுக்கே நிற்காத ஒருவரை சட்டத்திற்கு – சட்டத் தத்துவத்திற்கு விரோதமாக – கவர்னர் நாமினேஷன் என்பதன் மூலமாகப் பதவிக்குக் கொண்டுவந்து மந்திரிசபை அமைக்கப்பட்டுவிட்டது! இதுதானே சட்டசபையின் யோக்கியதை!

இது மட்டுமா? அந்தச் சட்டசபையில் காரியந்தான் எப்படி நடைபெறுகிறது? இந்தக் கல்வித் திட்டத்தைப்பற்றியே எடுத்துக்கொண்டாலும்—'இந்தத் திட்டத்தை அமுல் படுத்துவதை நிறுத்தி வைக்க வேண்டும்' என்று சட்டசபையில் மெஜாரிட்டியான உறுப்பினர்கள் தீர்மானம் செய்யவில்லையா? அந்தத் தீர்மானம் என்னவாயிற்று? வெகு சாதாரணமாக, 'இது வெறும் சிபாரிசுதானே தவிர, இந்த முடிவை அமுல் நடத்தவேண்டிய அவசியமில்லை' என்று தள்ளப்பட்டுக் குப்பைத் தொட்டியில் போடப்பட்டு விட்டதே!

இப்படியிருக்கும்போது, சட்டசபைக்கு நாம் போனால் அவர்களிடம் கூலி பெறுவதல்லாமல் வேறு என்ன செய்ய முடியும்? இன்னும் சொல்ல ஆசைப்படுகிறேன்—இன்றைக்கு இந்த இராஜ்யத்தின் முதல் மந்திரியாய் இருக்கிறாரே, தோழர் ஆச்சாரியார் அவர்கள் அவர் எந்த ஜனநாயகத்தின் மீது, எந்த ஓட்டின் மீது, எந்தச் சட்டசபைத் தன்மையின் மீது மந்திரியாக இருக்கிறார்? காரணம் வேண்டும்! எந்தத் தொகுதியிலும் நிற்காமல், யாரிடமும் ஓட்டு வாங்காமல் முன் சொன்னதுபோல் யார் தயவிலோ மந்திரியாக ஆனார்.

அந்தப்படி வந்த முதல் மந்திரி, தமக்கு உதவி மந்திரிகளாகத் தெரிந்தெடுத்துக் கொண்டிருக்கிறாரே, அந்த மற்ற மந்திரிகளின் தகுதி—திறமைதான் என்ன? அவர்களுக்குள்ளேயே—இருப்பவர்களுக்குள், இந்த ஆட்கள்தாம் மந்திரி வேலைக்குத் தகுதியானவர்களா? மந்திரி வேலைக்கு அனுபவஸ்தர்களா? அவர்களுக்கு, எந்த அர்த்தத்தில் மந்திரிகளாகப் பதவி கொடுக்கப்பட்டிருக்கிறது? தேர்தலில் நின்று மக்களால் கூடாது என்று துரத்தியடிக்கப்பட்ட ஒருவருக்கு மந்திரிப் பதவி! அதுபோலவே தேர்தலிலே நின்றறியாத, யாருக்குமே தெரியாத—இன்னும் சொல்லப்போனால் காங்கிரசிலேயேகூட இல்லாத ஒருவர் திடீரென்று மந்திரியாக ஆக்கப்பட்டிருக்கிறார்! இது வெல்லாம் என்ன நியாயம்? இப்படிப்பட்டவர்கள்தாம் நம்பிக்கையானவர்கள் என்றால், அதன் அர்த்தம் என்ன? சுத்தமான பார்ப்பன அடிமைகளாகவும் தலையாட்டிப் பொம்மைகளாகவும் இருக்க இவர்கள் ஒப்புக்கொண்டு அடிமை முறிச்சீட்டு எழுதிக் கொடுத்திருக்கிறார்கள்; ஆகவே அப்படிப்பட்டவர்கள்தாம் வேண்டும் என்பதுதானே அர்த்தம்! உள்ளபடி யோக்கியமான சர்க்கார் நடப்பாய் இருந்தால், இப்படி மக்களால் துரத்தப்பட்ட—மக்களுக்குத் தெரியாதவர்களுக்கா பதவியும், பெருமையும், ஆதிக்கமும் கொடுக்கும்? மக்கள் யாரிடம் நம்பிக்கை வைத்திருக்கிறார்களோ, யாரை மக்கள் மதிக்கிறார்களோ அவர்களுக்கல்லவா கொடுக்க வேண்டும்?



www.thamizham.net - Free E book No 3041

இப்படி அக்கிரமம் செய்துகொண்டு, மேலும் செய்கிற மாதிரி—திராவிட மக்கள் படிக்கக்கூடாது என்பதாகக் கல்வித்திட்டம் கொண்டு வருவது என்றால், நமக்கு ஆத்திரம் வராதா? எந்தப் பார்ப்பனர் மீதும் கோபமோ, குரோதமோ இல்லை. ஆனால், அவர்களுடைய நடத்தையும், போக்கும் நம்மைப் பார்ப்பனர்கள்மீது கோபம் கொள்ளுகிற மாதிரி—அதைவிட 'இந்தப் பார்ப்பனர்களை இங்கே வைத்திருக்கிற வரையில் நம்முடைய இன மக்கள் தலையெடுக்கமுடியாது; ஆதலால் இந்தப் பார்ப்பனர்களைக் கண்டிப்பாக இந்த நாட்டை விட்டுத் துரத்தித்தான் ஆகவேண்டும்' என்று சொல்லத்தக்க மாதிரியான அந்த அளவுக்கு அல்லவா எண்ணம் போகிறது!

உள்ளபடி இந்தப் பார்ப்பனர்களைத் துரத்தாதபடிக்கு இந்த நாட்டில் திராவிடர்கள் எப்படி இன்னமும் சகித்துக்கொண்டிருப்பது? எனவேதான், இந்த முடிவுக்கு அதாவது, 'பார்ப்பானே வெளியேறு!' என்ற முடிவுக்கு வரவேண்டியதாய்ப் போய்விட்டது. பார்ப்பனர்களின் நடத்தையும், கொடுமையும், அக்கிரமுமேதான் இதற்குக் காரணம்! குத்துவெட்டு வேண்டாம்; கலவரம் வேண்டியதில்லை. அந்த நிலை ஏற்படுவதற்கு முன் 'பார்ப்பனர்களே பேசாமல் வெளியேறிவிடுங்கள்!' என்கிறோம். 'போகவும் முடியாது; இங்கேயேதான் இருப்போம், இப்படித்தான் செய்வோம், அதை நீங்கள் சகித்துக்கொண்டுதான் இருக்கவேண்டும்' என்றால், பலாத்காரமாய்த் துரத்துவதைத் தவிர வேறு வழிதான் என்ன என்று பார்ப்பனர்களே சொல்லட்டுமே!

இந்தக் கல்வித் திட்டம் கேடானது; எங்கள் மக்களை நசுக்குவது; நாங்கள் படிக்கக் கூடாது என்பதற்காகக் கொண்டுவரப்படும் அழிவுத் திட்டம் என்பதாகச் சொன்னால் இவர்கள், 'இல்லை இதுதான் நல்ல திட்டம்; இதன் மூலம்தான் படிக்கமுடியும்; மக்களைக் கெடுப்பதற்காக இவர்கள் இப்படிப் பேசுகிறார்கள்' என்று நமக்குச் சொல்லுகிறார்கள். இது எந்த விதத்தில் பொருத்தமானது, யோக்கியமானது என்று கேட்கிறேன். நாங்கள்தான், ஆயிரம் காரணங்களை விளக்கி, இன்னின்ன காரியங்களால் இத் திட்டம் கேடானது என்று சொல்லுகிறோமே! நாங்கள் சொல்லுகிற காரணங்களை மறுத்தால் சரி; அல்லது நாங்கள் சொல்லுவது இன்ன விதத்தில் தவறானது என்று சொல்லுவதானால் நியாயம். அதை விட்டுவிட்டு, என்னமோ—இவர்கள் (பார்ப்பனர்கள்) தான் மக்களைப்பற்றிக் கவலை எடுத்துக்கொண்டு பாடுபடுகிற மாதிரியும்—எங்களுக்கெல்லாம் அதைப்பற்றிக் கவலையே இல்லை என்றும் பேசுவது என்பது எவ்வளவு தவறானது?

நான் கேட்க ஆசைப்படுகிறேன்—இந்தத் தோழர் ஆச்சாரியார் அவர்களுக்கோ, அல்லது அவருடைய இனத்து மக்களுக்கோ இந்த நாட்டைப்பற்றி, இந்த நாட்டு மக்களைப் பற்றி எதில் எங்களைவிட அதிகமான கவலை இருக்கமுடியும்? அவர்களுடைய கவலையெல்லாம் பார்ப்பன ஆதிக்கத்துக்கு—பாதுகாப்புக்கு என்பது தவிர, பொதுவுக்கென்று என்ன இருக்கிறது? எங்களைவிட என்ன இந்த நாட்டுக்கு அதிகமாகப் பாடுபட்டு விட்டார்கள்? இந்தப் பார்ப்பனர்களால் நாம் இந்த 2000, 3000 ஆண்டுகளாக எதில் முன்னேற்றம், மேன்மை அடைந்திருக்கிறோம்? வெள்ளையன் சிறிது முன்னேற்றமடையச் செய்தான். இந்தப் பார்ப்பனர் அவன் இடத்திற்கு வந்து நம்மைப் பழையபடி கீழே தள்ளப் பார்க்கிறார்கள்; சாண் ஏறினதற்கு முழம் இறக்கிவிட்டார்கள்.

இன்றைக்கு இருக்கிற எவர்தானாகட்டும்; ஆச்சாரியாரேதான் ஆகட்டும், என்னைவிட அதிகமாக என்ன இந்த நாட்டுக்குப் பாடுபட்டு விட்டார்கள்? அல்லது மற்றவர்களுடைய உழைப்புக்கு, நாணயத்திற்கு, தியாகத்திற்கு—என்னுடைய பொதுநல உழைப்பு என்பது என்ன, எவ்வளவு குறைந்தது என்று சொல்லமுடியும்? இவர்கூட அல்ல; இவருக்குப் பெரியவர்கள் என்று சொல்லப்படுகின்ற நேரு, இராஜேந்திர பிரசாத் போன்றவர்கள்தான் ஆகட்டும், என்ன, என்னைவிட அதிகமாகப் பாடுபட்டு விட்டார்கள் என்று கேட்க ஆசைப்படுகிறேன்.

www.thamizham.net - Free E book No 3041

இந்த ஆச்சாரியாரும், பிரசாதும், நேருவும் 4 முறை, 5 முறை ஜெயிலுக்குப் போயிருக்கிறார்கள் என்றால், நான் 13 தடவை ஜெயிலுக்குப் போயிருக்கிறேன். அந்தஸ்தில், பணம் காசில் இவர்களில் யாருக்கு நான் குறைந்தவன் என்று சொல்லமுடியும்? இரண்டு தலைமுறையாக நாங்கள் பெரிய வியாபாரக் குடும்பம்; செல்வாக்கும் அந்தஸ்தும் உள்ள நல்ல பெரியதனக் குடும்பக்காரர்களாயிற்றே! மற்ற எந்தப் பார்ப்பனத் தலைவர்கள் என்பவர்களாகட்டும், அவர்களுடைய முன் தலைமுறையை எடுத்துப் பார்த்தால், அவர்கள் புரோகிதர்கள்தானே! அவர்கள் வீதி விளக்கு வெளிச்சத்திலே படித்துக் கொண்டிருக்கிற போதே அந்தஸ்துள்ளவனாக, பெருமைக்கு உரியவனாகத்தான் நானிருந்தேன்.

இன்னும், 'பாடுபட்டோம்' என்று சொல்லுகிற மற்றவர்கள்—நேரு, பிரசாத், ஆச்சாரியார் உட்பட அத்தனை பேரும், இன்று அந்தப் பாட்டுக்குப் பலனை அனுபவிக்கிறார்கள்; இராஜபோகம் அனுபவிக்கிறார்கள்; 10 இலட்சக்கணக்கில், கோடிக்கணக்கில் பணம் சேர்க்கிறார்கள். ஆனால், நான் இந்தப் பொதுவாழ்க்கை என்பதன் பேரால் இத்தனை ஆண்டு பாட்டுக்கும் இன்றுவரை நான் ஏதாவது பலன், பதவி, பணம் அடைந்திருக்கிறேனா? சொல்ல முடியுமா? வேண்டுமானால், இந்தக் காரியத்துக்கு வந்ததனால் எனக்கு என் சொந்தத்தில் ஏராளமான பொருள் நட்டத்தையும், எதிர்ப்பையும் அனுபவித்திருக்கிறேன் என்றுதான் சொல்ல முடியுமே தவிர, ஒரு செல்லாத காசு அளவாவது இலாபம் பெற்றிருப்பேனா? அப்படி இருக்கும்போது என்னைப் பார்த்து, 'எங்களுக்குத்தான் மக்கள்மீது கவலை, உனக்கு இல்லை' என்றால், என்ன யோக்கியதை என்றுதானே கேட்கவேண்டி வரும்? ஒருவருக்கொருவர் அபிப்பிராய பேதம் இருக்கிறது என்றால் இந்த முறையிலா நடந்துகொள்வது? ஒரு முறை வேண்டாமா?

என்ன தைரியம்? எங்கள் நாட்டில் பார்ப்பானுக்குச் சமமாக வாழ எங்களுக்குத் தகுதி இல்லை; திறமையில்லை என்கிறார்கள்! படிக்கவும் வசதி தரமாட்டேன் என்கிறார்கள்! பெரிய படிப்பு படிக்க வசதியில்லை—விடமாட்டேன் என்கிறார்கள். கொஞ்சம் மனிதனாகலாம் என்றாலும் அதற்கும் விடாமல்—'கல்வித் திட்டம்' என்ற பேரால் அவனவன் சாதித் தொழிலுக்குப் போங்கள் என்று அதற்கும் வெடி வைக்கிறார்கள். அடக்குவது என்றால் இப்படியா? எதிரி என்றால் வாழவே கூடாது என்றா நினைப்பது? இதுதான் பெரிய பண்பு என்பதா?

உள்ளபடி இந்தக் கல்வித் திட்ட எதிர்ப்பு என்பதை ஒரு அரசியல் போராட்டமாகக் கருதி இதை நாங்கள் எதிர்க்கவில்லை. இதைச் சமுதாயப் போராட்டமாக, இனவாழ்வுப் போராட்டமாகக் கருதியே எதிர்க்கிறோம். எங்கள் இனத்துக்கு—திராவிட இனத்துக்கு இந்த இனத்தையே தீர்த்துக் கட்டுவதற்காக வைக்கப்படும் பெருத்த வெடிகுண்டு என்று கருதியே இக் கல்வித் திட்டத்தை எதிர்க்கிறோம். இந்த எதிர்ப்பை, போராட்டத்தை நாங்கள் எங்களுடைய ஜீவாதாரமான, உயிர்நிலைப் போராட்டமாகக் கருதுகிறோம்.

இப்போதே சொல்லுகிறேன்; இந்தக் கல்வித் திட்டம் எடுபட்டால் மட்டுமே போதாது; நம்முடைய மக்களுக்கு உத்தியோகம், கல்வி எல்லாவற்றிலும் சரியானபடியான விகிதாச்சாரம், பார்ப்பானுக்கு 100-க்கு 3, நம்மவர்களுக்கு 97 என்கிற மாதிரி வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டாக வேண்டும். இந்த இரண்டும் திராவிட மக்களின் ஜீவாதாரமான—உரிமையான பிரச்சினைகள். இந்த இரண்டு காரியங்கள் நிறைவேறுவதற்காக இந்த இனம் கடைசிவரை உயிரைப் பணயம் வைத்துப் போராடியே தீரும்! இதில் சந்தேகமே இல்லை. உள்ளபடி சொல்லுகிறேன்—இந்தப் பார்ப்பனர்களை ஒழிக்கிறோமோ இல்லையோ—எங்களிலே 1000 பேர் இந்த முயற்சியில், பார்ப்பனர்களை வெளியேற்றுகிற இந்த நல்ல காரியத்திலே, சாவோம்! ஓர் ஆயிரம் பேர் செத்துவிட்டால்—என்ன இந்த இனத்துக்கு நட்டம் வந்துவிடப் போகிறது? நான் பலமுறை கூறியதுபோல் இந்த நாட்டுத் திராவிட மக்களின் எண்ணிக்கையில் இந்தச் சாவு என்பது—தலை வாருவதில்,

www.thamizham.net - Free E book No 3041

சிக்கெடுப்பதில் கழியும் ஒரு சில முடிகள் போன்றதுதானே தவிர, பெரிய நட்டம் ஒன்று மில்லை. ஆனால், இந்த 1000 பேரில் பகுதி வீதம் பார்ப்பனர்கள் தீர்க்கப்படுகிறார்கள் என்ற நிலைமை ஏற்படுமானால் உள்ளபடி அந்தச் சமுதாயத்துக்கு அது எவ்வளவு கேடு, நட்டம் என்பதைச் சிந்தித்துப் பார்க்கட்டும்! 'நாங்களும் தயாராய் இருக்கிறோம்' என்று மடி கட்டுவதும், கசரத் பழகுவதும் பார்ப்பானுக்கு முட்டாள்தனமாக—போங்காலமாகவே முடியும்.

உள்ளபடி ஆச்சாரியாருக்குச் சொல்ல விரும்புகிறேன்; அவர் இந்தத் திட்டத்தை மாற்றவில்லையானால் நிச்சயமாக (அவர் பதவியை விட்டுப் போகிறாரோ, இல்லையோ அது வேறு விஷயம்) இது அவருடைய இனத்தின் அழிவுக்கே ஒரு காரணமாய் இருக்கப் போகிறது. சும்மா நான் 'டூப்' (Dupe) விடவில்லை. இதை நன்றாக உணர்ந்து கொள்ளட்டும். திராவிடமக்கள் இன்னும் இந்தக் கொடுமைகளையும் அக்கிரமத்தையும் நிச்சய மாகச் சகித்துக் கொண்டிருக்கமாட்டார்கள். இனியும் அவர்களை அடக்கி வைத்திருப்பதும் தவறான காரியம்; தற்கொலைக்கு ஒப்பான காரியம் என்றே சொல்லுவேன்.

கடைசியாகச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். தோழர்களே! இனி அகிம்சை, அமைதி என்று பேசிக்கொண்டிருப்பதில் எந்தவிதமான அர்த்தமும் இல்லை. ஏன் என்றால், அனுபவத்திற்கு அவை பயன்படவில்லை. எந்த முறையால் காரியம் கைகூடுமோ அந்த முறையைக் கையாளுவோம்; அதற்குப் பலாத்காரம், அராஜகம் என்ற பெயர் இருந் தாலும் அதைப் பற்றிக் கவலைப்படாமல்!

தோழர்களே! இப் பெருத்த போராட்டத்தில் கலந்துகொள்ள எல்லா மக்களும் தயாராய்ப் பயணம் சொல்லிக்கொண்டு புறப்பட்டு வாருங்கள்! கூடவே சொல்லிக்கொள் கிறேன்: இந்தப் போராட்டத்தில் கலந்துகொள்வதன்மூலம் பெருமையும் செல்வாக்கும் கிடைக்கும்; தேர்தலுக்கு நின்று மந்திரியாகலாம்—அதாவது ஜெயிலுக்குப் போய்வந்த வுடன் நாமினேஷன் பாரத்திற்கு ஓடுவது என்கின்ற எண்ணத்தின்மீது யாரும் வர வேண்டாம். எதற்குச் சொல்லுகிறேன்; இன்றைக்கும் பொதுவாழ்வு என்பது 100-க்கு 90 பாகம் சுயநலத்துக்கும், சொந்த இலாபத்துக்கும், வாழ்வுக்கும் ஆகவே பயன்படுத்தப் படுகிறது. இந்தப் பொதுவாழ்க்கை என்பதை ஒரு ஏணிப் படியாக வைத்துக்கொண்டு, தாங்கள் மேலே மேலே ஏறுவதற்கு இதை ஒரு வாய்ப்பாய்ப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். எல்லாப் பொதுநல வாழ்வுக்காரர்கள் என்பவர்களுமே அப்படித்தான் இருக்கிறார்கள். அதனாலேயே பொதுவாழ்வுக்கு மதிப்பு இல்லை; சுயநலம் தவிர பலனும் இல்லை.

நான் மிகப் பெருமையோடு சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்—பொதுவாழ்வில் எந்தவிதமான இலாபத்தையும் கருதாமல், எந்தப் பெருமையும்—சட்டசபை, ஜில்லாபோர்டு என்பதாக எதையும் கருதாமல் கை நட்டப்பட்டுக்கொண்டு, தங்களுக்கு உள்ளதையும் விட்டுவிட்டு, உள்ளபடி, பொதுநன்மை என்கிறதையே இலட்சியமாகக்கொண்டு யாராவது பாடுபடுகிறார்கள் என்றால் அது திராவிட கழகத்தார் என்கிற இந்த ஒரு கழகத்தாரைத் தவிர வேறு யாருமேயில்லை. மற்றவர்கள் எல்லாம் பாடுபடுவார்கள் என்றால் அந்தப் பாட்டை எலெக்ஷனுக்கும் மற்ற வாழ்வுக்கும் கொண்டுபோய் விற்றுவிடுகிறார்கள்; பலர் அதனாலேயே வயிறு வளர்க்கிறார்கள். மற்றும் எடுத்துப் பாருங்கள், ஒவ்வொருவரும் பொதுவாழ்வுக்கு வந்தபோது அவர்களுக்கிருந்த யோக்கியதை, அந்தஸ்து, செல்வம் முதலியவைகளை-அவர்கள் இன்றைக்கு இந்தப் பொதுவாழ்வின் பேரால் எல்லாத் துறை யிலும் எத்தகைய பெருமையான வாழ்வு நடத்துகிறார்கள் என்பவைகளை!

எனவே தோழர்களே! இதை ஒரு ஏணியாகக் கருதி மேலே போவது என்பதாகக் கருதாமல் தங்களைத் தாங்களே ஏணியாகக் கருதிக்கொண்டு, சமுதாய மக்கள் முன்னேறப் பயன்படுவதாய்ப் பாடுபட முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். போராட்டத் திற்கு வரும்போது வீட்டில் பயணம் சொல்லிக்கொண்டு புறப்பட்டு வாருங்கள்.

[நூல்: 'புரட்சிக்கு அழைப்பு'; சென்னையில், 31-1-1954-ல் சொற்பொழிவு]

www.thamizham.net - Free E book No 3041

## 8. தேசியக் கொடி கொளுத்தும் தீர்மானம்

இந்திய அரசாங்கத் தேசியக் கொடியைக் கொளுத்துவது என்பது மிகக் கடினமான தீர்மானம் என்பதாகப் பலர் கருதக்கூடும். இது இந்திய அரசாங்கத்தைக் கவிழ்க்கவோ, ஒழித்துக் கட்டவோ கருதிக்கொண்டு செய்யப்பட்ட—கொடி கொளுத்தும் தீர்மானமல்ல.

எங்களுக்கு—தமிழர்களுக்கு—தமிழ் நாட்டாருக்கு—இந்திய அரசாங்கம் வேண்டாம்; தமிழ்நாடு—தமிழர்கள் இந்திய அரசாங்கத்தின் கூட்டு ஆட்சியில்—இந்திய யூனியனில் இருக்க விரும்பவில்லை. நாங்கள் எங்களை, நாட்டை, தனிப்பட்ட பூர்ண சுயேச்சையுள்ள தனியரசு நாடாக ஆக்க விரும்புகிறோம்; எங்கள் நாட்டைத் தனி-பூரண சுயேச்சை நாடாக ஆட்சிசெய்ய எங்களுக்கு சக்தி உண்டு; சகலவிதத்திலும் எல்லாவிதமான வசதியும் உண்டு. மத்திய கூட்டாட்சியிலிருந்து பிரிந்துகொள்ள ஆசைப்படுகிறோம்.

இந்திய யூனியன் அரசியல் சட்டத்தில், சட்டப்படியான கிளர்ச்சியின்மூலம் பிரிந்து கொள்ளப் போதியபடி சட்டவசதி இல்லை; எங்களை—தமிழர்களைக் காட்டிக்கொடுத்துப் பிழைக்கும்படியானதும்—தமிழ் நாட்டு மக்களில் 100-க்கு 3 வீத ஜனத்தொகை உள்ளது மான பார்ப்பனர்கள் மத, சமுதாயத் துறையில் எங்களிடம் பெற்ற ஆதிக்கத்தை வட நாட்டாருக்குக் காட்டிக் கொடுத்துப் பிழைப்பதாலும், தமிழ்நாட்டு அரசியல் ஆதிக்கத்தில் பெரும் பங்கைக் கொண்டவர்களாக இருப்பதாலும், சட்டசம்பந்தமான வழிகளையெல்லாம் அடைத்துவிட்டார்கள். ஆனதால், நாங்கள் சட்டசம்பந்தமான வழி மாத்திரமல்லாமல் வேறு எந்தவிதமான வழிமூலமானாலும் பிரிந்துகொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம்.

நாங்கள் பிரிந்துகொள்ளவேண்டும் என்கின்ற எண்ணம், எங்களுக்கு வடநாட்டா ரால் நடத்தப்படும் இந்திய அரசாங்கம் ஏற்பட்ட பிறகு தோன்றிய எண்ணமல்ல.

வெள்ளையனால் நடத்தப்பட்ட இந்திய அரசாங்கம், சர்வ வல்லமையுடன் ஆட்சி நடத்திக்கொண்டிருந்த காலமான 1937–38-லேயே தோன்றி, திராவிடநாடு கிளர்ச்சியை நடத்தி வந்திருக்கிறோம்.

வெள்ளையர் இந்த நாட்டைவிட்டுப் போகும்போது நாங்கள் ஸ்தாபன பூர்வமாக சட்டமுறைப்படிக் கிளர்ச்சி செய்திருப்பதோடு, டெல்லிக்குத் தூதுசென்று, வெள்ளையர் களிடம் எங்கள் விருப்பத்தைத் தெரிவித்துக்கொண்டும் இருக்கின்றோம்; இந்தச் சந்தர்ப் பத்தில் வடவர்கள் வெள்ளையர்களுக்கு இலஞ்சத்தைக்கொடுத்து எங்கள் விருப்பத்தை இலட்சியம் செய்யாமல் செய்துவிட்டார்கள். மற்றும், வடவர் ஆட்சி ஏற்பட்டு, அவர்கள் சுதந்திரதினம் கொண்டாடும்போதே அந்த நாளை நாங்கள் துக்க நாளாகக் கொண்டாடி இருக்கிறோம்.

ஆண்டுதோறும் நாங்கள் பிரிவினை நாளைக் கொண்டாடி வருகிறோம். மற்றும், 'அரசியல் சட்டம்-எங்களை நிரந்தர அடிமைப்படுத்தும் வடவரின் சர்வாதிகாரச் சட்டம்' என்றும், அதைத் தீயிட்டுக் கொளுத்தவேண்டுமென்றும் எங்கள் மாநாடுகளில் பலதடவை பேசியும், பத்திரிகைகளில் எழுதியும் வந்திருக்கிறோம்.

எங்களுடைய இந்த உணர்ச்சியையே அடியோடு அழிக்கும்படியான தன்மையில், அன்னிய மொழியாகிய இந்திமொழியை எங்கள் நாட்டிற்குள் அரசியலின்பேரால் பலாத்காரமாய்ப் புகுத்தி, மொழி, கலாச்சாரம், கல்வி முதலிய துறைகளிலும், அரசியலில் ஆட்சிமொழி என்கின்ற தன்மையிலும் புகுத்தி இருப்பதோடு, இந்தி படித்து பாஸ் செய்தவனுக்குத்தான் உத்தியோகம் என்கின்ற அளவுக்கு வடவராட்சி துணிந்துவிட்டதால், இந்திய ஆட்சி தமிழ் நாட்டில் கூடாதென்கின்ற எண்ணம் எங்களுக்கு வலுப்பட்டுவிட்டது.

இந்த வலுப்பட்ட எண்ணம் பெற்ற பின்னர்தான் நாங்கள் 17-ந்தேதி திருச்சியில் செய்த, வடவராட்சிச் சின்னமாகிய தேசியக்கொடி என்பதைக் கொளுத்தவேண்டும் என்ற தீர்மானமாகும். அந்தத் தேசியக்கொடி என்பது எங்களுக்கு, எங்கள் தேசத் தேசியக் கொடியல்ல.

www.thamizham.net - Free E book No 3041

'இந்தியா தேசம்' என்பதை எங்களுக்குச் சம்பந்தபட்ட தேசமாக நாங்கள் வெகு நாளாகக் கொண்டிருக்கவே இல்லை. நாட்டு இலட்சணப்படி, எங்கள் நாடு எந்தவிதத்திலும் இந்திய நாடு என்பதுடன் சேர்ந்ததாக இருக்க நியாயமே இல்லை. சரித்திர சம்பந்தபட்ட வரையில்—வெள்ளையர் காலத்தைத் தவிர, வேறு எந்தக் காலத்திலும் எங்கள்நாடு தனித்த சுதந்திரநாடாகவே இருந்துவந்திருக்கிறது.

மதசம்பந்தமான புராண இதிகாசங்கள் சம்பந்தப்பட்டவரை தமிழ்நாடு (திராவிட நாடு) தவிர்த்த இந்திய நாடு திராவிடநாட்டிற்கு எதிரி நாடாகவும், அந்த இந்திய மக்கள் (ஆரியாவர்த்தம் ஆரிய மக்கள்) திராவிட மக்களுக்கு எதிரிகளாகவும் இருந்துவந்ததாகவே அறியக்கிடக்கின்றது.

ஆகவே, 'இந்தியத் தேசியக் கொடியைக் கொளுத்துவது, இந்தியக் கூட்டாட்சி என்பதில் தமிழ் நாட்டுத் தமிழர்களாகிய நாங்கள் பிரஜைகளாக இருக்கச் சம்மதப்பட வில்லை' என்கின்ற எங்களுடைய இஷ்டமின்மையைக் காட்டுவதேயாகும்.

['விடுதலை'-தலையங்கம்—20-7-1955]

## 4. இந்திக் கிளர்ச்சி

கொடி கொளுத்திக் காட்டுவது என்று திராவிடர் கழகம் தீர்மானித்த பிறகு, அரசியல் உலகில் ஒரு பரபரப்பு—'சென்சேஷன்' ஏற்பட்டிருக்கிறது. இதுபற்றிப் பெரிதும் அரசியல் பொதுவாழ்வில் ஈடுபட்டிருக்கிறவர்களே அதிகம் பேசுகிறார்கள்.

இதில் சிலருக்கு கொடியைப்பற்றிக் கவலையில்லாமல் வேறு விஷயமாய் மகிழ்ச்சியும் கவலையும் ஏற்பட்டிருக்கலாம். அதாவது, காமராசரின் எதிரிகளுக்கு ஒரு மகிழ்ச்சி என்ன வெனில், 'காமராசருக்குப் பொது மக்களிடம் பெரிய ஆதரவிருந்து வருகிறது. இப்போது இராமசாமி கொடி கொளுத்தப் போவதால் அவன்மீது ஏதாவது நடவடிக்கை எடுத்துதான் தீரவேண்டும்; விஷயம் இந்திப் பிரச்சினையானதால் இந்த இந்தி எதிர்ப்பு நாட்டுமக்கள் எல்லோரும் வரவேற்கும்படியான காரியமாகும்; இப்போது இராமசாமி மீது எடுக்கும் நடவடிக்கையில் காமராசர் பொதுமக்கள் ஆதரவை இழந்து விடுவார்; செல்லுமிடங்களில் கருப்புக்கொடி (1938ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்பில் இராஜாஜிக்குப் பிடித்ததுபோல்) பிடிக்கும் படியான நிலைமை வந்துவிடலாம். ஆனதால், இந்தக் கொடி கொளுத்துவது காமராசரைத் திண்டாட்டத்தில் கொண்டுவந்து வைத்துவிட்டது. இது ஒரு நல்ல சம்பவம்' என்று காமராசரின் எதிரிகள் மகிழ்ச்சிக் கூத்தடிப்பார்கள்.

அதுபோலவே காமராசரின் நண்பர்கள், 'இது ஒரு சங்கடமான நிலையாக இருக் கிறதே; இது எப்படி முடியுமோ?' என்று கவலைப்படுவார்கள். இதுதான் பரபரப்புக்கு முக்கியமான காரணம். மற்றபடி, இந்தக் கொடி கொளுத்துவது ஒரு சாதாரண விஷயம். பிள்ளையார் உடைக்கப்பட்டதைவிட இது ஒன்றும் முக்கியமான காரியமல்ல. அது கடவுள் சங்கதி; இது ஆட்சி சங்கதி. அது ஒரு மொத்தைக் களிமண்ணைப் பொறுத்தது—இது ஒரு முழம் அல்லது ஒருசாண் துணியைப் பொறுத்தது. இந்த இரண்டு காரியமும் யாரிடமும் எவ்வித பலாத்காரம் கொண்டதுமல்ல—நாசத்தைக் கொண்டதுமல்ல.

ஆனால், வெறும் மூடநம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட அந்தக் களிமண் பொம்மை எப்படிக் 'கடவுள் சின்ன'மோ, அப்படியே, இந்த மேற்படி அளவு துண்டுத் துணி 'ஆட்சிச் சின்னம்' என்பதாகச் சொல்லிக் கொள்ளப்படுவதாகுமே ஒழிய, அறிவாளிகள் பிரமாதமாகக் கருதிக்கொள்ளப்பட இடமில்லை. கடவுள் சின்னம் என்பது 'ஒழுக்கத்தையும் எல்லா மக்களுடைய உள்ளத் திருப்தியையும்' பொறுத்தது; ஆட்சிச் சின்னம் என்பது நீதியையும் எல்லா மக்களுடைய திருப்தியையும் பொறுத்தது. அது மத சாஸ்திரத்தைப்

www.thamizham.net - Free E book No 3041

பொறுத்தது; இது அரசியல் சட்டத்தைப் பொறுத்தது. இவற்றில் ஒழுக்கம், நேர்மை இல்லாமல் சாஸ்திரத்தையும் சட்டத்தையும் கருதிக்கொண்டு இந்த இரண்டையும் காப்பாற்றப் புறப்படுவது கைபலமே அல்லாமல் நியாய பலத்தைப் பொறுத்ததல்ல.

ஆனால், பொதுமக்கள் இந்த இடத்தில் ஒரு விஷயத்தைப்பற்றிச் சிந்திக்கவேண்டும். அதாவது, உடைப்பவர்களும் கொளுத்துபவர்களும் என்ன எண்ணத்தைக்கொண்டு அப்படிச் செய்கிறார்கள் என்பதைப் பற்றியதாகும்.

பக்தர்களுக்கோ, அரசாங்கத்திற்கோ எந்தவிதமான தொல்லையையும், அவர்களது காரியங்களுக்கு எந்தவிதமான தடையையும், ஏற்படுத்துவதற்காக அல்லவேயல்ல. மற்றெதற்கு என்றால், 'பிள்ளையார் என்பதை நாங்கள் எங்கள் கடவுளாகக் கருதவில்லை. அது போலவே, இந்திய யூனியன் ஆட்சி என்பதை நாங்கள் எங்கள் சர்க்காராக, ஆட்சியாகக் கருதவில்லை. இவை எங்களுக்கு இஷ்டமில்லாத காரியங்கள்; அதன் காரணங்கள் இன்ன இன்னவைகள் என்று விளக்கி வந்திருக்கிறோம்; விளக்கி வருகிறோம். அந்த எண்ணங்களைப் படிப்படியாக தீவிரப்படுத்திக் காட்டுவதற்காக இப்படிச் செய்கிறோம். இதனால் எங்களுக்கு வேறு எவ்வித கெட்ட எண்ணமுமில்லை.'

இந்திய யூனியன் ஆட்சியை ஒழித்து, கவிழ்த்து எங்கள் ஆட்சியை இந்தியாமீது சுமத்தவோ, இந்தியாவை நாங்கள் எங்களுக்கு அடிமைப் படுத்திக் கொள்ளவோ அல்ல; அல்லது இந்தியாவை மற்றொரு நாட்டானுக்குக் கைவசப்படுத்தவோ, காட்டிக்கொடுக்கவோ அல்ல; அதாவது நாங்கள் துரோகிகளுமல்லர்; எதிரிகளுமல்லர்; யுத்தம் தொடங்குகிறவர்களுமல்லர்.

எங்கள் நாட்டு ஆட்சி எங்களுக்கு வேண்டும். எங்கள் நாட்டுக்குள் எங்கள்மொழி அல்லாதது ஆட்சி மொழியாக, தேசிய மொழியாக, கல்வி மொழியாக இருக்கக்கூடாது. இந்தியை வலியுறுத்தும் ஆட்சி எங்கள் (தமிழ்) நாட்டிற்கு வேண்டாம் என்பதை ஆட்சியாளருக்குக் காட்டுவதற்காக—ஒரு கிளர்ச்சி காரியமாக இதைச் செய்கிறோம். அதுவும் ஏன் செய்கிறோம் என்றால், மற்றவிதமாகச் செய்யப்பட்ட காரியங்கள் கவனிக்கப்படவில்லை; கேலி செய்யப்பட்டுவிட்டன. இந்திய யூனியன் ஆட்சி ஜனநாயக ஆட்சி என்று சொல்லப்படுகிறது. அப்படியானால், தமிழ்நாட்டில் இந்தியைப் புகுத்துவது ஜனநாயகமா? இங்கு தமிழர்கள் 100-க்கு 90 பேர்கள் ஆவார்கள்; மீதி 100-க்கு 10 பேர். பாக்கியுள்ள மக்களிடம் இந்த ஜனநாயக ஆட்சி, இந்தியைப்பற்றி யோக்கியமான முறையில் ஓட்டுக் கேட்கட்டுமே! மெஜாரிட்டி மக்கள் இந்தியை விரும்பினால் வைத்துக்கொள்ளட்டும். அப்படியில்லாமல், 'இந்திய யூனியன் அரசாங்கத்திற்குள் தமிழ்நாடு ஒரு இராஜ்யமாக சேர்க்கப்பட்டு இருக்கிறது (அது என்றென்றைக்கும் விடுபடுவதற்கு இல்லாமல் சட்டம், ஆட்சி அமைத்துக்கொண்டு) ஆதலால் யூனியனிலுள்ள 20 நாடுகள் சொல்லுகிறபடிதான் தமிழ்நாடு கேட்டு ஆகவேண்டும்' என்றால் நாங்கள் பரிகாரம் தேடிக்கொள்வது எப்படி?

['விடுதலை'-தலையங்கம்—21-7-1955]

## 5. கொடி எரிப்பு ஒத்திவைப்பு

ஆகஸ்ட் 1ஆம் தேதி, 'இந்திய யூனியன் கொடி' கொளுத்தப்படும் என்கின்ற திராவிடர் கழகத் தீர்மானம் சம்பந்தமாக, சென்னை அரசாங்க முதன் மந்திரி திரு. காமராஜர் அவர்களது அறிக்கையைப் பார்த்தேன்.

அவ்வறிக்கையானது நான் விரும்பியபடி மத்திய அரசாங்கத்திற்காகவும், சென்னை அரசாங்கத்திற்காகவும் வெளியிடப்பட்ட அறிக்கை என்று பொருள் தரும்படியாக விடப்பட்டிருக்கிறது. அதிலிருந்து தமிழ்நாட்டவர்மீது இந்தி கட்டாயப் பாடமாகத் திணிக்கப்படமாட்டாது என்று அரசாங்கம் வாக்குறுதி கொடுத்து, கொடியைக் கொளுத்த வேண்டாம்

www.thamizham.net - Free E book No 3041

என்று விரும்புவதாக உணருகிறேன். ஆகவே, நான் எனது தீர்மானம் அமுல் செய்யப் படாமல் இருக்க வேண்டும் என்று சர்க்கார் விரும்பினால், எப்படிப்பட்ட வாக்குறுதி அளிக்க வேண்டுமென்று எதிர்பார்த்தேனோ அப்படிப்பட்ட வாக்குறுதி அளிக்கப்பட்டிருக்கிறது.

ஆனால், நடைமுறையில் இந்த வாக்குறுதியை அமுல் நடத்துவதில் அரசாங்கத் தாரால் இந்தி கட்டாயப்படுத்தப்படவில்லை என்பதாக மக்கள் தெளிவாகக் கருதும்படி நடந்துகொள்ளுமோ, அல்லது இவ்வளவு நான் நடந்துகொண்ட மாதிரி ஒன்றுக்கொன்று (அறிக்கைக்கும், செய்கைக்கும்) சம்பந்தமில்லாத மாதிரி நடந்துகொள்ளுமோ என்பதை நடைமுறையில் தெரிந்துகொள்ள வேண்டியிருப்பதால்—முதல் மந்திரியாரின் விருப்பத்திற்கு ஏற்பக் 'கொடி கொளுத்துவதை'த் தற்காலிகமாகவே ஒத்திவைத்து, திராவிடர் கழகத் தாரையும் மற்றும் இதில் ஈடுபட இருக்கிற பொதுமக்களையும் ஆகஸ்டு 1ஆம் தேதி யன்றைக்குக் கொடியைக் கொளுத்தாமல் இருக்கும்படி வேண்டிக்கொள்கிறேன்.

மற்றபடி, அவ்வறிக்கையில் கொடி கொளுத்துவோர் மீது தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும் என்று தெரியப்படுத்தி இருப்பது பற்றி நானோ, பொதுமக்களோ எவ்வித ஆச்சரியமும் படத் தேவையில்லை. மக்கள், 'அரசாங்கத்தினுடைய கொடி'யைக் கொளுத்தினால், அரசாங்கம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் என்று எந்தப் பைத்தியக்காரனும் நினைத்துக் கொண்டிருக்க மாட்டான். அடக்குமுறையினுடையவும், தண்டனையினுடையவும் கடைசி எல்லையை எதிர்பார்த்துத்தான் திராவிடர் கழகம் கொடி கொளுத்தத் தீர்மானம் செய்திருக்கிறது. இதை உலகறியவும் செய்திருக்கிறது. ஆதலால், அந்தச் சொற்களுக்காக அறிவாளிகளுக்கு நான் ஏதும் சமாதானம் சொல்லத் தேவையில்லை.

என்னுடைய இந்தக் கொடி கொளுத்தும் தீர்மானத்திற்கு எதிர்ப்பாக வீணர்கள் செய்த ஆர்பாட்டம், பூச்சாண்டிகளைச் சிறிதும் மதிக்காமல் செயலில் இறங்க முன்வந்து மடிகட்டிப் பெயர் கொடுத்த—மொழிப் பற்றும், ஆண்மையும், மானமும், துணிவும் கொண்ட பதினாயிரக்கணக்கான வீர சிகாமணிகளுக்கு எனது பாராட்டுதலையும், உளம் நிறைந்த நன்றியையும் தெரிவித்துக் கொண்டு, கொடி கொளுத்தும்படி மறுபடியும் எனது வேண்டு கோள் வரும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கச் சிரம் வணங்கி வேண்டிக் கொள்கிறேன்.

வீண் பொய்க் கவுரவத்தைப் பார்க்காமல் மிகவும் அறிவுடைமையுடன் நடந்து கொண்ட சென்னை அரசாங்கத்தையும் மனமாரப் பாராட்டுவதுடன், உறுதி மொழிக்கேற்ப நடந்து கொள்ளுமென்றே நம்புகிறேன். வணக்கம்.

['விடுதலை'—அறிக்கை—31-7-1955]

## 6. தேசியக் கொடி எரிப்பு

தலைவரவர்களே! பெரியோர்களே! தாய்மார்களே!

இந்தப் பார்ப்பனர்கள்தாம் இப்படிக் காலிகளைக் கிளப்பிவிட்டனர் என்றால், மந்திரி கோவிந்த வல்லப பந்த் அவர்கள், 'கொடி கொளுத்துவது பெரிய இராஜத் துரோகக் குற்றத் திற்குச் சமமான குற்றமாகும்' என்று கூறுகிறாராம். அதன் பிறகுதான் கொடி கொளுத்துவோர் பட்டியலில் ஆயிரக் கணக்கில் பெயர் வந்தவண்ணமிருக்கின்றது. அன்றியும் எந்தச் சட்டப்படி, என்ன குற்றம் என்பதே இதுவரை யாருக்கும் புலப்பட வில்லை!

வக்கீல்கள் எல்லாம் சட்டப் புத்தகத்தைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தும், இப்பேர்ப் பட்ட முக்கிய விஷயத்தைப் பற்றிச் சட்டத்தில் ஒன்றுமே தென்படவில்லை. கொடியைக் கொளுத்தினால் என்ன தண்டனை விதிப்பது என்பதைப்பற்றி அரசாங்கமே இன்னமும் சட்டபூர்வமாக ஒன்றும் முடிவு செய்யவில்லை.

www.thamizham.net - Free E book No 3041

அப்படி இருக்க, தெருவில் திரியும் ஆண்டிகளெல்லாம், 'கொடியைக் கொளுத்தினால் உயிரைக்கொடுத்துக் காப்பேன்' என்று மிரட்டுகின்றனர்.

இவர்கள் மிரட்டலுக்கும், பூச்சாண்டிகளுக்கும் நான் பயந்தவனா? அப்படித்தான் என் உயிர் போனாலும் நஷ்டம் என்ன என்று நினைப்பவன். நானும், இந் நாட்டில் ஒரு மனிதனின் சராசரி வயதைப்போல் மூன்றுமடங்கு வயதுடையவன். இதுவரை இருந்தது போதாமல் இன்னமும் உயிருடன் இருக்க ஆசைப்படுபவன் அல்லன். போகிற நேரத்தில் ஏதாவது நல்ல காரியத்தைச் செய்துவிட்டுப் போகலாம் என்பதுதான் பெரிய கவலையே தவிர, என் உயிர் போய்விடுமே என்ற கவலை இல்லை.

நானும் இப் போராட்டம் நடந்தே தீரும்—அதன் மூலமாவது பெரிய குற்றமென்று சொல்கிறார்களே அதற்காகவாவது சில வருடங்கள் சிறைவாசம் செய்ய வாய்ப்புக் கிடைக்கும் என்று ஆவலோடு இருந்தேன். என் உடல் நிலையைப்பற்றிக்கூடக் கவனிக்காது உடல் நிலையில் பலவிதமான குறைகளிலிருந்தும் டாக்டரிடம் காட்டிச் சரிசெய்து கொள்ளாமல் இருந்துவிட்டேன். ஏன்? சொந்தச் செலவில் ஏன் காசை வீணாக்கவேண்டும்; சிறைக்குச் சென்றவுடன் அரசாங்கச் செலவிலாவது பார்த்துக்கொள்ளலாம் என்றெல்லாம் ஆசையுடன் இருந்தேன். ஆனால், தற்சமயம் அவ்வித வாய்ப்புக்கு இடமின்றிப் போய்விட்டது.

நான் விரும்பியபடியே சர்க்கார் உறுதிமொழி கிட்டியது. என்னுடைய விருப்பப்படி சர்க்கார் எப்படிப்பட்ட வாக்குறுதி கொடுத்தால் போதும் என்றேனோ, அதன்படி வாக் குறுதி தந்துவிட்டது. இந்தி மொழி தமிழ்நாட்டார்மீது கட்டாயமாகத் திணிக்கப்பட மாட்டாது என்ற ஒரே உறுதிமொழி கொடுத்தால்போதும் என்றேன்.

இவ்வாக்குறுதியை அடைந்த பிறகு, நான்—இக் கிளர்ச்சியை நடத்துவதென்பது சரியல்ல; ஆனால், அரசாங்கமும் இதுவரை அப்படித்தான் கூறிவந்திருக்கிறது. பெரிய தலைவர்களும், மந்திரிகளும்கூட இந்தியை விரும்பாதவர்களிடத்தில் கட்டாயப்படுத்துவ தில்லை என்று கூறிவந்துள்ளார்கள். இன்றைக்கு நடைமுறையில் அப்படிக் காணவில்லை. பிரதமர் நேருவிடம் நிலைமையைத் தெளிவுபடுத்தினார்—முதலமைச்சர் காமராசர்.

நேரு அவர்கள்கூட காமராசரிடம் அப்படித்தான் கூறினாராம். 'நாங்கள் எத்தனையோ முறை இந்தியைக் கட்டாயப்படுத்துவதில்லை என்று கூறியுள்ளோமே' என்றாராம். முதலில் காமராசரைக் கண்டவுடனேயே நேரு புன்முறுவல் கொண்டு, கிண்டல் செய்தாராம். 'நாயக்கரும், தாங்களும் கட்டிப் புரளுகிறீர்கள் என்று கூறுகிறார்கள். அவ்விதமிருக்க, உங்கள் ஆட்சியிலேயே நாயக்கர் ஏதேதோ செய்யப்போகிறாராமே?' என்று கேட்டாராம். அதற்கு முதன் மந்திரி அவர்கள், 'எல்லாம் உங்களால் வருவதுதான்' என்றாராம். என்ன என்று கேட்டவுடன், 'இந்தியைக் கட்டாயப்படுத்துவதில்லை என்று பேசிவிட்டு, நடைமுறையில் கட்டாயப்படுத்துவதைப் பார்த்து ஆத்திரம் பொறுக்காமல் இது போன்ற கிளர்ச்சி எல்லாம் செய்கிறார்கள்' என்றாராம். பிறகுதான், 'நம்மிடமா குற்றம் உள்ளது? அப்படியானால் உடனே சென்று இனி கட்டாயப்படுத்தப்படாது என்பதாக அறிக்கை வெளியிடுங்கள்' என்றாராம். அதன்படிதான் காமராசர் அவர்களும் அறிக்கை வெளியிடும்படியாகியது.

அந்த அறிக்கையை வெளியிடுமுன் ஒரு சிலர் என்னிடம் கொண்டுவந்து காட்டி, இப்படி வெளியிட்டால் போதுமா என்று என் சம்மதம் கேட்டனர். நானும் அதைப் பார்த்து ஒருசில திருத்தங்களைச் சொல்லி, அதன்படி இருந்தால் போதுமென்றேன். அப்படியே திருத்தங்கள் செய்து அறிக்கையும் வெளியிடப்பட்டது.

நானும், வெளியிட்ட எனது அறிக்கையை அவர்களிடம் காட்டவும், அவர்கள் போராட்டத்தை விட்டுவிட்டதாகவே வெளியிடச் சொன்னார்கள். ஆனால், நான் அவ்வளவு ஏமாந்தவனல்லன்! எனவே, நான் தங்கள் அறிக்கையை நடைமுறையில் பார்க்கவேண்டும்;



www.thamizham.net - Free E book No 3041

அதுவரை போராட்டத்தைக் கைவிடுவதாக இல்லை; ஆனால், அதுவரை தற்காலிகமாக நிறுத்திவைத்துள்ளேன் என்பதாகத்தான் வெளியிடுவேன் என்பதாகக்கூறி, அதன்படியே போராட்டத்தை ஒத்திவைத்துள்ளதாக இன்றைய அறிக்கையில் வெளியிட்டுள்ளேன்.

இவ்வுண்மைகளை நம் நாட்டுப் பத்திரிகைகள் இருட்டடிப்புச் செய்கின்றன. 'காமராசர் எச்சரிக்கை' என்றும், 'நாயக்கரின் போராட்டம் வாபஸ்' என்றும் எழுதுகின்றன. நாட்டின் நலனுக்கென்று உண்மைச் செய்திகளை வெளியிடவேண்டும் என்ற அறிவாளிகளைக் கொண்ட பத்திரிகைகள் ஒன்றாவது கிடையாது. எல்லாம் பார்ப்பான் நலனுக்கே—பார்ப்பானுடைய ஆதரவிலேயே—பார்ப்பனர்களாலேயே நடத்தப்படுவதால் பித்தலாட்டமும், பொய்யும், புளுகும், லம்பாடித்தனமுமாகவே நடந்துகொள்கின்றன.

இதனால் நம் நாட்டின் சுதந்திரத்திற்கும் முன்னேற்றத்திற்கும் வழியின்றிப் போய் விடுகின்றது. இப் பத்திரிகைகள் அத்தனையும், நம் நாட்டை வடநாட்டவர்களுக்குக் காட்டிக்கொடுப்பவைகளாகத்தாம் உள்ளன.

[காஞ்சியில், 30-7-1955-ல் சொற்பொழிவு—'விடுதலை' 3-8-1955]

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

தமிழ்நாட்டில், வடநாட்டு மொழி எப்படித் தேசியமொழி ஆகும்? அதைப்போல், தமிழ்நாட்டில் வடவரின் ஆட்சிக் கொடி எப்படி ஆட்சிக் கொடி ஆகும்? தமிழ்நாட்டின் ஆட்சிக் கொடி வேறு; இன்றுள்ள வடவரின் ஆட்சிக் கொடி வேறு.

அது வடநாட்டுக்கு ஆட்சிக் கொடியாகலாம்; எங்களுக்கு அக்கொடி ஒரு கையகலத் துணிதானே? கை அகலக் கந்தல் துணிக்குள்ள மதிப்பைத்தானே நாங்கள் கொடுப்போம்!

பாரத மாதா கொடி, பாரத நாட்டின் கொடி என்றால் அது வடநாட்டைப் பொறுத்த மட்டும்தான். நாங்கள் அதற்கு மதிப்புக் கொடுக்கத் தேவையில்லை; அதனிடத்தில் நாணயமிருந்தால், உண்மையான நேர்மை இருந்தால் மதிப்புக்கொடுக்கத்தான் வேண்டும். அதன் அந்தஸ்து அதனிடத்து உள்ள உயரிய குணத்தைப் பொறுத்துத்தான் உள்ளது. ஏன்? மனிதனுக்கு அந்தஸ்து எப்படி உயருகிறது? அவனிடம் உள்ள நேர்மை, உயரிய குணம், அறிவு ஆண்மையைப் பொறுத்துத்தானே உள்ளது? இவைகள் இல்லையேல் அவன் வெறும் அடிமுட்டாள், மடையன் என்றுதானே பொருள்? இப்படித்தானே இன்றைய அரசாங்கக் கொடி? ஏன், இன்றைய ஆட்சியாளர்களே அப்படி உள்ளதைப் பார்க்கின்றோம்.

காங்கிரஸ்காரர்கள் என்றால் தாய்நாட்டுப் பற்று, தாய்மொழிப் பற்று, தன்மான உணர்ச்சி, சுயஅறிவு இவைகளை எல்லாம் தத்தம் செய்தாகவேண்டும்! நாம் கேட்பது நம்முடைய நாட்டை. நம் நாட்டில் அன்னிய மொழி கூடாது என்று நான் மறுக்கிறேன்.

[திருவல்லிக்கேணியில், 31-7-1955-ல் சொற்பொழிவு—'விடுதலை' 4-8-1955

## 7. கம்யூனிஸ்டுகளும், கொடி எரிப்பும்

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

கம்யூனிஸ்டுகளை எடுத்துக்கொள்வோம். உலகத்தில் அறிவு பிறக்குமிடம் அங்கேதான் உள்ளதென்பார்கள்; அறிவாளிகளை உற்பத்தி செய்யுமிடம் அதுவே என்பார்கள்.

ஆனால், நம் நாட்டுக் கம்யூனிஸ்டுகளைப் பொறுத்தமட்டிலும் அத்தனையும் பொய்யாகிவிட்டது. பெரும் அயோக்கியர்களையும், பித்தலாட்டக்காரர்களையும், கலகக்காரர்களையும், கொள்ளை, கொலையைத் தூண்டிவிடும் அராஜகச் செயல் கொண்டவர்களையும் கொண்டுள்ளது, இந் நாட்டுக் கம்யூனிஸ்டுக் கட்சி என்று மெய்ப்பிக்கிறார்கள். அப் பேர்ப் பட்டவர்களிடமிருந்து வரும் பதில், 'குமரன் காப்பாற்றிய கொடி அல்லவா? அதை எப்படி எரிப்பது?' என்கிறார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

குமரனுக்கும், இவர்களுக்கும் என்ன சம்பந்தமோ தெரியவில்லை. குமரன் இந்தக் கொடியினையா காப்பாற்றினார்? குமரன் காலத்தில் எந்த மூலையில் இவர்கள் கிடந்தார்களோ, தேடிப் பிடிக்கவும் முடியாதே? குமரன் காலத்தில் இந்தக் கொடி கர்ப்பத்தில் கூட இருந்திருக்காதே? சுதந்திரம் வரும் என்று நினைத்தது யார்? இந்தக் கொடி ஆட்சிக் கொடியாக வரும் என்று கனவிலும் நினைத்தவர் உண்டா? அப்படி இருக்க குமரனுக்கும், இந்தக் கொடிக்கும் என்ன சம்பந்தம்?

குமரன் ஒருவன் உயிர்விட்டுக் காப்பாற்றிய கொடி இதுவானால், தாளமுத்து—நடராசன் என்ற இருவர் உயிர் விட்டது, இந்திக் கிளர்ச்சிக்காக வல்லவா? குமரன் ஒரு ஆள்; எங்களில் இருவர்கள் பலியானோம்! இதை யார் இன்றைக்குக் கூறுகிறார்கள்?

குமரன் காப்பாற்றியதால் அந்தக் கொடியை எரிக்க முடியாதா? அந்தத் துணியென்ன அவ்வளவு அழுக்குப் படிந்த கந்தல் துணியா? மண்ணெண்ணெய் ஊற்றினால் இன்னும் சிறிது நேரம் கொழுந்து விட்டு எரிகிறது! அல்லது அந்தக் கொடி வாட்டர் புரூஃப் துணியைப் போல் ஃபயர் புரூஃப் துணியால் செய்யப்பட்டதா?

ஒரு உருண்டைக் களிமண் பிள்ளையார் ஆன சங்கதி தானே—முழத் துணி அரசியல் கொடி ஆனது? மண்ணுக்குள்ள மதிப்புத்தானே, பிள்ளையாருக்கு என்பதை நிரூபித்தோம். அதைப்போல், முழக் கந்தல் துணிக்குள்ள மதிப்புத்தான், உன் கொடிக்கு என்பதையும் நிரூபிக்கிறோம்.

ஆனால், பிள்ளையார் பெயரைக் கூறிச் சுரண்டி வாழும் உனக்கு பிள்ளையார் தெய்வமாகத் தோன்றலாம். அதைப்போல், இக் கொடியால் உனக்குச் சவுகரியம் அடைய வசதி இருப்பதனால் உனக்குப் பெரிதாகத் தோன்றலாம். குமரன் காத்து வளர்த்த பாரத மாதா கொடி என்று எது வேண்டுமானாலும் கூறலாம். அதைப்போலத்தானே, இராமாயணமும், இராமனும், சீதையும் மற்றும் பதிவிரதைகளும் கூறப்பட்டனர்? அவர்கள் வண்டவாளங்களே வெளிப்படுகையில் இக் கொடியைக் கொளுத்துவது பெரிய காரியமில்லை.

[திருவல்லிக்கேணியில், 31-7-1955-ல் சொற்பொழிவு—'விடுதலை' 5-8-1955]

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

நேரு அவர்கள், கடைசிக் கூட்டத்தில், கொடி கொளுத்துவதாகச் சொன்னவர்களைப் பற்றி மிகவும் துடுக்காகப் பேசி இருக்கிறார். அவருடைய பைத்தியக்காரத்தனமான காரியங்களில் இதுவும் ஒன்றாகும். கொடி எரிப்பதைப்பற்றிப் பேசினதின் கருத்தெல்லாம்—திராவிடக் கழகத்தாரை வையவேண்டும், மிரட்டவேண்டும் என்பதைத் தவிர, அதில் அவசியமோ, அறிவுடைமையோ என்ன இருக்கிறது?

கொடி கொளுத்துவதாகச் சொல்லப்பட்டவுடன் குறிப்பிட்ட தேதிக்குள்ளாகவே இவ் விஷயம் ஏதோ ஒரு அளவுக்குச் சமரசமாக முடிந்துபோன பிறகு—அதை மறுபடியும் சர்க்கார் தரப்பிலேயே ஏன் கிளப்பவேண்டும்? கிளப்புவது மாத்திரமல்லாமல் ஏன் பேச வேண்டும்? இது, கொளுத்துகிறதாகச் சொன்னவர்களைத் தூண்டிவிடுகிறதுபோலும், அவர்களுக்கு ஆத்திரமூட்டுவதுபோலும் நினைக்கிறது என்பதே தவிர, வேறு என்ன சொல்ல முடியும்? இதிலிருந்தே இந்த அரசாங்கத்தை ஏதாவது மிரட்டவேண்டுமானால் கொடி கொளுத்துகிறோம் என்று சொல்லுவதே போதுமானது என்று தெரிகிறதா, இல்லையா?

கொடியைப்பற்றிப் பிரமாதப்படுத்தியதும், அதை எரித்தால் உலகத்தையே சுட்டெரித்துவிடுவதாக வீரப் பிரதாபம் பேசுவதும் வெறும் வீண்பேச்சே தவிர, மற்றபடி கொடியை எரித்தால் இவர்களால் என்ன செய்துவிடமுடியும்? செய்வதற்கு இவர்கள் கையில் என்ன சரக்கு இருக்கிறது? அரசியல் சட்டத்திலாகட்டும், கிரிமினல் பீனல்கோடி

www.thamizham.net - Free E book No 3041

லாகட்டும்—கொடிக்கு என்ன மரியாதை இருக்கிறது? அதை எரிப்பதற்கு என்ன தண்டனை இருக்கிறது? அதைச் சொல்லாமல் சும்மா வீரப் பிரதாபம் பேசுவதில் பலன் என்ன? இன்ன காரியம் செய்தால் இன்ன குற்றமாகும் என்பது ஒருவனுக்குத் தெரிந்தால் தானே, அந்தக் காரியத்தை ஒருவன் செய்யாமல் இருக்கமுடியும்? வீண் பூச்சாண்டி காட்டுவதைக் கொண்டு யார் பயப்படுவார்கள்? அதிகாரம் தங்கள் கையில் இருக்கிறது; ஆதிக்கம் தங்கள் கையில் இருக்கிறது; ஆதலால் எதையும் பேசலாம் என்பதே தவிர, மற்றபடி இதில் என்ன நியாயமோ நேர்மையோ இருக்கிறது?

கொஞ்சநாளைக்கு முன்பு சட்டசபையில் பண்டித நேருவைப் போலவே ஒரு வீரர் பேசினார். அதாவது, 'வேறு எது செய்தாலும் நான் சும்மா இருப்பேன்; இராமனையோ, சீதையையோ குறைசொன்னால் கொன்றுபோடுவேன்' என்பதாகப் பேசினார். அதற்கும் பண்டித நேரு அவர்கள் பேச்சுக்கும் என்ன வித்தியாசம்?

உலகத்தையே படைத்ததாகக் கூறப்படும் கடவுள்களே எங்களிடம் அகப்பட்டுத் திண்டாடும் நேரத்தில் உன் அரசாங்கக் கந்தல் துணியாகிய கொடி எம் மாத்திரம்? அதன் யோக்கியதை தெரியாதவர்கள் அதைத் தலையில் தூக்கிக்கொண்டு ஆடலாம். அதன் பித்தலாட்டம் தெரியாத மூடர்கள் அதைத் தாயின் மணிக்கொடி—புனிதத் தன்மை கொண்ட பாரத மாதாவின் கொடி என்றெல்லாம் புகழலாம். அக் கொடியின் பெயரைக் கூறி வயிறு வளர்க்கும் சோம்பேறிகளும் எல்லா அயோக்கியத்தனங்களும் துணிந்து செய்ய முற்படுபவர்களும் அதை வானளாவப் புகழ்ந்து பேசலாம்.

ஆனால், அதன் யோக்கியதை என்ன என்று தெரிந்த நாங்கள், மற்றவர்களுக்கும் அதன் யோக்கியதையை வெளிப்படுத்த முற்படுகிறோம்; தாயின் மணிக்கொடியின் அந்தஸ்து-கந்தல் துணிக்குள்ள அந்தஸ்துகூடக் கிடையாது என்ற உண்மையை வெளிப்படுத்துகிறோம். ஒளிவு மறைவாகச் செய்வதாகக் கூறவில்லை; யாருக்கும் தெரியாமல் வீட்டுக்குள் கொளுத்துவதாக 'அண்டர் கிரவுண்ட்' வேலை செய்யவில்லை; பகிரங்கமாக முச் சந்திகளில் கொளுத்துகிறோம்; தெருக்களில் கொளுத்துகிறோம்; அவரவர் வீட்டின் முன் பலபேர் அறியக் கொளுத்துகிறோம் என்று அரசாங்கத்துக்குத் தெரிவித்தோம். தெரிந்தவுடன் உன்னால் என்ன செய்ய முடிந்தது?

கொடியைக் கொளுத்தினால், நாடே அழிந்தாலும்—கொடியைக் கொளுத்தவிட மாட்டேன் என்றாயே! பாட்னாவில் மாணவர்கள் எரித்தார்கள்; என்ன செய்தாய்? உன் வீரப் பிரதாபம் அப்போது எங்கே போனது? அப்படி இருக்க, நாங்கள் எரித்தவுடன் என்ன செய்துவிடுவாய்? உன்னையே எவனோ ஒருவன் அடிக்க வந்தான் என்று பத்திரிகையில் எல்லாம் செய்தி பறந்ததே! அவனை உன்னால் என்னசெய்ய முடிந்தது?

[திருச்சியில், 8-10-1955-ல் சொற்பொழிவு—'விடுதலை' 12-10-1955]

# 5. இராமன் பட எரிப்பு

## 1. நமது போராட்டம்

ஆத்திகப் பிரச்சாரமும், பக்திப் பிரச்சாரமும் செய்யும் பார்ப்பனத் தலைவர் திரு. இராஜாஜி அவர்கள் 'இராமன் கடவுள் அல்லன்; அவன் ஒரு வீரன்' என்று 'சக்ரவர்த்தித் திருமகனார்' என்ற தமது கட்டுரையில் தெளிவாக எழுதி இருக்கிறார்.

சங்கராச்சாரியாரும், 'இராமன் கடவுள் அல்லன்; ஓர் ஆதர்சன புருஷன்; மக்களுக்கு ஒழுக்கத்தைக் கற்பித்தவன்' என்று கூறி இருக்கிறார்.

www.thamizham.net - Free E book No 3041

காலஞ்சென்ற மறைமலை அடிகள், டி. கே. சி, திரு. வி. க, வி. பி. சுப்பிரமணிய பிள்ளை, பி. சிதம்பரம் பிள்ளை முதலிய புலவர்கள், ஆராய்ச்சியாளர்கள் 'இராமன் கடவுள் அல்லன்; இராமாயணம் கடவுள் கதை அல்ல' என்று கூறி இருக்கிறார்கள்.

வால்மீகியும் தனது இராமாயண இலக்கியத்தில்: 'இராமன் பெண்ணைக் கொன்றவன்; பெண்ணை மானபங்கப்படுத்தியவன்; மறைந்திருந்து எதிரிகளைக் கொன்றவன்; துரோக காரியங்களுக்கு உடந்தையாக இருந்தவன்' என்றெல்லாம் கூறி இருக்கிறார். இவ்வளவுதானா?

காந்தியாரே, 'நான் போற்றும் இராமன், இராமாயண இராமன் அல்ல, அல்ல' என்றும், 'காட்' (God), என்று சொல்லும்படியான உருவமற்ற, பெயர்ச்சொல் அல்லாத—அதாவது, ஒரு வஸ்து அல்லாத சர்வ சக்தியான இராமன்' என்றும் கூறி இருக்கிறார்.

ஆகவே, நானும், இராமாயணப் பாத்திரங்களில் ஒன்றான இராமாயண இராமனிடம், கடவுள் இலட்சணப்படி ஏதாவது கடவுள் தன்மையோ, ஒழுக்கமோ, நாணயமோ, சாதாரண அறிவோ இருக்கின்றதா என்றும்; இல்லாவிட்டாலும் துரோகம், வஞ்சகம், பேடித்தனம், பேராசை, மதுவருந்தல், புலால் உண்ணல், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுதல் முதலிய கூடாஒழுக்கக் குணங்கள் என்பவைகளாவது இல்லாமல் இருக்கிறதா என்றும் துருவித்துருவிப் பார்த்து, இல்லை என்ற முடிவுக்கே வந்திருக்கிறேன்.

ஆகவே, அப்படிப்பட்ட ஒருவனை மக்கள் கடவுளாக, வழிகாட்டியாக, பிரார்த்தனை, பக்தி செலுத்தத் தக்கவனாகக் கருதக்கூடாது என்பதற்காகவே – 'இராமாயண இராமனைக் கொளுத்துங்கள்' என்கிறேன்.

'இம் மாதிரிக் குணங்கள்' இல்லாத இராவணன் கொளுத்தப்பட்டான்; ஆண்டு தோறும் கொளுத்தப்படுகிறான்.

இந்த இராவணன்மீது சுமத்தப்படுகிற ஒருதலைப் பட்சமான—மறைமுகமான குற்றங்களைவிடப் பன்மடங்கு தெளிவான, பிரத்தியட்சமான குற்றங்கள் புரிந்த இராமனைப் பகுத்தறிவுப் பிரச்சாரத்திற்காக ஏன் கொளுத்தக்கூடாது?

['விடுதலை'–தலையங்கம்—27-7-1956]

## 2. நேர்மையான எதிர்ப்பு இல்லை

திராவிடர் கழகம் இராமன் உருவத்தை எரிப்பது பற்றி இன்றுவரை நேர்மையான–வாத முறைக்கு ஏற்ற எதிர்ப்பு ஒன்றுகூடக் காணப்படவில்லை.

நான் மதிக்கத்தக்க இரண்டு நபர்களிடமிருந்து இராமன் உருவம் கொளுத்தப்படக் கூடாது என்று ஒரு வேண்டுகோள்—அதாவது, ஒருவகை 'எதிர்ப்பும்'; கொடி கொளுத்துவதைத் தடை செய்யும்படி சர்க்காரைக் கேட்டுக்கொள்ளும் மற்றொரு வகை 'எதிர்ப்பு' ஒன்றும்–ஆக இரண்டு எதிர்ப்புகளைப் பத்திரிகையில் பார்த்தேன்.

இந்தக் கனவான்கள் எனது மரியாதைக்கு உரியவர்கள் ஆவார்கள். இவர்களில் எம்.எல்.ஏ. ஒருவர். இவர் மக்கள் பிரதிநிதி உரிமை கொண்டவர். மற்றொருவர் ஒரு மடாதிபதி ஆவார்கள். இவர்கள் இருவரும் யார் என்றால் வரதராஜுலு நாயுடு அவர்களும், குன்றக்குடி மடாதிபதிகளுமாவார்கள்.

டாக்டர் வரதராஜுலு நாயுடு அவர்களைப்போல் சட்டசபையில் இரு நூற்றுக்கு மேற்பட்ட பேர்கள் இருக்கிறார்கள். அவர்களில் டாக்டர் நாயுடுவைத் தவிர, மற்றவர்கள் யாரும் எந்தவித மறுப்பையும் முணுமுணுப்பையும் கூடக் காட்டவில்லை என்பது மாத்திரமல்லாமல், பல சட்டசபை மெம்பர்கள், பார்லிமெண்ட் மெம்பர்கள் ஆகியவர்கள் கமிட்டிக்

www.thamizham.net - Free E book No 3041

கூட்டத்திலிருந்து படம் கொளுத்துவதை ஆதரித்து இருக்கிறார்கள். மதப் பிரதிநிதிகளில் குன்றக்குடி சுவாமிகள் ஒருவர்தான் தனது எதிர்ப்பைக் காட்டி இருக்கிறாரே தவிர, மற்றபடி எந்த மடாதிபதியும் எரிப்பைப்பற்றி ஓர் ஆட்சேபணையோ, அதிருப்தியோகூடக் காட்ட வில்லை.

பிள்ளையார் உடைப்புக்கு வெளிப்படையாகக் காட்டப்பட்ட எதிர்ப்புகளில் 100-ல் ஒரு பங்குகூட இதில் காணப்படவில்லை. இராமன் என்கிற 'கடவுளால்' சொந்தத்தில் பயன்பெறும் பார்ப்பனர்களில் எவரும்கூட வாய்திறக்கவில்லை.

டாக்டர் நாயுடுவின் எதிர்ப்புக் காரணங்கள் எவராலும் மதிக்கத் தகுதியற்றதாகும். மற்றும், அந்த எதிர்ப்பில் அரசியல் வாசனைதான் காணப்படுகிறதேயன்றி, சீர்திருத்த இயல் உணர்ச்சி காணப்படவில்லை.

மடாதிபதி அடிகளாரும் ஒரு மடத்தின் அல்லது மதத்தின் அதிபதியாக, பிரதிநிதியாக இருப்பவர். இப்படிப்பட்ட சீர்திருத்தக் காரியத்திற்கு அரசாங்கத்தை நாடினால் மதம், கடவுள் காப்பாற்றப்பட்டுவிடுமா என்பதும் எனக்கு விளங்கவில்லை. அவரது எதிர்ப்பில் தைரியமோ, உண்மையோ இருந்தால் மக்களை அணுகவேண்டியது பயனளிக்கும் காரியமாகும்.

நான், இராமன் படத்தை எரிக்க ஆசைப்படுவதானது—இராமன் கடவுள் என்று கருதப்படுவது ஒழியவேண்டும் என்கின்ற கருத்தின்மீது அல்லாமல், வேறு ஒரு உள் கருத்தும் கொண்டு அல்ல. அப்படி ஏதாவது இருப்பதாக எதிர்ப்பவர், மற்றும் யாரும் இதுவரை சொல்லவில்லை.

நான் ஒரு 'புரட்சிகரமான' சமுதாய சீர்திருத்தவாதி. அதற்கே என் உடல், பொருளை ஒப்படைத்துவிட்டு, ஆவியையும் ஒப்படைக்க வாய்ப்புக்காகக் காத்திருக்கிறேன். அதோடு கூடவே, என் தொண்டுக்கு அறிவையும் ஆராய்ச்சியையுமே அடிப்படையாய்க் கொண்டு இருக்கிறேனே அல்லாமல், மதவாதிகள், மதத் தலைவர்கள்போல் வெறும் நம்பிக்கையையும், மூட மக்கள் மரியாதையையும், சர்க்காரிடம் தஞ்சமடைவதையும் அல்ல.

என்னோடு போராட்டத்திற்கோ, எதிர்ப்புக்கோ வருபவர்கள் தங்கள் உடல், பொருள், ஆவி விஷயங்களில் எப்படி நடந்துகொண்டாலும்—அறிவு ஆராய்ச்சித் தன்மையைச் சிறிதளவாவது ஆதாரமாய்க்கொண்டு பிரவேசிக்க வேண்டியது நேர்மையான எதிர்ப்புக்கும் பண்புக்கும் ஏற்ற காரியமாகும்.

நான் இராமன் படத்தை (உருவத்தை)க் கொளுத்த வேண்டுமென்பதற்கு ஏராளமான இராமன் சம்பந்தப்பட்ட நூல்களை ஒரு தடவைக்கு 100 தடவை படித்து ஆராய்ந்து பார்த்ததோடு, சுமார் 30, 40 ஆண்டு ஆராய்ச்சியில் கழித்துவிட்டு, ஆயிரக்கணக்கான கூட்டங்களில்—கோடிக்கணக்கான மக்களிடம் பேசி மெய்ப்பித்துவிட்டு, பல புலவர்களையும், கடவுள் நம்பிக்கையுள்ளவர்கள் என்பவர்களையும் ஏற்கச் செய்துவிட்ட பிறகுதான் கொளுத்தச் செய்கிறேன்.

மற்றும், 1922-ல் காங்கிரஸ் மாநாட்டில் இராமாயணத்தைக் கொளுத்த வேண்டுமென்று சொல்லிவிட்டு, 1925 ஆம் ஆண்டு முதல் இராமாயண ஆராய்ச்சி என்னும் பேரால் அனேகக் கட்டுரைகளை எனது 'குடிஅரசு' 'பகுத்தறிவு', 'திராவிடன்', 'விடுதலை' ஆகிய வார, மாத, தினசரி பத்திரிகைகளில் வெளியாக்கி, கோடிக்கணக்கான மக்களைப் படிக்கச் செய்து, 4-அணா, 2-அணா, 1-அணா, ½-அணா விலையுள்ள புத்தகங்களாக 10 ஆயிரம், 20 ஆயிரம் கணக்கில் வெளியிட்டு, மக்களிடம் விற்றுவிட்டுக் கொளுத்த வந்திருக்கிறேன்.

மற்றும், எரிப்பது பற்றி 20 ஆண்டுகளுக்கு முன்பாகவே சேதி வெளியிட்டும், பல இடங்களில் எரிக்கப்பட்டும் இருக்கின்றன.

www.thamizham.net - Free E book No 3041

இவ்வளவு ஆதாரத்தின் மீதும், பலத்தின் மீதும், ஆமோதிப்பின் மீதும் நடத்தப் படுகிற ஒரு காரியத்தை ஒரே வார்த்தையில் 'வேண்டாம்' என்றும், 'தடை செய்' என்றும் பொறுப்புள்ள மரியாதையுள்ள இரு பெரியார்கள் சொல்லிவிடுவது என்றால், இதில் எப்படி நம் கருத்தைக் கூறாமல் இருக்க முடியும்? மற்று வேறு யாராவது இருந்தால் நான் இவ்வளவு இலட்சியம் செய்யமாட்டேன்.

நான் இராமனைக் கொளுத்த, பல காரணங்கள் ஆதாரத்துடன் சொல்லிவிட்டுக் கொளுத்துகிறேன். அந்த ஆதாரங்களை இதுவரை யாரும் மறுத்துக் கூறவில்லை.

டாக்டர் நாயுடு அவர்களும், 'சுவாமி'களும் கொளுத்துவதில் தங்களுக்குச் சிறிதாவது அதிருப்தி இருக்குமானால், அதை அவர்கள் 'வேண்டாம்' என்றும், 'தடை செய்' என்றும் எழுதுவதன் மூலம் நீதியாக நடந்துகொண்டவர்களாக ஆகிவிட மாட்டார்கள்.

என் உள்கருத்தையறிந்து நான் சொல்லுங் காரணங்களை,—காட்டும் ஆதாரங்களை எடுத்துத் தலைப்பில் காட்டி, அதை மறுத்து அல்லது சமாதானம் சொல்லி—'கொளுத்த வேண்டாம்; கொளுத்துவது தப்பு' என்று சொல்லுவது எதிர்ப்புப் பண்பாகும்; நமக்கும் உதவி செய்ததாகும். அப்படியில்லாமல் 'மக்கள் மனம் புண்படும்' என்பது, மக்கள் பிரதிநிதியாக வேண்டும் என்பவருக்குத்தான் கவலைப்படத் தக்கதாகுமே தவிர, மக்களை மூடத்தனத்தில் இருந்து—அதனால் ஏற்பட்ட இழிவிலிருந்து வெளியேற்ற வேண்டு மென்பவனுக்கு 'மக்கள் மனம் புண்படுவது' என்பது மதிக்கத் தக்கதாகுமா?

போகட்டும்; டாக்டர் நாயுடு அவர்களுக்காவது என்னளவு ஆராய்ச்சி இருக்க அவசிய மிருக்காது. அவர் முதலாவதாக ஓர் அரசியல்வாதி; இரண்டாவதுதான் அவருக்குச் சமுதாயம். ஆனால், 'சுவாமி'கள் அப்படியல்லர்; அவர்கள் எவ்வளவோ நூல்கள், மத சம்பந்தமான புராண இதிகாசங்கள், மக்கள் வரலாறுகள் ஆகியவைகளைப் படித்து ஆராய்ச்சி செய்து, உண்மை கண்டிருக்கவேண்டியவராவார்கள். அவர்கள் உண்மையில் சமய மக்களால் அந்தப்படி கருதப்படத் தக்கவர் ஆவார். அப்படிப்பட்ட அவர்கள் நான் கூறிவருகிற காரணங்கள் ஒன்றுக்குக் கூடச் சிறிதளவு சமாதானமும் கூறாமல், 'கொளுத்துவது தவறு' என்று கூறினால் அது எப்படி மதிக்கத் தக்கதாகும்? இப்போதும் சொல்லுகிறேன் :

'இராமன் கதை நடந்ததல்ல; சரித்திர சம்பந்தமானதல்ல; நீதிக்கோ படிப்பினைக்கோ ஏற்றதல்ல. ஆரியர்களுக்கு—பார்ப்பனர்களுக்குத் திராவிடர்கள் மீது (தென் இந்திய மக்கள்மீது) ஏற்பட்ட துவேஷம், பொறாமை, வஞ்சக எண்ணம் ஆகியவை பெற்ற பிள்ளைதான் இராமாயணக் கதை' என்று சொல்லுகிறேன். இராமாயணம் முதலிய ஆதாரங்களும், இராமன் முதலிய கடவுள்களுமேதான் டாக்டர் நாயுடுகாரு, 'சுவாமி'கள், நான் உட்பட அனேக கோடித் தென் இந்தியப் பழங்குடி மக்கள்—கீழ்சாதியாய், இழி பிறப்பாய் ஆக்கப்பட்டதோடு, 3000 ஆண்டுகளாக இன்னும் இருக்கச் செய்து வருவதற்குக் காரணமாகும்.

இதை ஒழிக்க டாக்டர் நாயுடு அவர்களும், 'சுவாமி'களும் செய்த, செய்துவருகிற, செய்யப்போகிற காரியங்கள் யாவை?

பார்ப்பான் அயோக்கியன் என்று சொல்லுவது மாத்திரம் போதுமா? ரோஷம், மானம் இல்லாதவனை வைவதற்கும், செத்த பாம்பை அடிப்பதற்கும் என்ன பிரமாதமான பேதம் இருக்க முடியும்?

இப்பவும் காலம் தாண்டிவிடவில்லை. இராமன் சங்கதி எப்படியோ போகட்டும். இதுபோன்ற மற்ற 'கடவுள்'களுக்காவது இந்தக் கதி வராமல் இருக்க விரும்புகிறவர் களானால் அவற்றின் ஆதாரங்களில் இருந்து—அதுவும் இப்பெரியார்கள் மதிக்கும் ஆதாரங்

www.thamizham.net - Free E book No 3041

களிலிருந்து 'இக் கடவுள்கள்' ஒழிக்கப்படவேண்டும் என்பதற்கு நான் எடுத்துக்காட்டுவதை ஆதாரக் காரணங்களோடு மறுத்துவிட்டு, 'உடைக்கவேண்டாம்; கொளுத்தவேண்டாம்' என்று கட்டளை இடட்டும் என்று பணிவாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

அப்படி இல்லாவிட்டால், நண்பர் ஆச்சாரியாருக்கும், அணுகுண்டு 'சாமி'களுக்கும் 'மித்திரன்' 'இந்து' 'தினமணி' 'கல்கி' 'ஆனந்தவிகடன்', மகாலிங்கய்யர்களுக்கும், இப் பெரியார்களுக்கும் என்ன பேதம் என்று கேட்கிறேன்.

நான் தவறு செய்யலாம்; என் ஆராய்ச்சியும் 'குருடன் யானை கண்ட காட்சிபோல்' என்னைத் தவறான வழியில் இழுத்துவிட்டிருக்கலாம். அப்படி இருந்தாலும் அதில் அதிசய மிருக்காது. ஆனால், அதைத் திருத்துவது எப்படி? என்னைக் குறைகூறுவதும், என்னைத் தண்டிக்கச் செய்வதும் திருத்துவதாகிவிடுமா? காரியத்தை நிறுத்திவிடுமா? 1956 ஆம் ஆண்டில் இவை எளிதில் நடக்கக்கூடிய காரியமாகிவிடுமா? உண்மையில் பெருமையும், போற்றுதல் மரியாதையுமுள்ள இவர்கள் இப்படி நடந்துகொண்டால், அரசியல் பிரதிநிதித்துவத்திற்கும், சமயத் தலைமைக்கும் அறிஞர்களிடம் எப்படிப் பாராட்டுதலும் போற்றுதலும் கிடைக்கமுடியும்?

எனக்குக் கெட்டபெயர் வருவது பற்றியோ, எனக்குத் தண்டனை கிடைப்பது பற்றியோ, என் ஆவி பிரிவது பற்றியோ நான் சிறிதாவது இலட்சியம் செய்வதாயிருந்திருந்தால் நான் இந்தக் காரியத்தில் பிரவேசித்து இருக்கமாட்டேன். இப்படி நடந்து கொண்டவர்கள் கதியும், சரித்திரமும் பெரியோர்களிடம் கேட்டுத் தெரிந்திருக்கிறேன் என்பதோடு, என்னைத் 'திருத்த' அறிவும், ஆராய்ச்சியும், அன்பும்தான் நல்ல வழியே யொழிய, இவை பயன்படாதது என்பதையும் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

என் வாழ்நாளில் தமிழர்களுக்கு நீண்டநாளாக இருந்து வருகிற காட்டுமிராண்டித் தன்மையான 'கடவுள்—சமய'ப்பற்றும், பெரும்அளவுக்கு இருந்துவரும் 'இழிநிலை'யும் ஆகியவைகளில் கடுகளவாவது குறைந்தாலும் நான் வெற்றி பெற்றவனாவேன்.

மன்னித்தருள்க!

['விடுதலை'—தலையங்கம்—30-7-1956]

## 3. 'இராமனை'க் கொளுத்தியது குற்றமல்ல

'இராமன் கடவுள் அல்லன், இராமாயணக் கதையின் பாத்திரமான இராமன் ஒழுக்க முள்ள ஒரு யோக்கியனல்லன்' எனக் கருதுபவர்கள் யாரும், நாட்டு நன்மையை, சமுதாய சுயமரியாதையைக் கருதுபவர்கள் யாரும் இராமன் படத்தைக் கொளுத்தலாம்.

இந்த உரிமையை மக்களுக்கு உணர்த்துவதற்காகத்தான் ஆகஸ்ட் 1-ந்தேதி இராமன் படம் கொளுத்தும் கிளர்ச்சி நாளாகக் கொண்டாடத் தமிழ்நாட்டு மக்கள் கேட்டுக் கொள்ளப்பட்டார்கள்.

அரசாங்கமும் நல்ல வாய்ப்பாக மக்கள் உரிமையில் பிரவேசிக்காமல் இராமன் படம் கொளுத்துவதன் பயனாய்க் குழப்பம், கலவரம், பலாத்காரம் ஏற்படக்கூடாது என்று கருதி, பொதுக் கூட்டத்தில் கொளுத்த விடக்கூடாது என்று கருதி, பொதுக் கூட்டத்திற்கும் அது சம்பந்தமான ஊர்வலத்திற்கும் தடை விதித்தது.

என்றாலும், உரிமையுள்ள காரியம் நடைபெற்றால் கலவரம் உண்டாகும் என்று கருதினால், அதற்கு அரசாங்கம் பாதுகாப்புச் செய்யவேண்டுமே ஒழிய, காரியத்தைத் தடை செய்ய அல்ல என்பது என் கருத்து. இன்றும், மதுரை முதலிய இடங்களில் சமணர் கழுவேற்றப்பட்ட உற்சவம் ஆண்டுக்கு ஒரு முறை நடக்கின்றது. மற்றும், தமிழ்நாட்டில் நூற்றுக்கணக்கான சைவக் கோயில்கள் உள்ள இடங்களில் சூரசம்மார உற்சவங்கள் நடை

www.thamizham.net - Free E book No 3041

பெறுகின்றன. இராவணனை இழிவுபடுத்தி, இராவண பக்தர்கள் மனம் புண்படும்படி தினமும் பல காலட்சேபங்களும், பல பாட்டுக் கச்சேரிகளும், பல தெருக்கூத்துகளும், 'டிராமா'க்களும் நடைபெறுகின்றன.

இவை குறித்து அனேகருக்கு வெகு நாட்களாகவே மனவேதனை இருந்துவந்தும், அவற்றைச் சரியானபடி வெளியாக்கித் தடுக்க இதுவரை மக்களுக்கு வாய்ப்பு இல்லாமல் இருந்துவந்தது. காரணம் என்னவென்றால், வெள்ளை ஆட்சி இருந்ததாலும், அந்த ஆட்சியில் பார்ப்பனர்களே ஆதிக்கக்காரர்களாக இருந்ததாலும் இது விஷயத்தில் எளிதில் நியாயம் பெறமுடியாமல் 'மாமூல்' என்ற சாக்கில் தடைப்படுத்தப்பட்டு இருந்தது. இப்போது சுயராச்சியம், மக்கள் ஆட்சி என்றெல்லாம் சொல்லப்படுகிறது. இந்தப் பெயரை வைத்துக்கொண்டு கோவில் நுழைவு, சமபந்தி ஏற்பட்டு, மற்றும் அரசர்கள், ஜமீன்தார்கள் ஒழிக்கப்பட்டவை முதலிய—அனேக ஆயிரக்கணக்கான, பல நூற்றுக்கணக்கான ஆண்டுகள் இருந்துவந்த 'மாமூல்' காரியங்களும், 'மாமூல்' கருத்துக்களும், நடப்புகளும் மாற்றமடைந்துவிட்டன.

அப்படி இருக்க, இந்த நாட்டைத் தவிர, உலகில் வேறு எங்குமே நடப்பில், கருத்தில் இல்லாத காட்டுமிராண்டித் தன்மை கொண்ட புராணக் கதைகளை ஆதாரமாய்க் கொண்டு, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நடந்த காரியங்கள் நீக்கமுடியாத மாமூலாகிவிடுமா? தீண்டாமையை ஒழித்ததும், 'தீண்டப்படாதவன் சமைக்கும் சாப்பாட்டைப் பார்ப்பான் சாப்பிட்டுத்தான் தீரவேண்டும்—இல்லாவிட்டால் வெளியே போ' என்பதும் ஒருவர் மனத்தையும் புண்படுத்தவில்லை என்றும், புண்படுத்தினாலும் கவலை இல்லை என்றும் கூறும்போது—கடவுள் தன்மை ஏற்படாத காகிதத்தை, பொம்மையைக் கொளுத்தினால் யாரோ ஒருசிலர் மனம் புண்படும் என்று தடங்கல் காரியம் செய்வதை அனுமதிக்கக்கூடாது என்பதுதான் எனது கருத்தே ஒழிய வேறில்லை. அதனால்தான், சர்க்கார் உத்தரவு மீற நேரிட்டது. காரியம் வெற்றிகரமாய் முடிந்துவிட்டது. தமிழ்நாடு முழுவதும் 1-ந்தேதி மாத்திரம் 4000, 5000 பேர்கள் தடையை மீறி, இராமன் படக் காகிதத்தைக் கொளுத்த முன்வந்து இருக்கிறார்கள். இதில் போலீசார் தங்களால் ஆனவரை கழித்து, ஒரு 1000, 1500 பேர்களை மட்டும் கைது செய்து, அதிலும் பலரை 'ஸ்டேஷனு'க்கு அழைத்துப்போய் ரிக்கார்டு செய்யாமல் பலரை விரட்டிவிட்டு, ஒரு சிலரை மாத்திரம் 'லாக்கப்'பில் வைத்திருப்பதுமான திருவிளையாடல்கள் செய்திருக்கிறார்கள்.

31-ந்தேதி அன்று, நான்,—போலீசார் யாரையும் பிடிக்காமல் பலாத்காரம் உபயோகித்து அடித்து விரட்டி, 'ஒருவரும் கொளுத்த முன்வரவில்லை; சட்டம் மீறவில்லை' என்று கணக்குக் காட்டிவிடுவார்கள் என்று கருதியே (அந்தப்படி சர்க்கார் உத்தரவு செய்திருப்பதாகச் சேதி வந்ததாலேயே)—'உங்களுக்கு விருப்பமானால் உத்தரவு அமுலில் இருக்கும் நாள்வரை கொளுத்தலாம்' என்று குறிப்பிட்டிருந்தேன்.

நான் எண்ணியதற்கு விரோதமாக நாடு முழுவதும்—சிறப்பாகச் சென்னையிலும், போலீசார் சிலரை விட்டுவிட்ட போதிலும் மிகவும் நேர்மையாக நடந்து 1000 பேர்கள் போல—நகரில் 100 பேர்கள்போலப் பிடித்து 'ரிக்கார்டு' செய்துவிட்டார்கள். பல இடங்களில் படம் கொளுத்தப்பட்டுவிட்டதாகவும், அதற்கு அதிக போலீஸ் ஒன்றும் தடபுடல் செய்யாமல் பெருந்தன்மையாக நடந்துகொண்டதாகவும் சேதி வந்தது; இதை ஒருவாறு அறிந்த உடனே எனக்கு இனியும் மற்ற நாட்களுக்குத் தொடரவேண்டிய அவசியமில்லை என்று கருதி, திடீர் 'பிரேக்' போட்ட மாதிரி, நான் கைதான உடனே அறிக்கை எழுதி, மணியம்மையிடம் கொடுத்துவிட்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டுவிட்டேன். 31-ந்தேதி அறிக்கையினால், பல தோழர்கள் நாளை மறுநாள் கொளுத்தலாம் என்று கருதி இருப்பார்கள். உதாரணமாக, சென்னையில் இருந்து பெருங்கூட்டம் வந்து, 'இன்றைக்கு மாத்திரம் அனுமதியுங்கள்' என்று பெருந்தொல்லை கொடுக்கிறார்கள் என்றாலும் அவர்களது ஏமாற்றத்திற்கு வருந்தி சமாதானம் சொல்லிச் சரிப்படுத்தினேன்.



www.thamizham.net - Free E book No 3041

7, 8, 10 நாட்களுக்கு இயக்கம் நடக்கும் என்றும் தினம் 500, 1000 பேராவது பிடிபட வேண்டும் என்றும் கருதிப் பலர் ஏமாந்து விட்டார்கள் என்பது உண்மைதான்.

இதுமாத்திரமல்ல; என்னையும் நண்பர் குருசாமியையும் கைது செய்து அழைத்துப் போய் வைத்து, நாங்களும் புத்தகம், படுக்கை முதலியவைகளுடன் தயாராய் இருந்தும், திடீரென்று, 'இருட்டாய் விட்டது; நீங்கள் வீட்டிற்குப் போகலாம்' என்று கமிஷனர் அவர்கள் எங்களுக்குச் சொன்னபோது நாங்கள் எவ்வளவு ஏமாற்ற மடைந்து இருப்போம்? இந்தப் பேச்சைக் கேட்டவுடன், ஏதோ 'கிரிமினல்' குற்றத்திற்குத் திடீரென்று எனக்கு ஓர் 'அரஸ்ட்' வந்ததைப் பார்த்தால் எப்படி என் மனம் பக்கென்று திகைப்பும், பய உணர்ச்சியும் ஏற்படுமோ அதுபோலத் திடீரென்று ஆய்விட்டது.

'என்ன அய்யா! இப்படி வீட்டிற்குப்போ என்கிறீர்களே; எனக்குப் புரியவில்லை; இப்படிக் கேட்பதற்கு மன்னிக்கவேண்டும்' என்று கமிஷனர் அவர்களைக் கேட்டேன். அவர், 'பெரியவாளை எல்லாம் இவ்வளவுதான் செய்ய முடியும்' என்றார்; எனக்கு வெட்கமாகப் போய்விட்டது. இந்த என் ஏமாற்றம் எப்படியோ இருக்கட்டும்; நாளையதினம் போலீஸ் அதிகாரிகள், பிடித்தவர்களையெல்லாம் திடீரென்று விடுதலை செய்து விட்டார் களானால் பிடிபட்டவர்கள் அத்தனைபேரும், 'ஏதோ ஒரு மாதம் அல்லது 15 நாட்கள் குறைந்தது இந்த உத்தரவு அமுலில் இருக்கும் வரையிலாவது ஜெயிலில் இருக்கலாம் என்று வந்தோமே; இப்படி நம்மை அவமானப்படுத்துவதுபோல் விரட்டி விட்டார்களே; இனி எப்படி வெளியில் தலைகாட்டுவது?' என்று எவ்வளவோ ஏமாற்றமும் வேதனையும் அடை வார்கள். பொதுக் கிளர்ச்சி விழாவில் இது சகஜம். எனக்கு எத்தனையோ தடவை மக்கள் பரிகாசம் செய்யும்படியான அவமானமே ஏற்பட்டிருக்கிறது. அதற்கெல்லாம் நான் பயப் பட்டால் மேலே கிளர்ச்சி நடக்கவே நடக்காது. ஆதலால், யாரும் ஏமாற்ற மடைந்ததாகக் கருதக்கூடாது என்று வேண்டிக் கொள்கிறேன்.

என் 'பொதுநலக் கிளர்ச்சி வியாபாரம்' எல்லாம், 'குறைந்த செலவில் (தியாகத்தில்) பெரிய இலாபம் (வெற்றி)' என்ற கொள்கையைக் கொண்டது. ஆதலால், பொதுமக்கள், போலீஸ், அரசாங்கங்கள், நாம் ஆகிய எல்லோரும்—இந் நிகழ்ச்சி அதிகச் செலவு, தொல்லை இல்லாமல் வெற்றிகரமாய் முடிந்திருப்பது பாராட்டத்தக்கதேயாகும்.

எதிரிகள் வேதனைப்படுவார்கள். அது இயற்கைதானே! அவர்கள் மகிழ்ச்சி அடைய வேண்டுமானால் நான் சாகவேண்டும் அல்லது எதிலாவது நான் தோல்வி அடைய வேண்டும். அது அவர்கள் அவசரத்துக்கு ஏற்றபடியோ, எளிதிலோ நடக்கமாட்டேன் என் கிறது; அதற்கு நாம் என்ன செய்யலாம்!

கடைசியாக, இன்றுமுதல் இனி யாரும் இந்தக் கிளர்ச்சி விஷயமாய் 'தடை உத்தரவு நான் வரையில்' என்ற எனது வேண்டுகோள்படி யாதொரு நடவடிக்கையும் செய்யாமல் இருக்க வேண்டுமென்று வேண்டிக் கொள்கிறேன்.

மறு கிளர்ச்சியை எதிர் பாருங்கள்.

இந்த நல்ல முடிவுக்கு உதவி செய்த எல்லோருக்கும் எனது நன்றி. வணக்கம்.

['விடுதலை'—அறிக்கை—2-8-1956]

## 4. இராமன் பட எரிப்பு ஏன்?

நான் ஏன் இராமனை எரிக்கச் சொன்னேன்? நான் ஏன் பிள்ளையாரை உடைக்கச் சொன்னேன்? இதன் காரணம் 100-க்கு 90, பிள்ளையார் கடவுள் அல்ல என்பதாக இருந் தாலும், அதன் பிறவிக் கதைகள் கடவுள் தன்மைக்கு ஏற்றதல்ல என்பதோடு, அந்தக் கதைகள் காட்டுமிராண்டிகள் கற்பனை போன்றதாகும் என்பது விளக்கப்படவேயாகும்.

www.thamizham.net - Free E book No 3041

பொதுவாக, பிள்ளையாரை, நம் நாட்டில் இராமனை வணங்குபவர்களைவிட அதிகமான மக்கள் வணங்குகிறார்கள் என்றாலும், பிள்ளையாரிடம் பொய், வஞ்சகம், சாதி ஆணவம், ஒரு சாதியைக் கெடுத்து அழித்து மற்றொரு சாதியைக் காப்பாற்றவேண்டும் என்கின்ற தான வகுப்புணர்ச்சி முதலியவை மிகமிகக் குறைவு; அருமையுமாகும். ஆனால், இராமன் அப்படி அல்லன்; அவனைப்பற்றிய கதைகள் பல என்றாலும் அத்தனையின்படியும் இராமன் பிறவியில் இருந்து இறப்புவரை நேர்மைக்கும், ஒழுக்கத்திற்கும், உண்மைக்கும் நல்ல மனிதன் தன்மைக்கும் மாறான—கூடாத தன்மையைக் கொண்டவனாகச் சித்திரிக்கப் பட்டிருக்கிறான்.

இன்றைய தினம் எனது சமுதாயத் தொண்டின் முதலானதும்—முக்கியமானதுமான சாதி ஒழிப்பை எடுத்துக்கொண்டால் இராமனின் முதல் செய்கையும் கடைசிச் செய்கையும் சாதியைக் காப்பாற்றப் பிறந்து, சாதியைக் காப்பாற்றிவிட்டுச் செத்ததேயாகும். நம்நாட்டில் சமுதாயத் திருத்த வேலையோ, பகுத்தறிவுப் பிரச்சார வேலையோ எந்த ஒரு சிறிய அளவுக்கு நடக்கவேண்டுமானாலும் முதல் இலட்சியச் செய்கையாக, ஸ்லோகச் சொல் காரியமாக, துவக்கக் குறியாக இராமாயணம்—இராமன் அழிந்து ஒழிக்கப்பட்டு ஆக வேண்டும். இராமாயணப் பிரச்சாரம் ஒழுக்கக் கேட்டுப் (Criminal and Immoral) பிரச்சாரம் ஆகும். எவ்வளவுதான் மத மவுடீகம் மக்களுக்கு இருந்தாலும், ஒரு மனிதன் தன்னைப் பெற்ற தாய் இரண்டணா ரேட்டுக் குச்சுக்காரியாக இருந்து, தெருவில் போகிற சின்னப் பையன்களையெல்லாம் கையைப் பிடித்து இழுத்தால், மகன்காரனாகிய மனிதன் இழுக்கப்பட்ட பையனைப் பார்த்து, 'ஏண்டா, எங்கம்மா இழுத்தால் திமிறிகிட்டு ஓடப் பார்க்கிறாய்?' என்று பையனை அடித்தால் அவன் தாய்ப் பற்று, தாய் அன்பு, தாய் அபிமானம், தாய் பக்தி கொண்டவனாக ஆகிவிடுவானா?

உலகின் சாதாரண மக்களும் அந்த மகனைப்பற்றி என்ன கருதுவார்கள் என்பதைச் சிறிது சிந்தித்துப் பார்த்தால், இராம பக்தர்களான தமிழர்களுக்கு நான் இராமனை எரிக்கும் தன்மையின் உண்மை விளங்காமல் போகாது. இந்த மாதிரி 'தியாகிகள்'-அதாவது உயிருக்குத் துணிந்து உயிரினும் சிறந்ததான 'மானத்தை'த் துறந்து (மற்றவற்றைத் துறந்தது என்பது மிக மிக அற்பமேயாகும்) மக்கள் பழியை ஏற்று, இக் காரியத்தைச் செய்யக்கூடியவர்கள் எளிதில் ஏற்படமாட்டார்கள்; ஏற்பட்டாலும் முன்வரமாட்டார்கள்; முன்வந்தாலும் மக்கள் அனுமதிக்கமாட்டார்கள்; அனுமதித்தால் மாற்றார்கள் வாழ விட மாட்டார்கள். தமிழனுக்கு இன்று தன்மானம்தான் தேவை. இது தாயினும் (மதத்தினும்) உயிரினும் (கடவுளினும்) சிறந்ததாகும். தாயை வெறுத்தாவது உயிரைவிட்டாவது மானத்தை, மனிதத் தன்மையை, ஒழுக்கத்தைக் காப்பாற்றவே இராமனைக் கொளுத்தச் சொன்னேன், சொல்கிறேன்.

['விடுதலை'—தலையங்கம்—4-8-1956]

# 6. இழிவு நீக்க அழிப்பு

## 1. பிராமணாள் அழிப்பு

சென்னை 'இராஜ்ய ஆட்சியாளருக்கும்', கவர்னர் பெருமான் அவர்களுக்கும், சென்னை மாநிலத் திராவிடர் கழகத் தலைவர் தாழ்மையோடு தெரிவித்துக்கொள்வதாவது:

நம் நாட்டில் இருந்துவரும் சாதிப் பிரிவுகள் ஒழிந்து, மக்கள் யாவரும் சாதிப் பிரிவற்ற ஒரே சமுதாயமாக இருக்கவேண்டும் என்பது அரசாங்கத்தார் இலட்சியமாகவும், முயற்சியாகவும் இருந்துவரும் என்கின்ற எண்ணத்தின்மீதே, இந்த வேண்டுகோளைத் தெரிவித் துக்கொள்கிறேன்.

www.thamizham.net - Free E book No 3041

நம் நாட்டில் இந்தியப் பிரதமரும், தமிழ்நாடு முதலமைச்சரும் ஆகிய இரு கனவான்களும் சாதிப் பிரிவு ஒழிக்கப்பட வேண்டுமென்று பல சந்தர்ப்பங்களில் சொல்லி வந்திருக்கிறார்கள். உத்தியோகங்களில் 'குவார்ட்டர்லி சிவில் லிஸ்ட்' என்பதாக நீண்டகாலமாய்ப் பதிப்பித்துவந்த புத்தகத்தில், ஒவ்வொரு உத்தியோகஸ்தர்களுடைய சாதியைக் காட்டும் குறிப்பை இப்போது எடுத்துவிட்டார்கள்.

பல ஆதாரங்களிலும் சாதிகளைக் காட்டக்கூடாது என்று அரசாங்கத்தால் திட்டப்படுத்தப்பட்டிருக்கிறது.

சாதியின் பெயரால் பள்ளிக்கூடங்கள் இருக்கக்கூடாது என்றும், அப்படி ஏற்படுமானால் அதற்கு அனுமதியும் உவித்தொகையும் கொடுக்கப்படமாட்டாது என்றும் அரசாங்கத்தாரால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. சில விஷயங்களில் சாதிமட்டுமல்ல—இனத்தின் பெயரைக்கூடக் குறிப்பிடக்கூடாதென்று—சில விளம்பரப் பலகைகளில் இனப் பெயரை அரசாங்கம் மாற்றிவிட்டது. உதாரணமாக, திராவிடன் என்று காணப்பட்டதையெல்லாம் அழித்துவிட்டுத் தமிழன், தமிழ்நாடு என்று போடப்பட்டுள்ளது.

பள்ளிக்கூடங்களில், கல்லூரிகளில் சேர்ந்துகொள்ள விண்ணப்பிக்கும் மாணவர்கள் தங்கள் விண்ணப்பங்களில் சாதிப்பெயர் காட்டக்கூடாதென்றும், மாணவர்களைத் தெரிந்தெடுத்துச் சேர்ப்பதற்காக ஏற்பாடு செய்யப்படும் கமிட்டியார்—செலக்‌ஷனில் நேரில்வரும் மாணவர்களை 'நீ என்ன சாதி?' என்று கேட்கக்கூடாதென்றும் ஆணை கொடுக்கப்பட்டிருக்கிறது.

இவைகளெல்லாம் சாதிப் பிரிவை உத்தேசித்துச் செய்யப்பட்ட ஏற்பாடுகளே தவிர, சாதிக்குள்ளிருக்கும் உட்பிரிவையோ, பேதத்தையோ பொறுத்ததல்ல. சாதிப்பிரிவு விஷயங்களில், நம் நாட்டில் முக்கியமாக அனுபவபூர்வமாகக் காணப்படுவதெல்லாம் இரண்டே சாதிகள் என்கின்ற பிரிவுதான். அதாவது, ஒன்று 'பிராமணன்'; மற்றொன்று 'சூத்திரன்'. அந்த 'சூத்திரன்' என்கிற வார்த்தை இழிவாயிருக்கிறது என்கிற காரணத்தால், எதிர்ப்பு ஏற்பட்டதன் பலனாக, பிராமணனை மட்டும் பிராமணன் என்றே சொல்லிக்கொண்டும் எழுதிக்கொண்டும் வருவது பழக்கத்தில் வருவதோடு, சூத்திரர்களைப் பொறுத்த வரையில் 'பார்ப்பனரல்லாதார்' (Non-brahmin) என்றும், 'திராவிடன்' என்றும், சில சந்தர்ப்பங்களில் 'தமிழன்' என்றும் இப்படிப் பலவாறாகச் சொல்லப்படுகிறது. எப்படியிருந்தாலும், பிராமணன் ஒரு சாதி. அவன் நீங்கிய மற்ற எல்லா இந்து மக்களையும்—அதாவது சத்திரியன், வைசியன், சூத்திரன் முதலிய எந்தச் சாதிக்காரர்களையும் இந்தச் சூத்திர சாதிக்குள்ளாகவே அடக்கினர். தங்களைப் பிராமணன், சத்திரியன், வைசியன் என்று சொல்லிக்கொள்ளுகின்ற பொற்கொல்லர் (ஆசாரி), படையாச்சி (வன்னியர்), நாடார்கள், நாயுடுமார்கள், நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள், வாணியச் செட்டியார்கள் முதலிய பலரைச் சூத்திரர்களுக்கு உண்டான அந்தஸ்தில் வைத்துத்தான் பார்ப்பனரல்லாதார் என்று சொல்லப்படுவதோடு, அவர்கள் 'சூத்திரர்'களாகவே பாவிக்கப்பட்டும் வருகிறார்கள்.

மற்றும் குறிப்பிடத் தகுந்தது என்னவென்றால், தங்களை வைசியர்கள் என்றே சொல்லிக்கொண்டு மற்ற பெருவாரியான மக்களிடம் உண்பன, தின்பன வைத்துக்கொள்ளாமல் தனித்து விலகி நிற்கும் 'ஆரிய வைசியர்' என்று சொல்லிக்கொள்ளும் கோமுட்டிச் செட்டியார்களையும், நகரத்தார் என்று சொல்லிக்கொள்ளும் நகரத்துச் செட்டியார்களையும் சூத்திரர் வகுப்பிலேயே சேர்த்து—சூத்திரர்களாகவே (Non-brahmin) பாவிக்கப்பட்டும் வருகிறார்கள். எதற்காக இவைகளைக் குறிப்பிடுகிறேன் என்றால், சாதி முறையில் அரசாங்கத்தாராலும், பார்ப்பனர்களாலும், அனுபவத்தினாலும்—இரண்டே சாதிப் பிரிவுகள்தான் பழக்கத்திலிருந்து வருகின்றன என்பதைக் காட்டுவதற்காகத்தான்.

www.thamizham.net - Free E book No 3041

இந்த இரண்டு பிரிவுகளில், 'பிராமணர்கள்' தவிர மற்ற பிரிவு மறைக்கப்பட்டு விடுவதில் யாருக்கும் கவலையில்லை. பிராமணர்கள் என்பவர்கள் மாத்திரம்தான் தங்கள் சாதியை நிலைநிறுத்திக்கொள்ளப் பாடுபடுகிறார்கள். காரணம், அவர்கள் மேல்சாதி உரிமை பெற்றிருப்பதனால். அதன் பயனாக மற்ற சாதிகளுக்குப் பெரிய தொல்லை இருப்பதனால், சாதிகள் ஒழிக்கப்படவேண்டும் என்கிற கிளர்ச்சி அவசியம் தோன்ற லாயிற்று. அது எப்படியோ, அரசாங்கக் கொள்கையிலும் ஒப்புக்கொள்ளப்பட்டு விட்டது; நடைமுறையிலும் சில காரியங்கள் செய்யப்பட்டு வருகின்றன. ஆனால், எப்படியோ— தெரிந்தோ, தெரியாமலோ, அல்லது வேண்டுமென்றோ அல்லது அலட்சியமாகவோ பார்ப்பனருக்கு மத்திய அரசாங்கம் ஒரு உரிமை (அனுமதி) கொடுத்து வருகிறது. அதாவது, அரசாங்கம் அனுமதி (லைசென்ஸ்) கொடுத்து நடைபெறும், நடக்கச் செய்யும் பார்ப்பனர்களின் உணவு விடுதிகளில், 'பிராமணர் விடுதி' என்று போட்டுக்கொள்ள அனுமதிக்கிறது.

சாதியின் அனுபவ ஆதிக்கமெல்லாம் பெரிதும் உணவினாலேதான் வரையறுக்கப் படுகிறது; சாதியை ஒழிக்க வேண்டுமென்கிறவர்கள், அந்த உணவுத் தன்மையில்தான் ஒழிக்கப் பாடுபட வேண்டும். அப்படியிருக்க, எதற்காக உணவு விடுதியில் சாதிப்பெயர் போட அரசாங்கம் அனுமதிக்க வேண்டும்? இப்படி அனுமதிப்பது அரசாங்கத்தின் கொள்கைக்கும் நடப்பிற்கும் முரண்பட்டதாகும். இதை அரசாங்கம் சீர்திருத்தவில்லை யானால் மக்கள் முயற்சித்துச் செய்யவேண்டியது அவசியமாகிறது.

பார்ப்பனர்கள் தங்களை மேலான சாதியென்று—மேலே குறிப்பிட்ட மற்றவர்களைப் போல, அவர்கள் வீட்டிலிருந்து சொல்லிக்கொள்ளட்டும். 'பிராமணாள் வீடு' என்று அவர்கள் வீட்டில் வேண்டுமானால் போர்டு போட்டுக்கொள்ளட்டும்; பூணூல் போட்டுக் கொள்ளட்டும்; நமது மேல் படுவதில்லையென்று எட்டி ஓரமாக நடந்து கொண்டு போகட்டும்; இவைகளைப் பற்றிப் பொதுமக்கள் பார்த்துக்கொள்ளட்டும். அரசாங்கத்தார் —ஏன், 'பிராமணன்' என்று போட்டுக் கொண்டு வியாபாரம் நடத்திப் பணம் சம்பாதிக் கவும், மற்றவர்களை இழிவுபடுத்தும் குறியைக் காட்டவும் இடங்கொடுக்கவேண்டும்? அந்த மாதிரி விளம்பரப் பலகை இருக்க இடங்கொடுப்பதிலிருந்து சாதி உணர்ச்சி தோன்று கிறதா, இல்லையா என்பதைத்தான் அரசாங்கம் இங்கு முக்கியமாகக் கவனிக்கவேண்டும்.

ஆதலால், நான் அரசாங்கத்திற்குத் தெரியப்படுத்திக் கொள்வதெல்லாம்—உணவு, சிற்றுண்டிச் சாலைகளுக்கு அரசாங்கம் அனுமதி கொடுப்பதில் அந்த அனுமதிச் சீட்டு நிபந்தனைகளில், 'லைசென்ஸ்தாரர்–சாதிப் பெயர் போடக்கூடாது' என்று குறிப்பிட வேண்டும் என்பதுதான்.

இதைச் செய்ய, சுமார் 25 ஆண்டுகளுக்கு முன்பாக சில நகரசபைத் தலைவர்களைக் கொண்டு நகரசபை 'லைசென்சு'களில் குறிப்பிடுவதற்கு ஏற்பாடு செய்தேன். அப்பொழுது முனிசிபல் சட்டத்தில் அனுமதிக்கப்பட்டிராத காரியங்களை முனிசிபாலிட்டியார் செய்தால், அது சட்ட விரோதம் என்று சொல்லி அபிப்பிராயம் கொடுக்கப்பட்டுவிட்டது; அதனால் அது நடைபெறவில்லை. அதற்குப் பிறகுதான், பல இடங்களில் கிளர்ச்சிகளால் மறைக்கப் பட்டன; இரயில்வே பிளாட்பாரங்களில்கூட 'பிராமணாள் ஓட்டல்', 'பிராமணாள் சாப்பிடுமிடம்' என்பவைகள் மறைக்கப்பட்டன.

ஆதலால், அரசாங்கத்தாராவது, கவர்னர் பெருமானாவது அருள் கூர்ந்து 5-5-1957-ஆம் தேதிக்குமுன் அமுலுக்கு வரும்படியாக—ஓர் அவசர அறிக்கை வெளி யிட்டுவிட்டால் இதற்காக நேரடி நடவடிக்கை—கிளர்ச்சி செய்யவேண்டிய அவசிய மிருக்காது என்பதைப் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

['விடுதலை'–அறிக்கை—27-4-1957]

www.thamizham.net - Free E book No 3041

## 2. நமது இழிநிலை

தமிழ் மக்கள் என்று சொல்லவேண்டுமானால் நாம் உலகத்திலில்லாத காட்டு மிராண்டித்தன்மையில் வாழ்கிறோம். உலகத்திலுள்ள எந்தச் சமூகத்திலும், பார்ப்பானும் பறையனும் சூத்திரனும் இல்லை. இப்படிப்பட்ட நிலை, நீக்ரோக்களிடம்கூட இல்லை. மோசமான காட்டுமிராண்டிகளாக இருந்தவர்களெல்லாம் இன்று பெரிய விஞ்ஞானிகளாக இருக்கிறார்கள்.

நாம் எப்படி இருந்தோம் என்பதற்குச் சரித்திரமும் இலக்கியமும் இல்லை; நிசமாக நாம் எப்படி இருந்தோம் என்பதற்கு ஆதாரம் இல்லை- ஆனால், கண்டுபிடிக்க ஒரு வாய்ப்பு உண்டு. அது என்ன வாய்ப்பு? அதுதான் நம் எதிரிகளால் சொல்லப்பட்டிருக்கிற சங்கதிகள். நம்மை ஒழிக்கவேண்டுமென்று இருப்பவன்—நம்மைக் குறைகூறவேண்டும் என்றே எழுதியவைகளில் இருந்தே நாம் காண்கின்ற அளவில், நாம் நல்ல நிலையில் இருந்திருக்கிறோம் என்பதைக் காணலாம்.

ஆணும் ஆணும் சேர்ந்து பிள்ளை பெற்றார்கள்; மீனுக்குப் பிறந்தான்; சாமியும் சாமியும் கலியாணம் செய்து கொண்டன என்றெல்லாம்—காட்டுமிராண்டித்தனமாக இருந்தவன், அந்தக் காட்டுமிராண்டி உணர்ச்சியிலிருந்து எழுதியவன்—இராவணனைப் படு அயோக்கியன் என்று எழுதவேண்டும் என்று கருதி எழுதியுங்கூட, என்ன எழுதியிருக்கிறான்? 'அவன் மதிற்சுவர் அப்படி இருந்தது; ஆட்சி இப்படி இருந்தது; இப்படிப் படித்தவன்' என்று புகழ்ந்துதான் எழுதியிருக்கிறான்! காலத்தைப்பற்றிச் சந்தேகம் வந்தாலும், கற்பனையாக எழுதியிருந்தாலும், அதில் பகுதி இருந்தாலும்—நாம் அவர்களைப்போல் காட்டுமிராண்டிகளாய் வாழவில்லை என்பது நன்றாகத் தெரிகிறது.

அப்படியிருந்த நம்மை, இன்று சூத்திரன், பஞ்சமன் என்கிறானே! இன்று அய்க்கோர்ட் தீர்ப்பில், 'இவன் சூத்திரன்; அவன் பிராமணன்; இவன் சாதியில்லாத இந்து (Non-caste Hindu)' என்று எழுதுகிறானே! இன்னும் எத்தனை காரியங்களில் இழிவாக நடத்தப்படுகிறோம்! இதற்கெல்லாம் சமாதானமாக 'பார்ப்பான் செய்துவிட்டான்!' என்று கூறிவிட்டால் போதுமா? அவர்கள் மூன்று பேர்தான்; நாம்—மூன்று பேருக்கு முப்பது மடங்கு பேர் இருக்கிறோமே! மான உணர்ச்சி இருந்தால் அவன் புகுத்தினான் என்று சொல்ல வாய்ப்பிருக்குமா?

இராமாயணத்தில், பாகவதத்தில் என்ன இருக்கிறது? அவன் காட்டுமிராண்டியாக இருந்தாலும் நாம் மேலான வாழ்க்கை உடையவர்களாக இருந்தபோதிலும் நம்மை ஒழிப்பதானால்—இராவணனை ஒழிக்க அவன் தம்பியையும்; இரணியனை ஒழிக்க அவன் மகனையும் சரிசெய்து கொண்டதுபோல்—நம்மை ஒழிக்க நம்மில் சில பைத்தியக்காரனையே பிடித்துக்கொள் என்ற தத்துவந்தானே அந்தக் கதைகளிலிருந்து தெரியவருகிறது?

புத்தனை ஒழிக்க என்ன செய்தான்? அவனா பிரச்சாரம் செய்து, அதற்கு மறுப்புச் சொல்லியா ஒழித்தான்? நமது ஆட்களைப் பிடித்து, 'நீ ஆழ்வார், நீ நாயன்மார்!' என்று சொல்லித் தூக்கிவிட்டுத்தானே புத்தனை ஒழித்திருக்கிறான்? இன்றுதான் என்ன? பார்ப்பான் இன்று ஆள்கிறான். அவன் வைத்ததுதான் சட்டம் என்கிறான்; அவனேயா ஆள்கிறான்? சட்டசபையில் அவனேயா உட்கார்ந்திருக்கிறான்? இது இன்று மாத்திரமல்ல. இராவணன் காலந்தொட்டு இப்படியே இருக்கிறதென்றால்—இந் நிலை மாறாதிருந்தால் என்னாவது? இந்தக் கொள்ளைக்கார ஆட்சி ஒழிந்து நமது நிலை மாறவேண்டாமா?

நானும் இருபது வருடமாகச் சொல்லுகிறேன்: பார்ப்பானை 'பிராமணாள்' என்று சொல்லாதே; அவனைப் பிராமணன் என்று கூறினால், நீ யார்? ஒருத்தி, உன்தெருவில், தன் வீட்டில் 'இது பதிவிரதைவீடு' என்று 'போர்டு' போட்டுக்கொண்டால்—மற்றவர்கள் வீடு என்ன என்று அர்த்தம்?—என்று கத்திக் கத்தி என் தொண்டையில் இரத்தம் வரச் சொல்கிறேன். இந்தச் சின்னக் காரியம் செய்யவும் எவன் கேட்கிறான்?

www.thamizham.net - Free E book No 3041

என்னைப் பார்க்கும்போது, 'ஆகா இந்தப் பார்ப்பானை ஒழிக்க, நீதான் சரியான ஆள்' என்கிறான். அந்தப் பக்கம்போய், 'பிராமணாள்' என்கிறான். எந்தக் கேவலமான பார்ப்பான் தன் இனத்தைக் காட்டிக் கொடுக்க முன்வருகிறான்? மாணிக்க நாயக்கர்தான் சொன்னார்: 'நாய் நன்றியுள்ள பிராணி. ஆனால், யாருக்கு நன்றியாக இருக்கும்? எலும்பு போடுகிறவனுக்குத்தான். ஆனால், தன் இனத்தைக் கண்டால் முன்பின் விரோதமே வேண்டியதில்லை—கண்டாலே 'உர்' என்னும். அதுபோல்தான் தமிழன் தன் இனத் துரோகியாக இருந்து பார்ப்பானுக்கு நல்ல பிள்ளையாக நடக்க விரும்புகிறான்' என்று.

ஒரு நண்பர் சொன்னார் வேடிக்கையாக! 'நீ இப்படிக் கத்துவதால் பயனில்லை. பேசாமல் வெளிநாட்டுக்குப் போய்க் கொஞ்சம் துலுக்கன் இரத்தமும், வெள்ளைக்காரன் இரத்தமும் வாங்கிக்கொண்டு வா! தமிழன் உடம்பிலுள்ள தமிழ் இரத்தத்தை ஒரு சொட்டு விடாமல் எடுத்துவிட்டுப் புதுஇரத்தம் பாய்ச்சினால்தான் பயன்படும்' என்றார். 2000 ஆண்டுகளாக இழிநிலையிலிருந்தே பழகிவிட்டதால் இது தோன்றுவதில்லை. ஒரு துலுக்கனிடம்—'பன்றி' என்று சொல்லுங்கள். அந்தப் பேச்சே பிடிக்காது. ஏன்? அப்படியே பழகியாய் விட்டது.

நமது பிள்ளைகள் பார்ப்பான் உயர்ந்தவன் என்ற பேச்சைக் கேட்டாலே முகத்தைச் சுளிக்கவேண்டும். எதற்குப் பார்ப்பான் வேண்டும்? பார்ப்பான் இல்லாவிட்டால் என்ன காரியம் நடக்காது? எனக்காக—நான் சாப்பிட—பலகாரம் செய்து வைத்துக்கொண்டு, உன் கடையில் 'பிராமணாள்' என்று போர்டு போட்டுக்கொண்டால் 'சூத்திரப் பயலே, வாடா' என்றுதானே கூப்பிடுகிறாய்? அதை எடுத்துவிடு என்றால், இந்த 1958 ல் கூட மாட்டேன் என்கிறானே?

[விழுப்புரத்தில், 27-8-1958-ல் சொற்பொழிவு—'விடுதலை' 30-8-1958]

# 7. காந்தி சின்னம் அழிப்பு

## 1. காந்தி பட எரிப்பு ஏன்?

காந்தி பட எரிப்பு, காந்தி சிலை அகற்றல் என்பதான காரியங்கள் தமிழ்நாட்டில் நடைபெறவேண்டும் என்கின்ற எண்ணம் எனக்குப் பல ஆண்டுகளாகவே உண்டு. அதைப் பொதுமக்களிடையில் இந்த 3, 4, ஆண்டுகளாக எனது பொதுக்கூட்டப் பேச்சுகளில் காட்டிகொண்டே வந்திருக்கிறேன். அந்த எண்ணமும் பேச்சும் நாளுக்குநாள் முதிர்ச்சி பெற்று இந்தச் சந்தர்ப்பத்தில் உருவகமாக வெளியாக்கப்பட வேண்டிய அவசியத்திற்குள்ளாகிவிட்டது.

காந்தியைப் பற்றிய நீண்டநாளான எனது கருத்தை அறியவேண்டும் என்கின்ற ஆசையுள்ளவர்கள்–1927 முதல் 1931 வரை உள்ள 'குடி அரசு' பத்திரிகையைப் பார்ப்பவர்களுக்கு (அதை முறையாய் வெளியிடப் போகிறேன்) நன்றாக விளங்கும்.

நான் 1924-ல் தமிழ்நாடு காங்கிரஸ் ஸ்தாபனத்தில் தலைவனாகவும், பிரமுகனாகவும் இருந்த காலத்தில்—காங்கிரசைவிட்டு வெளியேறிய காரணம் காந்தியின் செய்கையாலேயே ஆகும்.

1928-ல் என்பது எனது ஞாபகம், காந்தியின் உள்கருத்திலேயே எனக்கு ஏற்பட்ட உறுதியான எண்ணத்திலே—'இனி, காந்தியை மகாத்மா என்று அழைப்பதில்லை' என்று நான் முடிவுசெய்து—'திரு. காந்தியார்; தோழர் காந்தியார்' என்றே எழுதியும் பேசியும் வந்திருக்கிறேன். 'குடி அரசு', 'திராவிடன்', இன்றைக்கும் 'விடுதலை' பத்திரிகைகளைப் பார்த்தால் தெரியும்.

www.thamizham.net - Free E book No 3041

'பல கூட்டங்களிலும்—'காந்தியை, மகாத்மா காந்தி என்று சொல்' என்று பலர் குழப்பங்களும் காலித் தனங்களும் செய்த காலத்திலும்—காந்தியாரின் நடத்தையை, அவர் நமக்குச் செய்த கெடுதியை, துரோகத்தை விளக்கி ஒப்பச்செய்திருக்கிறேன் என்றாலும், இந்தப் பார்ப்பனர்கள் தங்கள் வாயால் ஒரு பார்ப்பனரல்லாத மனிதரை 'மகாத்மா' என்று அழைத்துத் தீரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதே என்பதுபற்றி மகிழ்ச்சி அடைந்து இருக்கிறேன். ஆனாலும், அதற்கு ஏற்ற கருத்துக்களை நான் ஆதரித்ததே கிடையாது.

சில கூட்டங்களில் நான் தாட்சண்யப்படவேண்டிய சில தோழர்கள்கூட சினேகித முறையில், 'காந்தியை—மகாத்மா என்று சொல்லு' என்று கேட்டுக்கொண்ட காலத்திலும் அவர்களுடன் தர்க்கம் செய்யாமல், 'அய்யா, எனக்கு வெறும் ஆத்மா என்பதிலேயே நம்பிக்கை கிடையாது; அப்படி இருக்க, மகாத்மா என்று சொல்லச்சொன்னால் என் நா எப்படி உச்சரிக்கும்?' என்று சமாதானம் சொல்லி இருக்கிறேன். ஆதலால், நான் ஒன்றும் இன்று எனது கருத்தை மாற்றிக்கொள்ளவில்லை என்பதற்கு ஆகவே இதைக் குறிப்பிட்டேன். தவிர, நானும் தோழர் இராமநாதன் எம். ஏ. அவர்களும், எங்களது சுயமரியாதைப் பிரச்சாரம் மும்முரமான காலத்தில் காந்தியாரது வருணாசிரமப் பிரச்சாரம் எங்களுக்கு மூட்டிய ஆத்திரத்தால்—எங்கள் தனிப்பட்டமுறைப் பேச்சில், 'இந்த காந்தியைச் சுட்டுத்தள்ள வேண்டும்' என்று நண்பர்களிடையில் பேசிக்கொண்டு இருந்திருக்க வேண்டும்.

நண்பர் ஆச்சாரியார் அவர்களும் நானும் காந்தியாரைப்பற்றித் தனிப்பட்ட முறையில் பேசிக்கொண்டிருந்தபோது பல விஷயங்கள் பேசினோம் என்றாலும் 'காந்திக்குத் தெளிவான புத்தி (Clear Thinking) கிடையாது, மிகவும் (Confused mind) எல்லாம் குழப்பமான எண்ணம்தான்; அதோடுகூடத் தனக்கு எல்லாம் தெரியும் என்கின்ற எண்ணம் உள்ளவர்' என்பதாகப் பேசிக்கொண்டு இருந்திருக்கின்றோம்.

வேறு பல விஷயங்களும் உண்டு; அவை பின்னால் வெளிவரும். இவை ஒருபுற மிருக்க, காந்தியால் நமது தமிழ்நாட்டுக்கு—தமிழ்நாட்டு மக்களுக்கு அரசியல்-பொருளியல்-சமுதாய இயல் ஆகியவைகளில் ஏற்பட்ட கேடுகள் அளவிலடங்காதவை என்றாலும், இன்று அது வளர்ந்து விரிந்து மாபெரும் கேடு ஏற்படும் அளவுக்கு—அதாவது, இனிப் பரிகாரம் செய்யமுடியாத அளவுக்குப் பரவி, பலம்பெற ஆரம்பித்துவிட்டதால் ஒரு இரண்டு மூன்றாண்டுகளாக எனது உள்ளத்தில் துடித்துக்கொண்டிருந்த எண்ணம் வெளியாக்கப்பட வேண்டியதாக ஆகிவிட்டது. இனி அது எந்தவிதத்திலும் தங்காது; வெளியிட,—பிரச்சாரம் செய்யத் தயங்காது.

'உலகம் போற்றும் உத்தமர்' என்று சிலர், மதசம்பந்தமான முறையில் பேசுவது போல், காந்தியைப்பற்றிக் கூறுவதுண்டு. இது பார்ப்பனரில் ஒரு சிறு கூட்டத்திற்குச் சாமியாரான சங்கராச்சாரியை, அவர் 'தானேதான் கடவுள்' என்ற தன்மையை 100-க்கு 90 ஆத்திகர்கள் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், எல்லாப் பார்ப்பனரும் அவரை லோககுரு, ஜகத்குரு என்று எப்படிச் சொல்லுகிறார்களோ அதுபோலும், நாமும் எப்படி அவரை லோககுரு என்று பேசுகிறோமோ அதுபோலும்—காந்தியை காங்கிரஸ்காரர்கள், 'உலகம் போற்றும் உத்தமர் காந்தி, மகான் காந்தி, காந்தி மகான்' என்று அவசியத்தை முன்னிட்டு—மற்ற மக்களை ஏய்ப்பதை முன்னிட்டுப் பேசுவதாலும்; பத்திரிகைக்காரர்கள் பார்ப்பனருக்கு அடிமையாகி வாழவேண்டிய நிர்ப்பந்தத்தில் இருப்பதால் அவர்களும் அப்படி எழுதுகிறார்கள். நான் அப்படிப் பேசியதும் இல்லை; எழுதியதும் இல்லை. எனக்குக் காந்தியை நன்றாகத் தெரியும். ஜின்னாவுக்கும், அம்பேத்காருக்கும் காந்தியை எவ்வளவு தெரியுமோ—அதற்குச் சற்று மேலாகவே எனக்குத் தெரியும்.

இது ஒருபக்கம் இருக்கட்டும். காந்தியை வெளியாக்கவேண்டிய முக்கியமான அவசியம்—காங்கிரஸ்காரர்களையோ, சட்டசபை மெம்பர்களையோ, பத்திரிகைக்காரர்

www.thamizham.net - Free E book No 3041

களையோ, பாமர மக்களையோ திருத்திவிடலாம் என்கின்ற எண்ணத்தால் அல்ல. மற்றென்னவென்றால், நமது பின் சந்ததிக்கு—'விஷயத்தைச் சொல்லி விளக்கிவிட்டுப் போனால், பயன்படுகிறபோது பயன்படட்டும்' என்கின்ற எண்ணமும்; மோசடிக்கார நம் எதிரிகளின் கூலிகள் தங்கள் வாழ்வுக்கு இனிமேலாவது—'காந்திமகான் சொன்ன வழி' என்று சொல்லி மக்களை ஏய்க்காதிருக்கட்டும் என்பதுமாகும்.

காந்தியால் நம் சமுதாயத்திற்கு—நம் நாட்டிற்கு ஏற்பட்ட நன்மை என்ன? காந்தியால் நாம் ஏமாற்றப்பட்டோம்; காந்தியால் நம் நாடு வடவனுக்கும் பார்ப்பானுக்கும் அடிமைப்படுத்தப்பட்டது. காந்தியால் மக்களிடம் இருந்த ஒழுக்கங்கள் அடியோடு நாசமாகி எல்லாத் துறைகளிலும் ஒழுக்கக் கேடும் நாணயக் கேடும் வளர்ந்து, இன்று ஒரு துறையிலாவது—ஒரு மனிதனிடத்திலாவது—ஒழுக்கம், நாணயம் என்பது இல்லாமல் போனதோடு அயோக்கியத்தனம், பித்தலாட்டம், வஞ்சகம், துரோகம் இல்லாமல்—அப்படி நடக்காமல் எவரும் வாழமுடியாத நிலை ஏற்பட்டுவிட்டது.

அரசியல் துறை ஆபாசக் களஞ்சியம், பித்தலாட்ட ஊற்றாக ஆகிவிட்டது.

மனிதனுக்கு மான ஈன உணர்ச்சி சிறிதுகூட நினைக்கவே முடியாமல் போய் விட்டது.

ஜனநாயகம் என்றால், ஓட்டர்கள்தாம் முட்டாள்கள் என்றால், பிரதிநிதிகள் 100-க்கு 99 அயோக்கியர்கள், வஞ்சகர்களாக இருக்கிறார்கள்.

ஜனநாயகம் என்றால்—10 ஆயிரம் முதல் 100 ஆயிரம் வரை செலவு செய்தால்தான் ஒருவன் பிரதிநிதி ஆகமுடிகிறது.

இதற்குப் பெயர், 'காந்தி மகான் காட்டியவழி; காந்தியார் தேடித் தந்த சுதந்திரம்—சுயராஜ்யம்' என்றால், மக்கள்மீது தவறா? காந்திமீது தவறா? என்பதை யோசித்துப் பாருங்கள்! மற்றவர்கள் இதை மறைக்கவேண்டிய அவசியத்தில் இருக்கிறார்கள். காரணம் என்னவென்றால், அவர்களது பிழைப்பு இந்தப் பித்தலாட்டத்தின்மீது அமைந்துவிட்டது. எனக்கு அந்த நிலைமை இல்லை. நான் மக்களுக்காக வாழ்கிறேன்; மக்களுக்காக எனது பொருளை ஒப்படைத்து இருக்கிறேன்; மற்றும் மக்களுக்காகச் சாகப்போகிறேன் (என் உயிரைக் கொடுக்கப்போகிறேன்) அப்படிப்பட்ட நான், ஏன் இந்த மோசடியை மூடிவைக்க வேண்டும்?

காந்திபெற்ற சுயராஜ்யத்தில் நாட்டு மக்களுக்கு ஏதாவது பங்கு உண்டா? யாராவது எந்தப் பத்திரிகைக்கார யோக்கியனாவது எடுத்துக்காட்டட்டுமே, பார்க்கலாம்! மந்திரிக்கு சம்பளப் பெருமை, சட்டசபை மெம்பருக்கு படிப் பெருமை தவிர, சொந்த வாழ்வுக்கு வசதி—இதைத்தவிர, அவர்கள் தங்களால் ஆகக்கூடியது இன்னது என்று சொல்லட்டும்; அல்லது தங்களால் ஆனது இன்னது என்று சொல்லட்டும்.

தமிழ்நாட்டில் பார்ப்பானுக்கும் வடநாட்டானுக்கும் ஆதிக்கமும் சுரண்டலும் எதற்காக இருக்கவேண்டும்? இருக்கவேண்டும் என்று வைத்துக்கொண்டாலும், அவனவன் பங்குக்குமேல் ஏன் இருக்கவேண்டும்? 'காந்திமகான், இருக்கவேண்டும் என்று சொன்னார்' என்றால் அந்த காந்தி முதலில் ஒழியவேண்டுமா, வேண்டாமா?

சாதிகளைக் கடவுள் உற்பத்திசெய்தார் என்பதால்தானே—அந்தக் கடவுள் முதலில் ஒழிக்கப்பட வேண்டுமென்றும் கூறி, எரிக்கவும் உடைக்கவும் செய்கிறோம்!

சுயராஜ்யம், சுதந்திரம், ஜனநாயகம் வந்து 10 ஆண்டுகள் ஆகப்போகிறது; ஜனநாயக—பொதுஜன 'ஓட்டு'த் தேர்தல்கள் இரண்டு நடந்துவிட்டன. இன்றும் இந்த நாட்டில் பிராமணன், சூத்திரன், பறையன், (அரிஜன்) இருக்கிறான் என்றால்—'இது காந்தி மகான் தேடிய சுயராஜ்யம்; இதில் அப்படித்தான் இருக்கும்' என்றால்—அந்த



www.thamizham.net - Free E book No 3041

காந்திமகான் உருவம் இந்த நாட்டில் இருப்பது இந்த நாட்டு மக்களுக்கு மானக்கேடா, இல்லையா? யோக்கியமான பத்திரிகைக்காரர்கள், அரசியல் வாழ்வுக்காரர்கள் பதில் சொல்லட்டுமே, பார்க்கலாம்!

வாழ்வுக்கு—ஒருவன் மானத்தை விற்கிறான்; ஒருவன் நாணயத்தை, ஒழுக்கத்தை விற்கிறான்; ஒருவன் மனைவியை, மகளை விற்கிறான். ஆகவே, இவர்கள் ஒரு டிகிரி இரண்டு டிகிரி, 5 டிகிரி, 10 டிகிரி வித்தியாசக்காரர்களே தவிர, பொதுவில்—விற்கக் கூடாததை விற்கிறவர்கள்தாமே?

நாளைக்குக் கொண்டாடப்போகும் சுதந்திரவிழா—பிராமணன், சூத்திரன், பறையன் இல்லாத நாட்டுச் சுதந்திர விழாவா, மக்களை ஏமாற்றி மோசம் செய்த, யோக்கியப் பொறுப்பற்ற சுயநல வஞ்சகர்கள் சுகவாழ்வுக்கு நடத்தும் நாட்டுச் சுதந்திர விழாவா என்று கேட்கிறேன்.

யோக்கியமான, மானமுள்ள பத்திரிகைக்காரர்கள் சொல்லட்டும், பார்க்கலாம்! திருடனைத் திருடன் மிரட்டலாம்; திருடாதவனைத் திருடன் எப்படி மிரட்டமுடியும்? மந்திரிசபை காங்கிரஸ்காரர்களே! சட்டசபை மெம்பர்களே! யோக்கியப் பொறுப்பு கடுகளவு மில்லாத பத்திரிகைக்காரர்களே!

நாளைக்கே காந்தி படத்தைக் கொளுத்தப் போவதில்லை.

நாளன்றைக்கே காந்தி சிலையை அப்புறப்படுத்து என்று கேட்கப்போவதில்லை! நல்லபடி நாடுமுழுதும் பிரச்சாரம் செய்து—நான் சொல்லாமலே பொதுமக்கள் அந்த வேலைகளைச் செய்ய முன்வரும்படி, அல்லது நானே செய்யச்சொல்லும்படி சொல்லப் போகிறேன்! கண்டிப்பாய்ச் சொல்லப்போகிறேன்! அதற்குள் உங்கள் துரோகத்தையும் விஷமத்தையும் செய்துபாருங்கள்.

மற்றவை பின்னால்,

['விடுதலை—தலையங்கம்—13-8-1957]

## உ. காந்தி பொம்மை உடைப்பு

'காந்தி பொம்மையை உடையுங்கள்.'

ஆளுக்கொரு காந்தி பொம்மையை உடையுங்கள்; வீட்டில் மாட்டியுள்ள படத்தை ரோட்டில் வீசி எறியுங்கள். இப்படிச் செய்தால் நம் உணர்ச்சியைக் கண்டு துரோகம் செய்யப் பயப்படுவார்களே! மந்திரிகள் 'நாடு பிரியக்கூடாது' என்று சொல்ல மாட்டார்களே!

'காந்தி இன்னின்ன துரோகம் செய்து எங்களை அடிமையாக்கிவிட்டார்' என்று விவரம் சொல்லிக் கொளுத்து என்கிறேன். நீங்கள் வேண்டுமானால், 'காந்தி ஒன்றும் செய்யவில்லை; நான்தான் செய்தேன்' என்று தைரியமாய்ச் சொல்லுங்கள்! முடியுமா?

காந்தி ஒன்றும் அபூர்வ புருஷர் அல்லர். பார்ப்பான், அப்படிப் பாமர மக்கள் நம்பும்படி—மகாத்மா ஆக்கினான். இப்போதல்ல; அப்போதே, நான் 'குடி அரசி'ல் இதை எழுதி இருக்கிறேன். 'ரிஷிகளுக்கு எவ்வளவு அறிவோ அவ்வளவுதான் காந்திக்கும். அவரைப் பார்ப்பனர்கள் மகாத்மா ஆக்கிவிட்டார்கள்! மகாத்மா வேஷத்தைக் காப்பாற்றிக் கொள்ளவே அவருக்கு வேலை சரியாய்ப்போகிறது' என்று எழுதியிருக்கிறேன்.

1930-க்கு முன்னமேயே, காந்தி ஒரு காங்கிரஸ் மாநாட்டுக்குப் போகும்போது வழியில் அவரை மடக்கி, 'துரோகி ஒழிக' என்று கூவி, அவர் காரில் கண்டதைப் போட்டிருக்கிறார்கள். காங்கிரஸ் கூட்டத்தில் காந்தி, 'என்னை ஒழிக என்கிறார்கள்; இவர்களா

www.thamizham.net - Free E book No 3041

என்னை ஒழிப்பார்கள்? அது பகவான் கையில் இருக்கிறது' என்று பேசியிருக்கிறார். சுபாஷ் சந்திர போஸ் கோஷ்டியினர்தாம் அப்படி வழியில் மடக்கிக் கண்டதைப் போட்டு, 'காந்தி ஒழிக!' என்றவர்கள்.

தாகூர் சொல்லியிருக்கிறார்: 'காந்தி காட்டு மனிதன்; இவருக்கு என்ன அனுபவம்? இவரது கொள்கை மோசமான கொள்கை' என்று. அதற்கு காந்தி தாகூரைப்பற்றி, 'இந்த தாகூருக்கு என்ன தெரியும்? கவி என்றால் கவிதை பாடி, பணக்காரர்களிடம் கூலி வாங்கிச் சுகபோகமாக இருப்பார்கள்; விடுதலையைப்பற்றி இவர்கள் பேசுவது தப்பு' என்று பேசினார். மக்களை உசுப்பிவிட்டு அவர்கள் தாகூர் வீட்டில் கல் போட ஓடினார்கள்; அவர் பயந்து, மறுநாளே காந்தியை 'மகாத்மா' என்று சொல்லிவிட்டார்.

இப்போது மராட்டி, குஜராத்தி சண்டை வந்தபோது காந்தி படத்திற்குச் செருப்பு மாலை போட்டார்கள்! குஜராத்தி–ஆரியன்; மராட்டி–திராவிடன். இப்போதும் மராட்டிய னிடம் திராவிட உணர்ச்சி ஊட்டினால் வளரும். அங்கு அந்த இராஜ்யங்களின் அமைப்பை ஒரு ஏற்பாடு செய்ய ஆரம்பித்தான். அந்தக் காலத்தில் காந்திக்குச் செருப்பு மாலை போட்டார்கள். நேரு, அங்கு எப்படிப் போவதென்று யோசனை செய்தார். அவருக்கும் செருப்பு மாலை போட்டான். இதெல்லாம் விளம்பரமாகவில்லை; சுபாஷ் சந்திர போஸ் ஓடியது யாரால்?

ஆந்திரர், மலையாளி இவர்கள் நாடாளப் பணமின்றித் தவிக்கிறார்கள்! பெட்டி வெறும் பெட்டியாக இருக்கிறது என்று முணுமுணுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

ஏதோ தாண்ட ஆரம்பித்தாகி விட்டது; அரைக் கிணறு தாண்டியதும், போதும் இவ்வளவு என்றால், கீழே பாதாளத்திற்குப் போகவேண்டியது தான். ஆகவே, வேகமாகத் தாண்டியாக வேண்டும்.

நான், 'தேசியக் கொடியை எரிக்கப் போகிறேன்' என்றதும் வழிக்கு வந்தார்களா, இல்லையா? அதுபோல் வந்து கேட்கட்டுமே! 'ஏன் ரகளை செய்கிறாய்? உனக்கு என்ன வேண்டும்?' என்று. இனிமேல் சட்டம் போடவேண்டும்: 'திட்டினால் இன்னது கொளுத்தினால் இன்னது' என்று.

காந்திக்கும் எங்களுக்கும் சொந்தத் தகராறு ஒன்றுமில்லை. அவர் இடத்தைப் பிடிக்கப் போட்டி போடவில்லை; எங்களுக்கும் சொந்தத்திற்கும் எதுவும் வேண்டுமென்று செய்ய வில்லை. இதற்கு ஒரு மாநாடு கூட்டி விஷயத்தை விளக்கிக் கேட்கப் போகிறேன்; சம்மதம் கொடுக்க வில்லை யென்றாலும், நானாவது செய்து விட்டுப்போய் உட்கார்ந்து விடுவேன்.

'காந்தி நாடு என்று பெயர் வை, காந்தி சகாப்தம் என்று பெயர் வை என்று நீ சொன்னாயே?' என்று என்னைக் கேட்கிறார்கள். அவர்களால், கொளுத்துவதற்கு நான் சொல்லும் காரணங்களை மறுக்கமுடியவில்லை.

நான் சமயம்போல் பேசுகிறேன் என்று மக்களுக்குத் தோன்றச்செய்ய வேண்டும் என்றே இப்படிக் கேட்கிறார்கள். குறும்பாகச் சொல்வதென்றால், 'நான் அன்று சொன்னேன், கேட்டாய்; இப்போதும் நான் சொல்கிறேன்—கேளேன்!' என்று நான் சொல்லிவிடலாம்.

'காந்தி நாடு' என்று வைக்கலாம் என்று சொன்னேன். முதலில் இந்தியா என்பதே கற்பனைச் சொல்; இப்படிக் கற்பனைச் சொல்லை வைத்துக்கொண்டு உயிரை வாங்கு வதைவிட உனக்குத்தான் காந்தியிடம் அதிக மரியாதை இருக்கிறது என்றாயே—அவர் பெயரை வைத்துவிட்டுப்போயேன் என்று யோசனை சொன்னேன். சுயநலக்காரர்கள் அதை வைக்கவில்லை; என்ன செய்வது என்று யோசனை கேட்டார்கள், சொன்னேன். அது போலவேதான், 'காந்தி சகாப்தம்' என்று வைக்கச் சொன்னேன். நமக்கென்று வருடமே இல்லை. வெள்ளைக்காரன் கிறிஸ்து பிறந்து 1957 வருடம் என்று வைத்திருக்கிறான். நமக்கு இருப்பது பிரபவ, விபவ என்ற ஆரிய கதைப்படி உள்ள 60 வருடங்கள்தாம். இதைக்

www.thamizham.net - Free E book No 3041

கொண்டு, காலத்தைக் கண்டுபிடிக்கமுடியாது. நான் பிரமாதி ஆண்டில் பிறந்தேன். இப்பொழுது கணக்குப் பார்த்தால் 19 வயதுதானே ஆகவேண்டும்! எனக்கு எழுபத் தொன்பது என்று கண்டுபிடிக்கவேண்டுமானால் என் தாடியைப் பார்த்துத்தான் சொல்ல வேண்டும். சரித்திரத்திலேயே புரட்டு ஏற்பட இது ஒரு காரணம். கல்வெட்டில்—'கலியுகாதி, பிரபவ வருடம்' என்று போட்டிருப்பான். 'கலியுகாதி' என்பது பித்தலாட்டம்; அறிவுக்குப் பொருத்தமும் ஆதாரமும் அற்றது. பிரபவ என்று சொன்னால்—'எந்த பிரபவ' என்று சொல்லமுடியாது. 'இப்படி நமக்கென்று ஒரு சகாப்தம் இல்லாமல் அழிப்பதைவிட, காந்தி பெயரைத்தான் வையேன்!' என்று யோசனை சொன்னேன். அவ்வளவுதான்.

காந்தி துரோகம் செய்தாரா, இல்லையா என்று உங்கள் அறிவைக்கொண்டு யோசியுங்கள்.

[சேலத்தில், 18-8-1957-ல் சொற்பொழிவு—'விடுதலை' 23-8-1957]

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

'காந்தி சிலையைத் தொட்டால் சும்மா விடுவோமா?' என்கிறார்கள். என்ன செய் வார்கள்? காந்தியார் படத்தைக் கொளுத்துவதற்குக் காரணம், காந்தி நம்மைச் சூத்திரர் களாக இருக்க உதவியதுதானே? மந்திரிகள் சூத்திரர்களாக இருக்க விரும்புகிறார்களா? மந்திரிப் பதவி என்பது எல்லா உணர்வையும் விட்டுக்கொடுத்து விடுவதுதானே? தீண்டாமை விலக்கு மாநாட்டிலே சாதி ஒழியக்கூடாது என்ற தீர்மானமே போட்டார் காந்தியார்! சமபந்தி போஜனத்தையும், சாதி ஒழிப்பு என்ற விஷயத்தையும் தீண்டாமை 'லீக்'கில் இருந்து எடுத்துவிட வேண்டுமென்று பிர்லா சொன்னார். அவருடைய பணத் திற்காக ஆதரித்தார் காந்தியார்.

காந்தியார் படத்தை எரிப்பதையும், சிலையை உடைப்பதையும் இந்தியாவில் எந்தப் பத்திரிகையாலும் செய்தி ஸ்தாபனங்களாலும் உலகத்தின் பார்வையிலிருந்து மறைக்க முடியாது.

'சாதி இந்தியாவிலிருக்கிறது. பார்ப்பான் சாதித் தலைவனாக இந்தியாவிலிருக் கிறான். அவனே அரசியல், பொருளியல், சமூக இயல் இவைகளுக்கும் தலைவனாக இருக் கிறான். காந்தியார் பார்ப்பன சமூகத்தைக் காப்பாற்றி இருக்கிறார்; மற்ற இனங்களை அவர்களுக்கு அடிமைகளாக ஆக்கி இருக்கிறார். அந்தக் கொடுமை தாங்க முடியாத தென்னாட்டு மக்கள், காந்தியின் சிலையை உடைக்கிறார்கள். இதனை நேருவால் நிவர்த் திக்க முடியவில்லை' என்று உலகம் தெரிந்துகொள்ளும். உலக அரசியலில் 'சமாதான தூதுவராக' நேரு பறக்க முடியாது. இந்த நிலையை உண்டாக்கியே தீருவேன்.

[நாகப்பட்டினத்தில், 12-9-1957-ல் சொற்பொழிவு—'விடுதலை' 3-10-1957]

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

சட்டத்திலே சாதியைக் காப்பாற்ற ஏற்பாடு செய்திருக்கிறார்கள்; அந்தப்படி செய்ததற்கு அடிப்படைக் காரணம் காந்தி.

காந்தி பெயரைச் சொல்லித்தான் சாதிக்குப் பாதுகாப்பான ஏற்பாடு செய்ய முடிந்தது; எனவே, இந்த நாட்டில் காந்தி சிலை இருப்பது அவமானம் என்கிறேன்.

இன்று காங்கிரஸ்காரர்கள் சொல்லுகிறார்களே, 'வெலிங்டன் சிலை இருக்கக் கூடாது; விக்டோரியா ராணி சிலைகூடாது; நீலன் சிலை கூடாது' என்று; அதுபோல காந்தி சிலை எங்கள் நாட்டில் இருக்கக்கூடாது என்று சொல்ல எனக்கும் உரிமையுண்டு.

ஒரு வெலிங்டனும், நீலனும் செய்யாத அக்கிரமத்தை—எங்களுக்கு காந்தி செய்துள்ளார்.

www.thamizham.net - Free E book No 3041

காந்தி மனதார ஏமாற்றி, சாதியைக் காப்பாற்றப் பலமான சட்டம் செய்துகொண்டு, பார்ப்பானுக்குப் பாதுகாப்புக் கொடுத்து, நம்மை என்றும் அடிமையாக இருக்க ஏற்பாடு செய்துவிட்டுப் போய்விட்டார்.

நம்மவனோ—நான் நாயக்கனாயிற்றே, நான் கவுண்டனாயிற்றே என்று நினைத்துக் கொண்டு—சூத்திரன் என்பதைப்பற்றிக் கவலைப்படாமல் இருக்கிறானே தவிர, வேறு என்ன? தெரியாமல் தொட்டால் நெருப்பு சுடாமல்விடுமா? தெரியாததுபோலவே இருந்து விட்டால் சூத்திரப் பட்டம் இல்லாதுபோய்விடுமா?

இந்தியா பூராவிலும் அகில இந்திய காங்கிரஸ் 70 வருடமாக இருக்கிறது; இந்த காங்கிரஸ் வந்தபின் நமக்கு ஏற்பட்ட லாபமென்ன? பார்ப்பானுக்கு ஏற்பட்ட லாப மென்ன? என்று கணக்குப் போட்டுப் பார்க்க வேண்டாமா?

காங்கிரஸ் வந்த 50 வருடத்தில் பார்ப்பான் 100-க்கு 100 பேர் படித்தவன்; பார்ப் பாத்தியும் படித்தவள் ஆகிவிட்டனர். 70 வருட காங்கிரஸ் அவர்களை அந்த அந்தஸ்தில் வைத்துவிட்டது. அதே காங்கிரசுக்கு ஆதரவு கொடுத்துத் தீர்மானங்களுக்குக் கைதூக்கிப் பலப்படுத்திய நம் கதி என்ன? 100-க்கு 18 பேர் படித்திருக்கிறார்கள். இந்தப் 18 பேரும் எப்படிப் படித்தவர்கள்? பார்ப்பனனைப்போலவா படித்தவர்கள்? அதில் 10 பேர் சும்மா கையெழுத்துப் போடத் தெரிந்தவர்கள்; அவ்வளவுதான். வெள்ளைக்காரன் போகிறபோது 12 பேர்தான் படித்தவர்கள்; சுதந்திரம் வந்த 10 ஆண்டு ஆகியும், அதுவும் காமராசர் வந்ததால் இன்று 100-க்கு 18 பேர் படித்தவர்கள். காமராசர் வராவிட்டால் இன்னும் குறைந்திருக்கும்.

இராசகோபாலாச்சாரியார் மதுரையில் பேசும்போது, 'சிலர் தீண்டாமை ஒழிய வேண்டுமென்றதைத் தப்பாகப் புரிந்துகொண்டு, சாதியே ஒழியவேண்டுமென்கிறார்கள். காந்தி ஒருக்காலும் சாதி ஒழியவேண்டும் என்று சொல்லவில்லை; சாதி காப்பாற்றப்பட வேண்டுமென்றார்' என்று பேசினார். சாதி ஒழியக்கூடாது என்று சொல்லத் தைரியம் வந்துவிட்டதே, என்ன சங்கதி?—என்று பார்த்தால் ஒவ்வொன்றாகத் தெரிகிறது. காந்தி வருணாசிரம தர்மத்தை (சாதியை)க் காப்பாற்ற வேண்டும் என்று சொன்னதை ஆதாரமாக வைத்துக்கொண்டு—அதன்படியே சாதியை அசைக்க முடியாதபடி சட்டம் செய்து விட்டார்கள். இது காந்தி மனதாரச் செய்த துரோகம். இந்தப் பித்தலாட்டம் உங்களுக்குத் தெரியாது.

டாக்டர் அம்பேத்கார் ஒரு புத்தகம் எழுதியுள்ளார். இதில் காந்தி செய்த பித்தலாட் டங்களை நல்லபடி எடுத்துப் போட்டுள்ளார். 'தீண்டாமை ஒழிப்புக்குக் காங்கிரசும் காந்தியும் செய்தது என்ன?' என்பது அந்தப் புத்தகம்.

தீண்டாமை ஒழிப்பிற்காக 'அன்டச்சபிள்ஸ் லீக்' (Untouchables League) என்ற அமைப்பு வைத்திருக்கிறார்கள்; நிறைய ஃபண்டும் கொடுத்திருக்கிறார்கள் அதற்கு. அத் தீண்டாமை ஒழிப்புச் சங்கத்திற்கு ஒரு கமிட்டி நியமித்திருக்கிறார்கள். அந்தக் கமிட்டி மெம்பர்களில் ஒருவர் பேசும்போது, 'சமபந்தி போஜனம் செய்யவேண்டும்; சாதி ஒழியவேண்டும்; அப்போதுதான் தீண்டாமை போகும்' என்று பேசினார். அது மற்ற மெம்பர்களுக்குப் பிடிக்கவில்லை; அவர்கள் காந்தியிடம் புகார் சொன்னார்கள்.

அதன் பேரில் காந்தி ஒரு 'ஸ்டேட்மெண்ட்' கொடுத்திருக்கிறார். என்ன ஸ்டேட் மெண்ட்? 'தீண்டாமை ஒழிப்பிற்கும் சாதிக்கும் சம்பந்தம் இல்லை; சமபந்தி போஜனம் செய்யவேண்டுமென்பது வேறு—தீண்டாமை ஒழியவேண்டுமென்பது வேறு' என்று ஒரு ஸ்டேட்மெண்ட் காந்தி கொடுத்தார். இதைத் தெரிந்ததும் அந்தக் கமிட்டி மெம்பர் ராஜினாமா கொடுத்துவிட்டுப் போய்விட்டார். பிறகு 'யங் இந்தியா' என்ற பத்திரிகையில் காந்தி, 'சாதிமுறை என்பது நல்ல அமைப்பு; அது இருக்கவேண்டும்; அதாவது வருணாசிரம தர்மம் பாதுகாக்கப்படவேண்டும்' என்று எழுதிவந்தார்.

www.thamizham.net - Free E book No 3041

நான் காங்கிரசில் இருந்தபோதே சமுதாயத் துறையில் சமத்துவம் ஏற்படுத்த வேண்டும் என்று நிறையப் பேசியிருக்கிறேன்.

அப்போது காந்தி, 'தீண்டப்படாதவர்களைக் கிணற்றில் தண்ணீர் எடுக்க விடா விட்டால் வேறு தனிக் கிணறு கட்டிக் கொடு. கோவிலுக்குள் விடாவிட்டால் வேறு தனிக் கோவில் கட்டிக் கொடு' என்றார்; பணமும் அனுப்புகிறேன் என்றார். அப்போது நாங்கள் தான் அந்த ஏற்பாட்டை எதிர்த்தோம். 'கிணற்றில் தண்ணீர் எடுக்கக்கூடாதென்று இழிவு படுத்தும் இழிவுக்குப் பரிகாரமில்லாவிட்டால்—அவன் தண்ணீரில்லாமலே சாகட்டும்' என்றேன். 'அவனுக்கு இழிவு நீங்க வேண்டும் என்பது முக்கியமே தவிர, தண்ணீரல்ல' என்றேன். கோயில் பிரவேசம் வேண்டுமென்று கூப்பாடுபோட்டோம். என் கூக்குரலுக்குக் கொஞ்சம் மரியாதை உண்டு என்பது இராஜாஜிக்குத் தெரியும். கோயில்களுக்குள் தீண்டப் படாதவர்கள் என்பவர்களை அழைத்துக் கொண்டு நுழைந்தோம்.

கேரளத்தில் பெரிய ரகளையாகிக் கொலையும் நடந்துவிட்டது, இராஜாஜி, காந்தி யிடம், 'ராமசாமி பேச்சுக்கு மரியாதை உண்டு; ரகளை ஆகும். ஆதலால் கோவிலில் நுழைய விட்டுவிடவேண்டியதுதான்' என்றார். அதற்குப் பிறகும், 'சூத்திரன் போகின்ற அளவுக்குப் பஞ்சமன் போகலாம்' என்றார்கள்.

நான், 'சூத்திரனும் பஞ்சமனும் ஒன்றாகி, நாங்கள் இன்னும் கொஞ்சம் மட்ட மானோமே தவிர, பார்ப்பான் அப்படியேதானே இருக்கிறான். சாதி ஒழிய வேண்டுமா, வேண்டாமா?' என்றேன்.

அப்போதிருந்தே காந்தி, சாதி காப்பாற்றப்பட வேண்டும் என்ற முயற்சியில் பார்ப்பனருக்கு உடந்தையாகவே இருந்து பல மோசடிகள் செய்து, நம்மை ஏமாற்றி விட்டார். காந்திக்கு இருந்த செல்வாக்கு, நம்மைப் பார்ப்பானுக்கு அடிமையாக்கவும்—பார்ப்பான் பார்ப்பனனாகவே இருக்கவுந்தான் பயன்பட்டது. இன்னும் சாதி ஒழிப்புக்கு விரோதமாக—'காந்தி சொன்னது; காந்தி மகான் காட்டிய வழி' என்று கூறிச் சட்டத்திலும் பாதுகாப்புச் செய்துகொண்டார்கள்.

காந்தி செய்த மோசடி மக்களுக்குத் தெரியவேண்டும். அதனால்தான், 'காந்தியின் படத்தை எரிப்போம்; எங்கள் நாட்டில் காந்தி சிலையிருப்பது கூடாது—அகற்ற வேண்டும்' என்று சொல்லுகிறோம். காந்தியின் பெயரைச் சொல்லித்தானே பிழைக்கிறோம்; காந்திக்கு மரியாதை கெட்டுவிடும் போலிருக்கிறதே என்று நினைத்து அரசாங்கத்திற்கு—சாதியை ஒழிக்க உணர்ச்சி வரலாம். 'ஆகா! காந்தி படத்தை எரித்தால் இரத்தக் களறி ஆகும்!' என்கிறார்கள். ஆகட்டுமே—என்ன நஷ்டம்?

பொறுப்புள்ளவர்கள் பதில் சொல்லவில்லை. மந்திரிகள் சொன்னார்கள் என்றால்—'காந்தி படத்தை எரிப்பது தவறு என்று சொல்லவில்லை. எரித்தால் மக்கள் மனம் புண் படும்; மக்கள் மனம் புண் படாமலிருக்க நடவடிக்கை எடுப்போம்' என்றார்களே தவிர, காந்தி படம் எரித்தால் தவறு என்று கூறவில்லை. காந்தி பேரில், அவர் இன்னின்ன தவறு செய்தார் என்று நான் கூறுகிறேனே; எரிக்கக் கூடாது என்பவர்கள் அவர் தவறு செய்ய வில்லை என்று சொல்லவேண்டாமா? வேறு என்ன செய்தால் சாதி ஒழியும் என்றாவது சொல்லட்டுமே! இல்லை, சாதி ஒழியக்கூடாது என்றாவது சொல்லட்டுமே!

காந்திதான் வருணாசிரம தர்மம் காப்பாற்றப்படவேண்டும் என்றார். 1927-லேயே 'காந்தி, மகாத்மா பட்டத்தைக் காப்பாற்றிக்கொள்ள பார்ப்பன அடிமையாகிவிட்டார்' என்று எழுதினேன். அது முதலே தோழர் காந்தி என்றுதான் நான் போடுவேன்; மகாத்மா என்று போடுவதில்லை. பிறகு காந்தியார் என்று போட்டோமே தவிர—மகாத்மா என்று போடவில்லை. காந்தி சமுதாயத் துறையில் பெரிய கேடு செய்து விட்டார்.

www.thamizham.net - Free E book No 3041

அவர் செய்த அடுத்த துரோகம், நம்மை வடநாட்டானுக்கு அடிமையாக்கிவிட்டுப் போனது. சுயராஜ்யம் பேசி, வெள்ளைக்காரன் வெளியே போனதும் நம்மை வடநாட்டுக்கு அடிமைகளாக்கிவிட்டார்.

பெயர் தமிழ்நாடு; தமிழ்நாடு என்பது போலவே ஒவ்வொரு நாடும் தனி; எல்லாம் சேர்ந்து ஒரு யூனியன்—கூட்டாட்சி என்று சொல்லிப் பிரிக்கவே முடியாது என்று எழுதி வைத்து விட்டான்.

வடநாட்டான் காங்கிரசுக்கு நிறையப் பணம் கொடுத்தான்; எங்களுக்கெல்லாம் தெரியும். நாங்கள் தேசாபிமானத்தால் அவன் கொடுக்கிறான் என்று நினைத்தோம். நம்மை வடநாட்டுக்கு விற்கும் வினை என்று தெரியாது. மாகாண அரசுக்கு எந்த உரிமையுமில்லை.

[தர்மபுரியில், 19-9-1957-ல் சொற்பொழிவு—'விடுதலை' 9-10-1957]

# 8. சாதி ஒழிப்புப் போர்

## 1. அரசியல் சட்ட எரிப்பு ஏன்?

தோழர்களே!

'பிராமணன் என்று ஒரு சாதி சட்டத்தில் இருக்க அனுமதிக்க மாட்டோம். அப்படி இருந்தாலும், அவன் பிராமணனாக வாழ அனுமதிக்க மாட்டோம்' என்று அரசாங்கம் சொல்லட்டும்.

இந்த மாதம் 26-ந் தேதிக்குள், 'பிராமணன் என்ற ஒரு சாதி கிடையாது. சட்டத்தில் அந்த மாதிரிக் கருதமாட்டோம்' என்று அறிக்கை வராவிட்டால் அரசாங்கச் சட்டப் புத்தகத்தை நாங்கள் கொளுத்தப் போகிறோம். இதை நாங்கள் வருத்தத்துடனேயே சொல்கிறோம்; வெறும் குறும்புக்காகவோ, விளம்பரத்திற்காகவோ, ஜெயிலுக்குப் போய் வந்ததைக் காட்டி ஓட்டு வேட்டையாடவோ நாங்கள் அந்தக் காரியம் செய்யவில்லை.

எனக்கு 79 வயதாகிவிட்டது; நம் மக்களுக்கு ஏதாவது காரியம் செய்துவிட்டு நான் சாகவேண்டும். இல்லையென்றால், நம் மக்களுக்கு உணர்ச்சியூட்டிவிட்டுச் சாகவேண்டும்.

இன்றைய தினம் எல்லாப் பார்ப்பனப் பத்திரிகைகளும் கட்டுப்பாடாக—நான் பார்ப்பனரை வெட்டச் சொன்னேன், குத்தச் சொன்னேன் என்று கூப்பாடு போடுகின்றன! எந்தப் பார்ப்பானிடம் எனக்கு விரோதம்? யார்மீது துவேஷம்? நேற்று எனக்கு நடைபெற்ற விழாவுக்குப் பார்ப்பனர் பணம் கொடுத்திருக்கிறார்கள்; அவர்கள் கொடுத்த 'செக்' என்னிடம் இருக்கிறது; ஏன் இதைச் சொல்லுகிறேன் என்றால், எனக்குத் தனிப்பட்ட முறையில் யார்மீதும் துவேஷம் இல்லை என்பதைக் காட்டவே!

நான் ஏன் ஒரு கூட்டமே ஒழிய வேண்டுமென்று சொல்லுகிறேன்? நம் சமுதாயத் திற்கே களை மாதிரி இருந்துகொண்டு வளரவொட்டாமல் செய்கிறது—அந்தக் கூட்டம். வெட்டுகிறேன் என்று சொன்னேன், குத்துகிறேன் என்று சொன்னேன் என்று பூச்சாண்டி காட்டுகின்றனர். அப்படிச் சொல்லுவதன் மூலம் அந்த நாளையே அவர்கள் விரைவுபடுத்து கின்றனர்.

'காந்தியார் படத்தை எரித்தால் தலைகள் உருளும்; இரத்த ஆறு ஓடும்; அதற்கு 20,000 பேர் தயார்' என்று சொன்னார்களே, அவர்களை நீ என்ன செய்தாய்? நான் சொல்லுகிறேன்—'சாதி ஒழியாவிட்டால் இரத்த ஆறு ஓடும்' என்று. 'சாதி இருக்கத்தான் வேண்டும்' என்று நீ சொல்லேன்!

www.thamizham.net - Free E book No 3041

இந்த மாதிரிக் கூப்பாடு போட்டால் அரசாங்கம் பிடித்து எங்களை ஜெயிலில் போடும்; நாங்கள் பயந்துகொள்வோம் என்பது பார்ப்பனர்கள் நினைப்பு. இது யாரிடம் பலிக்கும்? நான்தான் உயிரைவிடத் தயாராயிருக்கிறேனே! என்னுடைய தொண்டர்களும் தயாரா யிருக்கிறார்களே!

வேண்டுமானால், இந்தப் பார்ப்பன சமுதாயத்திற்கு நான் வாய்தா கொடுக்கிறேன்; தன்னை அது மாற்றிக் கொள்ளட்டும்!

இன்றைய தினம் அரசாங்கத்திற்கு வாய்தா கொடுத்திருக்கிறேனே! சாதி ஒழிப்புக்குப் பரிகாரம் கிடைக்காவிட்டால் அரசியல் சட்டத்தைக் கொளுத்தப் போகிறோம். அதிலும் முடியாவிட்டால் காந்தியார் சிலையை உடைக்கப் போகிறோம். வேண்டுமானால் என்னை ஜெயிலில் போடட்டும்; வெளியே இருந்துகொண்டு கொடுமையைச் சகித்துக்கொண்டிருக்க எங்களால் முடியாது.

இதற்கு முன்பே–1950-லேயே நான் சொன்னேன், 'இது மனுதர்ம சாஸ்திரத்தின் மறுபதிப்பு; ஆகவே, இதைக் கொளுத்தவேண்டும்' என்று!

இந்தச் சட்டம் எழுதியவர்கள் ஆறு பேர்கள். அதில் நாலு பேர் பார்ப்பனர்கள். அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், முன்ஷி, டி. டி. கிருஷ்ணமாச்சாரி, கோபால்சாமி அய்யங்கார் ஆகிய பார்ப்பனர்கள் எழுதினார்கள். மற்றவர்கள் இரண்டு பேரில் ஒருவர் அம்பேத்கார், மற்றவர் ஒரு சாயபு.

அம்பேத்கார் கொஞ்சம் நம் உணர்ச்சியுள்ளவர். அவர் என்னைக் கேட்டார், 'உன்னுடைய மக்களுக்கு என்ன செய்யவேண்டும்?' என்று. நிறைய விவரங்களையெல்லாம் அவரிடம் கொடுத்தேன்; அதையெல்லாம் அவர் பேச ஆரம்பித்தார். உடனே பார்ப்பனர்கள் அவருக்கு விலை கொடுத்துவிட்டார்கள். அது என்ன விலையென்றால், அவர் தன்னுடைய மக்களுக்கு 100-க்கு 10 இடம் கல்வி வசதியில், உத்தியோக வசதியில் கேட்டார். அவன், '15–ஆகவே எடுத்துக்கொள்' என்று சொல்லிவிட்டான்! அவனுக்குத் தெரியும், 25 இடம் கொடுத்தால்கூட அவர்களில் மூன்று அல்லது நான்கு பேர்கூட வரமாட்டார்கள் என்பது. பார்ப்பான் எழுதிக்கொடுத்த சட்டத்தில் அவர் கையெழுத்துப் போட்டுக் கொடுத்துவிட்டார். மற்றவர்களுடைய சங்கதியைப்பற்றி அவர் சிந்திக்கவில்லை.

ஒரு சட்டம் எல்லோருக்கும் சமம், சமவாய்ப்பு என்று சொல்லிக்கொண்டு—பார்ப்பனருடைய உயர்வைக் காப்பாற்றி—அவர்களுடைய ஏகபோக அனுபவத்திற்குக் கல்வியையும், உத்தியோகத்தையும் தருகிறதென்றால், அது எந்த வகையில் நீதியான, நேர்மையான சட்டம்?

இத்தகைய மோசடிச் சட்டம் ஒழிக்கப்பட்டே ஆகவேண்டும். அந்த முயற்சியாக, 26-ஆம் தேதியன்று இந்தச் சட்டத்தைத் தீயிலிட்டுப் போசுக்கப் போகிறோம்.

[சுவாமிமலையில், 4-11-1957-ல் சொற்பொழிவு–'விடுதலை' 11-11-1957

தோழர்களே!

சட்டத்தைக் கொளுத்துவதென்பது சாதிப் பிரச்சினையை மட்டும் வைத்துத்தான் என்பதல்ல; உத்தியோகம், மற்றும் மத்திய அரசாங்கம் எந்தத் தகுதியும் நியாயமுமில்லாமல் அரசியல் சட்டத்தின் பெயரால் நடத்தும் கொடுமையான அநீதிகள், அத்தனையும் வைத்தே அதைக் கொளுத்தவேண்டும் என்கிறோம்.

மத்திய சர்க்கார் பெயரால்—அரசியல் சட்டத்தின் பெயரைச் சொல்லி எவ்வளவு கொள்ளைகள்? தபால், சுங்கம் முதலியன வருமானமுள்ள சங்கதிகள் பூராவும் அங்கு! இந்த ஆதிக்கத்திற்கு அரசியல் சட்டம்தானே இடம் தருகிறது? நீங்கள் சரியாகப் படித்துப் பார்த்தால் ஏன் கொளுத்த வேண்டுமென்பது விளங்கும்.

www.thamizham.net - Free E book No 3041

நாம் எவ்வளவு கீழ்மக்களாக ஆக்கப்பட்டிருந்தாலும் அதுபற்றி யாருக்கும் கவலை இல்லை; எதிர்த்துப் பேசி மத்திய சர்க்காரின் கொடுமைகளைக் கூறவும் ஆளில்லை. கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட் எவராக இருந்தாலும் அரசியல் சட்டத்தைப்பற்றிப் பேசவே கூடாது என்பார்கள். எல்லோரும் இந்தக் கொடுமையான சட்டத்தை ஒப்புக்கொண்டு அதன்படி சட்டசபையில் போய் உட்காருகிறவர்கள். நாம்தாம் இதைச் செய்யமுடியும்.

ஆகவே, காலணாவுக்கு அரசியல் சட்டத்தின் சுருக்கத் தொகுப்பு கிடைக்கும். அதை வாங்கி வைத்து, நெருப்புக் குச்சியைக் கிழித்து வைத்துக் கொளுத்தவேண்டும். தண்டனை 3 வருடமோ, 6 வருடமோ—நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? இது கடமை, செய்யவேண்டியது அவ்வளவுதான்! தாய்மார்களும் பெருமளவில் கலந்துகொள்ள வேண்டும். ஜோடி ஜோடியாகக் கொளுத்துங்கள்; அங்கேயே போய்க் குடும்பம் நடத்தினால் போகிறது? 26-ந்தேதி வரை வெளியில் இருந்தால் என் பங்குக்கு நானும் கொளுத்துவேன்.

ஆனால், போராட்டத்தில் கலந்துகொள்பவர்கள் போலீஸ்காரர்களிடமோ அதிகாரிகளிடமோ முரண்பட்டு நடந்துகொள்ளாமல் காரியம் செய்யவேண்டும்; கட்டுப்பாடாக நடந்துகொள்ள வேண்டும். அதுதான் நமக்குப் பெருமை.

குத்துவதாக இருந்தால்கூட எப்படிக் குத்துவோம்—எங்கு குத்துவோம் என்று சொல்லிவிட்டுத்தான் செய்வோமே தவிர, திடீரெனச் செய்துவிட மாட்டோம்.

ஆகவே, கலவரமில்லாமல் இராமன் படம் எரித்த மாதிரி, அவ்வளவு கட்டுப்பாடாக நடந்துகொள்ள வேண்டும்.

ஆண் பெண் எல்லோரும் கொளுத்த வேண்டும். போலீஸ்காரர்கள் முன்கூட்டியே மிரட்டுவார்கள்; நடக்காமல் செய்யத் தந்திரம் செய்வார்கள். ஜாக்கிரதையாக நடந்து கொள்ளவேண்டும். தப்பித்துக்கொள்வோம் என்று எதிர்பார்த்து எதையும் செய்யக் கூடாது. வீட்டிலிருந்து கொளுத்தினாலும் போதும். கொளுத்திக் கையில் பிடித்துக் கொண்டு போலீஸின் எதிரில் நில்லுங்கள். 'கைது செய்கிறேன்' என்றதும்—பேசாமல் போலீஸ் பின்னால் போய்விடுங்கள். முன்கூட்டியே கைது செய்தாலும் செய்வார்கள்; கூப்பிட்டால் போய்விடுங்கள். அரசியல் சட்டம் கொளுத்தும் காரியத்திற்கு இத்தனை பேர் கைதாகி இருக்கிறார்கள் என்ற கணக்குப் போதும். மூன்று வருடம் போடட்டும்; குடும்பத்தோடு சிறையில் இருக்கலாம்.

'சட்டத்தைக் கொளுத்தவேண்டாம்' என்பவர்கள் இன்னவழி, இன்ன பரிகாரம் என்று சொல்லட்டுமே—கேட்டுக்கொள்கிறேன்! 'இதற்குப் பரிகாரம் சொன்னால்—மரியாதை குறைந்துவிடும்; சட்டம் செய்கிறோம்; செக்ஷன் இருக்கிறது' என்று கருதி அடக்கப் பார்க்கிறார்களே தவிர, எங்களுக்கும் உரிமை இருக்கிறது என்பதைக்கூட யோசிப்பதில்லை. நான் ஏன் தாழ்ந்த சாதி என்று கேட்க உரிமையில்லை என்றால்—இது என்ன சுயராஜ்யம்?

இந்த உணர்ச்சியை—உரிமையை மதிக்க வேண்டும் என்ற எண்ணமே வரவில்லையே? நாங்களும் மனிதர்கள்—இந்த நாட்டு மக்கள்—எங்களுக்கும் உரிமை உண்டு என்பதைக்கூடக் கருதாமல் அடக்குமுறைதான் பதில் என்றால், என்ன நியாயம்? உள்ளபடியே ஆத்திரப்பட்டே கேட்கிறோம்—நாங்கள் வயிற்றுப் பிழைப்புக்கு, விளம்பரத்திற்காகவா இந்தக் காரியம் செய்கிறோம்? இல்லை—தொல்லை கொடுப்பதற்காக ரகளை செய்கிறோமா? ஆட்சியிலிருப்பவர்களுக்குக் கஷ்டம் தரக்கூடாது என்பதுதானே எங்கள் கவலை!

[எழும்பூரில், 10-11-1957-ல் சொற்பொழிவு—'விடுதலை' 13-11-1957]



www.thamizham.net - Free E book No 3041

நாங்கள் அரசியல் சட்டம் முதலியன கொளுத்துவது பற்றிச் சென்னை அரசாங்கம் செய்திருக்கும் புதிய சட்டம் விஷயமாய்ப் பொது மக்கள் சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை. மற்றும், என்மீது கடுந்தண்டனைக்கு ஏற்ற வழக்குத் தொடர்ந்திருப்பதுபற்றியும் பொதுமக்கள் கவலைப்படவேண்டியதில்லை.

இவைகளெல்லாம் பார்ப்பனர்களால் எய்யப்படும் அம்புகளே தவிர, சென்னை அரசாங்க மந்திரிகளாகிய அம்புகளுக்குச் சிறிதும் சம்பந்தப்படாததேயாகும். அன்றியும், பார்ப்பான் வெளியேற்றப்படவேண்டும் என்பதற்கும், வடநாட்டான் ஆதிக்க ஆட்சியிலிருந்து (இந்திய யூனியனிலிருந்து) பிரிந்து முழு சுதந்திரத் தமிழ்நாடு ஆட்சிபெற்று ஆக வேண்டும் என்பதற்கும் இவை (பார்ப்பனர் நடத்தைகளும், அவர்களுக்கு வடநாட்டான் ஆதரவுகளும்) சரியான காரணங்களாகும். அற்காகத் துரிதமாகவும், தீவிரமாகவும் கிளர்ச்சி செய்யவும், இது வலிமைமிக்க மக்களின் தூண்டலாகும்.

சென்னை அரசாங்க மந்திரிகள் நம் மக்களின் கல்வி சம்பந்தமாக எடுத்துக்கொண்டிருக்கிற முயற்சிகள் நாம் பாராட்டத்தக்கதும், நன்றி செலுத்தத் தக்கதுமாகும்–இம் முயற்சி பார்ப்பனர்களுக்குப் பெரும் கேடானதால், இந்தப் பார்ப்பனர்கள் என்மீது கொண்டிருக்கிற ஆத்திரத்தையும் பழிவாங்கும் எண்ணத்தையும்விட, இன்றைய மந்திரி சபை மீது கொண்டுள்ள ஆத்திரமும், பழிவாங்கும் எண்ணமும்தான் பேயாட்டமாக ஆடி, இப்படிப் பட்ட கொலைகளை உண்டாக்கிக் கொண்டிருக்கின்றன. ஆனால், பொது மக்கள் இச் சம்பவங்களுக்காக இன்றைய மந்திரி சபையிடமோ, குறிப்பாக—திரு. காமராசரிடமோ எந்தவிதமாக அதிருப்தியும் காட்டவோ, கொள்ளவோ வேண்டியதில்லை.

புதிய சட்டம் செய்ததன் பயனாகவும், என்மீது வழக்குத் தொடர்ந்திருப்பதன் பயனாகவும், எனக்கு என்ன சம்பவிக்கும் என்பதைவிட—மந்திரிகள்மீது பொதுமக்களுக்கு ஆத்திரமும் துவேஷமும் ஏற்பட வேண்டுமென்ற கருத்துதான் பார்ப்பனர்களுக்கு முக்கியமானது.

ஆதலால், அக் கருத்து வெற்றியடையும்படியாக நடந்து கொள்ளக்கூடாது என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். புதிய சட்டத்துக்குப் பொதுமக்கள் காண வேண்டிய எதிர்ப்பு என்னவென்றால், பதினாயிரக்கணக்கான மக்கள் அரசியல் சட்டத்தைக்கொளுத்தி, அத்தாட்சி காட்டுவதுதான்!

இதுவரையில் திராவிடர் கழகத் தோழர்களுக்கு இம் மாதிரியான நல்ல வாய்ப்புக் கிடைக்கவேயில்லை; இனியும் கிடைக்குமா என்பதும் சந்தேகந்தான்.

ஆகவே, கழகத் தோழர்கள் ஒவ்வொருவரும் இதில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

['விடுதலை'–அறிக்கை—16-11-1957]

சட்டக்குழு உறுப்பினர்கள் :

1. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் (பார்ப்பனர்)
2. டி. டி. கிருஷ்ணமாச்சாரி (பார்ப்பனர்)
3. என். கோபால்சாமி அய்யங்கார் (பார்ப்பனர்)
4. கே. எம். முன்ஷி (வடநாட்டுப் பார்ப்பனர்)
5. டாக்டர் B. R. அம்பேத்கார் (ஆதித் திராவிடர்)
6. முகமது சாதுல்லா (முஸ்லிம்)

1. 1077 நாள் செலவு செய்து உருவாக்கிய இந்தச் சட்டத்தில் வெகு ஜாக்கிரதையாக பார்ப்பனர் (ஆரிய பிராமணர்) உயர்வும், பார்ப்பனரல்லாத மக்கள் (திராவிடர்–'சூத்திரர்')

www.thamizham.net - Free E book No 3041

இழிவும் சாஸ்திரப் படிக்குக் கொண்ட இந்துமதத்தைக் காப்பது, மத உரிமை அளிப்பது என்கிற தன்மையில் தங்கள் ஆதிக்கத்தை நிலை நிறுத்தத் தகுந்தபடி பாதுகாப்புச் செய்து கொண்டார்கள்.

2. மேலும், 'சூத்திரர்' என்று கூறப்படுகின்ற மக்களின் பிரதிநிதிகள் அறவே இல்லாமல், 6 பேர்களில் 4 பேர் பார்ப்பனர்களாகவே கொண்டு—மற்றும் இரு இனத்தின் பிரதிநிதிகளுக்கும்கூட விலை கொடுத்து விட்டுச் செய்துகொண்டதுதான் இந்திய அரசியல் சட்டம் என்ற இந்த அரசியலமைப்பாகும்.

3. இந்த நாட்டு வாக்காளர்களின் உண்மையான பிரதிநிதிகளைக் கொண்டல்ல, இத்தச் சட்டம் செய்யப்பட்டது. எவ்வாறெனில், 1946-ல் நடைபெற்ற தேர்தலின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட மாகாண சட்டசபை அங்கத்தினர்களால் ஓட் செய்யப்பெற்று, அரசியல் நிர்ணயசபை அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். பிரிட்டிஷார் அளித்த இந்திய சுதந்திரச் சட்டமே (Indian Independence Act) 1947-ல் தான் நமக்குக் கிடைத்தது! நாடு இரண்டாகப் பிரிந்த பிற்பாடு எஞ்சியிருந்த உறுப்பினர்களால், மாகாணங்களிலிருந்து 235 பேர்களும், சமஸ்தானங்களிலிருந்து 72 பேர்களுமாக—மொத்தம் 307 பேர்கள்தான் அப்போது இருந்தார்கள். அப்போது ஓட்டு உரிமை பெற்றிருந்த வாக்காளர் எண்ணிக்கை இன்றைய வாக்காளர்களின் எண்ணிக்கையில் பன்னிரண்டு சத விகிதத்தினரேயாவர். எனவே, இது எப்படி மக்கள் பிரதிநிதிகளால் உருவாக்கப்பட்டதாகும்? நாடு 'சுதந்திர' மடையாத காலத்தில் நடந்த எலக்ஷன் பிரதிநிதிகளால்—காங்கிரஸ் பார்ப்பனப் பிரதிநிதி களால் ஏற்படுத்தப்பட்ட இந்தச் சட்டம் நம்மை—அதாவது பார்ப்பன ஆதிக்கத்தினின்று விடுதலை பெறுவதைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கிற நம்மை எப்படிக் கட்டுப்படுத்த முடியும்?

4. மற்றும், மொழி சம்பந்தமாகவும், வரி சம்பந்தமாகவும் பொருளாதார உரிமை சம்பந்தமாகவும், வெளி நாட்டார் சுரண்டுதல் சம்பந்தமாகவும் அதிகாரங்களைத் தங்களுக்கே வைத்துக்கொண்டு—எந்த வகையிலும் மாற்ற முடியாத அளவுக்கு இரும்புக் கூட்டுப் பாதுகாப்பை இந்தச் சட்டத்தின் மூலம் பார்ப்பனர்களும் வடநாட்டார்களும் ஏற்படுத்திக்கொண்டுள்ளார்கள். அதிலிருந்து விடுபட ஆசைப்படுகிறோம் என்பதைக் காட்டுவதற்காகத்தான் 'அரசியல் சட்ட எரிப்பு' என்பதாகும்.

இந்திய அரசியலமைப்புப் பீடிகை :

இந்தியாவின் மக்களாகிய நாம், இந்தியாவை ஒரு சம்பூரண அதிகார ஜனநாயகக் குடியரசாக அமைத்து அதன் குடிகள் அனைவருக்கும் —

சமூகம், பொருளாதாரம், ராஜீயம்—இவற்றில் நீதியும் ;

எண்ணம், வெளியீடு கோட்பாடு, மதம், வழிபாடு—இவற்றில் சுதந்திரமும் ;

அந்தஸ்து, வாய்ப்பு—இவற்றில் சமத்துவமும் கிடைக்குமாறு செய்யவும் தனியொரு வரின் கண்ணியமும், தேச சமுதாயத்தின் ஒருமைப்பாடும் நிலைபெறும் வண்ணம் அவர்கள் அனைவரிடமும் சகோதரத்துவம் ஓங்குமாறு செய்யவும் மனப் பூர்வமாகச் சங்கற்பம் செய்துகொண்டமையால், நமது அரசியல் நிர்ணய சபையிலே 1949-ஆம் வருஷம் நவம்பர் மாதம் இருபத்தாறாம் தேதியாகிய இன்று, இதனால் இந்த அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டு, சட்டம் இயற்றி நமக்கு நாமே வழங்கிக் கொள்கிறோம்.

அடிப்படை உரிமைகள் :

13. (2) இப் பாகத்தால் அளிக்கப்பட்ட உரிமைகளைப் பறிக்கும் அல்லது சுருக்கும் சட்டம் எதையும் ஒரு இராஜ்யம் இயற்றலாகாது. இப் பகுதியை மீறி இயற்றப்படும் சட்டம் எதுவும் அப்படி மீறிய அளவிற்குப் பயனற்றதாகும்.

www.thamizham.net - Free E book No 3041

மத சுதந்திர உரிமை :

25. (1) அமைதி, நல்லொழுக்கம், ஆரோக்கியம், இவற்றிற்கும்—இந்தப் பாகத்தினுள்ள மற்றைய ஷரத்துக்களுக்கும் உட்பட்டு, மக்கள் அனைவரும், மனச் சாட்சி சுதந்திரத்திற்கும் தடையின்றி எம் மதத்தையும் தழுவுதல், அனுஷ்டித்தல், பரவச் செய்தல் இவை பற்றிய உரிமைக்கும் சமமான பாத்தியதை உடையவராவார்.

பண்பாடு, கல்வி இவைபற்றிய உரிமைகள் :

29. (1) தனிப்பட்ட மொழி, லிபி, அல்லது பண்பாடு இவற்றை ஏற்கனவே உடையவராய், இந்தியாவின் ஆட்சிப் பரப்பின் அல்லது அதன் ஒரு பாகத்தில் வசிக்கும் குடிகளின் எப் பிரிவினரும் அவற்றைச் சிதையாமல் காக்க உரிமை உள்ளவர் ஆவார்.

(2) மதம், இனம், சாதி, மொழி, இவை காரணமாக அல்லது இவற்றுள் எவையேனும் காரணமாக இராஜ்யத்தினால் பராமரிக்கப்பட்ட அல்லது இராஜ்ய நிதிகளிலிருந்து உதவி பெறுகின்ற எந்தக் கல்வி ஸ்தாபனங்களிலும் சேருவதற்கு எக் குடியும் மறுக்கப்படலாகாது.

அரசியலமைப்பின் திருத்தம் :

368. இந்த அரசியலமைப்பின் திருத்தம் அதற்கென பார்லிமெண்ட் சபை ஒன்றில் ஒரு மசோதாவைக் கொண்டுவருவதால் மட்டுமே ஆரம்பிக்கப்படலாம். அச் சபை ஒவ்வொன்றிலும்–அம் மசோதா அச் சபையின் மொத்த அங்கத்தினர்களில் பெரும்பான்மையோராலும், வந்திருந்து ஒட்டுச் செய்யும் அச் சபையின் அங்கத்தினர்களில் மூன்றில் இரண்டு பங்கிற்குக் குறையாத பெரும்பான்மையோராலும், நிறைவேற்றப்பட்டால், அது ராஷ்டிரபதியிடம் அவர் அனுமதிக்காகச் சமர்ப்பிக்கப்பட வேண்டும்; அம் மசோதாவிற்கு அனுமதி அளிக்கப்பட்டதும் இந்த அரசியலமைப்பு அம் மசோதாவின் ஷரத்துக்களின்படி திருத்தம் பெற்றதாகும்.

இவைபோன்றே இன்னும் பல அனுமதிகள் உள்ளன.

குறிப்பு: இந்த அரசியல் சட்டத்தை உருவாக்கின ஆறுபேர்களில் நான்கு பேர் பார்ப்பனர்; இதை நிறைவேற்றிய அரசியல் நிர்ணய சபை என்பது வயது வந்தோரின் வாக்குரிமை பெறாதவர்களை—பெரும்பாலும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களையே கொண்டதாகும்.

இந்தச் சட்டத்தில் இந்துமதத்துக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது; இந்து மதத்தில் சாதிக்குப் பாதுகாப்பு இருக்கிறது; சாதியைக் காப்பாற்றத்தான் இடமிருக்கிறது. இதை எளிதில் திருத்தியமைப்பதற்கும் சாதி ஒழிப்புக்காரருக்கு வசதியில்லை; வாய்ப்பும் இல்லை. (368-வது பிரிவைப் படியுங்கள்.)

ஆதலால், சாதியை ஒழிக்க விரும்புகிறவர்கள், தனித் திராவிட நாடு பெற விரும்புகிறவர்கள், தமிழ்நாடு சுரண்டப்படுவதைத் தடுக்க விரும்புபவர்கள்—என்ன செய்வது?

இதை எரிப்பதன் மூலம் நம் எதிர்ப்பைக் காட்டிக்கொள்வதைத் தவிர, வேறு வழி என்ன?

['விடுதலை'—அறிக்கை—17-11-1957]

26-ந்தேதி கிளர்ச்சியில் நீதிமன்றத்தில் கூறவேண்டியது :

நான் சாதி ஒழிப்புக் கிளர்ச்சிக்காரன். இந்திய அரசியல் சட்டத்தில் சாதிக்கும், அதை உண்டாக்கிய மதத்துக்கும் பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. அரசியல் சட்டம் தமிழர் நலனுக்காக வகுக்கப் படவுமில்லை; அச் சட்டத்தைத் திருத்தக்கூடிய வசதி தமிழர்களுக்கு இல்லை.

www.thamizham.net - Free E book No 3041

ஆதலால், என் எதிர்ப்பைக் காட்டிக்கொள்ளும் அறிகுறியாக இச் சட்டத்தைக் கொளுத்தினேன். இப்படிக் கொளுத்துவதற்கு எனக்கு உரிமை உண்டு. இதனால் எந்த உயிருக்கும், எந்தப் பொருளுக்கும் சேதமில்லை. ஆதலால், நான் குற்றவாளி அல்ல. இந்த நீதிமன்ற நடவடிக்கையில் நான் கலந்துகொள்ள விரும்பவில்லை. நான் எதிர் வழக்காட விரும்பவில்லை. நான் குற்றவாளி என்று கருதப்பட்டால், அதற்குரிய தண்டனையை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

[' விடுதலை '—அறிக்கை—21-11-1957]

## 2. சட்டத்தைக் கொளுத்துங்கள்

நான்—மூன்று ஆண்டுக்கோ, பத்து ஆண்டுக்கோ, நாடு கடத்தலுக்கோ, தூக்குத் தண்டனைக்கோ, ஆளாக்கப்பட்டாலும் ;

மற்றும், பிரிட்டிஷ்காரன் காங்கிரஸ் கிளர்ச்சியின்மீது கையாண்ட எந்த விதமான கொடிய, தீவிரமான அடக்கு முறைகளை நம்மீதும், கழகத்தின் மீதும் பிரயோகித்தாலுங் கூட, அவைகளுக்குப் பயப்பட்டு என் இலட்சியத்தையோ, திட்டத்தையோ, மாற்றிக் கொள்ளப்போவதில்லை.

கழகத் தோழர்களே ! தீவிர இலட்சியவாதிகளே !

நீங்கள் மூன்று ஆண்டு தண்டனைக்குப் பயந்துவிட வேண்டியதில்லை ; பயந்துவிட மாட்டீர்கள் ! சட்டத்தைப் பார்த்துப் பயந்து விட்டதாகப் பெயர் வாங்காதீர்கள் !

ஆகவே, இஷ்டப்பட்டவர்கள் தஞ்சை மாநாட்டுத் தீர்மானத்தை நிறைவேற்ற—பெயர் கொடுங்கள் !

[' விடுதலை '—அறிக்கை—11-11-1957]

சட்டத்தைக் கொளுத்துங்கள் !

சாம்பலை மந்திரிக்கு அனுப்புங்கள் !

சட்டத்தை நிறைவேற்றிவிட்டதன் மூலம், அரசாங்கத்தினர் ' சாதியைக் காப்பாற்றித் தான் தீரவேண்டும் ' என நமக்குச் சவால்விட்டு இருக்கின்றனர். இந்தச் சவாலுக்கு, நீங்கள் சட்டம் கொளுத்தாவிட்டால் மனிதர்கள்தானா ?

சட்டம் கொளுத்திச் சாம்பலைச் சட்டம் செய்த மந்திரிக்கு அனுப்பிக்கொடுங்கள் !

சட்டம் கொளுத்தின மக்கள் இந்த நாட்டில் இருக்கிறார்கள் என்பதை அதன் மூலம் கொஞ்சமாவது தெரிந்துகொள்ளட்டும் !

[' விடுதலை '—அறிக்கை—15-11-1957]

சிறை செல்லுமுன் பெரியார் வேண்டுகோள்:

நவம்பர் 25-ந்தேதி நடக்கும் விசாரணையில் எனது ' முச்சலிக்கா பாண்டு ' கேன்சல் ஆகி என்னைச் சிறைப்படுத்தும்படியான நிலைமை பெரும்பாலும் ஏற்படலாம். இந்தச் சமயத்தில் பொதுமக்களுக்கு ஏதாவது சொல்லவேண்டியது அவசியமாகும்.

நான் சிறைப்படுத்தப்பட்டு விட்டேன் என்பதாலேயோ, அல்லது பொதுமக்கள் கொளுத்துவார்கள் என்கிற எண்ணத்தால் அதைத் தடுக்க அரசாங்கத்தார் ஏராளமான மக்களைக் கைதுசெய்து விட்டார்கள் என்ற எண்ணத்தாலேயோ, புதிய சட்டத்தின்படி நீண்டநாள் தண்டிக்கப்பட நேரிடும் என்ற அச்சத்தினாலேயோ—யாரும் அதாவது கொளுத்தவேண்டியது அவசியந்தான் என்று கருதுகிறவர்கள், எந்தவிதமான தயக்கமும் இல்லாமல், அரசியல் சட்டத்திலிருந்து பொறுக்கி எடுத்துப் போட்டிருக்கிற, நமக்குக் கேடான நாலைந்து பிரிவுகளைக்கொண்ட பிரசுரத் தொகுப்பைக் கொளுத்தியே தீர வேண்டியது முக்கியமான காரியம் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

www.thamizham.net - Free E book No 3041

இதைவிட முக்கியமான காரியம் ஒன்றை வணக்கமான வேண்டுகோளாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதை அவசியம் ஒவ்வொருவரும் கவனிக்க வேண்டியது.

என்னை, 'ரிமாண்டு' செய்வதனாலேயோ மற்றும் இப்பொழுது 'செஷன்சில்' நடைபெறும் வழக்கின் பெயரால் என்னை நீண்டநாள் அரசாங்கத்தார் தண்டனைக் குள்ளாக்கி விடுவதாலேயோ பொதுமக்கள் யாரும் ஆத்திரப்படுவதற்கோ, நிலை குலைந்து விடுவதற்கோ ஆளாகாமல் மிக்க மகிழ்ச்சியோடு அச் செய்தியை வரவேற்கவேண்டும். எந்தவிதமான கலவரமோ, பலாத்காரமோ—பார்ப்பன சமுதாயத்தைச் சேர்ந்த ஆண் களுக்கோ, பெண்களுக்கோ, குழந்தைகளுக்கோ துன்பம், வேதனை உண்டாக்கக் கூடியதான எப்படிப்பட்ட பலாத்காரமான செய்கையையும்; நஷ்டம் உண்டாக்கக்கூடிய தான செய்கையையும்—அதாவது ஆயுதப் பிரயோகமோ, அடிதடியோ, நெருப்புக் கொளுத்துதலோ முதலிய ஒரு சிறு காரியம்கூட நடத்தாமலும், நடைபெறாமலும் இருக்கும் படியும் ஒவ்வொருவரும் நடந்துகொள்ளவேண்டும். நான் ஆயுதப் பிரயோகம் செய்ய வேண்டும் என்றும், அக்கிரகாரங்கள் கொளுத்தப்பட வேண்டுமென்றும் சொன்னதும், சொல்லிவருவதும் உண்மை. ஆனால், அவை இப்பொழுது அல்ல. அதற்கான காலம் இன்னும் வரவில்லை—வரக்கூடாதென்றே ஆசைப்படுகிறேன். அப்படிப்பட்ட காரியங் களில் ஈடுபடுவதற்குக் காலம் எப்போதுவரும் என்றால், அரசியல் சட்டத்தைக் கொளுத்து வது முதலிய இன்னும் நான்கைந்து கட்டங்கள் நடத்தி, அவைகளில் ஒன்றும் பயனில்லை; வெற்றிக்கு அவை பயன்படவில்லை என்று கண்டு, பலாத்காரத்தைத் தவிர வேறு வகை யில்லை என்ற முடிவுக்கு வந்த பிறகுதான் நாம் அவற்றில் இறங்கவேண்டியவர்களாக இருக்கின்றோம்.

ஆனால், இந்த என்னுடைய தாழ்மையான வேண்டுகோளை ஒவ்வொருவரும் கருத்தில் வைக்கவேண்டும்.

இப்பொழுது எனக்கு ஏற்படக்கூடும் என்று எதிர்பார்க்கப்படும் தண்டனையானது நம்முடைய அடுத்த திட்டங்களுக்கு வலுவான ஆதரவுகளையும், உணர்ச்சியையும், ஊக்கத்தையும்—துணிச்சலோடும் வேகத்தோடும் ஈடுபடுத்துவதற்கு வலுமையான சாதன மாக அமையும். பொதுமக்கள்மீது எனக்குப் பலமான ஆதிக்கம் இருக்கிறது என்று அரசாங்கமும், இந்தியாவிலுள்ள மற்ற மக்களும் எண்ணியிருக்கிற ஒரு எண்ணத்திற்குப் பாதகம் ஏற்படாமல் பொதுமக்கள் நடந்துகொள்ள வேண்டுமென்றால்—நான் மேலே வேண்டியிருக்கிறபடி எந்தவிதமான தண்டனைக்குப் (ஏற்பட்டால்) பிறகு பொதுமக்க ளிடையில் மேற்சொன்னபடி—எந்தவிதமான கலவரமும், செய்கையும் ஏற்படாமல் இருக்க வேண்டிக்கொள்கிறேன். அதிகாரிகளிடத்தில், போலீஸ்காரர்களிடத்தில் மரியாதையாகவும், கட்டுப்பாடாகவும் நடந்துகொள்ள வேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

['விடுதலை'-தலையங்கம்—25-11-1957]

## 3. நேருவின் முட்டாள்தனம்

'இந்த அரசியல் சட்டம் பிடிக்க வில்லையானால் நாட்டைவிட்டு வெளியேறிவிடு'— பண்டிதநேரு.

இன்றைய ஆட்சி முட்டாள்தனமான, காட்டுமிராண்டி ஆட்சி என்றும், இது பார்ப்பன ஆட்சி என்றும், இது சர்வாதிகாரக் கொடுங்கோன்மை ஆட்சியென்றும், இது திராவிட மக்களை ஆரியர் (பார்ப்பனனும், வடநாட்டானும்) அடிமை கொண்ட ஆட்சியென்றும், இந்த வடநாட்டாராலும் பார்ப்பனராலும் அவர்களது நலனுக்கும் உயர்வுக்கும் ஆகவே செய்யப்பட்டிருக்கும் அரசியல் சட்டமானது மனுதர்ம சட்டத்தின் மறுபதிப்பே என்றும்— 1949-லேயே நான் சொன்ன கருத்துக்கு இது எடுத்துக்காட்டாக இல்லையா என்பதைத் தமிழ் மக்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டுகிறேன்.

www.thamizham.net - Free E book No 3041

தவிரவும், 'இந்த அரசியல் கொடி உனக்குப் பிடிக்கவில்லையானால் நாட்டை விட்டு வெளியேறிவிடு' என்றும் பேசியிருக்கிறார். யார் என்றால்—பண்டித ஜவகர்லால் நேரு!

அவர் என்ன சாதி என்றால், பார்ப்பன புரோகித சாதி; எந்த நிலையில் என்றால், இந்தியா முதல் மந்திரி (ஆட்சித் தலைவர்) என்ற நிலையில்.

'தோலைக் கடித்துத் துருத்தியைக் கடித்து மனிதனையே கடிக்க வந்து விட்டது' என்று ஒரு பழமொழி உண்டு. அதற்கேற்ப, இந்தப் பார்ப்பனர்கள் சாதி காரணமாகத் தாங்கள் சம்பாதித்துக் கொண்ட உயர் பதவிகளையும் ஆதிக்கங்களையும் ஆதரவாகக் கொண்டு சட்டம் செய்து கொண்டு, 'இந்தச் சட்டம் பிடிக்க வில்லையானால்—அதாவது, சாதி முறைக்குப் பாதுகாப்பளிக்கும் இந்தச் சட்டம் உனக்குப் பிடிக்க வில்லையானால்—இந்தச் சட்டத்திற்குக் கீழ்ப்பட்டு, நீ சூத்திரனாய்–பார்ப்பானின் வைப்பாட்டி மகனாய் வாழ உனக்கு இஷ்டமில்லையானால் இந்தத் திராவிட நாட்டை, தமிழ் நாட்டை விட்டு வெளியேறி விடு; இல்லாவிட்டால் ஜெயிலில் வைப்பேன்; இல்லாவிட்டால் பைத்தியக்கார ஆஸ் பத்திரியில் வைப்பேன்' என்பதாகப் பேசியிருக்கிறார். (பார்ப்பன மொழியில் 'முழக்கி' இருக்கிறார்.)

எங்கு முழக்கியிருக்கிறார் என்றால், தமிழ்நாட்டின் மார்பு, (இதயம்–மத்திய ஸ்தானம்) போன்ற திருச்சி நகரில், தமிழர் உணர்ச்சிக்குத் தாயகமான சுமார் 20-30 ஆயிரம் பேர் நகர மக்கள் கொண்ட மாபெரும் தமிழர் கூட்டத்தில் சொல்லியிருக்கிறார்.

சொன்னது மட்டுமல்லாமல் இப்படிச் சொல்லிவிட்டுத் திரும்பித் தனது ஊருக்கும் பறந்து சென்றிருக்கிறார்! எப்படியென்றால்–8,000 பேர் கொண்ட போலீஸ் பாதுகாவலில்.

உண்மையாக, உள்ளது உள்ளபடி சொல்லவேண்டுமானால், இந்தப் 'பனியா'–'பார்ப்பன' ஆட்சி ஏற்பட்ட பிறகு தமிழ்நாட்டில் தமிழர், சிறையில் இருக்கும் கைதிகள் போலவே நடத்தப்பட்டு வருகிறார்கள்; 'கான்விக்ட் வார்டர்'களாகத் தமிழர் சேவகர்கள், தமிழர் அதிகாரிகள் ஆகியவர்கள் இருந்துவருகிறார்கள்.

தமிழர்கள் மந்திரிகளாக இருந்தாலும் சரி, உயர்ந்த தலைமை மாவட்ட நீதிபதி களாக இருந்தாலும் சரி, நிர்வாக அதிகாரிகளாக இருந்தாலும் சரி, போலீஸ் அதிகாரி களாக இருந்தாலும் சரி, இவர்கள் யாவருமே கான்விக்ட் வார்டர்களைப் போலவேதான் இருந்து வரவேண்டியதாக இருக்கின்றனர்.

(கான்விக்ட் வார்டர் என்றால், நல்ல அடிமையாக இருந்து விடுதலை பெறக் கருதி சிறையில் தொண்டுசெய்யும் நீண்ட நாட்கள் தண்டனை பெற்ற கைதி.)

இந்தப் பாதுகாப்பான நிலையில்தான் நேரு பார்ப்பனர் திருச்சி நகரத்தில், திருச்சி மக்கள் முன்னிலையில், 'எங்களுக்கு அடங்கிக் கீழ்ப்பட்டு சூத்திரனாக இருந்தால் இரு; இல்லாவிட்டால் நாட்டைவிட்டு வெளியே போ; போகாவிட்டால் ஜெயிலில் போடுவேன்' என்று எக்காளமிட்டுச் சென்றுவிட்டார்.

இந்தச் சமயத்தில் மந்திரிகளைப்பற்றி, போலீசாரைப்பற்றி, சிறிதும் சிந்திக்காமல் அவர்கள் ஏற்படுத்திக்கொண்ட வாழ்விற்கேற்ப அதைப் பார்த்துக்கொள்ள அப்படி (அதாவது கான்விக்ட் வார்டர்களாக) நடந்துகொள்ள வேண்டியவர்கள் ஆனார்கள். அவர்களை மறந்துவிடுங்கள்! அப்படி மறக்கும்போது அந்த இடங்களில் பார்ப்பனர்கள் இருந்தால் எப்படி இருக்கும் என்பதை நினைவில் வைத்து, மறந்துவிடுங்கள்.

ஆனால், தமிழ் மக்களே! இந்தச் சந்தர்ப்பத்தில் நீங்கள் என்ன செய்யப்போகி றீர்கள்? உங்களுடைய கடமை என்ன என்பதுதான் இப்போதைய பிரச்சினை.

அரசியல் சட்டம் எதற்காகக் கொளுத்தப்பட்டது? யாருக்காகக் கொளுத்தப்பட்டது? 3000 பேர் எதற்காகச் சிறைபிடிக்கப்பட்டார்கள்? நான் எதற்காகச் சிறைத் தண்டனை இடப்படுகிறேன்?

www.thamizham.net - Free E book No 3041

பார்ப்பனர்களைக் குத்தியதற்கா, கொன்றதற்கா, பார்ப்பனச் சேரியில் நெருப்பு வைத்துக் கொளுத்தினதற்கா, அல்லது பார்ப்பனப் பெண்களை இம்சித்ததற்கா? இல்லவே இல்லை. இதற்காக இன்று யாரும் சிறையிலில்லை.

குத்தச் சொன்னதற்காகவோ, கொல்லச் சொன்னதற்காகவோ, கொளுத்தச் சொன்ன தற்காகவோ கூட இன்று யாரும் சிறையிலில்லை; என்றாலும், என் ஒருவன் பேரில் மட்டுந்தான் அப்படிப்பட்ட குற்றம் சாட்டப்பட்டு இருக்கிறது. அதுவும், 'வெள்ளரிப் பழத்திற்குப் பூண் போட்டுக் கெட்டிப் படுத்துவது' போன்ற குற்றந்தான் சாட்டப் பட்டிருக்கிறது. இது எப்படியோ போகட்டும், அதைப்பற்றித் தமிழர்களாகிய உங்களுக்குக் கவலை வேண்டாம்.

'சாதி காப்பாற்றப்படும் சட்டம் எங்களுக்கு வேண்டாம்; சாதியை ஒழிக்க இயலாத சட்டம் எங்களுக்கு வேண்டாம்; அதைத் திருத்து; சாதி ஒழிக்கப்பட வசதி செய்து கொடு,' என்பதற்கு அறிகுறியாக, சாதியைப் பாதுகாக்க வசதியுள்ள பாகத்தைக் குறித்த ஒரு துண்டுக் காகிதத்தை, அறிக்கை கொடுத்துக் கொளுத்துவதன் மூலம் வலியுறுத்திக் காட்டி யதற்காகக் குழந்தைகள், குஞ்சுகள், வயோதிகர்கள், பெண்கள், கர்ப்பப் பெண்கள், இளைஞர்கள் உட்பட 3,000 மக்களை—அதுவும் கொளுத்தின மக்கள் 10,000 பேர்களில் பலவிதமாக 7,000 பேர்களை விட்டுவிட்டு, 3,000 பேர்களைச் சிறையில் அடைத்து, ஊசிப் போன சோளக் கஞ்சியையும், கேப்பைக் கூழையும், மக்கிப்போன அரிசிச் சாத உருண்டை யையும், களி மொத்தையையும் கொடுத்துக் கொடுமைப் படுத்துகிற இந்த அட்டூழியத்திற்கு என்ன பதில் சொல்லுகிறார்கள்?

சிறையில் கொடுமைப் படுகிறவர்களில் 1, 2, 3 இலட்சம் ரூபாய் மதிப்புள்ள சொத்துக் காரர்களும், ஆண்டொன்றுக்கு 1000, 5,000, 10,000 ரூபாய்க்குமேல் வரும்படி உள்ளவர் களுமான பல செல்வவான்களும், உயர் வாழ்வு வாழுகின்ற சுக புருடர்களும்—அது போன்றே தாய்மார்களும் தகுதிக்கு மேம்பட்ட மக்களாக இருந்துவருவது அரசாங்கத் திற்கே தெரியும்.

அப்படிப்பட்ட மக்களையும் இப்படிக் கொடுமைப் படுத்துவதற்கு, நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்?

வெள்ளையனான அன்னியனாட்சிக் காலத்தில், 'வெள்ளையனே வெளியேறு' என்ற கூட்டத்தையும், வெடிகுண்டு ஏந்திய கூட்டத்தையும், தண்டவாளங்களைப் பெயர்த்து, இரயிலைக் கவிழ்த்து, தபாலாபீசுகளுக்கும், நீதி ஸ்தலங்களுக்கும், இரயில்வே ஸ்டேஷன் கட்டடங்களுக்கும் நெருப்பு வைத்துக் கொளுத்திக் கோடிக்கணக்கான ரூபாய் சொத்துக்களை, ஆயிரக்கணக்கான உயிர்களை நாசப்படுத்தியவர்களையும் மனிதத் தன்மைக்கு மேலாகவே நடத்தினான்.

'உங்கள் நாட்டை நீங்கள் ஆண்டு கொள்வதில் எனக்கு ஆட்சேபணையில்லை' என்று சொன்னான்.

'எங்களை, உங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் நாங்கள் மனப்பூர்வமாய்ப் போய் விடுகிறோம்; உங்கள் நாட்டை நீங்களே ஒப்புக்கொள்ளுங்கள்' என்று சொல்லி ஒப்பு வித்தானேதவிர, இப்படி வடகோடியிலிருந்து தென்கோடிக்கு வந்து, தென்கோடி மக்களை 'என்னுடைய ஆட்சி, என்னுடைய சட்ட திட்டம் உங்களுக்குப் பிடிக்கவில்லையானால் நீங்கள் இந்த நாட்டைவிட்டு வெளியேறிவிடுங்கள்' என்று சொல்லவில்லை.

இந்தப் பேச்சு நேருவின் கெட்டிக்காரத் தனத்தையும் வீரத்தையும் காட்டுகிறதா? அல்லது தமிழர்களின் மானங்கெட்ட தன்மையையும், மடமையையும், கோழை (சோதா)த் தனத்தையும் காட்டுகிறதா என்பதுதான் இங்கு சிந்தித்துப் பார்க்கத் தக்கதாகும்.

www.thamizham.net - Free E book No 3041

நேரு சாதியார் இந்த நாட்டில் எவ்வளவு கட்டுப்பாடு, ஒற்றுமை, தங்கள் இன நலத்தில் கவலை, முயற்சி முதலியவைகளோடு இருந்துகொண்டிருக்கிறார்கள் என்பதையும்; நம் சாதியார் என்பவர்கள் எவ்வளவு ஈனமாய், ஒற்றுமை இன்றி, இனத்தைப்பற்றிய உணர்ச்சியே இல்லாமல் சுயநல வாழ்வு வாழ்கிறார்கள் என்பதையும் ஒப்பிட்டுப் பார்த்தால் தமிழனைப் பார்த்து, 'ஓ தமிழர்களே! நீங்கள், எங்களுக்கு வைப்பாட்டி மக்களாய், இழி மக்களாய், சூத்திரர்களாய், கீழ்மக்களாய் இருந்தால் இந் நாட்டில் இருங்கள்; இல்லா விட்டால் இந் நாட்டைவிட்டு வெளியேறுங்கள்' என்று சொல்ல—இந்த நேருகூட வேண்டிய தில்லையே; இன்னமும் பரம முட்டாளும், படுகோழையும், பிழைக்க வழியற்ற—தெருவில் பிச்சையெடுத்து வயிறு பிழைக்கும் ஒரு பார்ப்பன விதவைகூடப் போதுமானதாகுமே!

இதில் நேருவுக்கொன்றும் கெட்டிக்காரத் தனத்தையோ, துணிவையோ, வீரத் தையோ பொருத்தவேண்டியதில்லை; தமிழனின் மானமற்ற சுயநல ஈனப் பிழைப்பும், கோழைத் தனமும், நாட்டைக் காட்டிக்கொடுத்து வயிறு வளர்க்கும் தன்மையும்தான் காரணமாகும்.

கொலைக் குற்றப் பிரிவின்படி குற்றம் சாட்டப்பட்டு முச்சலிக்கா பாண்டுமீது நான் வெளியில் இருக்கிறேன்; வழக்கு விசாரணை 12ஆம் தேதி நடக்க இருக்கிறது; நான் இந்த நாட்டுக்கு 100-க்கு 90 பேர்களைக் கொண்ட திராவிடர் கழகத்திற்குத் தலைவன்; இந்த நிலையிலும் சட்டம் எரித்தார்கள் என்று குற்றம் சாட்டப்பட்டு, இனியும் விசாரணை செய்துத் தீர்ப்புச் சொல்லவேண்டிய 2,000-க்கு மேற்பட்ட கழகத் தோழர்கள்—அதாவது, என்னைப் பின்பற்றுகிறவர்கள் சிறையிலும் விசாரணையிலும் இருக்கிறார்கள்; இந்த நிலையிலும் ஆட்சித் தலைவன் என்னும் பேரால் ஒரு நபர் இங்கு வந்து—அதாவது, எங்கு விசாரணை நடக்கிறதோ அந்த ஊருக்குவந்து, எந்த நீதிபதியும், மாஜிஸ்ட்ரேட்டும் விசாரிக்கவேண்டியவர்களோ—விசாரிக்கிறார்களோ, அந்த மாஜிஸ்ட்ரேட்டையும் நீதிபதி யையும் அழைப்பனுப்பி வரவழைத்து எதிரில் உட்கார வைத்துக்கொண்டு, அவர்களைப் பார்த்து, 'இவர்கள் (இந்தக் குற்றவாளிகள்) சிறையில் இருக்க வேண்டியவர்களாவார்கள்; இவர்கள் மன்னிக்கப்படக் கூடாதவர்கள்; மன்னிக்கத் தக்கவர்களல்லர்' என்று இடி முழக்கம் செய்கிறாரென்றால்—இந்த ஆட்சி எவ்வளவு நீதியும் நேர்மையும் நாணயமுமான ஆட்சி என்பதைத் தமிழர்கள்—மானம், ஈனம் இவற்றைப் பற்றிக் கவலைப்படாத தமிழர்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக!

இதில் ஒரு குறிப்பிடத்தக்கமான விஷயம் என்னவென்றால், இந்த நேரு 9ஆம் தேதிக்கு முதல் நாள் 8ஆம் தேதி-கொலை, கொள்ளை, கொளுத்தல், நாசவேலை, உயிருடன் தூக்கி நெருப்பில் போட்டுப் பொசுக்குதல், சுமார் 100, 200 பேர்களுக்குமேல் உயிரிழக்கச் செய் திருத்தல் ஆகிய காரியங்களைப் பற்றிப் பேசும்போது, 'விவகாரம் விசாரணையிலிருப்ப தால், அதைப் பற்றிப் பேசுவது நீதியாகாது; நேர்மையாகாது' என்று சொல்லிப் பேசாமல் வாயை மூடிக்கொண்டு வந்து, மறுநாள் காலையில் விசாரணை நடக்கும் இடத்திற்கே வந்து நீதிபதி அவர்களிடத்திலேயே நேரில், 'இவர்கள் ஜெயிலில் இருக்க வேண்டியவர்கள். நல்லபடி கடினமாகத் தண்டிக்கப்படவேண்டும். இல்லாவிட்டால், உங்களுக்கு உத்தியோகம் நிலைக்காது; பிரமோஷன் இருக்காது' என்று சொல்லுவதுபோல்—அதுவும் பெரிதும் பார்ப்பன 'நீதிபதிகள்' இடமே எக்காளமிட்டுச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறாரென்றால்—இந்த ஆட்சி, சட்டம், ஆட்சிக்கொடி மாத்திரமல்லாமல், ஆட்சிமுறை, ஆட்சிநீதி, ஆட்சிப் பீடம் ஆகியவையும் சுட்டுப் பொசுக்க வேண்டியதாகுமா, ஆகாதா? இதில் நமக்கு நலமான வாழ்வோ, நீதியோ கிடைக்குமா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்—தமிழர்களே! சிந்தித்துப் பாருங்கள்!

['விடுதலை'-தலையங்கம்—11-12-1957]



www.thamizham.net - Free E book No 3041

# 4. பெரியார் கோர்ட்டு வாக்குமூலம்

*திருச்சி செஷன்ஸ் கோர்ட்டார் அவர்கள் முன்பாக*

S.C. 93/1957

*திருச்சி விசேஷ போலீஸ் இன்ஸ்பெக்டர்—கம்பளைனெண்ட்*

vs

*பெரியார் ஈ. வெ. ராமசாமி—எதிரி*

*எதிரி தாக்கல் செய்த ஸ்டேட்மென்ட் :—*

'இந்த ஆட்சி கொடுமையான காட்டுமிராண்டி ஆட்சி. அதாவது, பச்சைப் பார்ப்பான் நீதி, நேர்மை, அன்பு, அறிவு அற்ற கொடுங் காட்டுமிராண்டிப் பார்ப்பனப் பாதகர்கள் ஆட்சி.

இந்த ஆட்சியில் இப்போது இயற்கையாகவே நீதி கிடைக்கமாட்டாது. அதிலும், பார்ப்பனத் தலைவனும் பார்ப்பன ஆட்சித் தலைவனுமான முதல் மந்திரி வேஷத்தைக் கொண்ட பண்டிட் நேரு ஆகிய பார்ப்பனர், வழக்கு நடக்கும் இந்த ஊருக்கு வந்து, வழக்கு நீதிபதியாகிய தங்களை அழைத்து வைத்துக்கொண்டு, தங்கள் முன்னிலையிலேயே 9-12-1957-ல் 'பார்ப்பனர்களைக் கொல்லவேண்டும் என்று சொன்னவர்களை விடக்கூடாது; ஜெயிலில் தள்ளவேண்டும்' என்று சொல்லியிருக்கிறார்.

நூற்றுக்கணக்கான பேர்கள் கொல்லப்பட்டு ஆயிரக்கணக்கான வீடுகள் கொளுத்தப் பட்ட வழக்கு பற்றி மதுரை ஜில்லாவில் திண்டுக்கல்லில் பேசும்பொழுது, 'வழக்கு விசார ணையிலிருக்கும்பொழுது நான் அதைப்பற்றி இங்கு பேசக்கூடாது' என்று சொல்லிவிட்டு, மேலும் அங்கு அந்தக் கொலை, கொள்ளை, எரிப்பு ஏற்படக் காரணமான சாதியை, சாதி உணர்ச்சியை ஒழிக்கப்பட வேண்டியது அவசியம் என்று பேசி வழக்கு இணக்கம் காட்டிவிட்டு, யாரும் கொல்லப்படாத, எங்கும் கொளுத்தப்படாத இந்த வழக்குபற்றி— அதுவும் சாதி ஒழியாவிட்டால் முதுகுளத்தூர் போன்ற கொலை, கொள்ளை ஏற்படும்— என்பதாக எச்சரிக்கை செய்யப்பட்ட பேச்சைப்பற்றிப் போடப்பட்டிருக்கும் தப்பு வழக்குப் பற்றி இப்படிப் பேசிப் போயிருக்கும்போது, அந்தப் பார்ப்பன ஆட்சியின் ஆதிக்கத்தின்கீழ் இரண்டாந்தர சிப்பந்தியாக இருக்கும் தங்களிடம் நான் என்ன நீதி காணமுடியும்?

இந்த வழக்குக்குச் சாட்சியாக, ஆதரவாகக் கோர்ட்டில் ஒப்புவிக்கப்பட்டிருக்கின்ற ஆதாரங்களை நான் பார்த்த அளவில் என் பேச்சு என்ற தலைப்பில் எழுதப்பட்ட சொற்கள் பெரிதும் கற்பனைச் சொற்களைக் கொண்ட ஆதாரங்களாகும். எப்படியெனில், கம்பன் பாட்டையும், ஒட்டக்கூத்தன் பாட்டையும் படிக்கும் மாத்திரத்தில், இது கம்பன் கவி அல்ல என்பது எப்படிக் கவிஞர்களுக்குச் சொல்லமுடியுமோ அதுபோல், என் பேச்சு என்ற ஆதாரங்களை ஒரு சாதாரண மனிதன் பார்த்தாலும் அதில் உள்ள மாறுதலும் கோர்வை இல்லாமல் விடப்பட்ட பொருத்தமில்லாத சேர்க்கையும் பிற தவறுகளும் நன்றாய்த் தெரியும். மிகமிக அலட்சியமாய் எழுதப்பட்ட குறிப்புகளாகப் பெரிதும் அவை காணப்படு கின்றன. அதாவது, நான் பேசிய பேச்சு அப்படியே வார்த்தை வார்த்தையாக எழுதப்பட வில்லை! வேறு வார்த்தைகளால் எழுதப்பட்டவைகளும் வழக்குக்கு [செக்ஷன்களுக்கு] பொருந்தக்கூடியதாக இல்லை. செக்ஷன்களின் கருத்துக்கேற்ற தொடர் வாக்கியங்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாய்ச் சொற்களையும் வாக்கியங்களையும் கொண்டு சேர்த்துத் தொகுத்து எழுதி செக்ஷன்களுக்கு ஏற்ப என்று காணும்படியாக, பேசும்போது பேசிய சந்தர்ப்பங்களைக் காட்டும் வாக்கியங்களை மறைத்து விட்டுப் பொருத்தப்பட்டிருக்கிறது. 'கொலை செய்வது' என்றாலும் ஏன்? எதற்காக? எப்படி? எப்போது? என்பதையும் குறிப்புக் காட்டவில்லை. நான் கட்டளை கொடுத்த பின்புதான் சாதி ஒழிக்க இது ஒரு கடைசி வழி, அதாவது இந்த நிலைதான் வந்து சேரும் என்ற உத்தேசக் கருத்தில் அச்

www.thamizham.net - Free E book No 3041

சொற்கள் உச்சரிக்கப்பட்டதாகவே காணப்படுகின்றதா? உடனடியாகச் செய்யும்படி கட்டளை யிடப்பட்டிருக்கிறதா? என்பவைகளை எல்லாம் கவனித்தால் செக்ஷன் கருத்துக்கு 'கொலை' என்ற சொல் ஏற்றது என்பது விளங்காது; ஒரு புண்ணுக்கு இந்த மருந்துதான் பொருந்தும் என்கின்ற தன்மையில் கடைசி வைத்தியமாகச் சொல்லப்பட்டதா? அல்லது இந்த மருந்தை உடனே போடு என்று யாருக்காவது கட்டளையிட்டதாகச் சொல்லப்படு கிறதா என்பதும் நடுநிலையில் இருந்து சிந்தித்துச் சிறிதும் சந்தேகத்திற்கிடமில்லாமல் தெளிவாகிறதா என்று கனம் நீதிபதி அவர்கள் பார்த்து, தங்களுக்குத் தோன்றும் முடிவின்படி முடிவு செய்ய வேண்டிக்கொள்ளுகிறேன்.

கனம் கோர்ட்டார் அவர்கள் தீர்ப்பில் எனக்குக் கடினமான நீண்டகால தண்டனை கிடைப்பதாக இருந்தாலும் அதை எனது இலட்சியம் நிறைவேறுவதற்காக நான் கண்டிப் பாகக் கொடுக்கவேண்டிய விலையைக் கருதி ஏற்றுக்கொள்ளுவேனே தவிர சிறிதும் அதிருப்தியடையமாட்டேன்.

['விடுதலை'—1?-12-1957]

## 5. சிறை புகுமுன் அறிக்கை

நான் இன்று தண்டனை அடையப்போவது உறுதி. ஏனென்றால், இந்தியப் பிரதமர் என்னும் பதவியிலுள்ள பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள், எனது வழக்குநடக்கிற ஊராகிய திருச்சிக்கே வந்து எனது வழக்குநடைபெறும் நியாயஸ்தல நீதிபதியாகிய செஷன்ஸ் ஜட்ஜ் அவர்கள் முன்னிலையிலிருந்து, 'பார்ப்பனர்களைக் கொல்லு என்று சொல்லியிருக்கிறவர்களைக் கண்டிப்பாகத் தண்டிக்கவேண்டும்; அது மாபெரும் தேசத் துரோகக் குற்றமாகப் பாவிக்கப்பட வேண்டும். அந்தக் கருத்துடையவன் ஜெயிலில் இருக்கவேண்டியவன்!' என்பதாகச் சொல்லித் தூண்டிவிடும்படியான அளவுக்குப் பேசிவிட்டுப் போயிருக்கும்போது, எந்த நீதிபதிதான் என்னைத் தண்டிக்காமல் விட்டுவிட முடியும்?

அதுபோலவே, சட்டம் எரித்ததாகக் குற்றம்சாட்டி ஜெயிலில்பிடித்து அடைத்து வழக்குத் தொடரப்பட்டிருக்கும் 4000 குற்றவாளிகள் பற்றியும், 'அதன் குற்றம் தேசத் துரோகக் குற்றமாகும்; அவர்கள் கடினமாகத் தண்டிக்கப்படவேண்டியவர்கள்; ஜெயிலில் இருக்கவேண்டியவர்கள்!' என்பதாகவும் விசாரணை செய்து தீர்ப்புக் கூறவேண்டிய மாஜிஸ்திரேட் நீதிபதி முன்னிலையிலும் சொல்லிவிட்டுப் போயிருக்கும்போது எந்த ஜட்ஜ்தான்—எந்த மாஜிஸ்திரேட்தான் குற்றம் சாட்டப்பட்டவர்களைத் தண்டியாமல்—கடின மாகத் தண்டியாமல் விடமுடியும்?

உதாரணமாக, பண்டித நேரு அவர்கள் திருச்சிக்கும், தமிழ்நாட்டில் மற்ற ஊர்களுக்கும் வந்து இப்படியாகப் பேசுவதற்குமுன் 3 மாதம், 6 மாதம், 9 மாதம் போட்ட வழக்குகள்—இவர்வந்து, இந்தப்படிப் பேசியபின் 9 மாதம், 1 வருடம், 1½ வருடம், 2 வருடம் விதம் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆதலால், என்னை, 'ஜட்ஜ்' தண்டிக்கப்போவது உறுதி.

நான் தண்டிக்கப்பட்டால் பொதுமக்களும், குறிப்பாகக் கழகத் தோழர்களும், 'இந்தத் தண்டனையும் நம் கழக முயற்சிகளும் வெற்றிபெறும் நாள், பயனளிக்கும் காலம் நெருங்கிவிட்டது—பூக்க, காய்க்க ஆரம்பித்துவிட்டது' என்று மகிழ்ச்சிப் பெருக்கோடு கழகப் பணியாற்ற ஒவ்வொருவரும் முன்வர வேண்டும்; பங்குகொள்ள வேண்டும்; ஆதரவளிக்கவேண்டும். எப்படியோ இது ஒரு இனப் போராட்டமாகப் பார்ப்பனர்கள் செய்துவிட்டார்கள்.

ஆதலால், கழகத் தோழர்களும், மற்றவர்களும் எவ்விதமான பலாத்காரமான, இம்சையான, கொல்லுவதான, நாசகரமான காரியம் எதையும் செய்ய முன்னடையாமல்—

www.thamizham.net - Free E book No 3041

மனத்திலும் செய்ய நினைக்காமல்—பிறர் சொல்லும்படியும் நடவாமல், சாந்தத்தோடும் சமாதானத்தோடும் கழகப் பணியில் ஈடுபடவேண்டும் என்று வேண்டிக்கொள்கிறேன்.

மற்றும், இன்று நமது தோழர்கள் 3000 பேருக்கு மேல் சிறைப்படுத்தப்பட்டுக் கடினமான தண்டனைக் கொடுமை வழங்கப்பட்டிருப்பதற்கு முக்கிய காரணம்—நாம் செய்த எந்தவிதமான குற்றங்களுக்காகவும் அல்ல. அதாவது, நாம் நம் உரிமைக்கு விரோதமாய், நீதிக்கு விரோதமாய் எந்தவிதக் காரியமும் செய்துவிடவில்லை. யாருக்கும் எந்தவிதமான கேடும் செய்துவிடவில்லை; ஏற்பட்டுவிடவுமில்லை.

இதை இன்றைய நம் மந்திரிமார்களே சொல்லிவிட்டார்கள்; சொல்லியும் வருகிறார்கள். அப்படியிருந்தும், இந்த நாட்டுப் பார்ப்பனர்களின் கட்டுப்பாடான கூப்பாட்டிற்காகவும், மாய்மால நடிப்பிற்காகவும், பார்ப்பனப் பத்திரிகைகளின் கட்டுப்பாடான பொய் விஷமப் பிரச்சாரத்தின் காரணமாகவும் மத்திய அரசாங்க அதிபர்கள்—ஆதிக்கக்காரர்களின் சர்வாதிகாரக் கட்டளைக்காகவும் வேறு மார்க்கமில்லாமல் இணங்கித் தீரவேண்டிய அவசியத்தின் காரணமாக ஏற்பட்டவைகளாகும்.

ஆதலால், நமது மக்கள் இந்த நடவடிக்கைகளுக்கும் சென்னை அரசாங்க மந்திரிகளுக்கும், பார்ப்பனரல்லாத போலீஸ் நீதி நிர்வாக அதிகாரிகளுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை என்பதாகக் கருதி, அவர்களிடம் எவ்வித வெறுப்பும் அதிருப்தியும் கொள்ளாமல் அடங்கி நடப்பதாய் இருக்கவேண்டும்.

இதை நல்ல வாய்ப்பாகக்கொண்டு தங்கள் சுயநலத்திற்காக வெறுப்பு அதிருப்தி ஏற்படுத்த முயற்சிக்கும் எந்தக் கோஷ்டியாருடனும் சம்பந்தம் வைத்துக்கொள்ளாமல் இருக்க வேண்டுமென்பதாகவும்; அப்படிப்பட்டவர்களுடைய முயற்சி வெற்றி பெறாமலும் பார்த்துக்கொள்ள வேண்டியதும் பொதுமக்களுடையவும் கழகத் தோழர்களுடையவும் இன்றியமையாததுமான கடமையாகும். கழகத் தோழர்களும் பொதுமக்களும் பார்ப்பனர்களின் இப்படிப்பட்ட பாதகமான செயலுக்கு நாம் பரிகாரம் தேடுவது என்பதற்காக நான் மேலே வேண்டிக்கொண்டிருக்கிறபடி எந்தவிதமான பலாத்கார, இம்சையான, நாசமான செயலிலும் ஈடுபடாமல், பார்ப்பனர்கள் தங்கள் கொடுமைச் செயலின் பயனை அனுபவிக்கும் வண்ணம்—அதாவது தாங்கள் செய்தது தப்பு என்று உணரும் வண்ணம் அவர்களை நாம் வெறுப்பதாகக் காட்டிக்கொள்ள வேண்டும்.

அவர்கள் உறவை நீக்கவேண்டும், அவர்கள் சம்பந்தத்தை வெறுக்கவேண்டும்;

அவர்களுடன் எவ்வித உறவாடலும் சம்பந்தமும்கூடாது;

கூடுமானவரை அவர்களுடன் பேசுவதையும் நிறுத்திக்கொள்ள வேண்டும்;

அவர்களை நாம் வேலைக்கு வைத்துக்கொள்ளக்கூடாது;

அவர்களிடமும் நாம் எந்த வேலைக்கும் இருக்கக்கூடாது;

பார்ப்பன வக்கீல்களைப் பகிஷ்கரிக்கவேண்டும்;

அவர்களிடம் எந்தவிதமான வியாபார சம்பந்தமும் வைத்துக்கொள்ளக்கூடாது;

அவர்கள் உண்டி நிலையங்களுக்கு அறவே நாம் செல்லக்கூடாது;

அவர்களைக் கண்டிப்பாக—நமது நன்மை தீமை காரியங்களுக்கு அழைக்கவோ, சம்பந்தப்படுத்தவோகூடாது; எல்லாவற்றையும்விட, அவர்கள் பூசை செய்யும்—தொண்டு செய்யும் எந்தக் கோவிலுக்கும், தொழுகை இடத்திற்கும் நாம் செல்லவேகூடாது.

அவர்களுக்கு உணவுப் பண்டங்கள் விற்பதோ, கொடுப்பதோ கூடாது.

நமது வண்டி வாகனக்காரர்கள் அவர்களை (பார்ப்பனர்களை) ஏற்றக் கூடாது. இன்னும் உள்ள எவ்வித சம்பந்தங்களிலிருந்தும் நாம் விலகி நிற்க வேண்டும்.

www.thamizham.net - Free E book No 3041

எல்லாவற்றையும்விட, பார்ப்பனப் பத்திரிகைகளைப் பகிஷ்காரம் செய்யும்படி பிரச்சாரம் செய்யவேண்டும்.

மற்றும், இந்தப் பார்ப்பனர்களைப் போலவே வடநாட்டார்களையும் கருதவேண்டும். பார்ப்பனர்களிடம் நடந்து கொள்ள வேண்டிய முறை என்று மேலே எடுத்துக் காட்டிய அவ்வளவையும்—வடநாட்டாருடனும் வைத்துக் கொள்ள வேண்டும்; நடந்துகொள்ள வேண்டும்.

உடனடியாக நிர்மாணத்திட்டமாக, வடநாட்டான் கடைகளை வியாபாரத் துறைகளில் பகிஷ்கரிக்க ஏற்பாடு செய்ய—கழகக் கமிட்டி கூட்டி யோசித்து நடத்தவேண்டும். வட நாட்டான் கடைகளில் நம்மவர் வியாபாரம் செய்யக்கூடாது என்று, நம்மவர்களை வட நாட்டார்களின் வியாபார ஸ்தலங்களில் நின்று பணிவாக, சமாதான முறையில், சாந்தமான தன்மையில் வேண்டிக்கொள்ள வேண்டும்.

இவ்விதக் காரியங்களை அரசாங்கத்தார் தடுத்தால் அதற்கு மாத்திரம் நாம் இணங் காமல் இருக்கலாம் என்பது எனது கருத்து.

தமிழ் நாடு முழுவதிலும்—கன்னியாகுமரி மாவட்டம் முதல் எல்லா மாவட்டங்களிலும் கழகங்களை ஏற்படுத்த வேண்டும்.

ஒரு இலட்சம் அங்கத்தினர்களையாவது சேர்க்கவேண்டும்.

அங்கத்தினர்களைச் சேர்ப்பதற்கு, நல்லபடி படித்த பெண்களை மாவட்டத்திற்கு இருவர் அல்லது மூவர் வீதம் தேவையான அளவுக்கு அலவன்ஸ் கொடுத்து மெம்பர் சேர்க்கும் பாரங்கள் இலட்சக்கணக்கில் அச்சடித்துக் கொடுத்துச் சேர்க்கவேண்டும்.

அவர்கள் மூலமே இயக்கப் புத்தகங்களையும் இந்த அறிக்கை முதலியவைகளையும் குறைந்த விலைக்கு விற்கச்சொல்ல வேண்டும். இந்தப் பெண்களுக்கு சிவப்புக் கரை போட்ட கறுப்புச் சேலை, சிவப்பு ரவிக்கை சப்ளை செய்யவேண்டும். திருமதி. நாகரசம்பட்டி விசாலாட்சி அம்மையார், ஆனைமலை ராமகிருட்டின அம்மாள் முதலியவர்கள் இந்த நிர் வாகத்தைப் பார்த்துக்கொள்ள வேண்டிக்கொள்ளச் செய்ய வேண்டும். மாவட்டத்திற்கு ஒருவர் அல்லது இருவர் ஆண் தோழர்களை இந்தக் காரியத்திற்கு ஏற்படுத்தி, அவர் களுக்கும் தேவையான அலவன்ஸ் கொடுத்து இந்த வேலைகளைச் செய்யவேண்டும். முழுநேரத் தொண்டர்களாக வரும் ஆண்களையும் பெண்களையும் ஏற்று, அவர்களுக்கு உணவு, போக்குவரத்துச் செலவு அளித்து மேற்படி வேலைசெய்யச் செய்யலாம். ஒவ்வொரு வரின் வேலையையும், செய்த அளவையும் அறிந்து வேலைக்குத் தக்கபடி உற்சாகப்படுத்தி அலவன்ஸ் கொடுத்து வேலைசெய்யச் செய்யவேண்டும்.

மற்றக் கட்சிக்காரர்களைப் பற்றியோ, கோஷ்டிகளைப் பற்றியோ, காங்கிரசைப் பற்றியோ, மந்திரிகளைப் பற்றியோ எவ்விதக் குற்றம் குறைகளும் நம் பேச்சாளர்கள் யாரும் பேசக்கூடாது. அவர்கள் நம்மீது சுமத்தும் விஷமப் பிரச்சாரக் குற்றங்களுக்குக் கண்ணியமான முறையில் சமாதானம் சொல்லலாம். நமது இயக்கத்தின் தலைவர்கள் பொறுப்பானவர்கள் என்கிற முறையில் உயர்திரு. வேதாசலம் அவர்களும் திருமதி. மணி யம்மை அவர்களும் மற்றும் பல நண்பர்களும் வெளியிலிருக்கிறார்கள். திரு. வேதாசலம் அவர்கட்கு உடல்நலம் சரியாக இல்லாததால் முழுப் பொறுப்பையும் அவர் ஏற்றுக்கொள்ள முடியுமா என்பது எனக்குக் கலக்கமாக இருக்கிறது. என்றாலும் தோழர்கள் அவர்களது கட்டளையை மதிக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறேன்.

திருமதி. மணியம்மையார் கூடுமான அளவு தக்க பேச்சாளர்களுடன் நாடு முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்வார்கள். ஆங்காங்குள்ள—நமது கழகம் அமைத்தல், மெம்பர் சேர்த்தல், புத்தகம் அறிக்கை விற்றல் ஆகிய காரியங்களைக் கவனிப்பார்கள்.

www.thamizham.net - Free E book No 3041

நான் இரண்டாண்டுக்கும் குறையாமல் தண்டிக்கப்பட்டுச் சிறைவாசம் செய்து, திரும்பி வரும் வாய்ப்பு இருந்து வந்து சேருவேனேயானால் ஒரு இலட்சம் அங்கத்தினர், மூவாயிரம் கழகங்கள், 1500 ரூபாய்க்குக் குறையாத அறிக்கை புத்தக விற்பனைக் கணக்கு—காண்பேனேயானால் நானும் மற்றும் அன்பான தோழர்கள் 4000 பேரும் சிறை சென்றது நல்ல பயனை அளித்தது என்றே கொள்ளுவோம்.

பல நண்பர்கள் நமக்குக் கூடுமான அளவு பொருளுதவி செய்ய முன் வந்திருக்கிறார்கள். முக்கியமாக ஒரு நண்பர் பெரும் அளவுக்கு, அதாவது 50 ஆயிரம் ரூபாய் கொடுப்பதாக வாக்களித்துள்ளார்.

இந்தச் சிறைப் பிடிப்பில் போகமுடியாமல் வெளியிலிருப்பவர்களும், சிறைப் பிடித்து நாள் கணக்கில் வைத்திருந்து விடுதலையானவர்களும் மேற்குறித்த எனது வேண்டுகோள் பணிக்கு நல்ல ஆதரவு தரவும், எங்கள் தண்டனைக் கால அளவுக்கு முழுநேரத் தொண்டு செய்யவும் பலர் தாங்களாகவே முன் வந்திருக்கிறார்கள்; தயாராய் இருக்கிறார்கள். அவர்கள் பெயரை நான் இதில் குறிப்பிடவில்லை—என்றாலும் அவர்களது முழுச் சம்மதத்துடன் பெயர்களை மணியம்மையார், திருவாளர்கள் வேதாசலனார், சுப்பிரமணியம் திருநாவுக்கரசு ஆகியவர்களுடன் யோசித்து வெளியிடுவார்கள். அவர்களைக் கழகத் தோழர்கள், அபிமானிகள் ஆதரவாளர்கள் நல்லபடி பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

கடைசியாக பலாத்காரம், இம்சை, நாசவேலை, கலவரம், சாந்த சமாதான பங்கம், தனிப்பட்டவர்களிடம் நேரிடையான வாக்குவாதம், கலவரம் ஆகிய காரியம் எதுவும் சிறிதும் தலைகாட்ட இடமில்லாமல் எனது தோழர்கள் நடந்துகொள்ள வேண்டும்.

அப்படி ஏதாவது தாறுமாறாக நடந்துகொண்டால் அவர்கள் எனக்கு எதிரிகளும் கழகத்திற்குக் கேடு செய்பவர்களுமாவார்கள்.

என் பிறவி காரணமாக என் இன இழிவுக்குக் காரணமாக இருக்கும் சாதியை ஒழிப்பதும் என் இன மக்களாகிய தமிழர்களுடையவும், என்னுடையவும் தாய்நாடான தமிழ் நாட்டைப் பனியா–பார்ப்பனர்களின் அடிமைத் தளையிலிருந்தும் சுரண்டலிலிருந்தும் மீட்டுச் சுதந்திரமாக வாழவைக்க வழி செய்வதுமான தனித் தமிழ் நாடு பெறுவதும் என் உயிரினும் இனிய கொள்கைகளாகும்.

அந்த இலட்சியங்களை அடையத் தகுந்த விலையாக என் உடல், பொருள், ஆவி ஆகிய எதையும் கொடுப்பதற்கு உடன்பட்டே நான் இப்போது சிறை செல்லுகிறேன், சென்று வருகிறேன்.

**வணக்கம்! வணக்கம்! வணக்கம்!**

['விடுதலை'–தலையங்கம்—15-12-1957]

## 6. எங்கள் போராட்டம்

இந்தத் தமிழ்நாட்டுச் சரித்திரத்தை எடுத்துக் கொண்டாலும் சரி—இந்திய சரித்திரத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, சமுதாயப் பிரச்சினைக்காக—சாதி ஒழிப்பிற்காக ஒரே நாளில் 3500–4000 பேர்கள் சிறை சென்றது நமது கழகம் ஒன்றில்தான்.

தேசியப் போராட்டம் என்ற பெயரால் உப்புச் சத்தியாக்கிரகம் நடத்தியதில் கூட, தினம் 4 பேர், 8 பேர்கள்தாம் சிறை செல்வார்கள். முன்கூட்டியே போலீசுக்குச் சொல்லியனுப்பிப் பிடித்துச் செல்லச் சொல்லி—சிறையிலே இராஜ போகங்கள் அனுபவித்தார்கள்!

இன்றுள்ள அத்தனை அரசியல் கட்சிக்காரர்களும் எங்களை ஒழிக்கப் பாடுபடுறார்களே தவிர, சாதி ஒழிய வேண்டியதற்கான பரிகாரம் என்ன என்பது பற்றி ஒருவனும் கவலைப்படுவது கிடையாது.

[திருச்சியில், 27-3-1959-ல் சொற்பொழிவு—'விடுதலை' 6-4-1959]

www.thamizham.net - Free E book No 3041

# 7. இராமாயணத்தை எரியுங்கள்

கழகத் தோழர்களே! பார்ப்பனர்கள் வரப்போகின்ற தேர்தலிலே நம் மக்களை கடவுள், மத, சாஸ்திர, புராண இதிகாசங்களின் பெயரால் ஏமாற்றி, மயக்கி வெற்றி பெறலாம் என்கின்ற எண்ணத்தின்மீது, இப்போது எங்கு பார்த்தாலும் எந்த ஊரிலும் இராமாயணம், பாரதம், கந்தபுராணம் முதலிய புராண இதிகாசங்கள் மூலம் பிரச்சாரம் செய்தும், செய்வித்தும் வருகிறார்கள்.

ஏற்கனவே, நம் நாட்டில் நம் மக்கள் இந்தப் பார்ப்பன, கடவுள், மதம், வேதம், சாஸ்திரம், மனுதர்மம், புராணம், இதிகாசங்கள், கோயில், உற்சவம் முதலியவை களினாலேயே நாம் முட்டாள்களாகவும், காட்டுமிராண்டிகளாகவும், மூடநம்பிக்கைக் காரர்களாகவும் ஆகி, பல்லாயிர வருஷ காலமாக, நமது நாட்டில் நாம் கீழ்சாதி மக்கள், ஈனப் பிறவிகள் என்பதை ஏற்று, பார்ப்பனருக்கு அடிமையாய் இருந்து வாழ்ந்துவந்தாலும் இன்று சிறிது காங்கிரஸ் ஆட்சியின் பயனாய், கண்திறந்து அறிவுபெற்று வருவதை ஒழிப்ப தற்கு வேறுவகை இல்லை என்று கண்ட பார்ப்பனர், மறுபடியும் மேற்கண்ட இந்தப் பிரச்சாரத்தைத் துவக்கி இருக்கிறார்கள்.

இதன் காரணமாகவே நாம் இப்பொழுது சற்றுவேகமாக கடவுள், மத, சாஸ்திர, புராண இதிகாச ஆதிக்கங்களையும் புரட்டுகளையும், ஆபாசங்களையும் மக்களுக்கு விளக்கி ஏமாறாமல் இருப்பதற்காகப் பிரச்சாரம் செய்துவருகிறோம்.

பார்ப்பனர்கள் பிரச்சாரத்தைப்பற்றி எண்ணும்போது அதில் 8-ல் ஒரு பங்கு, 10-ல் ஒரு பங்கு நமது பிரச்சாரம் இல்லை என்றாலும், தயங்காமல் நம்மால் ஏதோ கூடியதைச் செய்து தீரவேண்டிய நிலையில் இருக்கிறோம். இதற்காக இப்போது நாம் செய்துவரும் பிரச்சாரம் நீங்கள் எல்லோரும் அறிந்ததேயாகும். இனியும் தேர்தல் வரையிலும் நமது கழகத் தோழர்கள் எல்லோருமே நம் இயக்கப் புத்தகங்களைத் தருவித்து, விஷயங்களை உணர்ந்து, ஆங்காங்கு அந்தந்த ஊரில் மறுப்புப் பிரச்சாரம் செய்து வரவேண்டியது மிக்க அவசியமாகும்.

இதை அனுசரித்தும் நான் கீழே சொல்லும் விஷயங்களைச் சற்றுக் கவனமாகத் தெரிந்து, அதன்படி கூடுமானவரை நடந்துகொள்ள வேண்டுமெனக் கழகத் தோழர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

தோழர்களே! மார்ச்சு மாதம் 31ஆம் தேதி 'ஸ்ரீராமநவமி' என்னும் ஒரு பண்டிகை நாள் வரப்போகிறது. அந்த நாளைப் பார்ப்பனர்களும், அவர்களது அடிமைகளும் நல்ல வண்ணம் பிரச்சாரம் செய்ய முற்படுவார்கள். அதனால் நம் மக்களை ஏமாறாமல் இருக்கச் செய்வதற்காக நம் கழகத் தோழர்கள் ஒவ்வொரு ஊரிலும் பொதுக்கூட்டங்கள் ஏற்பாடு செய்து, மேற்சொன்ன பாமர மக்களுக்கு விளங்கும்படி எடுத்துச் சொல்வதோடு,

இராமாயணம், வால்மீகி ராமாயணம், கம்ப ராமாயணம் ஆகியவை தமிழர்களை இழிவுபடுத்துவதற்கென்றே ஆக்கப்பட்ட, பொய்யும், கற்பனையும் ஆபாசமும் நிறைந்த நூல்கள் ஆகும். ஆகவே இந்த மூன்று சொற்களையும் ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதிக் கையில் வைத்துக்கொண்டு, சொற்பொழிவின் முடிவில் கூட்டத்தில் மக்களுக்குத் தெரியும் படியாக நெருப்பினால் கொளுத்தி, சாம்பலாகும்படி செய்துகாட்டவும்.

இந்தப்படி ஒவ்வொரு கூட்டத்திலும் எத்தனை பேர்கள் செய்துகாட்டக் கூடுமோ அத்தனை பேர்களும் அந்தப்படி எழுதப்பட்ட துண்டுக் காகிதத்தை மக்கள் அறியும்படி கொளுத்தி எரித்துச் சாம்பலாக்கிக் காட்டவேண்டுமாய் வேண்டிக்கொள்ளுகிறேன்.

['விடுதலை'—அறிக்கை—30-3-1966]

www.thamizham.net - Free E book No 3041

# 9. 'தமிழ் நாடு' பெயர் மாற்றப் போர்

## 1. அபாயச் சங்கு

சாதாரணமாக இன்று நம் நாட்டில் நடந்துவரும் பார்ப்பன (ஆரிய ஆதிக்க) பாதுகாப்புத் தீவிர முயற்சியானது நாமறிய சுமார் 60, 70 ஆண்டுகளாக நடந்திருக்காத அளவில் வெகு வேகமாகவும் வெகு தீவிரமாகவும், மிக்க பரவலாகவும் நடந்து வருகிறது. இம் முயற்சிக்குத் தமிழ் நாட்டில் உள்ள எல்லாப் பார்ப்பனர்களும் கட்டுப்பாடாக ஒற்றுமையாக ஒரே மூச்சாக முனைந்து நின்று பாடுபடுகிறார்கள்.

அரசியல் வேஷம் போட்டுக்கொண்டு இராஜாஜி 'தர்மங்களைக் காக்கப்போகிறேன்; தனி மனிதனின் உரிமையைக் காப்பாற்றப் போகிறேன். இத் துறைகளில் மக்களுக்கு முழுச் சுதந்திரமும் தேடித் தருவதே எனது ('சுதந்திரா') கட்சியின் நோக்கம்' என்று வெளிப்படையாகவே சொல்லிக்கொண்டு ஆகா வழிகளையும், வாழாவெட்டிகளையும், வாழ்வில் வழுக்கி விழுந்தவர்களையும் சேர்த்து வைத்துக்கொண்டு பெரும்போராட்டம் நடத்தத் துணிந்துவிட்டார். அவருக்கு காந்தியாரால் ஏற்பட்ட செல்வாக்கு இதற்குப் பெரும் ஆதரவளிக்கிறது என்பதுடன் பார்ப்பனர்—அவர்களது பத்திரிகைகள் பெரும் ஆதரவு தருகின்றன.

அடுத்தாற்போல், வைதீக முறையில் அடியோடு எல்லாப் பார்ப்பனர்களும் சேர்ந்து அரசாங்க அலுவலகங்களில்-பெரிய பதவிகளில் மாதம் ரூ. 3000, 4000 சம்பளம் வாங்கிக் கொண்டு உத்தியோகம் பார்த்து ஓய்வெடுத்து பென்ஷன் வாங்கிக்கொண்டு இருக்கும் பார்ப்பனர்களின் தலைமையில் ஊர்தோறும் வைதீக ஸ்தாபனங்கள் ஏற்படுத்திக்கொண்டும் மாநாடு நடத்திக்கொண்டும் பெரும் பிரச்சாரங்கள் செய்து வருகிறார்கள்.

இவைதவிர, பார்ப்பன மடாதிபதிகள், சங்கராச்சாரி, மத்துவாச்சாரி, வைணவாச்சாரி ஸ்மார்த்தாச்சாரி முதலான எல்லா மடாதிபதிப் பார்ப்பனர்களும் தினமும்—நாள்தோறும் ஊர் ஊராய்ச் சுற்றித் திரிந்து, ஆங்காங்குள்ள பார்ப்பன அதிகாரிகளைக் கண்டு ஆள் சேர்க்கச் செய்தும் பணம் சேர்த்துக் கொடுக்கச் செய்தும் இமாலயப் பிரச்சாரம் செய்து, ஆரிய வைதீகக் கருத்துக்களைப் புகுத்திப் பார்ப்பனருக்குப் பொருளாதார உதவி, கல்வி உதவி ஆகியவைகளை அளித்தும் வருகிறார்கள்.

இவையெல்லாம் தவிர வெள்ளையன் போனபின்பு வியாபாரத் துறையிலும், தொழில் துறையிலும், பஸ் நடத்தும் துறையிலும் பிரவேசித்துக் கோடீஸ்வரர்களான பார்ப்பனப் பிரபுக்கள், ஆச்சாரியார் முயற்சி முதல் மற்ற எல்லாப் பார்ப்பனர் முயற்சிகளுக்கும் ஏராளமான பொருள் உதவி, வேலை உதவி, மற்றும் ஆள் மாகாண உதவி முதலியவைகள் செய்து, ஆதரித்து, உற்சாகப்படுத்தி, ஊக்குவித்து, பிரச்சார காரியங்கள் நல்லபடி நடக்கச்செய்து வருகிறார்கள்.

மற்றும் மத்திய, மாகாண ஆகிய இரு சர்க்கார் அலுவலகங்களிலும் குறிப்பாகத் தபால், ரயில், சுங்கம், வருமான வரி, அக்கவுண்டஸ், அய்க்கோர்ட் இலாக்கா அலுவலகங்களிலும் பொறுப்பான பெரிய பதவிகளிலும் பார்ப்பனர்கள்—அதிலும் வைதீக வெறிப் பார்ப்பனர்களே குவிந்து கிடப்பதால், அவர்களும் கட்டுப்பாடாகத் தங்கள் இன உயர்வுக்குப் பாடுபடுவதிலும் இத் துறைகளில் நம்மவர்கள் தலையெடுக்கமுடியாதபடி அழுத்திவைத்தும் ஒழித்துக்கட்டுவதற்கு ஏற்ற கொடுமைகளைத் துணிந்து செய்வதுமான காரியங்களிலும் முனைந்து நிற்கின்றார்கள்.

மற்றும், பொதுவாழ்வில், அரசியலில் பிழைப்பை ஏற்படுத்திக்கொண்டு, யார் எந்தக் கட்சி தோன்றினாலும் அவர்களுக்கு விளம்பரமும் தேர்தலில் வெற்றியும் கொடுக்கக்கூடிய அளவுக்குப் பார்ப்பனர்கள் ஆதரவு தேவை இருக்கின்றபடியால், எல்லாக் கட்சிக்காரர்களும்

www.thamizham.net - Free E book No 3041

—காங்கிரசுக்காரர்களில் பெரும்பாலோர் உள்பட—பார்ப்பனர்கள் காலடியில் கிடந்து உழல வேண்டியவர்களாக இருப்பதால் சர்வ கட்சிகளும் பார்ப்பனர்களுக்கு அனுகூலமாகவே இருந்து, பார்ப்பன ஆதிக்கத்திற்கு அனுகூலமாகப் பார்ப்பனப் பிரச்சாரம் செய்து வருகிறார்கள்.

பத்திரிகைகள் எல்லாம் பார்ப்பனர்களிடத்தில் இருப்பதாலும் திராவிடர்கள் நடத்தும் பத்திரிகைகளும் பார்ப்பனர்களுக்குப் பயந்து நடத்தப்படவேண்டி இருப்பதாலும் மேற்கண்ட பார்ப்பன ஆதிக்க வைதீக முயற்சிக் காரியங்கள் எதற்கும் எதிர்ப்பு நடத்த எந்தத் திராவிடனுக்கும் எந்த 'எதிர்க்கட்சி'க்கும் வசதியோ வாய்ப்போ இல்லாமல் போய் விடுவதோடு, வாழ வேண்டியவன்—வளர வேண்டியவன் ஆன மந்திரிகள் உட்பட எந்தத் திராவிடனும் வைதீகப் பிரச்சாரத்திற்கு ஆதரவளிக்க வேண்டியவனாகவே ஆகிவிடுகிறான்.

திராவிட நாட்டில் திராவிடர்களுக்குச் செல்வாக்கு இருக்கும்படியான தன்மையில் திருந்திய திராவிட அரசர்களைக்கொண்ட அரசுகள் பல அண்மையில் இருந்தன. வெள்ளையன் போன உடனே 'அந்தப் பிராந்தியங்கள் அந்தந்த அரசுடனேயே சேர்க்கப் பட்டிருக்க வேண்டும். அந்தந்தப் பிராந்திய அரசுக்குப் பூரண சுய ஆட்சி உரிமைகள் வழங் கப்பட்டிருக்க வேண்டும்' என்று சுதந்திரம்—சுய ஆட்சி என்னும் பேரால்—அதிலும் ஒரு பெரும் மோசடியாக ஜனநாயகம் என்னும் பேரால் ஜனங்களோடு சம்பந்தமே இல்லாத ஒரு சாதி பிரிவுப் பார்ப்பனரே ஜனநாயகத்திற்கு மனுதர்மம் போல் சட்டம் செய்துகொண்டு, அச் சட்டப்படியான ஜனநாயக முறையில் சாதாரணத் தன்மையில் பார்ப்பானே—ஆரியனே ஆட்சித் தலைவனாக ஆகும்படியான நிலையில் ஆட்சி நடக்க வகை செய்துகொண்டதோடு, அக் கால முடி அரசர்கள் எல்லாம் பார்ப்பன அடி அரசுக்குச் சிப்பந்திகளாக ஆக்கப்பட்டு விட்டார்கள். இதனால் திராவிடர்கள் பார்ப்பனர்களுக்கு அடிமைக் குடிகளாகத்தான் என்றும் இருக்க வேண்டியதைத் தவிர ஆட்சியாளராக இருக்க முடியாத நிலை ஏற்படுத்தப்பட்டுவிட்டது.

மற்றபடி, திராவிடர்களே பெருநிலக்கிழார்களாக இருந்த ஜமீன் மிட்டாதாரர்கள் எல்லோரும் ஒழிக்கப்பட்டு, அவர்கள் ஒரு சாதாரணக் குடியானவர்களாக ஆக்கப்பட்டு விட்டார்கள்.

இவர்கள் இரு கூட்டத்தினருக்கும் இருந்த பரம்பரைப் பெருமை பாத்தியதை—அதாவது தனிப்பட்டவர்களுக்கு இருந்த உரிமை அடியோடு—ஒருநாள் அய்ந்து பார்ப்பனர் கூடி 'சட்டம்' செய்து ஒரு வரி உத்தரவினால் பறிக்கப்பட்டுவிட்டது.

ஆனால், பார்ப்பனர்களையே பெரிதும் கொண்ட மடாதிபதிகள், அவர்களது உரிமைகள், செல்வங்கள், பெருமைகள் முதலியவை ஒரு சிறிதும் ஒரு துரும்பும் அசைக்கப் படவில்லை. அரசர்கள் ஒழிக்கப்பட்டதன் பயனாகத்தான், உஞ்சவிருத்திப் பார்ப்பனர்கள் ஒரே அடியாக சக்கரவர்த்தி—ஏகபோக சர்வாதிகார ஆட்சிக்குத் திடீரென்று எட்டிக் குதித்து சர்வ பவுமன் என்று சொல்லத்தக்க ஏக சக்ராதிபதிகளாக ஆகிவிட்டார்கள். இன்றைய ஆட்சிக்கு ஜனநாயகம் என்று பெயர் சொல்லப்பட்டாலும், வேசிக்குத் தேவதாசி என்று பெயர் வைக்கப்பட்டிருப்பதுபோல், என்றும் சர்வாதிகாரியாக ஒரு பார்ப்பானே இருந்து வரும்படியான ஆட்சித் தன்மைக்கு 'ஜனநாயகம்' என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது.

விளக்கிச் சொல்லவேண்டுமானால், இன்றைய ஜனநாயகத்தில் ஒரு பார்ப்பான்தான் பிரதம (மந்திரி) ஆட்சி ஆளனாகவும் ஒரு பார்ப்பான்தான் பிரஸிடெண்டாக—ஆட்சி யாளனாக வரமுடியுமே அல்லாமல் இந்த இந்தியக் கூட்டாட்சி என்பது உள்ளவரையில் ஒரு தமிழனும் ஒருநாளும் ஆட்சிக்கு வரமுடியாது. தமிழன் சுதந்திர ஆட்சிக்கு வரும்வரை தமிழன், தமிழ்நாடு ஒருநாளும் சூத்திரத்தன்மையிலிருந்து, அடிமைக் குடியாய் இருப்பதி லிருந்து கடுகளவும் மாற்றமடைய முடியாது.



www.thamizham.net - Free E book No 3041

ஆகவே, இந்தப் பெருங்கேட்டிலிருந்து தமிழ்நாடும், தமிழனும் தப்பிப் பிழைத்து விடுதலை பெறவேண்டுமானால் இந்தியக் கூட்டாட்சி என்கின்ற பார்ப்பன ஏகபோக சர்வாதிகார ஆட்சியிலிருந்து விலகி, தமிழ்நாட்டைச் சுதந்திரத் தமிழ்நாடு ஆக ஆக்கிக் கொண்டாலன்றி, வேறு எக் காரணத்தாலும் எக் கிளர்ச்சியாலும் முடியவே முடியாது என்பதைத் தமிழ்மக்கள் உணரவேண்டுமாய் வேண்டிக்கொள்கிறேன். தியாகம் என்பது சிறைத் தண்டனை அனுபவிப்பதுதான் என்று பலர் கருதிக்கொண்டு இருக்கிறார்கள். தியாகம் என்பது தன்னலமறுப்பு என்ற பொருளைக் கொண்டதாகும்.

தன்னலமறுப்பு என்பது தனது உயிரைப் பலிகொடுப்பது என்பதை இறுதியாகக் கொண்டதாகும்.

இப்படிப்பட்ட தன்னலமறுப்பு கொண்ட ஒரு ஆயிரம் வீரர்கள் முன்வந்தால்தான் தமிழ்நாடு சுதந்திரத் தமிழ்நாடாக ஆகமுடியும்.

இளைஞர்கள் இதை நல்லபடி சிந்தித்து முடிவுசெய்து கொண்டு செயலில் ஈடுபட வேண்டிக்கொள்கிறேன். சிந்திக்கவேண்டிய காலம் நெருங்கிவிட்டது என்பதற்கத்தான் இந்த அபாயச் சங்கை ஊதுகிறேன்.

['விடுதலை'-தலையங்கம்—13-5-1960]

## 2. தமிழ்நாடு பெயர் மாற்றத்துக்கு வழி

சுமார் 3 கோடித் தமிழர்கள் வாழும் தமிழ் நாட்டிற்கு அதிகாரபூர்வமாக 'தமிழ் நாடு' என்ற பெயரில்லை.

ராஜ்ய சீரமைப்புக் கமிஷன் (States Re-organisation Commission) அறிக்கை வெளிவந்தவுடன் நான் பதறிப்போய், பெயரிடுவது பற்றி 12-10-1955-ல் 'விடுதலை'யில் அறிக்கை வெளியிட்டேன். (இது பின்னால் வெளியிடப்படும்.)

மக்களிடையே இக் கருத்துக்கு இருக்கும் செல்வாக்கைக் கண்டும், ஆட்சியாளர்கள் இதை நிறைவேற்றத் தவறியதையும் இந்த நாட்டு எதிர்க் கட்சிகள் என்பவைகள்—அதாவது தேர்தல் ஜனநாயகப் படுத்திக்கொண்டு, இன்றும் 'ஓட்டுப் பிழைப்பு'க்குப் பயன்படுத்தத் தங்களுக்குக் கிடைத்த நல்ல கருவி—சாதனம் என்பதாகக் கருதிக்கொண்டு பிரச்சாரம் புரிந்து வருகின்றனர். 'தமிழ்நாடு' என்று பெயர் வரவேண்டும் என்ற ஆசையைவிட, அப்படி மாறி விடக்கூடாது; மாறிவிட்டால் அந்த ஆயுதமும் பிடுங்கப்பட்டுவிடும் என்ற பயத்தால் அவதிப் படுகின்றனர். அந்த எண்ணமே அவர்களுக்கு அதிகம். மனதில் நினைப்பதை அப்படியே காட்டுவதற்கு, உடல் உஷ்ணத்தைக் காட்ட தெர்மா மீட்டர் கொண்டு அறிவதுபோல், கருவி ஒன்று இருக்குமானால், அதைவைத்து நான் கூறிடும் இந்த உண்மையை அறியலாம்.

அதிலும் இங்குள்ள 'காமராஜர் அரசாங்க எதிர்ப்புக் கட்சி'களைப் பொறுத்து இது நூற்றுக்கு நூறு உண்மையாகும்.

காமராஜர் அரசாங்கம் இதை ஏன் செய்யவில்லை என்று கேட்பதைவிட காமராஜரோ அல்லது அவரது சக மந்திரிகளோ தாங்களே பார்த்து உடனே உத்தரவு போட்டு மாற்றும் சக்தி சட்டப்படி, அதாவது அரசியலமைப்புப்படி உண்டா? என்று கேட்பதுதான் நாணய மான காரியமாகும். ஆனால், அரசியல்தான் 'அயோக்கியர்களுடைய கடைசிப் புகலிடம்' ஆயிற்றே! அதிலும் இந்த அரசியல்வாதிகளிடம் நேர்மை நாணயத்தை எதிர்பார்ப்பது நமது தவறல்லவா?

இதோ இந்திய அரசியல் சட்டம் கூறுகிறது: ஷரத்து (Article 3)

பார்லிமெண்டு சட்டத்தினால், (அ) எந்த இராஜ்யத்திலிருந்தாவது ஒரு பிரதேசத்தைப் பிரித்தேனும், அல்லது இரண்டோ அதற்கு மேற்பட்ட இராஜ்யங்களையோ

www.thamizham.net - Free E book No 3041

இணைத்தேனும் அல்லது எப் பிரதேசத்தையாவது ஒரு இராஜ்யத்தின் பாகத்தோடு இணைத்தேனும் புதிய இராஜ்யம் ஒன்றை அமைக்கலாம்.

(ஆ) எந்த இராஜ்யத்தின் பரப்பையும் பெருக்கலாம்;

(இ) எந்த இராஜ்யத்தின் பரப்பையும் குறைக்கலாம்;

(ஈ) எந்த இராஜ்யத்தின் எல்லைகளையும் மாற்றலாம்;

(உ) எந்த இராஜ்யத்தின் பெயரையும் மாற்றலாம்.

எனினும், இவற்றிற்கான எந்த மசோதாவும் இராஷ்டிரபதியின் சிபாரிசின் பேரில் அன்றியும் மசோதாவில் அடங்கிய பிரேரணை முதலாவது 'அ' பாகம் அல்லது 'ஆ' பாகத்தில் குறிப்பிட்ட எந்த இராஜ்யம் அல்லது இராஜ்யங்களின் எல்லைகளையாவது அத்தகைய இராஜ்யம் அல்லது இராஜ்யங்களின் பெயர் அல்லது பெயர்களையாவது பொறுத்திருக்குமாயின் அம் மசோதாவைக்கொண்டு வருவதற்கான பிரேரணையைப் பற்றியும், அதன் ஷரத்துக்களைப்பற்றியும் அந்த இராஜ்யம் அல்லது இராஜ்யங்களின் ஒவ்வொன்றின் சட்ட மன்றத்தினுடைய கருத்துக்களை இராஷ்டிரபதி கேட்டறிந்துகொண்டால் அன்றியும் பார்லிமெண்ட் சபை எதிலும் கொண்டுவரப்படலாகாது.

எனவே, பெயர் மாற்ற அதிகாரமும், சக்தியும் டெல்லி ஆட்சிக்கே உண்டு; அதிலும் இந்நாட்டு அரசாங்க சட்டசபைகள் கருத்துத் தெரிவித்தாலும் 'இராஷ்டிரபதியோ' அல்லது பார்லிமெண்டு சபைகளோ அதற்குக் கட்டுப்படவேண்டும் என்ற நியதி அரசியலமைப்பில் இல்லையே!

ஆகவே, இதற்காகத் தமிழ்நாட்டு அரசாங்கத்தோடு முட்டிக்கொள்ளுவதைவிட இந்த அநீதிக்குக் காரணமான ஆதிபத்திய டெல்லி ஆட்சியின் ஆதிக்கத்திலிருந்து விடுபட வேண்டும் என்பதுதானே அறிவுடைமை!

எனவே, தாய்த் திருநாட்டிற்குத் 'தமிழ்நாடு' என்று பெயரில்லையே என்று கொதிக்கும் உள்ளங்கொண்ட இளைஞர்களே! தோழர்களே! புலவர்களே! பெருமக்களே! எழுத்தாளர்களே! பேச்சாளர்களே!

நாடு பிரிவினையைத் தவிர வேறு வழி உண்டா? என்ற கேள்வியைக் கேட்டுக் கொள்ளுங்கள். நேர்மை விடை காணுங்கள். உண்மையில் நாட்டின் பெயர் மாற்றத்தில் யாருக்காவது நாணயமான கவலை இருக்குமானால் ஜூன் 5-ல் இந்திய யூனியன் படத்தை ஒரு கையிலும், தீப்பந்தத்தை மறு கையிலும் தூக்கி ஊர்வலம் வந்து டெல்லி ஆதிக்க ஆட்சிக்குத் தீ மூட்டுங்கள்! தீ மூட்டுங்கள்! தீ மூட்டுங்கள்!

ஊர்வலம் வருவதில் யாருக்காவது வெட்கம், பயம் இருக்குமானால் அவரவர்கள் வீட்டின் முன் வாசலில் கொளுத்திவிட்டுப் பெயர்களைக் கொடுங்கள்.

['விடுதலை'—அறிக்கை—18-5-1960]

## 3. தேச படத்தைக் கொளுத்துங்கள்

அருமைத் தமிழ்ப் பெருமக்களே!

இந்திய யூனியன் ஆட்சி (டெல்லி ஆட்சி) இந்தி மொழியைத் தீவிரமாகப் பரப்ப 'கச்சையை' வரிந்து கட்டிக்கொண்டு தீவிரமாக எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொண்டு வருகிறது.

இந்திய அரசியல் சட்டத்தின் 343-வது ஷரத்து சொல்கிறது: 'யூனியனின் ராஜாங்க பாஷை தேவநாகரி லிபியில் எழுதப்பட்ட இந்தியாக இருக்க வேண்டும்' என்று.

www.thamizham.net - Free E book No 3041

அதில் குறிப்பிடப்பட்டபடி ஏற்படுத்தப்பட்ட அரசாங்க மொழிக் கமிஷன்—திரு. பி. ஜி. கெர் என்பவர் தலைமையில் ஏற்படுத்தப்பட்டது—நாம் முன்கூட்டியே சொன்னபடி 'இந்தி மொழிக் கமிஷன்' என்று கூறும் அளவு இந்திதான் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்பதையும் இங்கிலீஷிலிருந்து இந்திக்கு மாற்றங்கள் விரைவில் ஏற்படுத்தப் படவேண்டும் என்றும் எழுதிவிட்டது. பார்லிமெண்டும் அதன் சிபாரிசுகளை ஏற்றுக் கொண்டது. நமது நாட்டைச் சார்ந்த திரு. டாக்டர் சுப்பராயன் அவர்கள் அக் கமிஷனில் ஒரு மெம்பராக இருந்து ஆட்சேபக் குறிப்பு (dissent) தெரிவித்தபோதிலும் அவர்கள் காரியம் இதனால் எள்ளளவும் பாதிக்கப்படவில்லை.

ஆறு பேர் கொண்ட கமிட்டி அமைத்து அதில் டாக்டர் அம்பேத்கார் அவர்களையும் ஒரு அநாமதேய முஸ்லிமையும் போட்டு 4 பார்ப்பனர்கள் கூடி, கல்லுப் பிள்ளையார் மாதிரி அமர்ந்து, அசைக்க முடியாதபடி பார்ப்பன நலச்சட்டம் ஒன்றை—நவீன மனுதர்மத்தை—எழுதி அதற்கு 'இந்திய அரசியல் சட்டம்' என்று பெயரிட்டுக் கொண்டது போல், இந்திக் காரர்களையே போட்டு, பெயருக்கு ஒரு தமிழரைப் போட்டு அவரது ஆட்சேபக் குறிப்புக்கு எந்த மரியாதையும் கொடுக்காமல், இந்தி நுழைப்புக்குச் சரியானபடி அடிகோலி ஆணி அடித்துவிட்டார்கள்.

முன்பு ஒரு தடவை திருப்பதியில் இந்திய யூனியன் ஆட்சியின் தலைவரான ஜனாதிபதி திரு. ராஜேந்திர பிரசாத் அவர்கள் இந்தித் திணிப்பிற்கு முழு ஆதரவு கொடுத்துப் பேசியதைத் தமது அடுக்கடுக்கான உத்தரவுகள் மூலம் செயல்படுத்திக் காட்டுகிறார்.

முன்பு நாம் இந்தியைப் புகுத்துவதை எதிர்த்து இந்திய யூனியன் கொடியைக் கொளுத்துவது எனப் பிரகடனம் செய்தோம்; 'இல்லை, இல்லை; இந்தி பேசாத மக்களின் விருப்பத்திற்கு மாறாக இந்தியைத் திணிப்பதில்லை' என்று அரசாங்கத்தினர் உறுதிமொழி கொடுத்து, நம்மைக் கொடிகொளுத்தும் போராட்டத்தைக் கைவிடும்படி கேட்டுக் கொண்டனர்.

நான் அப்போதே இவர்களது நாணயத்தையும் வாக்குறுதியையும் எடை போட்டுப் பார்த்துத்தான் கைவிட வில்லை. தற்போதைக்கு நிறுத்தி வைக்கிறேன்—அதாவது ஒத்தி வைத்திருக்கிறேன் என்று அறிக்கை விட்டேன்.

பிறகு சாமர்த்தியமாக, கொடியைக் கொளுத்தினால் மூன்று வருஷ தண்டனை என்பதாக ஒரு சட்டத்தை (இந்நாட்டுச் சட்டசபைக்கு உத்திரவிட்டு)ச் செய்து வைத்துக் கொண்டு, இந்தியைத் தீவிரமாகப் புகுத்தும் 'கைங்கர்யத்தில்' டெல்லி ஆட்சியினர் இறங்கியுள்ளனர்.

மைல் கற்களில் எல்லாம் இந்தி எழுதப்படுகிறது. தமிழ்நாட்டு மந்திரிகள் ஆட்சே பித்தாலும்கூட அதற்கு டெல்லிக்காரர்கள் செவி சாய்ப்பதில்லை.

மணியார்டர், கார்டு மற்ற தபால் தந்தி ரசீதுகளில் இந்தி மயம்!

(வெளிநாடான இலங்கையில் சிங்களவர் அரசாங்கத்தால்கூட தமிழில் இவைகள் எல்லாம்—அதாவது கார்டு, ஸ்டாம்பு முதலியன இருக்கின்றன என்பது இங்கு நாம் நினைவு படுத்திக்கொள்ள வேண்டும்.)

வானொலிப் பெட்டியைத் திருப்பினால் அங்கு 'ஆகாஷ்வாணி' என அலறுவதைக் காணுகிறோம்.

மத்திய இலாக்காக்களான தபால், ரயில்வே, சுங்கம் போன்ற பல துறைகளில் வேலையில் உள்ளவர்களை எல்லாம் இந்திபடித்து பாஸ் செய்யும்படி சுற்றறிக்கைகளும், தாக்கீதுகளும் தூண்டுதல்களும் இடைவிடாமல் நடந்தவண்ணமே இருக்கின்றன.

www.thamizham.net - Free E book No 3041

இலாக்காவினரோ இந்தி வாத்தியார் போட்டு வேலை நேரத்தில் ஒரு பகுதியை அதற்கும் தந்து இந்தி படிக்கும்படி செய்துகொண்டு இருக்கிறார்கள்.

பள்ளிக்கூடங்களில் எல்லாம் இந்தி கட்டாயமாகவே மாணவர்களுக்குப் புகுத்தப் படுவதுடன், இந்தியில் மார்க் வாங்காத மாணவர்கள் ஃபெயிலாக்கப்படுகின்றார்கள்.

இந்தி பேசாத ராஜ்யங்களிலிருந்து பிரதிநிதிகள் டெல்லி சட்டசபையில் மந்திரி களைக் கேள்விகேட்டால் அவர்களுக்குப் புரியாதவகையில் இந்தியிலேயே பதில்கள் தரப்படு கின்றன. இதைத் தட்டிக்கேட்டுப் பரிகாரம் தேட அவர்களுக்கு வசதி ஏதும் இல்லை.

இந்தியைப் பிரதான மொழியாகக்கொண்ட உத்திரப்பிரதேசம், பீகார், ராஜஸ்தான் போன்ற ராஜ்யப் பிரதிநிதிகள் கணிசமான அளவு அங்கு இருப்பதால் இந்தி ஆதிக்கத்தை—ஆதிபத்தியத்தை எதிர்ப்பது என்பது அவ்வளவு எளிதான காரியம் அல்ல என்று பல பார்லிமெண்ட் உறுப்பினர்களுக்கே தெரியும்.

மற்றும், அகில இந்தியக் கட்சிகள் என்று தங்களை அழைத்துக்கொள்ளும் எந்தக் கட்சியும் இந்தித் திணிப்பை எதிர்ப்பது—பேசுவது என்பது இயலாத காரியமாகும்.

சென்ற இரண்டு வாரங்களுக்குமுன் ஜனாதிபதி போட்டுள்ள உத்திரவு—இந்தியை எப்படியேனும் சீக்கிரம் திணித்து இங்கிலீஷைப் புதைகுழிக்கு அனுப்பியாகவேண்டும் என்கிறது.

இந்தி எதிர்ப்பாளர்கள் கருத்துக்கு மதிப்புத் தருவதுபோல், பிரதம மந்திரி நேரு சிற்சில நேரங்களில் பார்லிமெண்டிலும் வெளியிலும் வாய்ப்பேச்சு—உறுதிமொழிகள் தருகிறார். அந்தப் பேச்சு அச்சுப் போட்டு வெளியே வருவதற்குள்—அச்சு மை உலருவதற்கு முன்பே உள்நாட்டு மந்திரி இலாக்காவிலிருந்தோ அல்லது 'இராஷ்டிரபவன'த்திலிருந்தோ இந்தி நுழைப்புத் திட்டம் வந்துவிடுகிறது.

ஆகவே, இந்தியைத் தீவிரமாக எதிர்க்கிறோம் என்கிற தோழர்களே! கட்சிக் காரர்களே!

இந்தியாளர்களை ஆட்சிப் பீடத்தில் கொண்ட இந்திய யூனியன் ஆட்சி இருக்கும்வரை இந்தி நுழைக்கப்படாமல் இருக்கமுடியுமா? என்று தீவிரமாக நாணயமாக யோசியுங்கள்!

நண்பர் ஆச்சாரியார் அவர்கள் இரண்டு ஆண்டுகளாக 'இந்தி நுழைப்பு தேச அய்க்கியத்தைக் குலைக்கும்' என்று சொல்லி வருகிறார். அதன் அர்த்தம், கருத்து எல்லாம்—இந்தியை ஒழிக்க முடியாவிட்டால் நாம் இந்தி ஆட்சியாகிய இந்திய ஆட்சியி லிருந்து பிரிந்துகொள்வது என்பதுதானே?

இந்தியை எதிர்க்க, அதன் ஆதிக்கத்தை ஒழித்துக்கட்ட ஆட்சியின் பிணைப்பி லிருந்து நாம் விடுபடுவதைத் தவிர வேறு வழி உண்டா? சொன்னால் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கின்றேன்.

மைல் கற்களில் இந்தி எழுதப்படுவதை எதிர்த்து ஒரு போராட்டம், உண்ணாவிரதம்!

'ஆகாசவாணி'யை எதிர்த்து ஒரு போராட்டம்! உண்ணாவிரதம்! மறியல்!

தபால், கார்டு, கவர்கள், மணியார்டர் கூப்பன்களில் இந்தி இருப்பதை எதிர்த்து ஒரு போராட்டம்! மறியல்! கிளர்ச்சி!

இப்படித் தனித் தனியாகக் கிளர்ச்சிகள் நடத்துவதனால் இலட்சியம் எந்த அளவுக்குக் கைகூடும்? எந்த அளவு இந்திக் கேடு நம்மைவிட்டு நீங்கும்? என்று யோசியுங்கள்! தனிப்பட்டவர்களுக்கும், கட்சிக்காரர்களுக்கும், விளம்பரம், வோட்டு, 'தியாக முத்திரை' இவை கிடைக்குமே தவிர, காரியத்தில் அது இந்தி ஒழிப்புக்கு எந்த அளவு பயன்படும்?

www.thamizham.net - Free E book No 3041

எனவே, இந்தி விஷவிருட்சத்தின் ஆணிவேரைக் கெல்லி எறிய ஒரேவழிதான் உண்டு. அதுதான் நாடு பிரிவினை.

ஆகவே, அருமை இந்தி எதிர்ப்பாளர்களே! நீங்கள் வேறு எதற்காகவும் இந்திய தேசப் படத்தை எரிக்கவில்லை என்றாலும் இதற்காகவாவது கொளுத்துங்களேன்!

ஜூன் 5-ந்தேதி மாலை தயார்தானா? பல நாட்கள் அவகாசம் இருக்கிறது! நிதானமாகச் சிந்தியுங்கள்! இலட்சியத்தில் கவலை இருந்தால் தீவையுங்கள், இந்தியத் தேசப் படத்திற்கு!

['விடுதலை'—அறிக்கை—21-5-1960]

தமிழ்நாடு எதற்காக யூனியன் (டெல்லி) ஆட்சியின்கீழ் அடிமையாக இருக்க வேண்டும்? இல்லாவிட்டால் என்ன ஆகிவிடும்?

டெல்லி ஆட்சி அப்படி என்ன நீதிக்கும், நிர்வாகத் திறமைக்கும், நேர்மைக்கும், ஜனநாயகத்திற்கும், பாதுகாப்பிற்கும், பலத்திற்கும் சிறப்பான பேர்போன ஆட்சி?

1. வரலாற்றுப்படி நாம், டெல்லியுடன் இணைந்து கூட்டாக இருக்கவேண்டும் என்பதற்கு ஏதாவது ஆதாரங்கள் உண்டா? 56 நாடுகளில் நாம் ஒருநாட்டாராய் இருந்து வந்தவர்கள்!

வெள்ளைக்காரன் வியாபாரம் நிமித்தம் இங்குவந்து பல பகுதிகளில் இருந்த நாடு களையும் பிடித்துத் தனது சவுகரியத்தை முன்னிட்டு இதை 'ஒரு குடைக்கீழ்' கொண்டு வந்தானே தவிர அதற்குமுன்பு எப்போதாவது டெல்லியை எஜமானனாகக்கொண்டு தமிழ்நாடு இருந்தது என்று சரித்திரத்தைப் புரட்டிக் காரணம் காட்டமுடியுமா? 'காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை' என்ற சொற்றொடருக்கு அய்க்கியப்பட்ட ஒரே நாடு இந்தியா என்ற பொருள் இதற்குமுன் எப்போதாவது இருந்திருக்கிறதா? அல்லது,

2. புராணப்படியோ, இதிகாசப்படியோ ஒரே நாடாக இருந்திருக்கிறதா? 'சுயம்வரத் திற்குக்கூட 56 தேசத்து ராஜாக்கள் வந்திருந்தார்கள்' என்றுதான் அவைகள் கூறுகின்றன. இராமாயணத்தில் வில் உடைப்பதற்குக்கூட பலதேச ராஜாக்கள் வந்தார்கள் என்று இல்லையா?

ஆகவே, அப்போதும்கூட பற்பல ராஜ்யங்கள், அவைகளுக்குத் தனித்தனி எல்லைகள், ராஜாக்கள் இருந்திருக்கின்றனர் என்றுதானே அறிகிறோம்?

3. பூகோளப்படி எந்த நாடாவது 2000 மைல்களுக்கு அப்பால் எஜமான் ஆட்சியை வைத்திருப்பதும், எதற்கெடுத்தாலும் அங்கு ஓடி ஓடி கருத்தும் உத்தரவும் என்ன என்று தெரிந்து, பிறகு செயலாற்றும் தன்மையைக் கொண்டுள்ளதா? எந்தவகையில் இது சரியானதாகும்?

4. கலாசாரப்படியாவது டெல்லி எஜமான ஆட்சிப் பீடர்களாகிய அவர்களுக்கும் நமக்கும் சம்பந்தம் ஏதாவது உண்டா?

உணவில், உடையில், மொழியில் எல்லாவற்றிலுமே ஒன்றுக்கு மற்றொன்று ஏறுமாறான நிலை!

ஆகவே, வரலாற்றுப்படியும் காரணமில்லை;

பூகோளப்படியும் காரணமில்லை;

புராணப்படியும் காரணமில்லை;

கலாசாரப்படியும் காரணமில்லை.

இந்தப்படியான எத்தன்மையாலும் நாம் டெல்லி ஆதிக்கத்திற்கு அடிமையாவதால் நமக்கு ஏதாவது சமுதாயம், பொருளாதாரம், ஆட்சிமுறை ஆகிய ஏதாவது ஒருதுறையி

www.thamizham.net - Free E book No 3041

லாவது பலன் ஏற்படுகிறதா? ஏற்படுகிறது என்ற நிலையிலிருந்தாலாவாது யூனியன் ஆட்சியின்கீழ் நாம் இருப்பதில் அர்த்தம் உண்டு.

இந்த ஆட்சியில் நீதி இல்லை என்பதைச் சில ஆண்டுகளுக்கு முன்பே சென்னை அய்க்கோர்ட்டில் என்மீது போடப்பட்ட ஒரு வழக்கின்போது தெளிவாக எடுத்து விளக்கி 'பார்ப்பான் நீதிபதியாய்—ஆட்சியாளனாய் உள்ளநாடு கடும்புலி வாழும் காடேயாகும்' என்று குறிப்பிட்டுள்ளேன்.

நிர்வாகத் திறமையோ நேர்மையோ இல்லை. ஒவ்வொரு வருஷமும் ஆடிட்டர் ஜெனரல் தரும் ரிப்போர்ட் ஒன்றே அதற்கு நல்ல 'சர்ட்டிபிகேட்'டாக இருக்கிறது. பலகோடி நம்மிடம் சுரண்டும் வரிப் பணம் நாசத்திற்கும் மோசத்திற்கும் ஈடாக்கப்படுகிறது.

நம்மிடமிருந்து நம்மைக் கசக்கிப் பிழிந்து வாங்கி அதை அவர்கள் டாட்டா, பிர்லா, முந்திராக்கள் இடம் கோடி கோடியாகத் தந்து, அதற்குக் கைமாறாக (காங்கிரஸ் தேர்தல் நிதிக்கு) இலட்சம் இலட்சமாகப் பெற்றுக்கொள்ளுகின்றனர்.

சென்ற ஆண்டு பிரதம மந்திரி திரு. நேருவின் காரியதரிசியாக இருந்த திரு. மத்தாய் என்பவர் கோடிக்கணக்கான ரூபாய்களுக்கு அதிபராகவும், அதைக்கொண்டு அவர் தாயார் பெயரில் 'ஜக்கம்மா டிரஸ்ட்' என ஏற்படுத்தியும், செய்த ஜகஜாலப் புரட்டுகளையும், அதைப் பூசி மெழுகி மூடி மறைக்க நேரு பட்டபாட்டினையும், கடைசியில் முந்திரா விவகாரம் போலவே அது அமிழ்த்தப்பட்டதும் நாம் அவ்வளவு சுலபமாக மறந்துவிடுவதற்குரியவைகளா ?

பிர்லா, டாட்டா, டால்மியா போன்றவர்களிடம் வாங்கும் தேர்தல் நன்கொடையும் அதற்குப் பிரதி உபகாரம் என்ற முறையில் சர்க்கார் அவர்களுக்கு வழித்துறை வகுப்பதும் நாம் எடுத்துக்காட்டி வராதவைகள் அல்லவே? இந்திய யூனியன் ஆட்சியின் நிர்வாகத் திறமைக்கும் நீதிக்கும் இன்னும் வேறு எடுத்துக்காட்டுகள் வேண்டுமா?

ஜனநாயகத்திற்கும், இந்த ஆட்சிக்குந்தான் ஏதாவது சம்பந்தமுண்டா?

'எனது கொடி, அரசியல் சட்டம், ஆட்சி பிடிக்காதவர்கள் இந் நாட்டை விட்டு வெளியேறி விடவேண்டும்' என்று பார்ப்பன சர்வாதிகாரத் திமிருடன் பேசும் ஒரு பிரதம மந்திரியைக் கொண்ட இந்த ஆட்சிக்கு ஜனநாயக ஆட்சி என்று பெயரிட்டு அழைப்பதை விட வடிகட்டிய முட்டாள்தனம் வேறு உண்டா?

அதிலும், கேரளத்தில் முறைப்படி நடந்த கம்யூனிஸ்ட் ஆட்சியைக் காலித்தனம் மூலம் கவிழ்க்க ஏற்பாடுகள் செய்து, பிறகு அதைக் காட்டி, ஒரு வரி உத்தரவின் மூலம் ஒழித்துக்கட்டினார்களே, அந்தப் பிரத்யட்ச நிலையைவிட வேறு உதாரணம் வேண்டுமா?

யூனியன் ஆட்சியின்கீழ் இருப்பதால் மற்ற எவையும் இல்லாவிட்டால்கூட நமக்கு பாதுகாப்பாவது இருக்கிறதா?

வருஷம் ஒன்றுக்கு சுமார் 250 கோடி ரூபாய்க்குமேல் இராணுவத்திற்குச் செலவழிக்கப்படுகிறது. அதாவது 55% இதற்குச் செலவழிக்கப்படுகிறது. ஆனாலும் பலன் உண்டா?

ஒரு பக்கத்தில் சீனாக்காரன் ஆக்கிரமிப்பு; இன்னொரு பக்கத்தில் பாகிஸ்தான் காரனிடம் தினம் தினம் உதைபடும் நிலை.

'சுண்டைக்காய்' கோவாவை இதுவரை முயற்சி செய்தும் இவர்களால் எடுத்துக் கொள்ள முடியாத நிலை; வீணாகப் பல உயிர் பலியானதுதான் மிச்சம். உலகமெல்லாம் சென்று 'தோட்டாக்கள்' பெற்று வரும் பண்டித நேருவால் கடுகளவு உள்ள இதற்குப் பரிகாரம் காண இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளாக முடியவில்லை.

www.thamizham.net - Free E book No 3041

கடன், கடன் என்று வெளி நாட்டாரிடம் பல்லைக் காட்டிக் கெஞ்சி பல கோடிகள் படிப் பிச்சை வாங்கி, காஷ்மீர் முனையிலும், இதுபோன்ற மற்ற காரியங்களிலும் அவை பாழடிக்கப்பட்டு வருகின்றன.

காஷ்மீர் பிரச்சினைக்கு மாத்திரம் இதுவரை சுமார் ரூ. 300 கோடிக்குமேல் செல வழித்தனர். 'காதொடிந்த ஊசி'யளவும் பயன் விளையவில்லை.

இந்த நிலையில் எதற்காக நாம் டெல்லி ஆட்சியின்கீழ் இருக்கவேண்டும்? ஆண்டு ஒன்றுக்கு 66 கோடி ரூபாய் எதற்காகக் 'கப்பம்' கட்டவேண்டும்?

சிந்தியுங்கள்! சிந்தியுங்கள்! ஏக இந்தியத் தோழர்களே, நன்றாகச் சிந்தியுங்கள்!

தெளிவடைவீர்களானால், ஜூன் 5-ந்தேதி மாலை இந்தியத் தேசப் படத்தில் தீவையுங்கள்! நாடு பிரிக்க, மேற்கூறிய அநியாய அக்கிரமங்களைக் கண்டிக்க, அடக்கி ஒழிக்க இது ஒன்றுதான் வழி! வேறு மார்க்கம் இருந்தால் காட்டுங்கள்; வேறு வழி இருந் தால் சொல்லுங்கள். இல்லை என்றால் நீங்கள் எங்கள் வழிக்கு வாருங்கள்! நாங்கள் சொல் வதைக் கேளுங்கள்! பந்தத்தை ஏந்துங்கள்! படத்தைப் பொசுக்குங்கள்!

['விடுதலை'—அறிக்கை—22-5-1960]

# 10. இழிவு நீக்கக் கிளர்ச்சி

## 1. இழிவு நீக்கக் கிளர்ச்சி

சூத்திரர் என்கின்ற இழிவை நீக்கக் கிளர்ச்சி செய்வது என்பது சமுதாய சம்பந்த மான (சோஷியலிச) காரியமே தவிர, இதில் அரசியல் ஏதுமில்லை; மற்றும் இதில் பலாத்காரம் என்பதுமில்லை.

அதிலும், இந்த இழிவு நீக்கக் கிளர்ச்சி என்பது, உலகில் எங்குமே இல்லாத அக்கிரமக் கொடுமையிலிருந்து மனிதன் விடுதலை, மானம் பெறவேண்டும் என்பதற்காக நடத்தப் படும் கிளர்ச்சியேயாகும். இதில் எந்தவித வகுப்புத் துவேஷமோ, வகுப்பு வெறுப்போ இல்லை. நம் நாட்டில் (இந்துக்கள் என்னும்) சமுதாயத்தில் 100-க்கு 97 பேர்களாக உள்ள மக்கள்—அதிலும், படித்தவர்கள், செல்வவான்கள், உயர்தர அய்க்கோர்ட் நீதிபதிகள், கலெக்டர்கள், உப அத்தியட்சகர்கள், மடாதிபதிகள், சமீப காலம்வரை மகாராஜாக்கள், அரசர்கள், ஜமீன்தார்கள், பலகோடி ரூபாய்க்குச் சொந்தக்காரர்கள், பிரபுக்களுட்பட இவர்கள்—சமுதாயத்தில் கீழ்ப் பிறவியாக, கீழ்மக்களாக, கடவுள் என்கிற (அதுவும் அவர்க ளுடைய கடவுள்) சிலையிடம் நெருங்கக் கூடாதவர்களாக, அறைக்கு வெளியே நிற்க வேண்டியவர்களாகத் தலைமுறை தலைமுறையாகத் தடுக்கப்பட்டு, நிரந்தரக் கீழ்மக்களாக ஆக்கப்பட்டிருக்கும் கொடுமைக்கு, இழிவுக்கு உள்ளாக்கப் பட்டிருப்பதிலிருந்து விலக்கி, மானமுள்ள மக்களாக—ஆக்கப்பட வேண்டுமென்பதற்குக் கிளர்ச்சி செய்வதென்றால்—இது, இதுவரை செய்யாமாலிருந்ததுதான் மானங்கெட்ட தன்மையும், இமாலயத் தவறுமாகுமே யொழிய, இப்போது கிளர்ச்சி செய்வதென்பது ஒரு நாளும், ஒரு விதத்திலும் தவறாகவோ கூடாததாகவோ ஆகாது; ஆகவே ஆகாது.

நீக்ரோக்களுக்கும், வெள்ளையருக்கும் உள்ள அளவு பிறவி பேதம், நிற பேதம், நாகரிக பேதம் நமக்கும் பார்ப்பனருக்கும், பூசாரிகளுக்கும் கிடையாது. அவ்வளவு பேதமுள்ள (மைனாரிட்டி) நீக்ரோக்கள் மெஜாரிட்டியான, ஆளும்சாதியாரான, பிரபுக்களான வெள்ளையர்களோடு எல்லாத் துறைகளிலும் சரிசமமாகக் கலந்து, உண்பன, உறங்குவன, பெண் கொடுக்கல்-வாங்கல், உட்படக் கலந்து புழங்குகிறார்கள். ஆனால், நம் நாட்டில் 100-க்கு மூன்றுபேரே உள்ள கூட்டம் பிச்சை எடுப்பதையும், உழைக்காததையும்,

www.thamizham.net - Free E book No 3041

கூலிக்குப் புரோகிதம் செய்வதையும் உரிமையாய்க் கொண்ட—பிழைப்பாய்க் கொண்ட கூட்டம், மற்றும் வாழ்வில் யோக்கியமாக, நேர்மையாக, நாணயமாக இருக்கவேண்டும் என்கின்ற தர்மம் இல்லாததும், தாங்கள் எது வேண்டுமானாலும் செய்து பிழைக்கலாம், எப்படி வேண்டுமானாலும் நடக்கலாம் என்கின்ற அனுபவத்தில் இருக்கிற கூட்டம்—தங்களை 'மேல் பிறவி' என்றும், நம்மைக் 'கீழ்ப் பிறவி-இழி பிறவி'-பொது இடமாகிய கடவுள் என்கின்ற கல் சிலையிருக்கும் இடத்தில் பிரவேசிக்கக் கூடாத மிக மிக இழிதன்மை யானவர்கள் என்பதான நிபந்தனையை நம் பேரில் ஏற்றிக் கொண்டு—கட்டிடத்திற்கு, அறைக்கு வெளியில் நின்று வணங்கவேண்டும் என்பதை—நிலைக்க விடலாமா என்பது தான் கிளர்ச்சியின் 'தத்துவமாகும்'.

வேறு நாடுகளில் இப்படிப்பட்ட கொடுமையான, இழிவான தன்மை எந்தச் சமுதாயத் திற்கும் இருக்குமானால் எவ்வளவோ கொலை, பலாத்காரம், நாசவேலை நடத்தி ஒழிக்கப் பட்டிருக்கும். அப்படிக் கொடுமை இந்த நாட்டில் இருந்து வருகிறதென்றால் இது யாருடைய தவறு? யாருடைய மானங்கெட்ட ஈனத்தனம் என்று ஒவ்வொரு தமிழனையும் சிந்தித்துப் பார்க்கும்படி வேண்டிக் கொள்கிறேன். மற்றும், இது விஷயத்தில் நாம் கிளர்ச்சி செய்து வெற்றிபெற்றால் அதனால் யாருக்கும், எந்த நபருக்கும் ஒரு தூசி அளவு நட்டமும், கேடும் இல்லாத ஒரு காரியமாகும். கடவுள்களைப் பூசை செய்கிற பூசாரி வேலை பார்ப்பனருக்குத் தான்—மேல் சாதிக்காரருக்குத்தான் உண்டு என்பதற்கு எந்த ஆதாரமும் இல்லை யென்றாலும் கோயில் பூசை செய்பவன் பார்ப்பானல்லன்; மேல் சாதிக்காரனுமல்லன்; குருக்கள் என்கின்ற ஒரு சாதியானாவன் என்றும் சொல்லப்படுகிறது; ஆதாரங்களு மிருக்கின்றன.

அந்தக் குருக்கள் என்பவர்கள் பார்ப்பனரல்லாத சைவர்களே ஆவார்கள் என்று சில ஆதாரங்களில் இருக்கின்றன. மற்றும், 'ஒரு குறிப்பிட்ட சாதியார்' தான் பூசாரியாக இருக்க வேண்டுமென்கின்ற நிபந்தனை எந்த ஆதாரத்திலுமில்லை.

குருக்கள், அர்ச்சகர்கள் என்பவர்கள் வீட்டில் பார்ப்பனர்கள் சாப்பிடவே மாட்டார்கள்; பெண் கொடுக்கல், வாங்கலும் செய்ய மாட்டார்களாம். இந்த நிலையிலிருப் பவர்கள் பூசை செய்யும் இடத்திற்கு, மற்ற இந்து மக்கள்—பார்ப்பனரல்லாதார் மட்டும் நுழையக் கூடாது என்றால் அது எப்படி நியாயமாகும்?

தமிழ் நாட்டிலேயே பல கோயில்களில் சாத்தாணி என்கின்ற பார்ப்பனரல்லாதவர்கள் பூசை செய்கிறார்கள்; பல கோயில்களில் ஆண்டிகள், பண்டாரங்கள் என்கின்ற பார்ப்பன ரல்லாதவர்கள் பூசை செய்கிறார்கள். மற்றும், நாம் மூலஸ்தானம் என்பதற்குள் செல்வதால் அந்த இடத்திற்கோ—சாமிக்கோ எந்தவிதப் புனிதமும் கெட்டுப்போவதில்லை; சிலையைத் தொடவேண்டாமென்று வேண்டுமானாலும் திட்டம் வைத்துக்கொள்ளலாம். ஆனால், நெருங்கக் கூடாது; அந்த அறையின் படியைத் தாண்டக்கூடாது என்பது என்ன நியாயம்? உற்சவக் கடவுள்கள், சிலைகள் என்பவைகளிடமெல்லாம் எல்லாச் சாதியாரும், எல்லா மக்களும் நெருங்குகிறார்கள்.

மூலஸ்தானத்திற்கு வெளியில் பிரதிஷ்டை செய்யப்பட்ட நவக் கிரகங்கள் என்கின்ற கடவுள்கள்—மற்ற சிலைகளிடம் எல்லோரும் நெருங்குகிறார்கள்.

எனவே, இந்தக் 'கர்ப்பக் கிரகம்' என்கின்ற பூச்சாண்டிகள் பார்ப்பனரல்லாத மக்களை, இழி மக்கள்—இழி பிறப்பாளர்கள் என்றாக்கப்படுவதற்காகத்தான் இருந்து வருகிறதேயல்லாமல், மற்றபடி வேறு எந்தப் புனிதத் தன்மையையும் பாதுகாக்கவல்ல என்பதே நமது கருத்து. அன்றியும், நாம் உள்ளே சென்று வணங்குவதால் எந்தப் புனிதத் தன்மையும் கெட்டுவிடுவதில்லை என்பதும், 'உள்ளே செல்லவேண்டும்' என்கிற நமக்கும், நம் உறுதிக்கும், உண்மையில் எந்தப் புனிதத் தன்மையையும் கெடுக்கவேண்டும் என்கின்ற எண்ணம் இல்லவே இல்லை.



www.thamizham.net - Free E book No 3041

நமது இழிவு நீக்கப்படவேண்டும் என்கின்ற காரியத்திற்காகத்தான் இதைச் சொல்லுகிறோம்.

ஆகவே, தோழர்களே, இந்தக் கிளர்ச்சி அவசியமா, இல்லையா?

என்ன சொல்கிறீர்கள்?

அவசியம் என்றால் வாருங்கள், போகலாம்.

உடனே பெயர் கொடுங்கள்!

['விடுதலை'–தலையங்கம்—19-10-1969]

## 2. மூலஸ்தானப் பிரவேசம்

'மூலஸ்தானத்தில் எல்லா மக்களும் பிரவேசிக்கக் கூடாது' என்பது கோயில் சம்பந்தமாக அல்லது ஒரு பொது இடம் சம்பந்தமாக அரசாங்கத்தார் செய்துகொண்ட ஏற்பாடுதானேயொழிய, அது எந்த விதத்திலும் ஒரு மத சம்பந்தமான தத்துவமாகாது; எந்த விதத்திலும் ஒரு புனிதமான காரியமோ, யாருக்காவது மனம் புண்படுவதைத் தடுக்கும்படியான காரியமோ என்று சொல்ல முடியாது; 'கோயில் பிரகாரத்திற்குள் தாழ்த்தப் பட்ட இனமக்கள் செல்வது' எவ்வளவு சாதாரண காரியமோ, அதைவிடச் சாதாரணமான காரியமேயாகும்.

'கோயிலுக்குள்ளாகவோ, மூலஸ்தானத்திற்குள்ளாகவோ இன்ன மதத்தார்தான், இன்ன சாதியார்தான் செல்லலாம்; இவரிவர் செல்லக்கூடாது' என்பதற்கு எந்தச் சட்டமும், மத ஆதாரமும், சரித்திர நியமனமுமில்லை.

இன்ன மொழியில்தான் பூசைக்குச் சொற்கள் சொல்லவேண்டும் என்கிற கட்டாயமும் இல்லை. கோயில் நிர்வாகத்திற்கு, டிரஸ்டி பதவிக்கு இன்ன சாதியாகத்தானிருக்கவேண்டும் என்பதற்கு ஒரு நிர்ப்பந்தமுமில்லை; மத விரோதமும், சாஸ்திர விரோதமும், சட்ட விரோதமுமில்லை.

நான் சுமார் 20 ஆண்டு ஈரோடு தாலுக்கா தேவஸ்தானக் கமிட்டிச் செயலாளனாகவும் தலைவனாகவும் இருந்திருக்கிறேன்; 'சாத்தாணி' இனத்தாரை அர்ச்சகராக நியமித்து இருக்கிறேன்; நான் கடவுள் நம்பிக்கையில்லாதவனாக (நாத்திகனாக) இருந்துகொண்டேதான் இந்தத் தாலுக்கா தேவஸ்தானக் கமிட்டித் தலைவனாக, செயலாளனாக இருந்திருக்கிறேன்; மற்றும் ஈரோடு, பவானி, திருப்பூர், கோபி தாலுக்கா கமிட்டித் தலைவனாகவும் இருந்திருக்கிறேன். இதுபற்றிக் கலெக்டருக்கு, சிலர், நான் நாத்திகன் என்று புகார் எழுதி, அவர் என்னை அதிசயமாக, 'நாயக்கரே! நீர் நாத்திகரா?' என்று கேட்டார். 'ஆம்' என்று சொன்னேன்; அவர் சிரித்துக்கொண்டே, 'இந்துதானே!' என்று, தானே கேட்டுக்கொண்டு சும்மா இருந்துவிட்டார்.

இதை நான் 20, 30 ஆண்டுகளுக்கு முன் 'குடி அரசி'லும், 'விடுதலை'யிலும் எழுதியிருக்கிறேன்.

இன்றும் விஷ்ணு கோயில்கள் பலவற்றில் மூலஸ்தானத்திற்கும், மற்றவர்கள் நிற்குமிடத்திற்கும் இடையில் கதவு நிலைதான்—வாயிற்படிதான்—அதாவது, சுமார் ஒரு அடி அளவு இடம் தூரம்தானிருக்கிறது. 'பிரசாதம்' வாங்கக் கையை, கதவைத் தாண்டி உள்ளே நீட்டலாம். படுத்திருக்கும் 10, 12 அடி நீளமுள்ள சிலையின் தலையையும் காலையும் பார்க்க—'பக்தர்கள்' தலையையும் கழுத்தையும் கதவு நிலையைத் தாண்டி உள்ளே நீட்டலாம். பூசாரிக்குக்கூட நெற்றியில் நாமம், விபூதிதான் இருக்க வேண்டுமேயொழிய, அவன் ஸ்நானம் செய்துவிட்டு வரவேண்டுமென்றோ, சுத்தமான வேட்டி கட்டிக்கொண்டு வரவேண்டுமென்றோ திட்டம்கூடக் கிடையாது.

www.thamizham.net - Free E book No 3041

அவர்களில் அனேகர் 'மாமா'வாக இருப்பார்கள் என்பதோடு, தாசிகளிடம் சங்கமம் 'இதழ் அமுதம்' பருகுபவர்களாகவும் இருப்பார்கள். மாலையில் நாம் கோயிலுக்கு அனுப்புகிற சண்பகப் பூ, மனோரஞ்சிதப் பூ உள்ள பூமாலையில் உள்ள பூ—இரவு 10 மணிக்குத் தாசி வீட்டிற்குப் போனால், அந்தத் தாசியின் தலையில் பார்க்கலாம். (அந்தக் காலத்தில் இந்தப் பூக்கள் எங்கள் நந்தவனத்தில் மாத்திரம்தான் உண்டு.) ஆக, மூலஸ்தானப் பிரவேசத்திற்கும், கர்ப்பக் கிரகப் பிரவேசத்திற்கும் சட்டம், சாஸ்திரம் ஒன்றும் கிடையாது. ஆச்சாரம், அனுஷ்டானம் என்பதற்கும் எந்தத் திட்டமும் கிடையாது —இந்து மதம் என்பதற்கே கிடையாது.

நெற்றிக் குறி என்பதும் அதிகாரத்தாலும், செல்வாக்காலும் ஏற்பட்டதேயொழிய, அதற்குச் சட்டமோ, சாஸ்திரமோ, நிர்ப்பந்தமோ கிடையாது.

ஆகவே சாதிபேதம், மதபேதம் என்பவை அனுஷ்டானத்திலும் இல்லை; சட்டத்திலும் இல்லை; சாஸ்திரத்திலும் இல்லை.

உண்பன, தின்பன வகையிலும்; பெண் கொடுப்பன, கொள்வன என்பவைகளிலும் சட்டப்படியே தடை நீக்கப்பட்ட பிறகு—'ஒரு நிலக் குறிப்பான இடத்திற்கு—மூலஸ்தானத்திற்கு' மட்டும் உண்டு என்றால், இது எவ்வளவு பைத்தியக்காரத்தனம் என்பதோடு, இதனால் சமுதாய இழிவும் அமுல் படுத்தப்படுவதென்றால் எவ்வளவு மானக் கேடான காரியம் என்பதையும் தெரியப்படுத்திக் கொள்கிறேன்.

எனவே, ஆட்சியாளர் இதைப் பகுத்தறிவோடு கவனிக்க வேண்டும் என்றும் வேண்டிக்கொள்கிறேன்.

['விடுதலை'—தலையங்கம்—18-10-1969]

## 3. இழிநிலை நீக்க மாநாடு

நண்பர்களே! நாம் நமது நாட்டில் நாலாம் சாதியார்—சூத்திரர்—பார்ப்பனரின் தாசி புத்திரர்கள் என்றும், சில அனுபவங்களில் தீண்டப்படாத, நெருங்கப்படாத இழிபிறவி மக்கள் என்றும் 'இந்து' மத சாஸ்திரங்களில் தர்மமாகவும், 'இந்து லா' என்னும் சட்டத்தில் குறிப்பிடப்பட்டும், அதை அனுசரித்தே கோர்ட் தீர்ப்புகளும் இருந்துவருகின்றன. அந்தப் படி அமுல் நடத்தப்பட்டும் வருகின்றன.

இந்த நிலை, இந்த அமைப்பு, இந்த அனுபவம் மாற்றப்படவேண்டும் என்பது இன்றையத் தமிழர்களின் பெரும்பான்மையோரின் ஆவல்.

இந்த நிலை அரசியல் நிர்வாக சட்டத்திலும், நீதி சட்டத்திலும் இடம் பெற்று இருக்கின்றபடியால், அரசாங்கத்துடன் போராடித்தான் நீக்கிக் கொள்ளத் தக்கதாக இருக்கிறது.

நம்நாடு, முஸ்லிம் ஆட்சியிலோ, (அய்ரோப்பிய) கிறிஸ்தவருடைய ஆட்சியிலோ இருக்குமானால் இந்த நிலை வெகுநாளைக்கு முன்னதாகவே ஒழிக்கப்பட்டிருக்கும். அப்படிக்கில்லாமல், (பார்ப்பனருடைய) 'இந்து'க்களுடைய ஆட்சியில் இருப்பதால், இதை ஒழிக்கப்படும் வரையில் மாற்ற முடியாததாக அமைக்கப்பட்டிருக்கிறது.

இதற்குக் காரணம், இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள்—கிறிஸ்தவர்கள் தவிர்த்து, மற்ற எல்லா மக்களும் அதாவது, பவுத்தர், சீக்கியர், சமணர், பகுத்தறிவுவாதிகள், நாத்திகர்கள் மற்றும் பிள்ளையார் சிலையை உடைத்தவர்கள், இராமாயணம் கொளுத்தியவர்கள், இராமனை, முருகனை, வெங்கிடாசலபதியை (கடவுள்களை)ச் செருப்பால் அடித்தவர்கள் முதலிய எல்லோருமே 'இந்து'க்கள்தான் என்று சட்டமும், சட்ட நிபுணர்களால் கோர்ட் தீர்ப்புகளும் இருக்கின்றன. இந்து என்கின்ற பெயரிலிருந்து விலகிக்கொள்ள நமக்கு உரிமையில்லை; இடமும் இல்லை.

www.thamizham.net - Free E book No 3041

அதனால், உலகம் உள்ளவரை, இந்திய ஆட்சியில் தமிழ்நாடு ஆட்சியின் கீழ் குடிமகனாய் இருப்பவர்கள், முஸ்லிம்-கிறிஸ்தவர்கள் அல்லாதவர்கள் யாவருமே சூத்திரர், நாலாம் சாதியார், பார்ப்பனரின் தாசி புத்திரர்கள் என்னும் தன்மையில் இருக்கிறோம்.

இதோடு கூடவே, நம் கோவில்களுக்குப் போகிற எவரும் எந்தக் கோவிலுக்குப் போவதானாலும், சாமி இருக்கிற அறைக்கு (கர்ப்ப கிரகத்திற்கு) வெளியில் நின்றுதான் சாமி தரிசனமோ, மற்றதோ செய்யவேண்டியிருக்கிறது. காரணம், நாம் கீழ்சாதிக்காரர்கள். நாம் தொட்டால், நெருங்கினால் சாமி தீட்டாகிவிடும். ஆதலால் எட்டி நிற்கவேண்டும்; வெளியில் நிற்கிறோம். எனவே, நமக்கு இந்த இழிநிலை போக்கப்பட வேண்டாமா என்பதுதான் நான்நமது மக்களுக்கு விண்ணப்பித்துக் கொள்ளும் விண்ணப்பம்.

இன்றைய நமது இந்திய ஆட்சிக்கு உட்பட்ட தமிழக அரசுக்கு இது விஷயத்தில் உள்ள சட்டத் தடைகளை நீக்க சக்தி போதாது. இந்தியாவில் தமிழ்நாடு தவிர்த்து, மற்ற நாட்டு மக்கள் அனேகமாக இசைய மாட்டார்கள். என்றாலும், நாம் இந்த இழிவுகளை இனி பொறுத்துக்கொண்டு இருக்கமாட்டோம். எப்படியாவது, என்ன செய்தாவது, என்ன கஷ்ட நஷ்டங்களை ஏற்றாவது, அனுபவித்தாவது இந்த இழிநிலையை ஒழித்துக்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். இதற்காக, இதுவரை செய்துவந்த பிரச்சாரம் எதுவும் நமக்குப் பயன் அளிக்கவில்லை. ஆதலால், இப்போது நாம் இதற்காக என்றே ஒரு மகாநாடு 'சூத்திரன்—தாசிமகன் என்கின்ற இழிநிலை நீக்க மாநாடு' என்னும் பெயரால் சென்னையிலோ, திருச்சியிலோ ஒரு மாநாடு கூட்டி, அதில் நமது இந்திய அரசாங்கத்திற்கு எதிராக நமது வேண்டுகோள் என்பதாக விளக்கி, ஒரு தீர்மானமும், அந்த வேண்டுகோளை நிறைவேற்றப்படவில்லையானால், நமது முயற்சி என்னவென்பது பற்றி ஒரு தீர்மானம் செய்ய உத்தேசித்தும் இருக்கின்றோம்.

இந்த மாநாடு டிசம்பரில் கூடுவதாக என்று அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் துவக்கி இருக்கிறேன். மாநாடு நடத்தவும், கிளர்ச்சி நடத்தவும் பெருந்தொகை தேவைப்படும். அது நன்கொடை மூலமும், டிக்கெட் விற்பனை மூலமும் மற்றும் பலவழிகளில் சேகரிக்கவும் முயற்சிக்கிறேன்.

தமிழ் நாட்டில் ஆளுங்கட்சியில் உள்ள இயக்கத் தோழர்களும், மற்றும் இந்தக் கொள்கையை ஏற்கும் மற்ற எல்லாக் கட்சித் தோழர்களும் வேண்டிய முயற்சி செய்து உதவ வேண்டுகிறேன்.

['விடுதலை'-தலையங்கம்—14-10-1973]

www.thamizham.net - Free E book No 3041

